بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ



நடப்பதெல்லாம் பெரும்
நன்மைக்கே
சிலநேரம் மனம்
பாரமாய்
பாததூர பயணத்தை
இன்னும் கடக்க
பயம் கொள்கிறது.
என்ன செய்ய முடியும் ?
எல்லாவற்றையும்
கடந்துதான் போக
வேண்டியதிருக்கிறது.
விதி வலியது - ஆனாலும்
அதை எழுதிய கை
இன்னும் வலியது
என்பதை மனமே
மறந்துவிடாதே!
' மனமே !
உனக்கு ஒரு சொற்றோடர்
சொல்லட்டுமா ?
"நடப்பதெல்லாம் பெரும்
நன்மைக்கே !"- என்று
எல்லோர் விதியிலும்
எழுதப்பட்டிருக்கிறது'

ரஹ்மத் ராஜகுமாரன்

CALL - 9443446903
9360181033

ஒவ்வொரு 15 நாட்களுக்கு 3 புத்தகங்கள் ( என்ற அடிப்படையில் சிலபம் அது ஒரு மாதமும் ஆகலாம்) திருநெல்வேலி மாவட்ட நூலகத்தில் எடுத்து வந்து படிப்பேன். இன்று




**1) வானியலும் தமிழரும் - ம. சோ. விக்டர்**
தமிழரின் வான் அறிவியலே ஞாலத்தை ஆண்டது. இன்றும் ஆண்டு கொண்டிருக்கிறது என்பதை மொழிச் சான்றுகளுடன் நிறுவ இயலும். இன்னும் சொல்லப் போனால், 27 விண்மீன்களுக்கான தமிழ்ப் பெயர்கள் தெளிவாக உள்ளன. புரவி முதல் (அசுவினி) தோணி (இரேவதி) வரையில், அவ்விண் மீன்களின் தன்மைக்கேற்பத் தமிழர்கள் சூட்டிய பெயர்கள், சிற்சில மாற்றங்களுடன் வடமொழியில் சொல்லப்பட்டுள்ளன.
ஆனால் கிரேக்க மொழியில் 27 விண்மீன்களில் 13 விண்மீன்களுக்குப் பெயர்களே இல்லை என்பது தெளிவு. எடுத்துக் காட்டாக, ஐவிரல் (அஸ்தம்), முறம் (விசாகம்) போன்ற விண்மீன்களைப் பெயரிட்டு அழைக்காமல், முறையே அயோட்டா கோர்வி, பீட்டா லிப்ரா என்று, அவ்விண்மீன் கூட்டத்தைக் குறித்தும், அதன் ஒளிரும் தன்மையைக் குறித்தும் அழைக்கின்றனர்.
விளக்கமாகச் சொல்வதேனில், அம் விண்மீன்களின் ஒளியை வரிசைப்படுத்தி, அதற்கு ஆல்ஃபா, ஃபீட்டா என்று பெயரிட்டுள்ளனர். இதற்கு, அவ்விண்மீன் கூட்டத்திலுள்ள முதலாவது, இரண்டாவது விண்மீன் என்றே பொருளாகும்.

வானியலை ஞாலத்துக்கு அளித்ததாகக் கூறப்படும் கிரேக்கர்களின் பட்டியலில், பல விண்மீன்களுக்குப் பெயரிடப்படவில்லை என்பதைவிட, அவர்களுக்கு அதற்கான பெயர் தெரியவில்லை என்பதே உண்மையாகும். துருவ விண்மீன் எனப்படும் வடமீனை (Polar) கிரேக்கர்கள் அறிந்திருக்கவில்லை என்றும், அம்மீனைக் கண்டறிந்து அதன் தன்மைகளை விளக்கிச் சொன்னவர்கள், ஃபோனீசியர்களே என்றும், கிரேக்க அறிஞர் எரடோட்டஸ் கூறுகிறார்.
இது பற்றியே வடமீனுக்கு ஃபோனீசு (Phoenice) என்ற பெயரையே கிரேக்கர்கள் சூட்டினர் என்றும் கூறுகிறார். ஃபோனீசியர்கள் தமிழர்களே என்பது, ஆசிரியரின் "எபிரேயத்தின் தாய்மொழி தமிழே" என்ற நூலில் விளக்கப்பட்டுள்ளது.

---

**2) கடவுளும் சைத்தானும் - சாரு நிவேதிதா**
அவந்திகா சுத்த சைவம் என்பதோடு உப்பு புளி மிளகாய் மிளகு வெங்காயம், பூண்டு என்று எதையும் தொட மாட்டாள் குழம்பு ரசம் கூட கிடையாது. இட்லி சாப்பிட்டால் வெறும் இட்லி. எதுவுமே தொட்டுக்கொள்ள மாட்டான். உப்பு போடாமல் அவித்த காய்கறி மற்றும் பழம்,
.
ஆனால் நானோ ஒரு சாப்பாட்டுப் பிரியன். மேலே சொன்ன ஆட்டுக் கால் பாயா பார்ட்டி. ஒரு துண்டு கருவாடாவது இல்லாவிட்டால் சாப்பாடு உள்ளே இறங்காது. கருவாடு என்றதும் ஞாபகம் வருகிறது. எனக்கு உயர் ரத்த அழுத்தம் இருப்பதால் உப்பு அதிகம் கூடாது. கருவாட்டிலோ உப்பு கன்னாபின்னா என்று இருக்கும். அதனால்

அவளே நொச்சிக்குப்பம் போய் மீன் வாங்கிக்கொண்டு வந்து, அவளே அறுத்து கழுவி, மிதமான உப்பு போட்டு காய வைத்து கருவாடு செய்வாள் அவந்திகா. சரி, மார்க்கெட்டிலேயே அறுத்து வாங்கிக் கொண்டு வரலாமே என்று கேட்டால், நாமே செய்தால் இன்னும் சுத்த மாக செய்யலாமே என்று பதில் வரும்.
இவ்வளவுக்கும் அவந்திகாவுக்கு யாரும் அசைவம் சாப்பிடுவது பிடிக்காது. உயிரைக் கொலை செய்வது பாவம் என்று சொல்லுவாள். தென்கலை ஸ்ரீவைஷ்ணவ இனத்தைச் சேர்ந்த பெண்!
ஒருநாள் அவசர அவசரமாக வீட்டில் இருந்த பழங்கள் அவ்வளவையும் எடுத்து பைகளில் வைத்துக்கொண்டிருந்தாள். நான் பதற்றத்துடன் எழுந்து என்ன என்று வெளியே வந்து பார்த்தேன். ஒரு இள பெண் நான்கு குழந்தைகளுடன் நின்றுகொண்டிருந்தாள், குடும்பத்துப் பெண் போலிருக்கிறது. புருஷனிடம் கோபித்துக்கொண்டு வந்துவிட்டாள் போல, எனக்கு அந்த இடத்தில் தெரிந்தது ஓ சிறுகதை. ஆனால் அவந்திகாவுக்கு அவர்களின் பசித்த கண்கள் தெரிந்திருக்கிறது.
சில சமயங்களில் மகா அவ்தார் பாபாவுடன் பேசி இருக்கிறாள். 2000 ஆண்டுகளாக இமயமலையில் வாழும் ஞானி. ரஜினி சொன்னபோது கிண்டல் செய்தேன். இப்போது என் வீட்டுக்குள்ளேயே பார்க்கிறேன்.
எல்லாம் சரி இருந்தாலும் எனக்கு ஒரு தீராத சந்தேகம். இவ்வளவு தெய்வாம்சம் பொருந்திய ஒரு பெண் எப்படி ஒரு சாத்தானை கணவனாக தேர்ந்தெடுத்தாள் ?

---

**3) மாற்றுக்களம் ( ஆவணப் படங்கள் ஓர் அறிமுகம் ) ஜெ. பிஸ்மி**
சாசனங்கள் கல்வெட்டுக்கள் ஓலைச்சுவடிகள், தாமிரத்தகடுகள் போன்றவற்றில் பதிவு செய்யப்பட்ட தகவல்களைக் கொண்டே நம் முன்னோர்களைப் பற்றியும், அவர்கள் வாழ்ந்த காலத்தில் நிலவிய பண்பாடு, பழக்க வழங்கங்கள் பற்றியும் நாம் அறிந்து கொண்டிருக்கிறோம் தவிர, அவையே நமக்கு வரலாற்று ஆதாரமாகவும் இன்றளவும் பயன்பட்டு வருகின்றன.
இன்றைய விஞ்ஞான, யுகத்திலோ ஆவணப்படங்களை மட்டுமே நிகழ்காலத்தின் துல்லிய பதிவுகளாக கூற முடிகிறது. ஏனெனில், உண்மையை உள்ளது உள்ள படி பதிவு செய்கிற கலைவடிவமாகவே ஆவணப்படங்கள் விளங்கின்றன. மிகைப்படுத்தப்பட்டு அல்லது கற்பனையைக் கலந்து உருவாக்கப்பட வேண்டிய தேவையோ, நிர்பந்தமோ ஆவணப் படங்களுக்கு இல்லாததுதான் அதன் தனித்தன்மையாகவும் இருக்கிறது

**Rahmath Rajakumaran** is in **Melapalayam**.

April27-2023

சகோதரி **Shafiyath Qadiriyah** 9 வருடங்களுக்கு முன் ஆண்ட்ராய்டு போன் இல்லாமல் சாதாரண A4 சைஸ் பேப்பரில் கட்டுரை எழுதி சுமார் 24 இஸ்லாமிய முன்னணி பத்திரிக்கைக்கு அனுப்பி வைத்த காலத்தில் என்னை முகநூலில் அறிமுகப்படுத்திய இந்த சகோதரி அத்தருணத்தில் என்னைப் பற்றிய அவர்களின் பதிவு.

6:55 am












9 Years Ago
See your memories >



**Shafiyath Qadiriyah** is with **Saud Jf** and **16 others**.
26-Apr-2014 ·

ரஹ்மத் ராஜகுமாரன் !

Rahmath Rajakumaran!

இவர் எழுதிய பல கட்டுரைகளை ,,இஸ்லாமிய மாத இதழ்களில் படித்து
விட்டு ,,வியந்துபோய் ,,கால் பண்ணி பேசி பாராட்டி இருக்கேன் !

நேரில் சென்று சந்தித்தும் இருக்கேன் !

வலிமார்கள் நிறைந்த பூமியான ,,
திருநெல்வேலி ,மேலப்பாளையத்தில் ,,பிறந்தவர் !

இவரின் கட்டுரைகள் எல்லாம் விஞ்ஞானம்..எப்படி
மெய்ஞானத்தில் ,,இருந்தது..இருக்கிறது ..என்பதை துல்லியமாய் ஆராய்ச்சி பண்ணி எழுத
பட்டு இருக்கும் !

சிந்திப்பவர்களுக்கு தெளிவான அத்தாட்சி ,,என்று இறைவசனம் ,வருமல்லவா ..

அது இறைவன் ,,இவரைப்போன்றவர்களுக்கு தான் சொல்லி இருக்கானோ ,,என வியந்தேன் !

ஒவ்வொரு வசனத்தையும் ,,ஆராய்ந்து ஆராய்ந்து ,,,
அது இப்போது உள்ள விஞ்ஞானிகள் ,,ஆராய்ந்து சொன்ன விசயத்திற்கு எப்படி ஒத்து
போகிறது என தெளிவாக விளக்கி உள்ளார் !

இவரை சமீபத்தில்தான்,,முகநூளில் ஒரு நண்பர் இணைய சொல்லி
வற்ப்புறுத்தி ,,இணைந்துள்ளார் !

விஞ்ஞானத்தை ..மெய்ஞானத்தில் ,,,பார்க்க ஆசைப்படுபவரா நீங்கள் ?

உடனே அவர் கட்டுரைகளை படியுங்கள் !
அவர் எழுதிய நூல்களை படியுங்கள் !

இது ஏதோ விளம்பரம் அல்ல !
நான் பெற்ற இன்பம் இந்த வையகம் பெற வேண்டும் என்ற நல்லெண்ணம் தான் !

இவரை நாம் வாழும் காலத்தில்,,நமக்கு நண்பராக ஆக்கி வைத்த வல்லவனுக்கே எல்லா
புகழும் !
முதலில் முகநூல் நண்பராக கொள்ளுங்கள் !
பின்,,அவர் எழுத்துக்களை படியுங்கள் !

மாஷா அல்லாஹ் ! எப்பேர்ப்பட்ட உண்மைகள் ..!
எப்பேர்ப்பட்ட தெளிவுகள் !
எப்பேர்ப்பட்ட ஞானங்கள் !

அல்லாஹ் அவருக்கு நீடித்த ஆயுளை கொடுத்து,,இன்னும் லதுன்னியத்தான அறிவை
கொடுத்து ,,
அவர் சந்ததிகளையும் ,,அவரை விட ஆன்மீகத்தில் முத்துக்களாக மிளிர வேண்டும் என துஆ
செய்கிறேன் !

**250 வருடங்கள் அந்த ஓர் இரவில்....**

( விஞ்ஞான புனைக்கதை எழுதி ரொம்ப நாளாச்சி கொஞ்சம்.... )




1799 மே 3 ஸ்ரீரங்கப்பட்டினம் . நடுநிசியில் ஆங்கிலேயர் இருவர் ரகசியமாக உலாவினர். நான் அவர்களை பின் தொடர்ந்தேன்.

அந்த இரவில் மஹாராஜ் திப்புசுல்தானின் நம்பிக்கைக்குரிய பாத்திரமாக இருந்த அவரது அமைச்சர்கள் பூர்மையா, மீர் சாதிக் ஆகியோர் கையூட்டைப் பெற்று துரோகிகளாக மாறிய இரவு ...

துரோகிகள் ஸ்ரீரங்கப்பட்டினத்தின் கோட்டைக் கதவுகள் ஆங்கிலேயருக்குத் திறந்து விட சம்மதித்தனர். இதை மஹாராஜ் திப்புக்கு துப்பு கொடுக்க போனபோது பாதையெங்கும் பூர்மையாவின் ஆட்கள்.

அதில் ஒருவன் என் மீது வீசிய சந்தேகப் பார்வை என்னை ஓட வைத்தது . ஓடினேன். ஓரிரு உருவங்கள் " அதோ ஹுசைன்..". என்று என் பெயரைக் கூறி என்னை விரட்டுவதை உணர்ந்தேன். மங்கலான நிலவொளியில் ஸ்ரீரங்கப்பட்டினத்தின் கோட்டை தெரிந்தது. பாதையரியாத அந்த இரவில் தலைதெறிக்க ஓடினேன். ஓடினேன்.. ஓடினேன் ....

தூரத்தில் நல்ல வெளிச்சம் பகல் மணி 12 இருக்கும் போல் வெளிச்சம். திரும்பிப்பார்த்தேன். மை இருட்டு. அதே நடுநிசி இரவு . என் இடதுகால் இரவிலும், வலது கால் பகலிலுமாக வைத்தேன். இது என்ன... காலத்தின் கோலம்.

எப்போ படித்த சிபி கதை ஞாபகத்திற்கு வந்தது.

" சிபி கதை கதாநாயகன் நெடுந்தூரம் பயணம் செய்து, இறுதியில் பிரபஞ்சத்தின் எல்லைக்கு வருகிறான். அவன் காலடியில் எழுதியிருக்கும் ஒரே ஒரு வரிதான்.

" இதுதான் பிரபஞ்சத்தின் எல்லை "

ஆனால் இந்த வரி தலைகீழாக அச்சடிக்கப்பட்டிருந்தது "

என் காலடியைப் பார்க்கிறேன். நடுநிசி இரவும், நடுப்பகலும் சந்தித்திக்கும் அந்த எல்லைகோட்டின் அடையாளம் தெரிந்தது.

இங்கு இன்னொரு சூரியன். சுவாச காற்றில் லேசாக அமினோ ஆக்சைடு நெடி. தூரத்தில் சில ஏலியன்கள். திப்புவின் ஏவுகணை பொறுப்பாளான என்னை வரவேற்க காத்திருந்த மாதிரி சிரித்துக்கொண்டு என் கையைப்பிடித்து குலுக்குகிறார்கள்.

மீண்டும் திரும்பிப் பார்த்தேன். அதோ ஸ்ரீரங்கப்பட்டினத்தின் கோட்டை. அங்கே இரவும் நிலவும் காய்ந்து கொண்டிருந்தது.

இறக்கை , சக்கரம் இல்லாத ஒரு வாகனத்தில் திணிக்கப்பட்டேன்.

என் கரங்கள், கால்கள் கட்டப்பட்டன. ஏதோ ஒரு வாசனையான திரவ உணவு வாய் வழியே உட்செலுத்தப்பட்டது. மயக்குவதைப் போல உணர்கிறேன். என் மனதில் காட்சிகள் விரிவடைகின்றன.

1780ல் நடைபெற்ற இரண்டாம் மைசூர் போரில் எங்களது ராக்கெட் படை ஆங்கிலேயரைத் திணறடித்தனர்.அதில் என் பங்களிப்பைக் கண்டு பெரிய மகராஜ் ஹைதர் என்னைத் தட்டிக்கொடுத்து பாராட்டினார்.

கொல்லியூரில் கர்னல் வில்லியம் படைகளை எதிர்கொண்டோம். ஆங்கிலேயப் படையை விட எங்கள் திப்பு சுல்தான் படைகள் எண்ணிக்கையில் குறைவு. ஆனாலும் எங்கள் வீரர்கள் ஆங்கிலேய படைகளை திணறடித்தனர்.

பின்வாங்கிய பெயிலி மெட்ராசிலிருந்தும், பாண்டிச்சேரியிலிருந்தும் படைகளை வரவழைத்துக் கொண்டார். வேரம்பாக்கத்தில் வைத்து அந்தப் படைகளை எதிர்கொண்ட எங்கள் மகராஜ் திப்புசுல்தான் ஒட்டுமொத்த ஆங்கிலேய படைகளையும் நிர்மூலமாக்கினார். கிழக்கிந்திய கம்பனியின் சரித்திரத்தில் நடந்த பெரும் தோல்வியாக இது இருந்தது.

ஆங்கிலேயர் மிகவும் வியந்த விடயம் திப்பு சுல்தானின் ராக்கெட் படைகளாகும். ஆங்கிலேயரின் ஆயுதக் கிடங்குகளைத் துல்லியமாக தாக்கியழித்தன. பெயிலியுடன் சேர்ந்து 2000 ஆங்கிலேயப் படைகள் சிறைபிடிக்கப்பட்டனர்.

"இரண்டாம் உலகப் போரில் ஜெர்மனி பயன்படுத்திய வி2 ராக்கெட்களுக்கு முன்னோடியாக திப்புவின் ராக்கெட் தொழில்நுட்பம் இருந்தது எப்படி என்று என்னிடம் கேட்பட்டது. நான் பதில் சொல்வதற்குள் ....

" மனித மூளையில் எவ்வளவு ரேம் உள்ளது? "என்று இன்னொரு ஏலியன் கேட்கிறது

" சுமார் 2.5 பெட்டாபைட்டுகள்! இருப்பினும் நியூரான்கள் ஒன்றிணைவதால் ஒவ்வொன்றும் ஒரே நேரத்தில் பல நினைவுகளுக்கு உதவுகின்றன. மூளையின் நினைவக சேமிப்பு திறனை அதிவேகமாக சுமார் 2.5 பெட்டாபைட்டுகளுக்கு (அல்லது ஒரு மில்லியன் ஜிகாபைட்கள்) அதிகரிக்கின்றன" என்று ஒரு ஏலியன் கூறுகிறது .

" இவன் மூளையில் உள்ளதை எப்படி டவுண்லோடு செய்ய வேண்டும் ? " என்று அதே ஏலியன் கேட்க,

" ஆப்டோ ஜெனெடிக்ஸ் எனப்படும் புதிய நுட்பத்தினை பயன்படுத்தி மூளை தகவல்களைச் சேமிக்கும் மற்றும் இழக்கும் இந்த முறையைப் பிரதிபலிக்கும் சாதனத்தை நாம் உருவாக்கி உள்ளோம். ஆப்டோ ஜெனெடிக்ஸ் என்பது உயிருள்ள திசுக்களில் உள்ள செல்களைக் கட்டுப்படுத்த ஒளியைப் பயன்படுத்துவதை உள்ளடக்குகிறது.

" இதோ முடிந்தது " என்று முதல் ஏலியன் கூறியது வரை எனக்கு கேட்கிறது. இரவு அந்தரத்திலிருந்து மிதப்பது எனக்கு நன்றாக தெரிகிறது.

அந்த இரவில் ஓர் அரசியல்வாதி பேசுவதை கேட்கிறேன்....

" ஏப்ரல் 28, 2016 வியாழன். இன்று மைசூர் மன்னர் திப்பு சுல்தான் இறந்த 217 வது நினைவு நாள். இரு நூற்று ஐம்பது வருடங்களுக்கு முன்பு 1799 மே 4 -ல் வாழ்ந்து மறைந்தாலும் அவருடைய வாழ்வும் மரணமும் இன்றுவரை மலர்ச்சியாகவே இருக்கிறது. திப்பு என்றவுடன் மக்களின் மனதில் வீரம் நிழலாடுகிறது.

ஸ்ரீரங்கப்பட்டினத்தில் நடந்த நான்காம் மைசூர் போர்க் களத்தில் உயிருக்குப் போராடிக் கொண்டிருந்த மஹாராஜ் யை அணுகிய கிழக்கிந்திய கம்பெனி படைப்பிரிவின் தலைவன் தங்களுக்கு கட்டுப்பட்டு நடக்குமாறு கூறிய போது 'முடியாது' என கர்ஜித்து மறுத்து,

“ஆடுகளைப்போல 200 ஆண்டுகள் பிழைப்பதை விட, புலியைப் போல இரண்டு நாட்கள் வாழ்ந்து மடியலாம்” என அவர் முழங்கிய அந்த கர்ஜனை வரலாற்றின் வைர வரிகளுக்கு சொந்தமாகிவிட்டது."- என்று அரசியல்வாதி கர்ஜிப்பது கேட்டு அதிர்ச்சியாகவும் அதேசமயம் ஆனந்தமாகவும் இருக்கிறது.

ஆமாம்... 250 வருடங்கள் அந்த நீண்ட ஓர் இரவா என்னை கடந்துபோனது ?

## நோன்பில் நடந்த சம்பவங்கள் 1



شَهْرُ رَمَضَانَ الَّذِيْ أُنْزِلَ فِيْهِ الْقُرْآنُ هُدًى لِلنَّاسِ وَبَيِّنَاتٍ مِّنَ الْهُدَى وَالْفُرْقَانِ
'ரமலான் மாதம் எத்தகையதென்றால் அதில்தான் மனிதர்களுக்கு (முழுமையான) வழி காட்டியாகவும் தெளிவான சான்றுகளைக் கொண்டதாகவும் (நன்மை, தீமைகளை) பிரித்தறிவிப்பதுமான அல்குர்ஆன் அருளப் பெற்றது'. (அல்குர்ஆன் 2 : 185)
உலகமகா அற்புதமான திருக்குர்ஆன் ரமலான் மாதத்தில் இறக்கப்பட்ட காரணத்திற்காக அந்த ரமலான் மாதத்தில் நோன்பு வைக்க வேண்டும் என்பது அல்லாஹ்வின் கட்டளை. இது அதற்குரிய மற்றொரு சிறப்பு.

1) ரமலான் முதலாவது இரவில் நபி இபுறாஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு 10 சுஹூபுகள் என்ற வேதபாட ஏடுகள் இறக்கப்பட்டன !

2) அதன்பின் 700 ஆண்டுகளுக்குப் எகிப்திற்கும், சிரியாவிற்கும் இடையே ஏழாயிரம் அடி உயர 'துர்சினா' மலை உச்சியில் நாற்பது நாள் மூஸா (அலை) அவர்கள் நோன்பு நோற்று தவம் இருந்தபோதுதான் ரமழான் பிறை 6ல் தௌராத் வேதம் அருளப்பட்டது.

3) அதன் பிறகு 500 ஆண்டுகளுக்குப் பிறகு சிரியாவின் தலைநகரான 'டொமஸ்கசில் உள்ள 'தீன்' எனும் மலை உச்சியில் நபி தாவுத் (அலை) (டேவிட்) அவர்கள் தவத்தில் இருந்த போதுதான் 'சபூர்' வேதம் ரமழான் மாதம் பிறை 18ல் அருளப்பட்டது.

4) அதன் பிறகு ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்குப் பின் !ஜெருசலத்தில் உள்ள பைத்துல் முகத்தஸ் பள்ளிவாயலின் நேர்கிழக்கில் செய்தூன் மலையில் நபி ஈஸா அலைஹிஸ்ஸலாம் ஈசா (அலை) (யேசு) அவர்களுக்கு றம்ழான் பிறை 12ல் இன்ஜீல் வேதம் அருளப்பட்டது.

5) அதன்பின் அறுநூற்று இருபது ஆண்டுகளுக்கு பின் சவுதி அரேபியாவின் புனித நகரான மக்காவிற்கு வடக்கே இரண்டு மைல் தொலைவில் உள்ள நூர் எனும் ஹிரா மலைக் குகையில் நமது நபிகள் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு றம்ழான் பிறை 27ல் அல்குர்ஆன் அருளப்பட்டது
நபி ஆதம் (அலை) அவர்களுக்கு 10 கட்டளைகளும்,
நபி ஷீத் (அலை) அவர்களுக்கு 50 கட்டளைகளும்,
நபி இத்ரீஸ் (அலை) அவர் களுக்கு 30 கட்டளைகளும்,
நபி இப்ராஹீம் (அலை) அவர்களுக்கு 10 கட்டளைகளும்
நபி மூஸா (அலை) அவர்களுக்குக் 10 கட்டளைகளும் அருளப் பெற்றன. ஆக மொத்தம் அருளப் பெற்ற சுஹ்ஃபுகள் 110
ஆக 4 வேதங்களும் 110 சுஹூபுகளும் ரமலான் மாதத்தில்தான் அருளப்பெற்றது.

ஆரம்பத்தில் நபி மூஸா (அலை) அவர்களுக்கு 10 கட்டளைகள் அருளப்பட்ட சுஹூபுகள் என்ற ஏடுகள்தான் அருளப்பட்டனவேயொழிய மார்க்க சட்டதிட்டங்கள் (ஷரீஅத்) வழங்கப் பெறவில்லை . அதன்பின் அவர்களுக்கு தௌராத் வேதத்தை இறைவன் அருளினான்.
வேதம் வழங்கப் பெற்ற முதல் நபி மூஸா (அலை) அவர்கள் தாம் !

மூஸா (அலை) அவர்களுக்கு அருளப் பெற்ற பத்துக்கட்டளைகள் பின்வருமாறு

1. வணங்குதற்குரியோன் என்னைத்தவிர வேறு எவருமில்லை. எனவே எனக்கு இணை வைக்கக்கூடாது.
2. எனக்கும் உன் பெற்றோருக்கும் நன்றி செலுத்திக் கொண்டிருப்பாயாக! அதன் காரணமாக நீண்ட ஆயுளைப் பெறுவாய்.
3. அல்லாஹ் கொல்ல வேண்டாமென்று தடுத்துள்ள எவரையும் கொல்லக்கூடாது. கொல்லின், வானிலும் பூமியிலும் உனக்கு இடமில்லாமல் போய்விடும்.
4. என் பெயரில் பொய்ச் சத்தியம் பண்ணக் கூடாது
5. நீ உன் செவியால் கேளாத கண்ணால் காணாத, இதயத்தால் தெளியாத எதற்கும் சாட்சி கூறக்கூடாது. கூறின், நியாயத் தீர்ப்பு நாளில் அதுபற்றிக் கேள்வி கணக்குக் கேட்கப் பெறுவாய்.
6.நான் மற்றவர்களுக்கு அளித்த அருட் கொடைகளைப் பற்றிப் பொறாமையுறக் கூடாது.
7.நீ வியபிசாரம் செய்யக்கூடாது: திருடவும்
கூடாது. செய்யின், என் கதவு உனக்கு மூடப்படும் .
8. என்னத்தவிர எவருக்கும் தீ பலியிடவும் கூடாது
என் பெயர் கூறி அறுக்கப்படாத எந்தப் பலியும் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது.
9.அண்டை வீட்டானின் மனைவிமீது நீ ஆசையுறக்கூடாது. அது பாவங்களிலெல்லாம் பெரும் பாவமாகும்.
10. நீ விரும்புவதை மற்றவருக்கும் விரும்பு ; நீ வெறுப்பதை மற்றவருக்கும் வெறு .

ஆனால் திருக்குர்ஆனில் உள்ள 6:151, 152 ஆவது வசனங்களில் தவ்ராத்தின் கட்டளைகள் பொதியப்பட்டுள்ளது என்றும் கூறப்படுகிறது.
قُلْ تَعَالَوْا اَتْلُ مَا حَرَّمَ رَبُّكُمْ عَلَيْكُمْ اَلَّا تُشْرِكُوْا بِهٖ شَيْـًٔـــا وَّبِالْوَالِدَيْنِ اِحْسَانًا وَلَا تَقْتُلُوْۤا اَوْلَادَكُمْ مِّنْ اِمْلَاقٍ نَحْنُ نَرْزُقُكُمْ وَاِيَّاهُمْ وَلَا تَقْرَبُوا الْفَوَاحِشَ مَا ظَهَرَ مِنْهَا وَمَا بَطَنَ وَلَا تَقْتُلُوا النَّفْسَ الَّتِىْ حَرَّمَ اللّٰهُ اِلَّا بِالْحَـقِّ ذٰ لِكُمْ وَصّٰٮكُمْ بِهٖ لَعَلَّكُمْ تَعْقِلُوْنَ
“வாருங்கள்! உங்கள் இறைவன் உங்கள் மீது விலக்கியிருப்பவற்றையும் (ஏவியிருப்பவற்றையும்) நான் ஓதிக் காண்பிக்கிறேன்;
எப்பொருளையும் அவனுக்கு இணையாக வைக்காதீர்கள்;
பெற்றோர்களுக்கு நன்மை செய்யுங்கள்;
வறுமைக்குப் பயந்து உங்கள் குழந்தைகளைக் கொல்லாதீர்கள் - ஏனெனில் உங்களுக்கும், அவர்களுக்கும் நாமே உணவளிக்கின்றோம்;
வெளிப்படையான இரகசியமான மானக்கேடான காரியங்களை நீங்கள் நெருங்காதீர்கள்;
அல்லாஹ் தடுத்துள்ள எந்த ஓர் ஆத்மாவையும் நியாயமானதற்கு அல்லாமல் - கொலை செய்யாதீர்கள் -
இவற்றை நீங்கள் உணர்ந்து கொள்வதற்காக (இறைவன்) உங்களுக்கு (இவ்வாறு) போதிக்கின்றான்
(அல்குர்ஆன் : 6:151)

وَلَا تَقْرَبُوْا مَالَ الْيَتِيْمِ اِلَّا بِالَّتِىْ هِىَ اَحْسَنُ حَتّٰى يَبْلُغَ اَشُدَّهٗ وَاَوْفُوْا الْكَيْلَ وَالْمِيْزَانَ بِالْقِسْطِ لَا نُـكَلِّفُ نَفْسًا اِلَّا وُسْعَهَا وَاِذَا قُلْتُمْ فَاعْدِلُوْا وَلَوْ كَانَ ذَا قُرْبٰى وَبِعَهْدِ اللّٰهِ اَوْفُوْا ذٰ لِكُمْ وَصّٰٮكُمْ بِهٖ لَعَلَّكُمْ تَذَكَّرُوْنَ ۙ
அநாதையின் பொருளின் பக்கம் அவன் பிராயத்தை அடையும் வரையில் அழகான முறையிலன்றி நீங்கள் நெருங்காதீர்கள்;
அளவையும், நிறுவையையும் நீதத்தைக் கொண்டு நிரப்பமாக்குங்கள்;
நாம் எந்த ஆத்மாவையும் அதன் சக்திக்கு மீறி கஷ்டப்படுத்துவதில்லை;
நீங்கள் பேசும்பொழுது அதனால் பாதிக்கப்படுபவர் நெருங்கிய உறவினராக இருந்த போதிலும் நியாயமே பேசுங்கள்;
அல்லாஹ்வுக்கு (நீங்கள் கொடுத்த) உறுதி மொழியை நிறைவேற்றுங்கள். நீங்கள் நினைவு (கூர்ந்து நடந்து கொள்ளும் பொருட்டே அல்லாஹ் உங்களுக்கு (இவ்வாறு) போதிக்கிறான். (அல்குர்ஆன் : 6:152)
இது மாதிரி 110 சுஹுபுகளும் மற்ற 3 வேதங்களான தவ்ராத், சபூர் , இன்ஜில் ஆகியவைகளின் சாரம்சங்கள் திருக்குர்ஆனில் பதியப்பட்டிருப்பதாக திருக்குர்ஆன் ஆய்வாளர்கள் கருதுகின்றனர்
வேதங்கள்யாவுமே ரமலானில்தான் அந்தந்த நபிமார்களுக்கு அருளப்பெற்றது.

## நோன்பில் நடந்த சம்பவங்கள் 2


ஷெய்கு முஹ்யித்தீன் அப்துல் காதிர் அல்-ஜிலானி கத்தஸல்லாஹு ஸிர்ரஹுல் அஸீஸ் இவர்கள் (1077–1165). ஈராக்கில் உள்ள ஜீலான் என்ற ஊரில் ஹிஜ்ரி 470 ஆம் ஆண்டு ( கி.பி. 1078 மார்ச் 19 - ரமலான் பிறை 1 ) பிறந்தார்கள். இவர்கள் காதிரிய்யா என்ற இஸ்லாமிய சூபி சிந்தனைப் பிரிவைத் தோற்றுவித்த இஸ்லாமிய சூபி அறிஞர் ஆவார்கள்.
அன்றிரவு பாக்கியம் பெற்ற இரவாக இருந்தது. வலிகள் நாயகம் அவர்கள் இவ் அவனி தோன்றும் ஏற்றமிகு இரவாக இருந்தது. அவர்களோடு சேர்ந்து ஓராயிரத்து ஒரு வலிமார்களும், பாரினில் தோன்றும் புனித இரவாகவும் அது இருந்தது.
அன்றிரவு பாத்திமா அவர்களின் கனவில் கிள்ரு (அலை) அவர்கள் திருத்தோற்றம் வழங்கி, "பாத்திமாவே! உம் கவலை ஒழிக! அல்லாஹ் உமக்கு ஸலாம் சொன்னான்.உம் கருவறையில் குவலயம் போற்ற வரும் குத்பு நாயகம் தரித்து விட்டார். அவருக்கு அப்துல் காதிர் என்னும் அழகுப் பெயர் சூட்டுக!” என்று நன்மாராயம் நவின்று மறைந்தனர்.

திடுக்குற்று விழித்தெழுந்த பாத்திமா அவர்கள், தம் கணவரை எழுப்பிச் சற்று முன் தாம் கண்ட கனவை விண்டனர். அது கேட்டு அவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கும், மகிழ்ச்சிக்கும் அளவில்லை. கணவனும் மனைவியும் சேர்ந்து இறைவனுக்கு ஆயிரம், ஆயிரம் முறை நன்றி செலுத்தினர்.
இதன்பின் பத்து மாதங்கள் பறந்தோடின. ஓரிரவு அபூஸாலிஹ் சையிது மூஸா (ரஹ்) அவர்கள், அயர்ந்து உறங்கும் பொழுது அவர்களின் கனவில் முஹம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் திருத் தோற்றம் வழங்கித் தம் மகனனைய ஒரு மாமகன் அவரின் திருமா மகனாகத் தோன்ற விருப்பதை நன்மாராயம் மொழிந்து விட்டு மறைந்தனர்.
அவ்விதமே அடுத்த நாள் ஹிஜ்ரி 470 ஆம் ஆண்டு ரமலான் திங்கள் முதல் நாள் (கி.பி 1078 - ஆம் ஆண்டு மார்ச் மாதம் 19 - ஆம் தேதி) திங்கட்கிழமை இரவு, 'ஸஹ்ர்' நேரத்தில், வையகத்தோரும், வானகத் தோரும் ஒருங்கு சேர்ந்து.
"யா மஹ்பூபெ சுப்ஹானி, யா மஃஷூக்கெ ரஹ்மானீ, யா கிந்தீலெ நூரானீ, முஹ்யித்தீனி ஜீலானீ” என்று போற்றிப் பரவசமடைய, குத்புல் அக்தாப், கௌதுல் அஃலம் முஹ்யித்தீன் அப்துல்காதிர் ஜீலானி (ரஹ்) அவர்கள், இவ்வுலகில் தோன்றினார்கள்.

அப்புனித இரவில் கௌது நாயகம் மட்டும், இவ் அவனி தோன்ற வில்லை. அன்றிரவு ஜீலான் நகரில் மட்டும் ஆயிரத்தொரு குழந்தைகள் பிறந்தன. அத்தனையும் ஆன்றோர்களும், சான்றோர்களும், வலிமார்களும் ஆன ஆண் குழந்தைகள். கௌது நாயகம் பிறப்பதைக் கட்டியம் கூறும் முறையில், அவர்கள் அனைவரும் அவனி தோன்றினார்களோ, என்னவோ?
மாண்பார் ரமலானின் முதல் நாள் பிறந்த அம் மாமகனார் பகலிலே பால் அருந்தாது, இரவிலே மட்டும் பால் அருந்தியதும், அந்த ரமலான் மாதம் முடியும் வரை, அவர்கள் அவ்வாறே செய்து வந்ததும், அவர்களை ஈன்ற அன்னை தந்தையருக்கு மட்டற்ற வியப்பையும், மகிழ்ச்சியையும் நல்கின.
உண்மையில் தம் மகன் இறைவனின் பேரருள் பெற்றவரே என்பதை அவர்கள் எண்ணியபொழுது, அவர்களின் உள்ளத்தில் மகிழ்ச்சி பேருவகை பொங்கித் துளும்பியது.

அடுத்த ஆண்டு ரமலான் முதல் பிறையைக் காண இயலா வண்ணம் கார்முகில் மறைத்த பொழுது, மக்கள் பிறை காணாது நோன்பு நோற்க மயங்கினர்.

விடிந்ததும் அவர்கள் ஆண்டகை அவர்களின் அன்னையாரிடம் வந்து இதுபற்றி வினவியபொழுது, அவர், தம் மகன் அன்று வைகறையிலிருந்து பால் அருந்தவில்லை என்றும், எனவே அன்று ரமலான் முதற் பிறையாக இருக்கும் என்றும் கூறினார்.
அவர் கூறியது உண்மையாகவே இருந்தது. பக்கத்து ஊர்களில் அன்று பிறை கண்டதாகப் பின்னர் செய்தி வந்ததைச் செவியுற்றதும், மக்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.
தம் சின்னஞ்சிறு மகன் பெரு மனிதராகிப் பாரெலாம் புகழும் மேதையாக, மாபெரும் இறை நேசச் செல்வராக விளங்குவதை தந்தையார் அபூஸாலிஹ் காணும் நற்பேறு பெறவில்லை. மகனின் பச்சிளம் பருவத்திலேயே அவரை, அன்னையாரின் அரவணைப்பிலும், மாமனாரின் ஆதரவிலும் விட்டுவிட்டு, அவர்
இவ் அவனி நீத்தார்.

தம் மகனின் மகனை வளர்க்கும் மாபெரும் பொறுப்பு, அவரின் பாட்டனார். ஸைய்யிது அப்துல்லாஹ் ஸெளமயீயின் தளர்வுற்ற தோள்கள் மீது திடீரென வந்து விழுந்தது. அம்முதியவருக்குச் சொல்லொணாத் திடுக்கத்தை நல்கியது.
எனினும் இறைவன் விட்ட விதியை ஏற்றுத் தம் அருமைப் பேரரைத் தம் உயிரினும் மேலாய்க் கருதி வளர்த்து வந்தார் அவர் விரைவில் அவரும் இறைவனின் அழைப்போலையை ஏற்று, அவன நீக்கவே, அவர்களை வளர்க்கும் முழுப் பொறுப்பும் அன்னை பாத்திமாவின் தலையில் வந்து விழுந்தது.

ஆறு வயதில் பள்ளிக்கு அனுப்பிவைக்கப்பட்ட அவர்கள், ஆங்கு மற்ற மாணவர்களை விட எல்லா வகைகளிலும் சிறந்து விளங்கினார்கள். மற்றவர்கள் ஒரு வாரத்தில் மனனம் செய்யும் பாடங்களை அவர்கள் ஒரு நாளில் மனனம் செய்து ஒப்புவிப்பதைக் கண்டு, ஆசிரியரும், அன்னையாரும் மகிழ்ந்தனர்.
இரண்டாண்டுகளில் இறை மறையான திருக்குர்ஆன் முழுவதும் அவர்களின் இளமை உள்ளத்தில் பசுமரத்தா போல் பதிந்து விட்டதைக் கண்டு, ஆசிரியருக்கும், அன்னையாருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவில்லை.
முஹ்யித்தீன் ஆண்டகை ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் தந்தை வழிப்பரம்பரையும், தாய் வழிப் பரம்பரையும் செய்யிதினா அலி ரலியல்லாஹு அன்ஹு அவர்களைப் போய்ச் சேருகின்றன. அந்த வகையில் பார்க்கும் போது செய்யிதினா அலி ரலியல்லாஹு அன்ஹு அவர்களின் 13ம் தலைமுறைப் பேரராகின்றனர்.

## நோன்பில் நடந்த சம்பவங்கள் 3

"நோன்பாளி மனைவியை முத்தமிடலாமா ?
நோன்பு நோற்பவர் பகல் காலங்களில் உடலுறவு கொள்ளாமல் விலகியிருப்பதுடன் உடலுறவுக்கு இழுத்துச் செல்லும் நடவடிக்கைகளையும் தவிர்த்துக் கொள்வது சிறந்ததாகும்.
நபிகள் நாயகம் ﷺ அவர்கள் நோன்பு நோற்றிருக்கும் போது தமது மனைவியரை முத்தமிடுவார்கள்;
கட்டியணைப்பார்கள். அவர்கள் தம் உணர்வுகளை அதிகம் கட்டுப்படுத்திக் கொள்பவர்களாக இருந்தனர்.
அறிவிப்பவர்: ஆயிஷா (ரலி), நூல்: புகாரி-1927
நோன்பாளி (மனைவியை) கட்டியணைப்பது பற்றி ஒரு மனிதர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் கேட்டார்.
அவருக்கு நபி நாயகம் ﷺ அவர்கள் அனுமதி அளித்தார்கள்.
மற்றொருவர் வந்து கேட்ட போது அவருக்கு அனுமதி மறுத்தார்கள். அனுமதி வழங்கப்பட்டவர் முதியவராகவும், அனுமதி மறுக்கப்பட்டவர் இளைஞராகவும் இருந்தனர். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி), நூல்: அபூதாவூத்-2382 (2039)
இதில் உணர்வுகளைக் கட்டுப்படுத்திக் கொள்வது தான் முக்கியமான அளவுகோலாகும். முத்தமிடுவதில் ஆரம்பித்து உடலுறவில் போய் முடிந்து விடும் என்று யார் தன்னைப் பற்றி அஞ்சுகிறாரோ அத்தகையவர்கள் பகல் காலங்களில் அதைத் தவிர்த்துக் கொள்வது அவசியம்."
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
நாங்கள் நபி நாயகம் ﷺ அவர்களுடன் அமர்ந்திருந்த போது அவர்களிடம் ஒரு மனிதர் வந்து, “அல்லாஹ்வின் தூதரே! நான் அழிந்து விட்டேன்” என்றார்.
நபி நாயகம் ﷺ அவர்கள், “உனக்கு என்ன நேர்ந்தது?” என்று கேட்டார்கள்.
“நான் நோன்பு வைத்துக் கொண்டு என் மனைவியுடன் கூடி விட்டேன்” என்று அவர் சொன்னார்.
நபி நாயகம் ﷺஅவர்கள், “விடுதலை செய்வதற்கு ஓர் அடிமை உம்மிடம் இருக்கிறாரா?” என்று கேட்டார்கள்.
அவர் இல்லை என்றார்.
“தொடர்ந்து இரு மாதம் நோன்பு நோற்க உமக்கு சக்தி இருக்கிறதா?” என்று கேட்டார்கள்.
அவர் இல்லை என்றார்.
“அறுபது ஏழைகளுக்கு உணவளிக்க உ.மக்கு சக்தி இருக்கிறதா?” என்று நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள்.
அதற்கும் அவர் இல்லை என்றார்.

நபி நாயகம் ﷺஅவர்கள் சற்று நேரம் மௌனமாக இருந்தார்கள். நாங்கள் இவ்வாறு இருக்கும் போது, நபி நாயகம் ﷺஅவர்களிடம் பேரீச்சம் பழம் நிறைந்த அரக் எனும் அளவை கொண்டு வரப்பட்டது. அப்போது நபி நாயகம் ﷺ அவர்கள், "கேள்வி கேட்டவர் எங்கே?" என்றார்கள்.
"நான் தான்" என்று அவர் கூறினார்.
"இதைப் பெற்று தர்மம் செய்வீராக!" என்று நபி நாயகம் ﷺ அவர்கள் கூறினார்கள்.
அப்போது அம்மனிதர், "அல்லாஹ்வின் தூதரே! என்னை விட ஏழையாக இருப்போருக்கா? (நான் தர்மம் செய்ய வேண்டும்?) மதீனாவின் இரண்டு மலைகளுக்கும் இடைப்பட்ட பகுதியில் என் குடும்பத்தினரை விடப் பரம ஏழைகள் யாருமில்லை" என்று கூறினார்.
அப்போது, நபி நாயகம் ﷺ அவர்கள் தமது கடை வாய்ப் பற்கள் தெரியும் அளவுக்குச் சிரித்தார்கள். பிறகு "இதை உமது குடும்பத்தாருக்கே உண்ணக் கொடுத்து விடுவீராக!" என்றார்கள்.
அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி) நூல்: புகாரி-1936

## நோன்பில் நடந்த சம்பவங்கள் 4

( நபி தாவூத் (அலை) அவர்களின் நோன்பும், தொழுகையும், உழைப்பும் )
அப்துல்லாஹ் இப்னு அம்ர் இப்னி அல் ஆஸ்(ரலி) அறிவித்தார்.
நீர் காலமெல்லாம் நோன்பு நோற்று. இரவெல்லாம் வணங்குகிறீரோ?' என்று நபி(ஸல்) அவர்கள் என்னிடம் கேட்டார்கள்.
நான் 'ஆம்!" என்றேன். நபி(ஸல்) அவர்கள், 'அவ்வாறு நீர் செய்தால், அதன் காரணமாக கண்கள் உள்ளே போய்விடும். (மேலும்) அதனால் உள்ளம் களைந்து (பலவீனமடைந்து) விடும்! காலமெல்லாம் நோன்பு நோற்பவர் நோன்பு நோற்றவராக மாட்டார்! (மாதந்தோறும்) மூன்று நாள்கள் நோன்பு நோற்பது காமெல்லாம் நோன்பு நோற்பதாகும்!" என்றார்கள்.
அதற்கு 'நான் இதைவிட அதிகமாக (நோற்பதற்கு) சக்தி உள்ளவன்" என்று கூறினேன். அதற்கு நபி(ஸல்) அவர்கள் 'அப்படியானால் தாவூத் நபியின் நோன்பை நோற்பீராக! அவர்கள் ஒரு நாள்விட்டு ஒருநாள் நோன்பு நோற்பார்கள். (எதிரிகளைச்) சந்திக்கும்போது பின்வாங்கவும் மாட்டார்கள்!" என்று கூறினார்கள்.புஹாரி எண் 1979
அப்துல்லாஹ் இப்னு அம்ர்(ரலி) அறிவித்தார்
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் என்னிடம், 'அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமான நோன்பு தாவூத்(அலை) அவர்களின் நோன்பாகும். அவர்கள் ஒரு நாள் நோன்பு நோற்று, ஒரு நாள்விட்டுவிடுவார்கள்.
அல்லாஹ்வுக்கு மிகவும் விருப்பமான தொழுகை தாவூத்(அலை) அவர்களின் தொழுகையாகும். அவர்கள் இரவில் பாதி நேரம் உறங்குவார்கள். அதில் மூன்றில் ஒரு பகுதி நேரம் நின்று வணங்குவார்கள். அதில் ஆறில் ஒரு பகுதி நேரம் (மீண்டும்) உறங்குவார்கள்" என்று கூறினார்கள். புஹாரி எண் 3420
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்:
'ஒருவர் தம் கையால் உழைத்து உண்பதை விடச் சிறந்த உணவை ஒருபோதும் உண்ண முடியாது. தாவூத் நபி அவர்கள் தங்களின் கையால் உழைத்து உண்பவர்களாகவே இருந்தனர்.'
என மிக்தாம் (ரலி) அறிவித்தார். புகாரி : 2072

**நோன்பில் நடந்த சம்பவங்கள் 5**




பராஉ(ரலி) அறிவித்தார்.
(ஆரம்ப காலத்தில்) நபித்தோழர்கள் நோன்பு நோற்று, நோன்பை நிறைவு செய்யும் நேரம் வந்து, அதற்கு முன்பே உறங்கி விட்டிருந்தால் அன்றைய இரவிலும் (தொடர்ந்து) பகலிலும் மாலை வரை எதையும் உண்ண மாட்டார்கள்.
(ஒரு முறை) கைஸ் இப்னு ஸிர்மா(ரலி) நோன்பு நோற்றிருந்தார்; நோன்பு நிறைவு செய்யும் நேரம் வந்ததும் தம் மனைவியிடம் வந்து, `உன்னிடம் உணவு ஏதும் உள்ளதா?` என்று கேட்டார்;
அவரின் மனைவி, `இல்லை! எனினும் நான் சென்று உமக்காக (உணவைத்) தேடி வருகிறேன்!" என்றார்.
கைஸ் இப்னு ஸிர்மா(ரலி) அன்றைய தினம் கூலி வேலை செய்துவிட்டு வந்ததால் அவருக்கு உறக்கம் மேலிட்டுவிட்டது. அவரின் மனைவி வந்து அவரைக் கண்டபோது, `உமக்கு நஷ்டம் ஏற்பட்டுவிட்டது` என்றார்
நண்பகலானதும் கைஸ்(ரலி) மூர்ச்சையுற்றார்.
இது பற்றி நபி(ஸல்) அவர்களிடம் கூறப்பட்டபோது, `நோன்புக் கால இரவில் நீங்கள் உங்கள் மனைவியருடன் கூடுவது உங்களுக்கு அனுமதிக்கப்பட்டுள்ளது என்ற வசனமும் `இன்னும் ஃபஜ்ரு (அதிகாலை) நேரம் என்ற வெள்ளை நூல் (இரவு என்ற) கருப்பு நூலிலிருந்து தெளிவாகத் தெரியும் வரை உண்ணுங்கள், பருகுங்கள் என்ற வசனமும் இறங்கின.
இதனால் நபித்தோழர்கள் அதிக மகிழ்ச்சியடைந்தார்கள்.

இன்னும் ஃபஜ்ர் (அதிகாலை) நேரம் என்ற வெள்ளை நூல் (இரவு என்ற) கருப்பு நூலிலிருந்து தெளிவாகத் தெரியும்வரை உண்ணுங்கள்; பருகுங்கள்; பின்னர், இரவு வரும்வரை நோன்பைப் பூர்த்தி செய்யுங்கள் எனும் (2:187ஆவது) வசனத் தொடர். இது பற்றி நபி (ஸல்) அவர்களிடமிருந்து பராஉ (ரலி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.
ஸஹீஹ் புகாரி 1915
அதீ இப்னு ஹாதிம்(ரலி) அறிவித்தார்.

`கருப்புக் கயிற்றிலிருந்து வெள்ளைக் கயிறு தெளிவாகும் வரை` என்ற (திருக்குர்ஆன் 02:187) இறைவசனம் அருளப்பட்டபோது, நான் ஒரு கருப்புக் கயிற்றையும் வெள்ளைக் கயிற்றையும் எடுத்து தன் தலையணையில் வைத்துக் கொண்டேன்; இரவில் அதைப் பார்க்கலானேன்; எனக்கு எதுவும் தெளிவாகவில்லை! விடிந்ததும் நபி(ஸல்) அவர்களிடம் சென்று இதுபற்றிக் கூறினேன்;
அதற்கு நபி(ஸல்) அவர்கள் `(கருப்புக் கயிறு என்பதின் கருத்து) இரவின் கருமையும் (வெள்ளைக் கயிறு என்பதின் கருத்து) விடியலின் வெண்மையும் தான்!" என்று பதிலளித்தார்கள். புகாரி 1916
ஸஹ்ல் இப்னு ஸஅத்(ரலி) அறிவித்தார்.
"கருப்புக் கயிற்றிலிருந்து வெள்ளைக் கயிறு உங்களுக்குத் தெளிவாகத் தெரியும் வரை உண்ணுங்கள்; பருகுங்கள்!" என்ற (திருக்குர்ஆன் 02:187) இறைவசனம் அருளப்பட்டது!
அப்போது அவ்வசனத்தில் `மினல் ஃபஜ்ரி (அதிகாலை எனும்)` என்னும் வாசகம் இருக்கவில்லை! அப்போதெல்லாம் மக்கள் நோன்பு நோற்க நினைத்தால் ஒரு காலில் வெள்ளைக் கயிற்றையும் கட்டிக் கொள்வார்கள். அவ்விரண்டும் கண்ணுக்குத் தெரியும்வரை உண்டு கொண்டே இருப்பார்கள்!

பிறகுதான் `மினல் ஃபஜ்ரி (அதிகாலை எனும்)` என்னும் வாசகம் (அவ்வசனத்துடன்) இறங்கியது. `இரவையும் பகலையுமே அல்லாஹ் இவ்வாறு குறிப்பிடுகிறான்" என்று அப்போதுதான் மக்கள் விளங்கினர்!" புகாரி 1917. ஆயிஷா(ரலி) இப்னு உமர்(ரலி) ஆகியோர் அறிவித்தார்.

பிலால்(ரலி), (ஃபஜ்ரு நேரத்திற்கு முன்) இரவிலேயே பாங்கு சொல்வார்கள்; அப்போது நபி(ஸல்) அவர்கள், 'இப்னு உம்மி மக்தூம் பாங்கு சொல்லும்வரை உண்ணுங்கள்; பருகுங்கள்! ஏனெனில், அவர்தாம் ஃபஜ்ரு (கைவறை) நேரம் வந்ததும் பாங்கு சொல்கிறார்!' என்று குறிப்பிட்டார்கள்.
'அவர் பாங்கு சொல்லிவிட்டு இறங்குவார்; இவர் பாங்கு சொல்வதற்கு ஏறுவார் என்பதைத் தவிர இரண்டு பாங்குக்குமிடையே பெரிய இடைவெளி இருக்காது!' என்று காஸிம்(ரஹ்) கூறினார். ஸஹீஹ் புகாரி : 1918 1919. அனஸ் (ரலி) அறிவித்தார்.
'நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் ஸஹ்ர் செய்தோம்; பின்னர், தொழுகைக்கு அவர்கள் தயாராகிவிட்டார்கள்!' என்று ஸைத் இப்னு ஸாபித்(ரலி) கூறினார்; நான் 'பாங்குக்கும் ஸஹ்ருக்குமிடையே எவ்வளவு நேரம் இருந்தது?' என்று கேட்டேன். அதற்கவர் 'ஐம்பது வசனங்கள் (ஓதும்) நேரம் இருந்தது!' என்று பதிலளித்தார்.
ஸஹீஹ் புகாரி : 1921.

## நோன்பில் நடந்த சம்பவங்கள் 6

ரமளானில் விடுபட்ட நோன்பை எப்போது நிறைவேற்ற வேண்டும்? வேறு நாட்களில் நோற்கலாம் என்று அல்லாஹ் கூறுவதால் விடுபட்ட நோன்புகளைப் பிரித்துப் பிரித்து நோற்பதில் தவறில்லை! என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியுள்ளார்கள்.
விடுபட்ட ரமளான் நோன்புகளை நிறைவேற்றாமல் (துல்ஹஜ் மாதம்) பத்து நாட்கள் நோன்பு நோற்பது பொருந்தாது! என்று சயீத் பின் முஸய்யப் (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.
ஒருவர் அடுத்த ரமளான் வரும்வரை விடுபட்ட நோன்பை நோற்காதிருந்தால் இரண்டு நோன்புகளையும் அவர் நோற்பார்; அவர் உணவளிக்கத் தேவையில்லை! என்று இப்ராஹீம் அந்நகஈ (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்.
நோன்பை விட்டவர் (அதற்குப் பரிகாரமாக) ஏழைகளுக்கு உணவளிக்க வேண்டும்! என்று இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாகவும் அபூஹுரைரா (ரலி) அவர்கள் கூறியதாகவும் அறிவிக்கப்பட்டுள்ளது. விடுபட்ட நோன்புகளை வேறு நாட்களில் நோற்க வேண்டும் என்றுதான் அல்லாஹ் கூறுகிறான் உணவளிக்குமாறு கூறவில்லை.
தல்ஹா இப்னு உபைதில்லாஹ்(ரலி) அறிவித்தார்.
ஒரு கிராமவாசி பரட்டைத் தலையுடன் நபி(ஸல்) அவர்களிடம் வந்தார்;
`இறைத்தூதர் அவர்களே! அல்லாஹ் என் மீது கடமையாக்கிய தொழுகை எது என்று சொல்லுங்கள்! என்று கேட்டதற்கு
நபி(ஸல்) அவர்கள், `ஐந்து நேரத் தொழுகைகள்! அவற்றைத் தவிர! (கடமையான தொழுகை வேறெதுவுமில்லை; உபரியாக) நீயாக விரும்பித் தொழுதால் மட்டுமே உண்டு!" என்று பதிலளித்தார்கள்.
அவர் `அல்லாஹ் என் மீது கடமையாக்கிய ஸகாத் எது என்று எனக்குக் கூறுங்கள்!" என்றார்.
நபி(ஸல்) அவர்கள், இஸ்லாத்தின் சட்டதிட்டங்களை அவருக்குக் கூறினார்கள். அப்போது அவர், `சத்தியத்தின் வாயிலாக உங்களை கண்ணியப்படுத்திய இறைவன் மேல் ஆணையாக! நான் உபரியாக எதையும் செய்ய மாட்டேன்; அல்லாஹ் என் மீது கடமையாக்கியதில் எதையும் குறைக்கவும் மாட்டேன்!" என்றார்.
அப்போது நபி(ஸல்) அவர்கள். `இவர் கூறுவது உண்மையானால் வெற்றி பெற்றுவிட்டார்!" என்றோ `இவர் கூறுவது உண்மையானால் இவர் சொர்க்கத்தில் நுழைவார்!" என்றோ கூறினார்கள். புகாரி 1891

## நோன்பில் நடந்த சம்பவங்கள் 7

"ஒருவருக்காக மற்றவர் நோன்பு நோற்றல்
இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கைகளில் ஒருவரது சுமையை மற்றவர் சுமக்க மாட்டார் என்பது முக்கியமான கொள்கையாகும்.
ஒவ்வொருவரும் தத்தமது செய்கைகளுக்குப் பொறுப்பாளிகள் என்றாலும் இதிலிருந்து சில வணக்கங்கள் மட்டும் விதி விலக்குப் பெறுகின்றன. நோன்பும் அவ்வாறு விதிவிலக்குப் பெற்ற வணக்கங்களில் ஒன்றாகும்.
நோன்பு களாவாகவுள்ள நிலையில் ஒருவர் மரணித்து விட்டால், அவருக்காக அவரது பொறுப்பாளர் நோன்பு நோற்க வேண்டும் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அறிவிப்பவர்: ஆயிஷா (ரலி) நூல்: புகாரி 1952
ஒரு மனிதர் நபிகள் நாயகம் (ஸல்) அவர்களிடம் வந்தார். அல்லாஹ்வின் தூதரே! என் தாய் மீது ஒரு மாத நோன்பு (கடமையாக) உள்ள நிலையில் மரணித்து விட்டார். அவரது சார்பில் நான் அதை நிறைவேற்றலாமா ?என்று கேட்டார்.

அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், ஆம்! நிறைவேற்றலாம். அல்லாஹ்வின் கடன் நிறைவேற்றப்பட அதிகம் தகுதியானது என்று கூறினார்கள்.
அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலி) நூல்: புகாரி 1953

புகாரியின் மற்றொரு ஹதீஸில் ஒரு பெண் வந்து இவ்வாறு கேட்டதாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது.
நோன்பு கடமையாகி களாவாகவுள்ள நிலையில் யாரேனும் மரணித்து விட்டால் அவரது வாரிசுகள் அவருக்காக நோன்பு நோற்கலாம் என்று கூறுவதை விட நோற்பது அவசியம் என்று தான் கூற வேண்டும்.
ஏனெனில் கடனுடன் நோன்பை நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஒப்பிட்டுள்ளார்கள். மேலும் கடனை விட நிறைவேற்றுவதற்கு அதிகத் தகுதியுடையது எனவும் கூறுகிறார்கள்."

**நோன்பில் நடந்த சம்பவங்கள் 8**
இப்ராஹீம் (அலை) அவர்களின் நோன்பு

இப்ராஹீம் (அலை) அவர்கள் மக்காவில் இறை ஆலயத்தை எழுப்பி இறைவனைத் தொழுதேத்திய மனநிறைவுடன் பலஸ்தீன் திரும்பிய அவர்கள் அங்கு இறைவனின் நல்லடியார்களுக்கு விருந்தளித்து உபசரிப்பதற்காக நான்கு வாயில்களுடன் ஒரு விருந்து மண்டபத்தை எழுப்பினர்.
அதற்கு நான்கு வாயில்களை வைத்ததற்குக் காரணம் விருந்தினர்கள் எவ்வழியிலேனும் சிரமமின்றி விருந்து மண்டபத்திற்குள் நுழையவும் அதனைச் சுற்றிக் கொண்டு வருவதான சிரமம் கூட இல்லாதிருப்பதற்குமாகும்.
விருந்து மண்டபத்தை எழுப்பியபின் விருந்தினரின்றி உணவருந்துவதில்லை என்று உறுதிபூண்ட அவர்கள் விருந்தினர்களை எதிர்பார்த்துக் காத்திருப்பர்.

விருந்தினர்கள் கிடைக்காவிடின் பல கல் தொலை நடந்து சென்று விருந்தினர்களைத் தேடி அழைத்து 'லுஹா' நேரத்தில் விருந்தளித்துத் தாமும் உண்பர். இல்லையெனில் இல்லை.
விருந்தினர்களில் ஏழைகளாகவும்,வயோதிகர்களாகவும் உள்ளவர்களுக்கு அவர்களே உணவை எடுத்து அவர்களின் வாயில் வைத்து ஊட்டுவர்.
அவர்களின் இல்லத்திற்கு ஒவ்வொரு நாளும் மூன்று முதல் நூறு விருந்தினர்கள் வரை வந்து உணவருந்திவிட்டுச் செல்வர். எத்தனை விருந்தினர்கள் வரினும் அவர்களை அன்பொழுக வரவேற்று அகமும் முகமும் மலர உபசரித்து உணவளித்து மகிழ்வர்.
இதன் காரணமாக, அவர்களுக்கு 'அபுல் லைஃபான்' (விருந்தினர்களின் தந்தை) என்னும் சிறப்புப் பெயரும் ஏற்பட்டது.

இவ்வாறு இப்ராஹீம் (அலை) அவர்கள் இல்லறத்தை நல்லறமாய்ச் செய்து இறைவனுக்கு உவந்த எழிலார் அருள் வாழ்வு வாழ்ந்து கொண்டிருந்தனர்.
அப்பொழுது இறைவனிடமிருந்து, 'இப்ராஹீமே! நீர் எவ்வாறு உம் காதல் திருமகன் இஸ்மாயீலை என் பொருட்டு பலியிட முன் வந்தீரோ அதே போன்று உம் சொத்துக்கள் அனைத்தையும் என் வழியில் தியாகம் செய்தால்தான் நீர் எமக்கு அதிக நெருக்கமுள்ள அடியாராவீர்" என்று அருட்செய்தி வந்தது.
அதுகேட்ட இப்ராஹீம் (அலை) அவர்கள் அடுத்தகணமே தம் சொத்துக்கள் அனைத்தையும் ஏழை, எளியவர்களுக்கு தர்மம் செய்துவிட்டு அகமகிழ்வோடு வீற்றிருந்தனர்.
எனினும் அவர்களின் உள்ளே இன்னும், சில ஆண் மகவுகள் தமக்குப் பிறக்கவில்லையே என்ற எண்ணம் அரித்துக் கொண்டிருந்தது, ஆனால் அவர்களின் அருமை மனைவி சாராவின் உள்ளத்திலோ தம் மணி வயிற்றில் தம் குடி தழைக்க ஒரு மகன் தோன்றவில்லையே என்ற எண்ணம் தீயெனத் தகித்துக் கொண்டிருந்தது.
எனவே அவர்கள் ஓர் ஆட்டுக் குட்டிக்கு நல்ல ஆடைகளை அணிவித்து அதனை அருமை பெருமையுடன் சீராட்டிப் பாராட்டி வளர்த்து வந்தனர்.
ஓரிரவு, அது முஹர்ரம் மாதம் ஒன்பதாம் நாள் வியாழன் பின்னேரம் வெள்ளி இரவாக இருந்தது.

அன்பே உருவாய் அமைந்தவர்களாய், அருளே உருவாய் அமைந்தவர்களாய பன்னிருவர் அவர்களின் இல்லம் எழுந்தருளி, "உமக்குச் சாந்தியும் சமாதானமும் உண்டாவதாக!" என்று கூறினர். அதற்கு இப்ராஹீம் (அலை) அவர்களும் அவ்விதமே உங்களுக்குச் சாந்தியும் சமாதானமும் உண்டாவதாக என்று பதிலிறுத்தனர்.
ஏழு இரவு பகலாக விருந்தினர் கிடைக்காது நோன்பு நோற்றிருந்த அவர்களுக்கு அந்த அழகான அருள் வடிவினரின் எதிர்பாரா வருகை பாலையில் நீர் கிடைத்தது போன்று மட்டற்ற மகிழ்ச்சியை வழங்கியது.
அப்பொழுது இறைவனிடமிருந்து, 'உம்முடைய விருந்தினரைக் கண்ணியப்படுத்துக!" என்ற செய்தியும் வந்தது.
உடனே சற்றேனும் தாமதியாது இப்ராஹீம் (அலை) அவர்கள் அந்த ஆட்டுக் குட்டியை அறுத்து விருந்தினர் ஒவ்வொருவரின் முன்பும் ஒவ்வொரு சுட்ட இறைச்சித் துண்டை வைத்தார்கள்.
இறைவனின் திருத்தூதர் தம் இல்லம் வந்த விருந்தினரை உண்ணீர் உண்ணீர் என்று எவ்வளவோ உபசரித்தும் அவர்கள் உண்ணவில்லை அது கண்டு நபியவர்கள் அஞ்சித் திடுக்குற்றனர்.
நபியவர்களின் அச்சத்தை அவர்களின் முகக் குறியால் விளங்கிக் கொண்ட விருந்தினர், "இப்ராஹீமே! அஞ்சவேண்டாம்" என்று அன்புமொழி பகர்ந்தனர்.
அதுகேட்ட இப்ராஹீம் (அலை) அவர்கள், "நிச்சயமாக நான் உங்களைப் பற்றி அஞ்சுகிறேன்" என்றார்கள். :
அப்பொழுது அவர்கள், 'இப்ராஹீமே! அஞ்சவேண்டாம். நிச்சயமாக நாங்கள் ஜிப்ரீல், மீக்காயீல், இஸ்ராஃபீல், தர்த்தாயீல், அக்வாயீல் முதலானவர்களாவோம். முதன் முதலாக உம்மிடம் விருந்தினராகச் செல்லுமாறு இறைவன் எங்களுக் குக் கட்டளையிட்டான்.

நீர் ஏழு இரவு பகலாக நீர் விருந்தினர் கிடைக்காததன் காரணமாக உண்ணாது நோன்பு நோற்றிருப்பதாகவும் இறைவன் கூறினான். எனவே நீர் உண்ணும்! உம்மை நோன்பு திறக்க வைப்பதற்காகவே நாங்கள் வந்துள்ளோம். இதன்பின் நாங்கள் லூத்துடைய நாட்டுக்குச் செல்வோம். ஓரினப் புணர்ச்சியாளர்களான அவருடைய கூட்டத்தினரை அழித்து, நாசமாக்கிவிட்டு விண்ணகம் மீள்வோம்''' என்று கூறினர். அதனைச் செவியுற்றதும் இப்ராஹீம் (அலை) அவர்களின் புருவங்கள் மேலேறின.
அச்சமயம் அங்கு நின்றுகொண்டிருந்த இப்ராஹீம் (அலை) அவர்களின் கிழ மனைவி ஸாரா வந்தவர்கள் வானவர்கள் என்பதை அறிந்து உள்ளம் மகிழ்ந்து சிரித்தனர். அப்பொழுது வானவர்கள் அவர்களுக்கு இஸ்ஹாக் என்னும் அறிவார்ந்த நன்மகன் பிறக்கப் போவதையும், இஸ்ஹாக்குக்குப் பின்னர் யாகூப் என்னும் பேரர் பிறக்கப் போவதையும் நற்செய்தியாய் கூறிவிட்டு பறந்தனர்.

## நோன்பில் நடந்த சம்பவங்கள் 9

ரமழான் எனும் சொல் 'ரமல்' என்ற சொல்லடியாக பிறந்தது எனலாம். ரமல் என்ற சொல்லுக்கு 'கரித்தல்', தீய்த்தல்' என்ற பொருளும் உண்டு.
ரமழான் மாதத்தில் மேற்கொள்ளப்படும் வணக்க வழிபாடுகள் பாவங்களைத் தீயிட்டு கரித்து விடுவதால் இம்மாதம் ரமழான் எனப்பட்டது.
ஆண்டு முழுவதும் உடலில் சேர்ந்து வரும் அழுக்குப் விஷப் பொருட்கள் இந்த ஒரு மாதகால நோன்பினால் பசி, தாகத்தைக் கொண்டு கரிக்கப்படுவதாக ஆராயப்பட்டுள்ளது.
மேலும், இறைவன் உலகின் முதல் மனிதனாகிய ஹஸரத் ஆதம் (அலை) அவர்களை பூமிக்கு இறக்கிய போது கதிரவனின் வெப்பத்தால் அவர்களது உடல் கருகி விட்டது.
வனவிலங்குகள் கூட அச்சப்படக்கூடிய கரிய உருவத்தில் ஆதம் (அலை) அவர்களும் அவரது மனைவி ஹவ்வா (அலை) அவர்களும் விண்ணகத்திலிருந்து இறக்கப்பட்டனர்.
அச்சமயம் விண்ணவர் கோமான் ஜிப்ரீல் (அலை) அவர்கள் ஆதம் (அலை) அவர்களை அணுகி உம்முடல் மீண்டும் வெண்மையாகி விட நீர் விரும்புகிறீரா? என வினவினார்.
அதற்கு, ஆதம் (அலை) அவர்கள் ஆம் என்றார்கள். அப்படியானால் நீர் 13,14,15 பிறையுடைய நாட்களில் நோன்பு இருப்பீர்களாக எனச் சொன்னதும்,

ஆதம் (அலை) அவர்கள் 13ம் நாள், நோன்பிருந்தபோது அவர்களுடைய உடலில் மூன்றில் ஒரு பாகம் வெண்மையடைந்தது. இரண்டாம் நாள் நோன்பிருந்தபோது, உடலில் மூன்றில் ஒரு பாகம் வெண்மையடைந்தது.
மூன்றாம் நாள் நோன்பிருந்தபோது அவர்கள் உடல் முழுவதும் முன்போலவே வெண்மையாகி விட்டது.
அவ்வாறு ஆதி நபி (அலை) அவர்களும் அன்னை ஹவ்வா (அலை அவர்களும் நோன்பிருந்துதான் பழைய உருவம் பெற்றார்கள்
இதனை, அலி(ரழி) அவர்கள் கூறக்கேட்டு அன்றளா(ரழி) அவர்கள் அறிவித்துள்ளார்கள்.
ஒவ்வொரு மாத்தின் 'ஐயாமுல்பீல்' எனப்படும். 13,14,15ஆம் பிறையுடைய நாட்களில் நோன்பு நோற்கும்படி நூஹு(அலை) நபியவர்கள் காலத்தில் இருந்து கடமையாக்கப்பட்டிருப்பதாக ஹஸ்ரத் மசூத் இப்னு மஸ்ஹுத், இப்னு அப்பாஸ் (ரழி) போன்ற நபித்தோழர்கள் அறிவித்துள்ளார்கள்.
மார்க்கங்களில் அல்லது மதங்களில் நோன்பு விதியாவதற்கு முன் இறைவன் பஞ்சத்தின் மூலம் மனிதனை நோன்பிருக்கச் செய்து அவனது உடல் ஆரோக்கியத்தை கட்டுப்படுத்தினான் என ஒரு சிந்தனையாளர் கூறியுள்ளார். இது சிந்தனைக்குரிய விஷயம்

நபி ஆதம் (அலை) காலம் அன்றிலிருந்து நபி மூஸா (அலை) காலம் வரை அய்யாமுல் பீல் (வெண்மையான நாள்கள்) என்னும் இந்நோன்பு நோற்கப்பட்டது.
இந்த காலக்கட்டத்தில் கூட இந்நோன்பு கட்டாய கடமை அன்று, எனினும் இனிய நபி (ஸல்) அவர்களும் இந் நோன்பை நோற்றதால் அதை இறைவனும் அவர்களுக்கு கடமையாக்கினான்.

**நோன்பில் நடந்த சம்பவங்கள் 10**

நபி மூஸா (அலை) நோற்ற (30 + 10) நோன்புகள்



மூஸாவுக்கு நாம் முப்பது இரவுகளை வாக்களித்தோம்; பின்னர், மேலும் அதை பத்து (இரவுகளைக்) கொண்டு பூர்த்தியாக்கினோம்; இவ்வாறாக அவருடைய இறைவன் (வாக்களித்த) காலக்கெடு நாற்பது இரவுகளாக முழுமை பெற்றது. (குர்ஆன் : 7:142)

ஹஜ்ரத் மூஸா (அலை) அவர்கள், இஸ்ரவேலர்களுக்கு ஒரு வாக்குறுதி அளித்திருந்தார்கள். அதில் அவர்களுடைய விரோதியான பிர்ஔனை அல்லாஹ் அழித்தபின்னர், அவர்கள் நடந்து கொள்ள வேண்டிய நடைமுறைகள், சட்டங்கள் ஆகியவற்றினைக் கொண்ட ஒரு வேதத்தை அல்லாஹ்விடமிருந்து வாங்கி அவர்களுக்குத் தருவதாகக் கூறி இருந்தார்கள்.
இதற்கிணங்க பிர்ஔனும் அவனுடைய கூட்டத்தினரும் அழிக்கப்பட்ட பின்னர், இஸ்ரவேலர்கள் நடந்து கொள்ள வேண்டிய நடைமுறைகளைக் கொண்ட ஒரு வேதத்தை அருளுமாறு அல்லாஹ்விடம் மூஸா நபி வேண்டினார்கள்.
அப்பொழுது இறைவன் மூஸாவை நோக்கி, முப்பது நாட்கள் நோன்பு நோற்று விட்டு வருமாறு கூறியிருந்தான்.
இதனைக் குறித்தே இவ்வசனத்தில் மூஸாவுக்கு நாம் முப்பது இரவுகளை வாக்களித்தோம் எனக் கூறப்பட்டுள்ளது.
அக்கால மக்கள் 'நாள்' என்பதை இரவைக் கொண்டே கணித்து வந்ததால், 'முப்பது இரவுகள்' எனக்கூறி 'முப்பது நாள்' என்பதாகக் கருத்துக் கொள்ளப்படுகிறது.

குறிப்பிட்ட முப்பது நாட்களில் ஹள்ரத் மூஸாநபி அவர்கள் தனித்திருந்து நோன்பு நோற்று இறை தியானத்தில் மூழ்கி பின்னர் தன்னிடம் வந்து வேதத்தைப் பெற வேண்டும் என்பது இறைவனின் கருத்தாகும்.
தனிமையிலிருந்து இத்தவத்தை அவர்கள் செய்ய வேண்டியிருந்ததால் தம்முடைய கூட்டத்தினரை வழி நடத்தும் பொருட்டு தமது சகோதரர் ஹாரூனைத் தமது பிரதிநிதியாக மூஸா நபி நியமித்தார்கள்.
இதனைக் குறித்தே இவ்வசனத்தில் நீர் எனது கூட்டத்தினரிடையே எனது பிரதிநிதியாக இருந்து அவர்களைச் சீர்திருத்தம் செய்யும். நான் இல்லாத சமயத்தில் சிலர் விஷமம் செய்யலாம். அப்படி விஷமம் செய்கிறவர்களின் வழியைப் பின் பற்றி விடாதீர் என்று கூறினார். என அறிவிக்கப்படுகிறது.
இவ்வாறு தமது சகோதரர் ஹாரூனைத் தமது பிரதிநிதியாக நியமனம் செய்துவிட்டு "தூர்ஸினாய்" மலைக்குச் சென்று நோன்பு நோற்றுக் கடும் தியானத்தில் மூஸா நபி மூழ்கி இருந்தார்கள்.
துல்கஃதா மாதம் முதல் பிறையிலிருந்து அம்மாதம் முடிய 30 நாட்கள் பகலில் நோன்பு நோற்றார்கள். இரவில் இறை தியானத்தில் மூழ்கி வணங்கிக் கொண்டிருந்தார்கள்.
மீண்டும் பத்து நாள் ஏன்?
முப்பது இரவுகள் பூர்த்தியாயின. அல்லாஹ்விடம் சென்று பேசி வேதம் பெற்று வருவதற்காக தங்களுடைய பற்களையும் வாயையும் சுத்தம் செய்தார்கள்.

நோன்பாளிகளின் வாயிலிருந்து ஒரு விதமான வாடைவருவது இயற்கையாகும். இத்தகைய வாடையுடன் இறைவனிடம் பேசுவதை விரும்பாத மூஸாநபி அவர்கள், பல்லைத் துலக்கிச் சுத்தம் செய்து கொண்டார்கள். இச்செய்கையானது அல்லாஹ்வுக்கு திருப்தி அளிக்கவில்லை. ஏனெனில், "அவனுக்கு நோன்பாளியின் வாயிலிருந்து வெளிவரும் அந்த வாடையானது கஸ்தூரி வாடையைவிட உயர்ந்ததாகும். '' இதனை மூஸா நபி (அலை) அவர்கள் தெரிந்திருக்கவில்லை.
இதனால் அல்லாஹ் மூஸா நபியிடம் இன்னும் 10 நாட்கள் நோன்பு நோற்று அதே நிலையில் வருமாறு உத்தரவிட்டான். இதனைக் குறித்தே இவ்வசனத்தில், மீண்டும் பத்து இரவுகளைக் கொண்டு பூர்த்தி செய்தோம், அதாவது: மீண்டும் பத்து நாட்கள் நோன்பு நோற்குமாறு கூறிவிட்டோம் என அறிவிக்கப்படுகிறது.
ஆகவே ஹள்ரத் மூஸா (அலை) அவர்கள் துல்கஃதா மாதம் 30 நாட்கள், துல்ஹஜ் மாதம் 10 நாட்கள் ஆக நாற்பது நாட்கள் நோன்பு நோற்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இதனைக் குறித்தே, அவருடைய இரட்சகனால் குறிக்கப்பட்ட நேரம் நாற்பது இரவுகனாகப் பூர்த்தியாகிவிட்டது என இங்கு கூறப்படுகிறது.
இதன்படி, (மூஸா (அலை) அவர்களுக்கு) அல்லாஹ் நிர்ணயித்த கால அளவு துல்ஹஜ் மாதம் பத்தாம் நாளன்று (யவ்முந் நஹ்ர்)

நிறைவடைந்தது. அன்றைய நாளில்தான் மூஸா (அலை) அவர்களுக்கு அல்லாஹ்வுடன் உரையாடும் பெரும் பாக்கியம் கிடைத்தது.
அதே நாளில்தான் முஹம்மத் (ஸல்) அவர்களுக்கும் அல்லாஹ் (இஸ்லாமிய) மார்க்கத்தை முழுமையாக்கினான். "இன்று உங்களது மார்க்கத்தை உங்களுக்காக நான் முழுமையாக்கி விட்டேன். எனது அருட்கொடையை உங்கள்மீது நிறைவாக்கிவிட்டேன். இஸ்லாத்தை உங்களுக்குரிய மார்க்கமாக நான் பொருந்திக்கொண்டுவிட்டேன்" குர்ஆன் (5:3) என்றவசனத்தில் இதையே தெரிவிக்கின்றான்.
இறைவனுக்காக நோன்பு நோற்கும் நோன்பாளியைக் குறித்து நபிகள் பெருமானார்(ஸல்) அவர்கள் அறிவிக்கையில், 'நோன்பு நோற்பவனின் வாயிலிருந்து வரும் வாடையாவது அல்லாஹ்விடம் கஸ்தூரி வாடையைவிட அறிவித்துள்ளார்கள். (அறிவித்தவர் : ஹள்ரத் அபூஹுரைரா (ரலி), நூல்கள்: புகாரீ, முஸ்லிம்.) மிக்க நறுமணமுடையதாகும்" என்று
ஆகவே, ஹள்ரத் மூஸா (அலை) அவர்கள் 40 நாட்களைப் பூர்த்தி செய்ததும் அல்லாஹ்விடமிருந்து தவ்ராத் வேதத்தைப் பெற்றார்கள்

**நோன்பில் நடந்த சம்பவங்கள் 11**

இயற்கை அளித்த தகவமைப்புத்தான்- நோன்பு



உங்களால் தொடர்ந்து எவ்வளவு நேரம் தூங்க முடியும்? நல்ல குளிர் காலத்தில் இழுத்துப் போர்த்திக்கொண்டு சில மணி நேரம் தொடர்ந்து தூங்க முற்பட்டால் திடீரென்று விழிப்பு ஏற்படும். காரணம் பசி.
எழுந்து சாப்பிட்டு விட்டு மேலும் தூங்கலாம். ஆனால் உணவு, தண்ணீர் இல்லாமல் நான்கு நாள், பத்து நாள், முப்பது நாள் என்று தொடர்ந்து உறங்க இயலாது.
ஆனால், சில வகைப் பிராணிகளால் உணவு, தண்ணீர் இன்றிப் பல மாத காலம் தூங்கிக்கொண்டு இருக்க முடியும். இதுபோன்ற பிராணிகள் வடதுருவப் பகுதியில் வாழ்கின்றன. அதாவது கனடாவின் வட பகுதி, நார்வே, சுவீடன் நாடுகளின் வட பகுதி, ரஷ்யாவின் வடபகுதி, அலாஸ்கா ஆகியவற்றில் உள்ளன.
குளிர் காலம் வந்துவிட்டால் இவை உறங்க ஆரம்பித்து விடுகின்றன. கோடைக் காலம் ஆரம்பிக்கும் போதுதான் விழித்துக்கொள்கின்றன. பிராணிகளின் இந்த உறக்கத்தை 'நீள் துயில்' (Hibernation) எனலாம்.

குளிர் காலத்தில் எங்கு பார்த்தாலும் ஒரே உறை பனியாக இருக்கும். இரை கிடைக்க வாய்ப்பு இருக்காது. எனவேதான் இவை நீண்ட நாட்கள் உறங்க ஆரம்பித்துவிடுகின்றன. இந்த உறக்க காலம் இவற்றிற்கு நோன்புகாலம். இவற்றுக்கு இயற்கை அளித்த தகவமைப்பு.
இவை இப்படி உறங்கும்போது சுருண்ட நிலையில் இருக்கின்றன. தட்டி எழுப்ப முடியாது. உடல் வெப்பம் குறைந்துவிடும். இந்தப் பிராணியைத் தொட்டுப் பார்த்தால் ஐஸ் கட்டிபோல் இருக்கும்.
நாடித் துடிப்பு மிகவும் குறைந்து இருக்கும். சுவாசமும் மிகக் குறைவாக இருக்கும். இதுபோன்ற உறக்கத்தின்போது சிறுநீர் கழிப்பதில்லை. மலம் கழிப்பதில்லை. கோடைக் காலம் வந்துவிட்டால் இவை இயல்பு நிலைக்குத் திரும்பி விடுகின்றன.

மரத் தவளைகள், தரை அணில்கள், வவ்வால், சில வகை எலிகள், ஒரு வகைப் பாம்பு முதலியவை இந்த நீள் துயிலில் ஈடுபடுகின்றன. காமன் பூர்வில் என்ற பறவை சுமார் ஐந்து மாத காலம் இப்படி உறங்குகிறது.
இலையுதிர் காலம் என்பது மரங்களின் நோன்புகாலம் எனலாம்.
மரங்கள் நோன்பு வைக்கத் தொடங்கியதும் அவற்றின் இலைகள் உதிர்ந்து மொட்டையாகி விடுகின்றன.
மரங்கள் ஊண் இன்றி குடிப்பின்றி, பூக்காமல், காய்க்காமல் உறங்கு நிலையில் இருக்கின்றன.
பின், வசந்த காலம் வந்ததும் வெளித்தோற்றத்தில் பட்டுப்போன அதே மரத்தின் கிளைகளில் புதிய தளிர்கள் அரும்பி பூக்கள் மலர்ந்து செழிக்கின்றன.
வயதான மரங்கள் கூட இந்தப் பசுஞ்செழிப்பின் காரணமாக இளமையோடு காட்சி தருகின்றன.
பண்டைக்கால நாகரிகங்கள் அனைத்திலும் நோன்பு நோற்குமாறு வலியுறுத்தப்பட்டுள்ளன.
சடத்துவ வாதிகள் எண்ணுவது போன்று மனித உடல் தசைப்பொருட்களினால் மட்டும் ஆக்கப்படவில்லை.
அதேவேளை, ஆத்மாவினால் மட்டும் ஆக்கப்படவுமில்லை.
இரண்டும் இணைந்து செயல்படுவதே உடம்பு.
எனவே, இரண்டில் ஒன்றை மட்டும் பேணிவளர்ப்பது என்பது சமநிலையைப் பாதிக்கும். இந்த வகையில் சமநிலையைப் பேணிக்கொள்ள உடல், ஆத்மா இரண்டையும் பேணிக்கொள்ள நோன்பு உதவுகின்றது எனலாம்.
நோன்பு இருக்கும் போது நம் உடலுக்கு என்னவெல்லாம் நிகழ்கின்றன ?

நோன்பின் முதல் ஓரிரு நாட்கள்
எடுத்தவுடனே நம் உடலானது நோன்பு நிலைக்கு சென்றுவிடாது. கடைசியாக நாம் உண்ட உணவின் சத்துகளானது நம் உடலில் தங்கி இருக்கும். இது முதலில் உடல் இயக்கத்திற்கு உதவி புரியும்.
முதலில் நம் கல்லீரலில் சேமித்து வைக்கப்பட்ட குளுக்கோஸில் நம் உடல் இயங்கும். இந்த குளுக்கோஸ் தீர்ந்த பின், கொழுப்பானது நம் உடல் செயல் இயக்கத்திற்கு பயன்படும்.
கொழுப்பில் உடல் இயங்கும் போது, உடல் எடை குறைய தொடங்கும், கொலஸ்ட்ரால் அளவு குறையும். நீரழிவு நோய் அபாயமும் குறையும்.
ஆனால், அதே நேரம் ரத்தத்தில் சக்கரை அளவு குறைவது உடலை பலவீனப்படுத்தும்.
இந்த காலக்கட்டத்தில் நீங்கள் தலைவலி, தலைசுற்று மற்றும் குமட்டல் ஆகியவற்றை உணரலாம். பசி அளவு மிக அதிகமாக இருக்கும் போது நிச்சயம் இவற்றை உணரலாம்.
நோன்பின் மூன்றாவது நாளிலிருந்து உடல் வறட்சி குறித்து கவனம் கொள்ளல் வேண்டும்.
தொடர்ந்து நாம் நோன்பு இருக்கும் போது, கொழுப்பு உடைந்து, கரைந்து, ரத்தம் சக்கரையாக மாற்றம் அடையும்.
இரண்டு நோன்புகளுக்கிடையே ஆகாரம் உண்ணும் காலக் கட்டத்தில், நீராகாரம் நிறைய எடுத்துக் கொள்ளல் வேண்டும். இல்லையென்றால் தொடர்ந்து வியர்ப்பது உடல்வறட்சிக்கு வழிவகுக்கும்.
நோன்பு காலக்கட்டம் இடையே நீங்கள் எடுத்துக் கொள்ளும் உணவில், சரியான அளவில் கார்போஹைட்ரேட் மற்றும் கொழுப்பு இருத்தல் வேண்டும். அதேநேரம், புரதங்கள், உப்பு மற்றும் நீர்சத்தும் சரி வீதத்தில் இருத்தல் மிக அவசியம்.

நோன்பு தொடங்கு எட்டாம் நாளிலிருந்து உங்கள் உடல் நோன்பிற்கு ஏற்றார்போல உடல் முழுமையாக தகவமைத்துக் கொள்ளும்.
நோன்பு மூலம் உடலுக்கு ஆரோக்கியம் கிடைத்து விடுகிறது ; நோன்பாளியின் ஆத்மாவிற்கு கூலியாக இறைவனே கிடைத்துவிடுறான். இதை விட ஆத்மாவுக்கு வேறென்ன வேண்டும் ?
يٰۤاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا كُتِبَ عَلَيْكُمُ الصِّيَامُ كَمَا كُتِبَ عَلَى الَّذِيْنَ مِنْ قَبْلِكُمْ لَعَلَّكُمْ تَتَّقُوْنَۙ
ஈமான் கொண்டோர்களே! உங்களுக்கு முன் இருந்தவர்கள் மீது நோன்பு விதிக்கப்பட்டிருந்தது போல் உங்கள் மீதும் (அது) விதிக்கப்பட்டுள்ளது; (அதன் மூலம்) நீங்கள் இறையச்சமுடையோர் ஆகலாம் (குர்ஆன் : 2:183)
"ஈமான் கொண்டோர்களே ! உங்கள் மீதும் மற்ற உயிர்கள் மீதும் நோன்பு விதிக்கப்பட்டிருக்கிறது என்பதை சிந்தித்து அதன் மகத்துவத்தை நீங்கள் உணருங்கள்" .

**நோன்பில் நடந்த சம்பவங்கள் 12**



இந்த பிரபஞ்சத்தில் பூமியன்றி, வேறு கோள்களில், உயிர்கள் இருக்கின்றனவா அல்லது நாம் மட்டும் இந்த பிரமாண்டத்தில் தனிமையில் இருக்கிறோமா என்ற கேள்வி அனைவரையும் கவர்ந்த ஒன்று.
பிரபஞ்சத்தில் உயிர்கள் இருக்கின்றன, அதுவும் பல கோள்களில் இருக்க வாய்ப்பு உள்ளது என்று அறிவியலாளர்கள் கூறுகின்றனர்.
சில நூறு ஆண்டுகளுக்கு முன் ஒரு கண்டத்தில் இருக்கும் மனிதன், மற்ற கண்டங்களில் மனிதர்கள் வாழ்வது தெரியாமல் இருந்தான். அதுபோல நாமும் இப்பொழுது மற்ற கோள்களில் வாழும் உயிர்களைப் பற்றி அறியாமல் வாழ்கிறோமோ?

தமிழ் கடல் மறைமலை அடிகள் அவர்கள் கூட சூரியனில் கூட உயிரினங்கள் வாழ்ந்தாலும் வாழலாம் என்ற அடிப்படையில் ஒரு கருத்து தெரிவித்துள்ளார். அதாவது பூமியில் உள்ள தனிமங்கள் மற்றும் கனிமங்களின் சேர்க்கையால் உருவான மனித உடல் பூமியில் வாழும் தகுதி படைத்துள்ளது.
அதுபோல சூரியனில் உள்ள மூலக்கூறுகளின் தன்மைக்கு ஏற்ப மனித உடல் உருவானால் அது அங்கு வாழும் தகுதி படைத்ததாக இருக்கலாம். மறைமலை அடிகள் போலி அறிவியல் பேசவில்லை. ஒரு நிகழ்தகவிற்கான (probability) சாத்தியக் கூறுகளை மட்டுமே முன்வைக்கிறார். பறக்கும் தட்டு ஆதரவாளர்களை போல உறுதிபட சொல்லவில்லை. ஐரோப்பிய அறிவியலும் இதையே சொல்கிறது.
ஒரு எடுத்துக்காட்டுகாக பூமியில் உள்ள மூலக்கூறுகளின் தன்மையில் மனித உடல் வாழும் தகுதி படைத்தது போல வேற்று கிரகங்களில் கந்தகத் தன்மை (sulfuric acid) உள்ள கோள்களிலும் அதன் மூலக் கூறுகளை உள்ளடக்கி மற்றும் காஸ்மிக் கதிர் வீச்சு போன்றவற்றை தாங்கும் மனித உடல் உருவாக முயன்றால் உயிரினங்கள் வாழலாம் என்ற அடிப்படையில் சொல்கிறார்.
ஏனெனில் மேலே சொல்லியுள்ளபடி பூமியில் பல்வேறு பகுதிகளில் பல்வேறு காலகட்டங்களில் விழுந்த விண்கற்களில் வேறு வேறு வகையான பாக்டீரியாக்கள் கண்டறியப்பட்டுள்ளன.அவை அந்தந்த கோள்களின் நிலவியல் மூலக்கூறுகளின் தன்மை கொண்டவை.
நம்பவே முடியாத இடத்தில் உயிர்கள்

1977 இல் கடலுக்கு அடியில் சுமார் 7000 அடி ஆழத்தில் வெப்ப நீர் உற்றுக்களை கண்டுபிடித்தனர். 400 டிகிரி C என்ற வெப்பநிலை கொண்ட அந்த நீரூற்றுக்கள் கடலின் தரை மட்டத்தில், பூமிக்குள்ளே உள்ள எரிமலை குழம்புகளினால் சூடாக்கப்பட்டு வெளியே வேகமாக வருகின்றன.
பல நச்சு ரசாயனங்கள் நிறைந்த இந்த நீரூற்றை ஆய்ந்த ஆய்வாளர்கள், ஒரு மிகப் பெரிய அதிசயத்தைக் கண்டனர். அங்கே பல உயிர்கள் அந்த ரசாயன பொருட்களையே உணவாக உண்டு, சூரிய வெளிச்சம் சற்றும் இல்லாத அந்த இடத்தில் உயிர் வாழ்ந்து கொண்டிருக்கின்றன.
உயிர்கள் வாழ முடியவே முடியாது என்று நினைத்த இடத்தில், உயிர்களைக் கண்ட அறிவியலாளர்கள் அப்போதுதான் உணர்ந்தார்கள், பிரபஞ்சத்தின் எந்த மோசமான இடத்திலும் உயிர்கள் வளர சாத்தியம் உண்டு என்று.
அதுமாத்திரமல்ல, உறைநிலைக்கு மிகக்குறைவான ஆர்க்டிக் துருவப் பிரதேசங்களிலும், மிக அமிலத்தன்மை கொண்ட இடங்களிலும், உயிர்கள் வாழ்வதைக் கண்ட அறிவியலாளர்கள், பிரபஞ்சத்தில் உயிர்கள் வேறு கோள்களில் இருக்கின்றன என்பதை ஒத்துக்கொள்கிறார்கள்

அண்டத்தில் அறிவுஜீவிகளை தேடும் பணியானது, 'செட்டி' ( SETI --SEARCH FOR EXTRA TERRESTRIAL INTELLIGENCE ) என்ற அமைப்பினால் பிரபஞ்சத்தில் எங்கிருந்தாவது செயற்கை ரேடியோ கதிரலைகள் பூமிக்கு வருகின்றனவா என்று கவனிப்பதுதான்.
செயற்கை ரேடியோ அலைகள் அறிவுஜீவிகளால் தான் உருவாக்க முடியும். பிரபஞ்சத்திலிருந்து பல காரணங்களினால் இயற்கையாக ரேடியோ கதிரலைகள் பூமிக்கு வரும்.
ஆனால் வேற்று கிரக அறிவுஜீவிகள் செயற்கையாக உண்டாக்கிடும் கதிரலைகளை அறிவியலாளர்கள் பிரித்து அறிய முடியும். அவ்வாறு செய்திகள் வந்தால் அதுதான் வேற்றுகோளில் நம்மைப் போன்ற அறிவுஜீவிகள் வாழ்வதற்கு அடையாளமாகும்.

இதற்காக அதிநவீன ரேடியோ தொலைநோக்கிகளை உபயோகித்து இரவு பகல் என்று பாராமல் வருடம் முழுவதும் வானத்தை இன்றும் ஆராய்ந்து கொண்டிருக்கின்றனர்.
ஆனால் இஸ்லாம் மட்டும் வேற்று கிரகவாசிகளை நம்புகிறது. அப்படி நம்புவது ஈமானின் ஓர் அம்சம் என்கிறது. இஸ்லாம் சொல்லும் வேற்றுகிரகவாசிகள் வானவர்களான மலக்குமார்கள். இவர்கள் வாழும் கிரகம் "சித்ரத்துல் முன்தஹா "
இங்கு வாழ்பவர்களுக்கு பறக்க வசதியான இறக்கைகள் இருக்கும் அந்த இறக்கைகள் அவர்களின் தகுதியைப் பொறுத்து இரண்டிலிருந்து அறுநூறு இறக்கைகள் வரை இருக்கிறது.
அவர்கள் மனித ரூபத்திலேயே பூமியில் சக மனிதர்களோடு உரையாடுகிறார்கள் என்பதையெல்லாம் இஸ்லாம் விவரிக்கிறது ஆனால் அறிவியல் இன்னும் வானத்தைத்தான் உற்று நோக்கிக்கொண்டே இருக்கிறது !
நபி(ஸல்) அவர்கள் ஒரு நாள் மக்களுக்கிடையில் இருந்தபோது ஒருவர் அவர்களிடம் வந்து 'ஈமான் என்றால் என்ன?' என்று கேட்டதற்கு,
'ஈமான் என்பது அல்லாஹ்வையும் அவனுடைய வானவர்களையும் அவனுடைய சந்திப்பையும் அவனுடைய தூதர்களையும் நீர் நம்புவது. மேலும், மரணத்திற்குப் பின் எழுப்பப்படுவதையும் நீர் நம்புவது' எனக் கூறினார்கள்.
அடுத்து 'இஸ்லாம் என்றால் என்ன?' என்று கேட்டதற்குவர்கள் கூறினார்கள்.
'இஸ்லாம் என்பது அல்லாஹ்வுக்கு (எதனையும்) நீர் இணையாகக் கருதாத நிலையில் அவனை நீர் வணங்குவதும் தொழுகையை நிலை நிறுத்தி வருவதும் கடமையாக்கப்பட்ட ஸகாத்தை நீர் வழங்கி வருவதும் ரமலான் மாதம் நீர் நோன்பு நோற்பதுமாகும்' என்று கூறினார்கள்.

அடுத்து 'இஹ்ஸான் என்றால் என்ன?' என்று அவர் கேட்டதற்குவர்கள் கூறினார்கள்: '(இஹ்ஸான் என்பது) அல்லாஹ்வை (நேரில்) காண்பதைப் போன்று நீர் வணங்குவதாகும். நீர் அவனைப் பார்க்காவிட்டாலும் நிச்சயமாக அவன் உம்மைப் பார்த்துக் கொண்டே இருக்கிறான் என்றார்கள்'
அடுத்து 'மறுமை நாள் எப்போது?' என்று அம்மனிதர் கேட்டதற்கு
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: 'அதைப் பற்றிக் கேட்கப்பட்டவர் (நான்) அதைப் பற்றிக் கேட்கின்ற உம்மை விட மிக்க அறிந்தவரல்லர். (வேண்டுமானால்) அதன் (சில) அடையாளங்களைப் பற்றி உமக்குச் சொல்கிறேன்.

அவை, ஓர் அடிமைப் பெண் தனக்கு எஜமானாகப் போகிறவனை ஈன்றெடுத்தல்;
மேலும் கறுப்பு நிற ஒட்டகங்களை மேய்த்துக் கொண்டிருந்த மக்கள் உயர்ந்த கட்டிடங்கள் கட்டித் தமக்குள் பெருமையடித்துக் கொள்ளல்.
ஐந்து விஷயங்களை அல்லாஹ்வைத் தவிர யாரும் அறியமாட்டார்' என்று கூறிவிட்டு, பின்வரும் வசனத்தை ஓதிக் காட்டினார்கள். 'மறுமை நாளைப் பற்றிய ஞானம் அல்லாஹ்விடமே உள்ளது.' (திருக்குர்ஆன் 31:34)
பின்னர் அம்மனிதர் திரும்பிச் சென்றார். 'அவரை அழைத்து வாருங்கள்' என்றார்கள்.
சென்று பார்த்தபோது அவரைக் காணவில்லை.
அப்போது, 'இவர்தான் ஜிப்ரீல். மக்களுக்கு அவர்களின் மார்க்கத்தைக் கற்றுக் கொடுக்க வந்திருக்கிறார்' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்கள் . ஸஹீஹ் புகாரி : 50.
இதே வானவர்தான் நோன்பு பிறை 27 -ல் நபிகள் (ஸல்) அவர்களை இறைவன் நபியாக பிரகடனப்படுத்திருப்பதையும், திருக்குர்ஆன் என்கிற வேதத்தை இறக்கியருளப் பட்டதையும் முன்மொழிந்தார்கள்.

**நோன்பில் நடந்த சம்பவங்கள் 13**
( பெண்கள் சமூகமே! )



'ஹஜ்ஜுப் பெருநாளன்றோ நோன்புப் பெருநாளன்றோ தொழும் திடலிற்கு நபி(ஸல்) அவர்கள் சென்று கொண்டிருந்தபோது, சில பெண்களுக்கு அருகே அவர்கள் சென்று, 'பெண்கள் சமூகமே! தர்மம் செய்யுங்கள்! ஏனெனில், நரக வாசிகளில் அதிகமாக இருப்பது நீங்களே என எனக்குக் காட்டப்பட்டது' என்று கூறினார்கள்.
'இறைத்தூதர் அவர்களே! ஏன்' என்று அப்பெண்கள் கேட்டதற்கு,
'நீங்கள் அதிகமாகச் சாபமிடுகிறீர்கள்; கணவனுக்கு நன்றி கெட்டவர்களாக இருக்கிறீர்கள்; மார்க்கக் கடமையும் அறிவும் குறைந்தவர்களாக இருந்து கொண்டு மன உறுதியான கணவனின் புத்தியை மாற்றி விடக்கூடியவர்களாக உங்களை விட வேறு யாரையும் நான் காணவில்லை' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறியபோது,

'இறைத்தூதர் அவர்களே! எங்களுடைய மார்க்கக் கடமையும் எங்களுடைய அறிவும் எந்த அடிப்படையில் குறைவாக உள்ளன' என்று பெண்கள் கேட்டனர்.
'ஒரு பெண்ணின் சாட்சி ஓர் ஆணின் சாட்சியில் பாதியாகக் கருதப்படவில்லையா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டததற்கு,
'ஆம்' என அப்பெண்கள் பதில் கூறினர்.
'அதுதான் அவர்கள் அறிவு குன்றியவர்கள் என்பதைக் காட்டுகிறது; ஒரு பெண்ணிற்கு மாதவிடாய் ஏற்பட்டால் அவள் தொழுகையையும் நோன்பையும்விட்டு விடுவதில்லையா?' என்று நபி(ஸல்) அவர்கள் கேட்டதற்கும் 'ஆம்!' எனப் பெண்கள் பதில் கூறினர். 'அதுதான் பெண்கள் மார்க்கக் கடமையில் குறைவானவர்களாக இருக்கின்றனர் என்பதற்கு ஆதாரமாகும்' என்று நபி(ஸல்) கூறினார்கள்' என அபூ ஸயீதுல் குத்ரி(ரலி) அறிவித்தார்.
ஸஹீஹ் புகாரி : 304.
இதோடு பெண்களில் யாருமே நபியாகவும் தேர்ந்தெடுக்கப்பட வில்லை . காரணம்
" (நபியே!) உமக்கு முன்னர் (பற்பல சமூகங்களுக்கும் ) நாம் அனுப்பிய தூதர்கள் (அந்தந்த சமூகங்களின்) ஊர்களிலிருந்த ஆண்களேயன்றி வேறில்லை; அவர்களுக்கு நாம் வஹீ மூலம் (நம் கட்டளைகளை) அறிவித்தோம் " - (குர்ஆன் : 12:109)

(முஹம்மதே!) உமக்கு முன் ஆண்களையே தூதர்களாக அனுப்பினோம். அவர்களுக்குத் தெளிவான சான்றுகளுடனும், ஏடுகளுடனும் நமது தூதுச் செய்தியை அறிவித்தோம். நீங்கள் அறியாதிருந்தால் அறிவுடையோரிடம் கேளுங்கள்! (குர்ஆன் 16:43)
(முஹம்மதே!) உமக்கு முன் ஆண்களையே தூதர்களாக அனுப்பினோம். அவர்களுக்கு தூதுச்செய்தி அறிவித்தோம். நீங்கள் அறியாதிருந்தால் அறிவுடையோரிடம் கேளுங்கள்! (குர்ஆன் 21:07)
இவ்வசனங்கள் ஆண்கள் தாம் நபிமார்களாக அனுப்பப்பட்டனர் என்பதைச் சந்தேகத்திற்கு இடமில்லாத வார்த்தைகளால் அறிவிக்கின்றன.இதில் எந்த ஒளிவு மறைவும் இல்லை.
அப்படியென்றால் நபியாக ஒரு பெண்ணை தேர்ந்தெடுக்க வில்லையே அது ஏன்? அல்லது ஒரு பெண் நபியாக வருவதில் இறைவனுக்கே உடன்பாடில்லையா?
மலக்குமார்கள் நற்செய்தி கூறினால் அவர்கள் நபிமார்கள் என்ற அளவு கோலை வைத்துக் கொண்டு பெண்களில் நபிமார்கள் உண்டே என்று நபி இப்ராஹீம் (அலை) அவர்களின் மனைவி சாரா அவர்களுக்கு இஸ்ஹாக் (அலை) அவர்கள் பிறக்கப்போகிறார்கள் என்றும் அந்த இஸ்ஹாக் (அலை) அவர்களுக்கு யாகூப் (அலை) அவர்கள் பிறப்பார்கள் என்ற நற்செய்தி கூறப்பட்டதே .

அடுத்து " மூஸாவின் தாயாரிடம் , 'இக்குழந்தைக்கு (மூஸாவுக்கு) ப் பாலூட்டுவீராக என அறிவித்தோம் குர்ஆன் ( 28 : 7 ) என்ற வசனத்தைக் காட்டுகிறார்கள் .
(நபியே! மர்யமிடத்தில்) மலக்குகள்; மர்யமே! நிச்சயமாக அல்லாஹ் உம்மைத் தேர்ந்தெடுத்திருக்கின்றான்; உம்மைத் தூய்மையாகவும் ஆக்கியிருக்கிறான்; இன்னும் உலகத்திலுள்ள பெண்கள் யாவரையும் விட (மேன்மையாக) உம்மைத் தேர்ந்தெடுத்திருக்கின்றான்" (என்றும்), (குர்ஆன் : 3:42)
ஹவ்வாவை சுவர்க்கத்தில் குடியமர்த்தியதை (குர்ஆன் 2:35 )
என்கிற இந்த வசனத்தை மேற்கொள் காட்டுகிறார்கள் .இந்த பெண்மணிகள் ' 'நபிமார்கள் ' என்பதற்கு இவர்களுடன் வானவர் உரையாடியதுதான் என்று இக்கருத்தாளர்கள் கருதுகின்றனர் .
பெண்களில் யாரும் நபியாக இல்லை அவர்களில் வாய்மையாளர்கள் (சித்தீகா) மட்டுமே இருக்கிறார்கள் என்பதே நபிவழி மற்றும் நபித்தோழர்களின் வழி வந்த அஹ்லுஸ் ஸுன்னத் வல்ஜமாஅத் அறிஞர்களின் கருத்தாகும் .

பெண் நபியாக ஏன் தேர்ந்தெடுக்கப்படவில்லை என்பதற்கான காரணங்கள் இதுவாகவும் இருக்கலாம்.
1 ) ஹைல் (மாதவிடாய் ) , நிஃபாஸ் (பிள்ளைப்பேற்றுத் தொடக்கு ) ஆகியவற்றை ஏற்படுத்தல்.
2) ஹால் (கருவுற்றிருத்தல்) 9 மாதம் முதல் 11 மாதம் வரை ).
3) பிள்ளைப் பேற்றுத் துன்பம். (ஒவ்வொரு தடவையும் இறப்பின் துன்பத்தை நுகருதல்).
4) மார்க்கத்தில் குறைவு. ( மாதவிடாய் மற்றும் பிள்ளைப் பேற்றின் தொடக்கின் போதும் தொழவோ, நோன்பு நோற்கவோ அனுமதி இல்லை )
5) இத்தா.
6) கணவர்களுக்குக் கீழ்படிந்து இருக்கும் நிலை .
7) தலாக் (மண விடுதலை ) செய்யும் அதிகாரத்தை கணவர்களின் கையில் கொடுத்தது.
8 ) வாரிசு பாத்தியதையில் குறைவு.
9) சாட்சி கூறுவதில் நஷ்டம் .
10) அறிவில் குறைவு.
(சாட்சி கூற ஆண்களாயிருப்பின் இருவரும் , பெண்களாயிருப்பின் நால்வரும் வேண்டும் .காரணம் பெண்கள் அறிவில் குறைவுடையவர்களாக இருப்பார்கள்)
11) ஸலாம் கூறக் கூடிய வாய்ப்புகளைக் குறைத்தது .
12) ஜும்ஆ தொழுகையும் . ஜமாத் (கூட்டுத் ) தொழுகையும் இல்லாமல் ஆக்கியது .
13 அரசு அதிகாரம் ஆகியவை பெண்களுக்கு கிடையாது .(எந்தப் பெண்ணும் காஜியாக நியமிக்கப் பெறுவதில்லை).
14) பிரயாணம் செய்வதோ, மார்க்கப் போர் செய்வதோ அவர்களுக்கு இல்லாமல் ஆக்கியது .
ஆகி இத்தனை காரணங்களால் நபித்துவம் பெண்களுக்கு இல்லாமல் ஆக்கியது .
பெண்கள் நபிமார்களாக அனுப்பப்படாதது ஏன்? என்பதற்கு இப்படியும் காரணம் இருக்கலாம்
இறைத்தூதர்கள் என்ற பொறுப்பை, தகுதியை நிர்ணயிக்கும் விவகாரமாக மட்டும் சிலர் பார்க்கிறார்கள்.
உண்மையில் இறைத்தூதுப்பணி என்பது மிகவும் கடினமான பொறுப்பாகும். இப்பொறுப்பை நிறைவேற்றுவது ஆண்களில் கூட அனைவராலும் சாத்தியமாகாததாகும்.
இறைத்தூதராக அனுப்பப்பட்டவர்கள் அன்றைய சமூகத்தில் இருந்த அத்தனை கொள்கை கோட்பாடுகளையும் தனியொருவராக நின்று எதிர்க்க வேண்டும்.
அவ்வாறு எதிர்க்கும் போது கொல்லப்படலாம்!
நாடு கடத்தப்படலாம்.
கல்லெறிந்து சித்ரவதை செய்யப்படலாம்! ஆடையைக் கிழித்து நிர்வாணப்படுத்தப்படலாம்.
இன்னும் சொல்லொண்ணாத் துன்பங்களை அவர்கள் அனுபவித்து ஆக வேண்டும்.
பெண்களாக இருந்தால் இவை அனைத்துக்கும் மேலாக அவர்களிடம் பாலியல் பலாத்காரம் செய்து மேலும் துன்புறுத்துவார்கள்!
ஒட்டுமொத்த சமுதாயத்தையே தன்னந்தனியாக களத்தில் நின்று எதிர்ப்பதால் ஏற்படும் சிரமங்களை எந்தப் பெண்ணாலும் நிச்சயம் தாங்கிக் கொள்ளவே முடியாது.
இன்றைக்குக் கூட உடலுக்கு அதிக வேதனை தராத பணிகளில் தான் பெண்கள் நாட்டம் கொள்கிறார்களே தவிர பாரம் இழுக்கவோ, மூட்டை தூக்கி இறக்கவோ பெண்கள் போட்டியிடுவதில்லை. விரும்புவதுமில்லை.
இறைத்தூதர்கள் என்ற பணி இதை விட பல ஆயிரம் மடங்கு கடினமான பணியாகும்.
பெண்களை இழிவு செய்வதற்காகத் தான் இப்பொறுப்பு வழங்கப்படவில்லை என்பது முற்றிலும் தவறு என்பதை மேலே நாம் எடுத்துக்காட்டிய சான்றுகள் சந்தேகமற நிரூபிக்கும்"
(இதுவரை வந்த 1, 24, 000 நபிமார்களில் பெண்களில் ஒருவர் கூட நபியாக இல்லை)

**நோன்பில் நடந்த சம்பவங்கள் 14**
( நோன்பில் பயணம் )



பயணம் வேதனையில் ஒரு பகுதியாகும். அது ஒருவரது உணவை யும், பாணத்தையும், உறக்கத்தையும் தடுத்து விடுகிறது. எனவே ஒருவர் தம் தேவையை முடித்ததும் விரைந்து தம் குடும்பத்தாரிடம் செல்லட்டும்.
அபூஹுரைரா (ரலி), நூல் : புகாரி-1804

பயணம் என்பது எந்தளவிற்கு வேதனையானது என்பதை நபிகளாரின் மேற்கண்ட பொன்மொழியை சிந்தித்துப் பார்த்தால் நன்கு விளங்கும். எனவே தான் குறிப்பிட்ட காரியம் முடிந்தவுடன் தாமதிக்காமல் திரும்ப வேண்டும் என்றும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் அறிவுறுத்துகின்றார்கள்.
இந்த அளவிற்கு வேதனை மிகுந்த பயணத்தை நாம் தனியே செய்ய நேர்ந்தால் நம் கதி என்னாவது? எனவே தான் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் இரவு நேரங்களில் தனியாக பயணம் செய்யக்கூடாது என்று நமக்கு அறிவுறுத்துகிறார்கள். நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

தனிமையில் (பயணம் செய்வதில்) உள்ள, நான் அறிந்திருக்கின்ற சிரமங்களை மக்கள் அறிந்திருந்தால் எந்தப் பயணியும் இரவில் தனியா கப் பயணம் செய்யமாட்டார். இப்னு உமர் (ரலி), நூல் : புகாரி-2998
அவசியமான நேரத்தில் இரவில் தனியாக பயணம் செய்வதில்
தவறில்லை. மேலும் நபி (ஸல்) அவர்கள் தனியாக பயணம் செய்வதால் சிரமம் ஏற்படும் என்று கூறினார்களேத் தவிர மார்க்கப்படி குற்றமான காரியமாக சொல்லவில்லை. நபிகளாரின் கட்டளைப்படி ஸுபைர் பின் அவ்வாம் (ரலி) அவர்கள் உளவு பார்ப்பதற்காக தனியாக பயணம் செய்துள்ளார்கள்.
நபி (ஸல்) அவர்கள் அகழ்ப் போரின்போது (இரவில் தனியாகச் சென்று எதிரிகளை வேவு பார்ப்பதற்கு முன்வருவது யார்?' என்று மக் களை) அழைத் தார்கள்.
ஸுபைர் (பின் அவ்வாம்) அவர்கள் முன் வந்தார்கள். மீண்டும் மக்களை அழைத்தார்கள்.
(மீண்டும்) ஸுபைர் அவர்களே முன்வந்தார்கள். மீண்டும் மக்களை அழைத்தார்கள்.
(மீண்டும்) ஸுபைர் அவர்களே முன் வந்தார்கள். நபி (ஸல்) அவர்கள், "ஒவ்வோர் இறைத்தூதருக்கும் (பிரத்தியேகமான) உதவியாளர் ஒருவர் உண்டு; எனது (பிரத்தியேக) உதவியாளர் ஸுபைர் ஆவார்..." என்று கூறினார்கள். ஜாபிர் (ரலி), நூல் : புகாரி-2997
இப்னு அப்பாஸ்(ரலி) அறிவித்தார்.

இதுவரை இரவில் பயணிப்பதும், தனியே பயணிப்பதும் குறித்துப் பார்த்தோம். இனி நோன்பில் பயணிக்கும்போது பயணத்தில் சிரமம் ஏற்பட்டால் நபிகளாரின் அணுகுமுறையைப் பார்ப்போம் .
'நபி(ஸல்) அவர்கள் மதீனாவிலிருந்து மக்காவிற்குப் புறப்பட்டார்கள். அப்போது அவர்கள் நோன்பு வைத்திருந்தார்கள்.
உஸ்பான் எனும் இடத்தை அடைந்ததும் தண்ணீர் கொண்டுவரச் செய்து, மக்கள் காண்பதற்காகக் கைகளின் நீளத்திற்கு அதை உயர்த்திக் காட்டி நோன்பை முறித்தார்கள்.
மக்காவை அடையும் வரை நோன்பு நோற்க வில்லை. இது ஒரு ரமளானில் நடந்தது!
'நபி(ஸல்) அவர்கள் (பயணத்தில்) நோன்பு நோற்றும் இருக்கிறார்கள்; நோன்பைவிட்டும் இருக்கிறார்கள். (நோன்பு நோற்க) விரும்புபவர் நோன்பு நோற்கலாம்; நோன்பைவிட்டுவிட விரும்புபவர்விட்டு விடவும் செய்யலாம்!' ஸஹீஹ் புகாரி : 1948.

**நோன்பில் நடந்த சம்பவங்கள் 15**



அனஸ் (ரலி) அறிவித்தார்கள் :
நபி(ஸல்) அவர்கள் நோன்பு நோற்கமாட்டார்களோ என்று நாங்கள் நினைக்குமளவுக்கு நோன்பைத் தொடர்ந்துவிட்டு விடுவார்கள்.
நோன்பை விட மாட்டார்களோ என்று நாங்கள் நினைக்குமளவுக்குத் தொடர்ந்து நோன்பு நோற்பார்கள்.
நீர் அவர்களைத் தொழக் கூடியவர்களாகப் பார்க்க விரும்பினால் அவ்வாறே பார்ப்பீர்.
அவர்களைத் தூங்கக் கூடியவர்களாகப் பார்க்க விரும்பினால் அவ்வாறே பார்ப்பீர்! ஸஹீஹ் புகாரி : 1141

____________________________________________________________

இந்த ஹதீஸ்க்கு எனக்குத் தெரிந்த விளக்கத்தை சொல்கிறேன்.
உங்கள் விளக்கத்தை பின்னூட்டத்தில் தெரிவியுங்கள்.
அவர் ஒரு வயதான பெரியவர் கையிலே ஒரு முகம் பார்க்கும் கண்ணாடியை வைத்துக்கொண்டு அடிக்கடி அதனை பார்த்துக் கொண்டிருப்பார். பின்னர், சிறிதுநேரம் வேறு வேலைகளைச் செய்துவிட்டு மீண்டும் கண்ணாடியை எடுத்து சிறிதுநேரம் முகத்தை பார்ப்பார். பிறகு சிந்தனை செய்வதில் நேரத்தை செலவழிப்பார். இது அவரது வாடிக்கையான செயலாக மாறிவிட்டது.
வயதான பெரியவர் அடிக்கடி முகக் கண்ணாடியில் அழகு பார்க்கிறாரே? அந்த “கண்ணாடி இரகசியம்தான்” என்ன? என்பதை அறிய அவரைக் கவனித்துக்கொண்டே இருந்தான் பக்கத்துவீட்டு இளைஞன். தொடர்ந்து ஒரு வாரத்திற்குமேல் கூர்ந்து கவனித்தபின்பும் வயதான பெரியவர் கண்ணாடி பார்க்கும் மர்மம் அவனுக்குப் புரியவில்லை.
“இந்த கண்ணாடி, மிகப்பெரிய அதிசயங்களை நிகழ்த்தும் வித்தைகள் காட்டும் ஏதோ ஒருமாய கண்ணாடியாக இருக்குமோ?” என்று சிந்தித்தான். அவனால் விடைகாண முடியவில்லை. முடிவில் ஒருநாள் அந்த வயதான பெரியவரிடமே தனது சந்தேகத்தை தீர்க்க வேண்டும் என முடிவு செய்தான். பெரியவரிடம் நேரில் வந்தான்.
“அய்யா நான் கேட்பதை தவறாக நினைக்காதீர்கள். உங்களை பத்து நாட்களாக நான் கவனித்து வருகிறேன். அடிக்கடி நீங்கள் கண்ணாடியில் முகம் பார்க்கிறீர்கள். உங்கள் கையில் இருப்பது மாய கண்ணாடியா? ஏன் இதனை அடிக்கடி பயன்படுத்துகிறீர்கள்?” என்று கேட்டான்.
இளைஞனின் கேள்வியைக் கவனித்த பெரியவர் சிரித்தார்.
“என்னிடம் இருப்பது சாதாரண கண்ணாடிதான். இந்தக் கண்ணாடியில் என்னைப் பார்த்தால் என் முகம் தெரியும். நீ பார்த்தால் உன் முகம்தான் தெரியும். வேண்டுமென்றால் நீயே பார்த்துக்கொள்” என்று கண்ணாடியை அவன் கையில் கொடுத்தார். ஆவலோடு அந்தக் கண்ணாடியை வாங்கிப் பார்த்தான் இளைஞன்.
பெரியவர் தொடர்ந்து பேசினார்.
“தம்பி… நான் இந்த சாதாரண கண்ணாடியை ஏன் அடிக்கடி பார்த்துக்கொண்டே இருக்கிறேன்? என்ற கேள்வி உனக்குள் எழுகிறது அப்படித்தானே?”.
“ஆமாம்”.

"இந்தக் கண்ணாடி நமக்கு நிறைய வாழ்க்கைப் பாடங்களைக் கற்றுத் தருகிறது. இந்தக் கண்ணாடியை பார்க்கும்போதெல்லாம் உனக்கு சில சிந்தனைகள் மனதிற்குள் வரவேண்டும். நாம் ஒவ்வொருவரும் மற்றவர்களுக்கு இந்த சாதாரண கண்ணாடி போன்றே இருக்க வேண்டும்" என்றார்.
இளைஞனுக்கு ஒன்றும் புரியவில்லை.
"இந்தக் கண்ணாடியில் முகத்தைப் பார்த்தால் நமது முகத்தில் அழுக்கு இருந்தால் அதை அப்படியே காட்டும். குறைகள் இருந்தால் உள்ளதை உள்ளபடி பிரதிபலிக்கும். நம்மிடம் இருப்பதை அப்படியே பிரதிபலிப்பதுதான் கண்ணாடியின் பணி. இதைப்போலத்தான்,

நாம் நமது மனதை வைத்துக்கொள்ள வேண்டும். நம்மைச் சார்ந்தவர்களிடம் குறிப்பாக உறவினர்கள், நண்பர்கள் போன்றவர்களிடம் ஏதேனும் குறைகள் இருந்தால், இந்தக் கண்ணாடியைப் போலவே உள்ளதை உள்ளபடி சுட்டிக்காட்ட முன்வர வேண்டும்.
மாறாக, சில கற்பனைகளை சேர்த்து, குறைகளை அதிகமாகக் காட்டும் விதத்தில் தெரிவிக்கவும் கூடாது. இல்லாத குறையை இருப்பதுபோல காட்டி மிகைப்படுத்தும் கூடாது . இந்த தவறுகளை செய்யும் போதுதான் நமக்குள் பிரச்சினை வருகிறது.
எனவே, கண்ணாடி சொல்லும் முதல் பாடம் 'உள்ளதை உள்ளபடி சொல்ல வேண்டும் ' என்பதுதான் உங்களில் ஒவ்வொருவரும் மற்றவர்க்குக் கண்ணாடி போன்றவர்கள்"என்றார் பெரியவர்.
"கண்ணாடி சொல்லும் இரண்டாவது பாடம் சற்று வித்தியாசமானது. இந்த சாதாரண கண்ணாடியை நீ பார்க்கும்போது மட்டும்தான் அது உனது குறையைச் சுட்டிக்காட்டுகிறது. கண்ணாடியைப் பார்க்கவில்லையென்றால் அந்தக் கண்ணாடி உன் குறையைச் சுட்டிக் காட்டுவதில்லை.
இதைப்போலத்தான் நாமும் ஒருவரை நேரில் சந்திக்கும்போதுதான் அவரது குறையை சுட்டிக்காட்ட வேண்டும். அவர் இல்லாதபோது அவரைப்பற்றி அவதூறு பேசக்கூடாது" – என்பதை இந்தக் கண்ணாடி மிகப்பெரிய தத்துவத்தை நமக்குக் கற்றுத்தருகிறது என்று தொடர்ந்து சொன்னார் பெரியவர்.
பெரியவரின் பேச்சை அமைதியாகக் கேட்டுக்கொண்டிருந்தான் அந்த இளைஞன்.
"கண்ணாடியில் முகத்தைப் பார்க்கும்போது அந்தக் கண்ணாடி நமது முகத்திலுள்ள குறைபாடுகளைக் காட்டினால், அந்தக் கண்ணாடி மீது நாம் கோபப்படுவதில்லை. ஆத்திரப்படுவதில்லை. ஆனால், அதேவேளையில் அந்தக் கண்ணாடியைப் பார்த்து முடிந்தபின்பு பாதுகாப்பாக எடுத்து வைத்துக்கொண்டு நாள்தோறும் கண்ணாடி பார்க்கிறோம்.
இதைப்போலவே, சிலர் நமது குறைகளை சுட்டிக்காட்டி பேசும்போது அவர்கள்மீது வருத்தப்படக்கூடாது. கோபத்தில் அவர்களை திட்டக்கூடாது. மாறாக, அந்தக் குறைகள் உண்மை என அறிந்தால் நமது குறைகளை நீக்குவதுதான் அறிவார்ந்த செயலாகும். இதுவும் கண்ணாடி நமக்குக் கற்றுத்தரும் இன்னொரு பாடமாகும்" – என்றார் பெரியவர்.

ஒரு கண்ணாடி இத்தனை வாழ்க்கைப் பாடங்களைக் கற்றுத்தருகிறதே என்று எண்ணும்போது இளைஞன் ஆச்சரியப்பட்டான். கண்ணாடி ரகசியம் தெரிந்தபின்பு அவன் தன்னை மாற்றிக்கொள்ளவும் முயற்சி செய்தான்.
ஒரு சாதாரண முகம் பார்க்கும் கண்ணாடி வாழ்க்கை யதார்த்தங்களைப் பிரதிபலிக்கின்றது.
இதைப்போலத்தான் நாம் பயன்படுத்துகின்ற பொருட்கள் பல வாழ்க்கைத் தத்துவங்களை நமக்கு புரியவைக்க முயற்சி செய்கிறது. அதனைப் புரிந்துகொண்டவர்கள் வாழ்க்கையில் வெற்றிகளைக் காண்கிறார்கள்.
நாம் பயன்படுத்தும் பொருட்களைத்தவிர பயன்படுத்தாத பொருட்களும் வாழ்வியலை நமக்கு எளிதாகக் கற்றுத் தருகின்றன. நாம்தான் அதனை புரிந்து கொள்ள வேண்டும் .
நபி (ஸல்) அவர்கள் அறிவிக்கிறார்கள் :
ஓர் இறைநம்பிக்கையாளர், இன்னொரு இறை நம்பிக்கையாளருக்குக் கண்ணாடியைப் போன்றவர். கண்ணாடி குறைகளைச் சுட்டிக் காட்டுவது போல, அவரிடம் ஏதேனும் குற்றங் குறைகளைக் கண்டால் அதனை அவரிடம் சுட்டிக்காட்டி அவரிடமிருந்து அதனை அகற்றி விடட்டும் -அபூஹூரைரா (ரலி) - முஸ்லீம்

**நோன்பில் நடந்த சம்பவங்கள் 16**

அனஸ்(ரலி) அறிவித்தார்கள்.
'நீங்கள் தொடர் நோன்பு நோற்காதீர்கள்!' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியபோது,
'நீங்கள் தொடர் நோன்பு நோற்கிறீர்களே?' என்று நபித்தோழர்கள் கேட்டனர்.
அதற்கு நபி(ஸல்), அவர்கள் 'நான் (எல்லா விஷயங்களிலும்) உங்களைப் போன்றவன் அல்லன்; நிச்சயமாக நான் உண்ணவும் பருகவும் வழங்கப்படுகிறேன்' என்றோ 'உண்ணவும் பருகவும் வழங்கப்பட்டு இரவுப் பொழுதைக் கழிக்கிறேன்' என்றோ கூறினார்கள். ஸஹீஹ் புகாரி : 1961.
**https://m.facebook.com/story.php?story_fbid=2749063802019624&id=100007480923921&mibextid=Nif5oz**
**https://m.facebook.com/story.php?story_fbid=2748949558697715&id=100007480923921&mibextid=Nif5oz**
**https://m.facebook.com/story.php?story_fbid=2747572085502129&id=100007480923921&mibextid=Nif5oz**
**https://m.facebook.com/story.php?story_fbid=2747636098829061&id=100007480923921&mibextid=Nif5oz**
**https://m.facebook.com/story.php?story_fbid=2748849032041101&id=100007480923921&mibextid=Nif5oz**
**https://m.facebook.com/story.php?story_fbid=2749082705351067&id=100007480923921&mibextid=Nif5oz**
**https://m.facebook.com/story.php?story_fbid=3402918173300847&id=100007480923921&mibextid=Nif5oz**

**நோன்பில் நடந்த சம்பவங்கள் 17**
(நோன்பு திறக்க பேரீத்தம் பழம்)




நோன்பு துறத்தலை (தாமதமின்றி) விரைந்து செய்யும்வரை மக்கள் நன்மையைச் செய்பவர்களாகிறார்கள் என நபி صلى الله عليه وسلم கூறினார்கள். அறிவிப்பவர்: ஸஹ்ல் இப்னு ஸஃது رَضِيَ اللَّهُ عَنْهُ நூல்கள்: புகாரி, முஸ்லிம், அஹ்மத்
உங்களில் ஒருவர் நோன்பு துறக்கும்போது பேரித்தம் பழத்தின் மூலம் நோன்பு துறக்கவும்! அது கிடைக்காவிட்டால் தண்ணீர் மூலம் நோன்பு துறக்கவும்! ஏனெனில் தண்ணீர் தூய்மைப்படுத்தக் கூடியதாகும் என நபி صلى الله عليه وسلم அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்: ஸல்மான் பின் ஆமிர் رَضِيَ اللَّهُ عَنْهُ
நூல்கள்: அபூதாவூத், திர்மிதீ, இப்னுமாஜ்ஜா, முஸ்னத் அஹ்மத்"

பேரீச்சம் பழத்தின் தனித்துவத்திற்குரிய காரணம்:
பாலைவனப் பகுதி மக்களுக்கு எளிதில் கிடைக்கும் பழங்களில் பேரீச்சம்பழம் முதலிடம் வகிக்கிறது.
இப்பழங்கள் அனைத்தும் மருத்துவக் குணம் கொண்டவை இது மிகவும் சத்துள்ள பழமாகும்.
இப்பழங்கள் அரபு நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யப்படுகிறது பதப்படுத்தப்பட்ட இந்த பழங்கள் எவ்வளவு ஆண்டுகள் ஆனாலும் கெட்டுப் போகாமல் இருக்கும்.
இது மிகவும் சத்துள்ள பழமாகும். குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை அனைவரும் விரும்பி சாப்பிடும் பழம்.இந்த பழத்தில் இரும்புச் சத்து, கால்சியம்சத்து, வைட்டமின் ஏ, பி, பி2, பி5 மற்றும் வைட்டமின் இ சத்துக்கள் நிறைந்துள்ளன.

ஆயுர்வேத, யுனானி, சித்த மருத்துவத்தில் பேரீச்சம்பழம் முக்கிய இடம் வகிக்கிறது.

சூரிய சக்திகள் அனைத்தையும் தன்னுள்ளே கொண்ட பழம்தான் பேரீச்சம் பழம்.
1) கண் பார்வை கோளாறுகளால் பாதிக்கப்பட்டவர்களுக்கு வைட்டமின் ‘ஏ’ குறைவினால்தான் கண்பார்வை மங்கலாகும். இதைக் குணப்படுத்த பேரீச்சம் பழமே சிறந்த மருந்தாகும்.
மாலைக்கண் நோயால் பாதிக்கப் பட்டவர்கள், பேரீச்சம் பழத்தை தேனுடன் கலந்து ஊறவைத்து சாப்பிட்டு வந்தால் உடலுக்குத் தேவையான எல்லா சத்துக்களும் கிடைக்கும். இதனால் கண்பார்வைக் கோளாறுகள் நீங்கும்.
பெண்களுக்கு:
2) பொதுவாக பெண்களுக்கு அதிக கால்சியம் சத்தும், இரும்புச் சத்தும் தேவை. மாதவிலக்கு காலங்களில் ஏற்படும் உதிரப் போக்கால் இத்தகைய சத்துக்கள் குறைகின்றன. இதை நிவர்த்தி செய்யவும், ஒழுங்கற்ற மாத விலக்கை ஒழுங்கு படுத்தவும் பேரீச்சம் பழம் மருந்தாகிறது.
மெனோபாஸ் அதாவது 45 வயது முதல் 52 வயது வரை உள்ள காலகட்டத்தில் மாதவிலக்கு முழுமையடையும். அப்போது பெண்களின் எலும்புகள் பலவீனமாக இருக்கும். மேலும் கை, கால் மூட்டுகளில் வலி உண்டாகும். இதனை சரிசெய்ய, பேரீச்சம் பழத்தை பாலில் கலந்து கொதிக்க வைத்து பாலையும், பழத்தையும் சேர்த்து சாப்பிட்டு வந்தால் உடல் என்றும் ஆரோக்கியமாக இருக்கும்.

3) ஆண்களுக்கு:
ஆண்களுக்கு ஆண்மைத் தன்மையை அதிகரிக்க தேனுடன் பேரீச்சம்பழம் பெரிதும் உதவுகிறது.
4) சளி இருமலுக்கு:
பேரீச்சம் பழத்தின் கொட்டைகளை நீக்கி பாலில் போட்டு காய்ச்சி ஆறியபின் பழத்தை சாப்பிட்டு பாலையும் பருகி வந்தால் சளி, இருமல் குணமாகும். நீரழிவு நோயால் பாதிக்கப்பட்டவர்களின் எலும்புகள் பலம் இழந்து காணப்படும். இவர்களுக்கு கால்சியம் இரும்பு சத்து தேவை. இவர்கள் தினமும் ஒன்று அல்லது இரண்டு பழம் வீதம் சாப்பிட்டு வந்தால் உடலுக்குத் தேவையான சத்துக்கள் கிடைக்கும்.
5) நரம்பு தளர்ச்சி நீங்க:
அதிக வேலைப்பளு, மன உளைச்சல், நீண்ட பட்டினி இருப்பவர்கள், அதிக வெப்பமுள்ள பகுதிகளில் வேலை செய்பவர்கள் நரம்புத் தளர்ச்சியால் பாதிக்கப் படுவார்கள். இவர்கள் பேரீச்சம் பழத்துடன் பாதாம் பருப்பு சேர்த்து பாலில் கலந்து கொதிக்க வைத்து சாப்பிட்டால் நரம்புத் தளர்ச்சி நீங்கி, ஞாபக சக்தி கூடும். கைகால் தளர்ச்சி குணமாகும்.
பேரீச்சம் பழத்துடன் சிறிது முந்திரி பருப்பு சேர்த்து நீரில் கொதிக்க வைத்து சாப்பிட்டால் உடலுக்குத் தேவையான அனைத்து ஊட்டச்சத்துக்களும் கிடைக்கும்.
6) இரத்தத்தைச் சுத்தப்படுத்தி விருத்தி செய்யும்.
7) எலும்புகளை பலப்படுத்தும்.
😎இளைப்பு நோயைக் குணப்படுத்தும்.
9) முதியோருக்கு ஏற்ற மருந்தாக பேரீச்சம் பழம் உள்ளது. அவர்களுக்கு ஏற்படும் உடல் ரீதியான இன்னல்களைக் குறைக்கும்.
10) சில குழந்தைகள் எதைச் சாப்பிட்டாலும் உடல் பெருக்காமல் மெலிந்தே காணப்படுவார்கள். இந்த பிரச்சனை உள்ள குழந்தைகளுக்கு பேரீச்சம் பழத்தை தேனுடன் ஊறவைத்து காலை மாலை என இருவேளையும் கொடுத்து வந்தால் குழந்தையின் உடல் தேறி, வலுவுடனும், புத்துணர்ச்சியுடன் சுறுசுறுப்பாகவும் இருப்பார்கள்.
11) பேரீச்சம் பழத்தை பசும்பாலில் வேக வைத்து அருந்தி வந்தால் இதய நோய்கள் அண்டாது. புண்கள் ஆறும். மூட்டு வலி நீங்கும்.
இதனால்தானோ உங்களில் ஒருவர் நோன்பு துறக்கும்போது பேரித்தம் பழத்தின் மூலம் நோன்பு துறக்கவும் என்று நபிகளார் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

**நோன்பில் நடந்த சம்பவங்கள் 18**



ஜிஹாத் என்னும் (இறைவழியில் புரியும்) அறப்போருக்குச் சமமான ஒரு நற்செயல் உண்டா ?
அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார்.

இறைத்தூதர்(ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து, 'ஜிஹாத் என்னும் (இறைவழியில் புரியும்) அறப்போருக்குச் சமமான ஒரு நற்செயலை எனக்கு அறிவியுங்கள்' என்று கேட்டதற்கு,
நபி(ஸல்) அவர்கள் 'அப்படி எதையும் நான் காணவில்லை' என்று கூறிவிட்டு, 'அறப்போர் வீரன் (போருக்காகப்) புறப்பட்டுச் சென்றுவிட்டால் (அவனுக்கு) இணையான நற்செயல் புரிந்திட வேண்டி) நீ உன் வணக்கத் தலத்திற்குச் சென்று இடைவிடாமல் தொழுது கொண்டும் **#தொடர்ந்துநோன்பு** நோற்றுக் கொண்டும் இருக்க உன்னால் முடியுமா?' என்று கேட்டார்கள்.
அதற்கு அம்மனிதர், 'அது யாரால் முடியும்?' என்று பதிலளித்தார்.
'அறப்போர் வீரனின் குதிரை, அதைக்கட்டி வைத்துள்ள மேய்ச்சல் கயிற்றுக்கிடையே (கால்களை உதைத்துக் கொண்டு) சில குதிகள் குதித்துச் சென்றால் அதுவும் அவனுக்கு நற்பலனாக எழுதப்படும்' என்று அபூ ஹுரைரா(ரலி) கூறினார். ஸஹீஹ் புகாரி : 2785.

ஜிஹாத் :
பலஹீனமான ஆண்களையும் பெண்களையும், சிறு குழந்தைகளையும் பாதுகாப்பதற்காக, அல்லாஹ்வின் பாதையில் நீங்கள் போர் செய்யாதிருக்கக் காரணம் யாது? (அவர்களோ) "எங்கள் இறைவனே! அக்கிரமக்காரர்கள் இருக்கும் இவ்வூரைவிட்டு எங்களை வெளிப்படுத்துவாயாக; எங்களுக்காக உன்னிடமிருந்து தக்க ஒரு பாதுகாவலனை அளித்தருள்வாயாக; இன்னும் எங்களுக்காக உன்னிடமிருந்து ஓர் உதவியாளனையும் அளித்தருள்வாயாக" என்று பிரார்த்தனை செய்கிறார்கள்.
(குர்ஆன் : 4:75)

அப்பாவிகளை கொல்வதற்கோ, செல்வத்தைக் கொள்ளை அடிப்பதற்கோ, நாடுகளை கைப்பற்றுவதற்கோ மேற்கொள்ளப்படும் முயற்சியல்ல ஜிஹாத்.
மாறாக கொள்கையுடன் வாழும் சமுதாயம் தங்களுடைய கொள்கையை பாதுகாத்துக் கொள்வதற்கு இடையூறு செய்பவர்களையும், தங்களுடைய சுதந்திரத்தைப் பறிக்கும்போது அதற்கு எதிராகவும், தங்களுடைய சொத்துக்கள் சூறையாடப்படும் போது அதனை எதிர்த்து செய்யப்படும் போர்தான் இறைவழியில் மேற்கொள்ளப்படும் ஜிஹாத்.
இப்னு ஹஜர் அஸ்கலானி (ரஹ்) அவர்கள் கூறினார்கள்:
ஜிஹாத் என்பது இறைவனை நிராகரிக்கக்கூடிய மக்களிடம் போர் புரியும் போது மேற்கொள்ளப்படும் "கடும் முயற்சி" என்பதாகும்.
அவ்வாறே மனிதன் தன்னுடைய மனோ இச்சையுடனும், ஷைத்தானுடனும், பாவிகளுடனும் போராடுவதற்கும் ஜிஹாத் என்று சொல்லப்படும்.

மனோ இச்சையுடன் போர் புரிவது என்பது மார்க்கக் கல்வியை கற்றுக் கொள்வது, அதனை செயல்படுத்துவது பின்னர் அதனைப் பிறருக்கு கற்றுக் கொடுப்பதாகும்.
ஷைத்தானுடன் போர் புரிவது என்பது, அவன் ஏற்படுத்துகின்ற சந்தேகங்களுக்கு எதிராகவும் அவனால் அலங்காரமாக காட்டப்படும் மனோ இச்சைகளுக்கெதிராகவும் மேற்கொள்ளப்படும் முயற்சியாகும்.
நிராகரிப்பாளர்களுடன் போர் புரிவது என்பது கைகளாலும், நாவாலும், உள்ளத்தாலும், செல்வத்தாலும் மேற்கொள்ளப்படும். பாவிகளுடன் போர் புரிவது என்பது, கையினாலும் பின்னர் நாவு மற்றும் உள்ளத்தால் மேற்கொள்வதாகும்.
நூல்: ஃபத்ஹுல் பாரி - 6/3

அறப்போர் வீரனின் குதிரை, அதைக்கட்டி வைத்துள்ள மேய்ச்சல் கயிற்றுக்கிடையே (கால்களை உதைத்துக் கொண்டு) சில குதிகள் குதித்துச் சென்றால் அதுவும் அவனுக்கு நற்பலனாக எழுதப்படும்'
என்றால் , ஜிஹாத் வீரரின் கால் தூசிக்கு நம் வணக்க வழிபாடு எங்ஙனம் ?

## நோன்பில் நடந்த சம்பவங்கள் 19

( நோன்பாளிக்கு உதவுபவர்கள் பெறும் நன்மைகள் )

அனஸ்(ரலி) அறிவித்தார்.
(ஒரு பயணத்தில்) நாங்கள் நபி(ஸல்) அவர்களுடன் இருந்தோம். (அன்று) தம் ஆடையால் தமக்குத் தாமே நிழலிட்டுக் கொண்டிருந்தவரே எங்களில் அதிக நிழல் பெற்றவராய் இருந்தார். (அந்த அளவுக்கு வெயில் கடுமையாக இருந்தது; ஒதுங்க இடமில்லை.)
நோன்பு நோற்றவர்கள் எந்த வேலையும் செய்யவில்லை. நோன்பு நோற்காமல் விட்டுவிட்டவர்கள் வாகனங்களை (ஒட்டகங்களை) எழுப்பி, (தண்ணீர் புகட்டியும் தீனி போட்டும்) வேலை செய்தார்கள்; நோன்பாளிகளுக்கு (ஓய்வெடுக்க கூடாரம் அடித்தும்) பணி புரிந்தார்கள்.
நபி(ஸல்) அவர்கள், 'இன்று நோன்பை (நோற்காமல்)விட்டவர்கள் மறுமையில் (அதிக) நன்மையைக் கொண்டு சென்றார்கள்' என்று கூறினார்கள். ஸஹீஹ் புகாரி : 2890.
"எவர் ஒருவரை நோன்பு திறக்க வைப்பாரோ அவருக்கு அந்த நோன்பாளிக்குக் கிடைக்கும் கூலியைப் போன்றே வழங்கப்படும். அவரது கூலியில் எந்த ஒன்றும் குறைக்கப்பட மாட்டாது' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
திர்மிதீ: 807 , இப்னுமாஜா : 1746, தாரமி: 1702, அஹ்மத்: 21168

## நோன்பில் நடந்த சம்பவங்கள் 20

( சிறுவர்கள் நோன்பு நோற்பது )



ரமளான் மாதத்தில் நோன்பு கடமையாக்கப்படுவதற்கு முன் ஆஷுரா நோன்பு தான் கடமையான நோன்பாக இருந்தது. இந்த நோன்பு குறித்துப் பின்வரும் செய்தி புகாரி, முஸ்லிமில் இடம் பெற்றுள்ளது.
ஆஷுரா தினத்தில் நாங்களும் நோன்பு நோற்போம். எங்கள் சிறுவர்களையும் நோன்பு நோற்கச் செய்வோம். அவர்களுக்குத் துணியால் விளையாட்டுப் பொருளையும் தயார் செய்து வைத்துக் கொள்வோம். அவர்கள் உணவு கேட்கும்போது அந்த விளையாட்டுப் பொருட்களைக் கொடுத்து நோன்பு துறக்கும் வரை கவனத்தைத் திருப்புவோம். - ருபைய்யி பின்த் முஅவித் (ரலி) புகாரி 1960, முஸ்லிம் 2092

1) இளவயதுச் சிறார்கள் பருவ வயதை எட்டும்வரை அவர்களுக்கு நோன்பு கடமையில்லை.
ஏனெனில்,மூவகையினருக்கான பதிவிலிருந்து எழுதுகோல் உயர்த்தப்பட்டுவிட்டது:
1. தனது நினைவை இழந்தவர் மீண்டும் தன்னினைவை அடையும்வரை;
2. உறக்கத்தில் இருப்பவர் விழிக்கும்வரை;
3. ஒருபிள்ளை, பருவ வயதை எட்டும்வரை."
என்றுநபி (ஸல்) கூறியுள்ளார்கள்.
அபூதாவூது, 4399; இமாம் அல்-அல்பானீயின் சஹீஹ் அபீதாவூத், நஸயீ, இப்னுமாஜா, அஹ்மது, முஅத்தா ஆகிய நூல்களிலும் இந்த ஹதீஸ் பதிவாகியுள்ளது.
எனினும், பயிற்சியடையும் பொருட்டுப் பிள்ளைகளை நோன்பு நோற்கும்படிக் கூறவேண்டும். ஏனெனில் அவர்கள் செய்யும் நல்லறங்கள் அவர்களுக்காகப் பதியப்படலாம்.

தம் பிள்ளைகளை எந்த வயதிலிருந்து நோன்பு நோற்கப் பெற்றோர் பயிற்றுவிக்க வேண்டுமென்பது அந்தப் பிள்ளையால் எந்த வயதிலிருந்து நோன்பு நோற்க இயலும் என்பதைப் பொருத்ததாகும். இது பிள்ளைகளுக்கிடையே அவர்களது உடல் வலிமையைப் பொறுத்து மாறுபடும்.
சில மார்க்க அறிஞர்கள், "இதற்கான வயது பத்து" என்று குறிப்பிடுகிறார்கள். இதைக் குறித்து வேறுபட்ட அறிஞர்களது கருத்துகள்:
"ஒரு பிள்ளைக்குப் பத்து வயதாகி நோன்பு நோற்கும் வலிமையும் இருந்தால், அப்பிள்ளை நோன்பு நோற்கத் துவங்க வேண்டும்" -இமாம் அல்-ஃகார்கி.
"இதன் பொருள் யாதெனில் பிள்ளையை, பெற்றோர் நோன்பு நோற்கச் சொல்ல வேண்டும்; அப்பிள்ளை நோன்பு நோற்க வேண்டும். அதற்கு அப்பிள்ளை மறுத்தால், தொழ மறுக்கும் அவ்வயதுப் பிள்ளையை அடிப்பதுபோல் அடிக்க வேண்டும். அப்பிள்ளை நோன்பு நோற்றுப் பழகிக்கொள்ள அது ஏதுவாகும்.
'ஒரு பிள்ளை நோன்பு நோற்கும் அளவிற்கு வலிமையடைந்து விட்டால் அப்பிள்ளையை நோன்பு நோற்கும்படிச் சொல்லவேண்டும்' என்ற கருத்து கொண்டவர்களுள் அதா, ஹஸனுல் பஸரீ, இப்னு ஸீரீன், கதாதா, அஷ்-ஷாஃபியீ அடங்குவர்" - இமாம் இப்னு-குதாமா.

"ஒரு பிள்ளையால் பலவீனம் அடையாமல் மூன்று நாள் தொடர்ச்சியாய் நோன்பு நோற்க இயலுமாயின், அப்பிள்ளையை ரமளான் நோன்பை முழுக்க நோற்கச் செய்ய வேண்டும்" - இமாம் அல்-அவ்ஸாயீ.
"ஒரு பிள்ளை பன்னிரெண்டு வயதை எட்டினால், நோன்பைப் பழக்கப்படுத்திக்கொள்ள அப்பிள்ளை நோன்பு நோற்க வேண்டும் என்று நான் நினைக்கிறேன்" - இமாம் இஸ்ஹாக்.
"சிறுபிள்ளைகள் நோன்பு நோற்பதற்குப் பத்து வயது என்பது சாத்தியமுள்ள வயதாய் இருக்க முடியும். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் இவ்வயதை எட்டிய பிள்ளை தொழாமல் இருந்தால் அடிக்கும்படி அறிவுறுத்தியுள்ளார்கள்; மேலும் நோன்பு என்பது தொழுகையைப் போன்றது என்பதாலும் இவ்விரண்டு அறச்செயல்களும் ஒன்றுடன் ஒன்று நெருக்கமானவை என்பதாலும் இவையிரண்டும் உடல் சார்ந்த செயல் என்பதாலும் இஸ்லாத்தின் தூண்களைச் சேர்ந்தவை என்பதாலும் ஆகும்.

ஆயினும் நோன்பு கடினமானது. எனவே நோன்பு நோற்கப் பிள்ளையால் இயலுமா என்பதைப் பெற்றோர் கவனத்தில் கொள்ள வேண்டும். ஏனெனில் சில பிள்ளைகளால் தொழ முடியும்; ஆனால் நோன்பு நோற்கும் சக்தியை அடைந்திருக்கமாட்டார்கள்" - இமாம் இபுனு குதாமா (அல்-முஃக்னீ, 4/412).
நபி (ஸல்) அவர்களின் தோழர்கள், தம் பிள்ளைகளுடன் இம்முறையையே கடைபிடித்தார்கள்; எந்தெந்தப் பிள்ளைகளால் இயலுமோ அவர்களை நோன்பு நோற்கக் கூறினார்கள். பசியினால் அப்பிள்ளை அழுமேயானால், விளையாட்டுப் பொம்மையைக் கொடுத்து அதன் கவனத்தைத் திசை திருப்புவார்கள்.
ஆனால் அப்பிள்ளை பலவீனமாகவோ, ஆரோக்கியக் குறைவாகவோ இருந்து, அப்பிள்ளையின் உடல்நலனுக்குத் தீங்கு ஏற்படும் எனத் தெரிந்தால் நோன்பு நோற்கும்படி வற்புறுத்த அனுமதியில்லை.
"இளவயதுப் பிள்ளை பருவமடையும்வரை நோன்பு நோற்கும்படி வற்புறுத்தப்படக் கூடாது. ஆனால் அப்பிள்ளையினால் இயலுமானால் நோன்பு நோற்கும்படிச் சொல்லலாம். இவ்வாறு பயிற்சியளிப்பது, பிள்ளைகள் பருவம் எய்தியவுடன் நோன்பு நோற்பது எளிதாக அவர்களுக்கு ஆகிவிட உதவும்.
முஸ்லிம் சமுதாயத்தின் சிறந்த தலைமுறையினரான நபித் தோழர்கள் தம் பிள்ளைகளின் இளவயதில் அவர்களை நோன்பு நோற்கச் செய்வார்கள்" - அல்-ஷைக் முஹம்மது பின் ஸாலிஹ் அல்-உதைமீன் (மஜ்மூ ஃபதாவா அல்-ஷேக் இப்னு உதைமீன், 19/28, 29).

மேலும், "என் இளவயது மகன் ரமளானின் நோன்பை நோற்பேன் என்று விடாப்பிடியாய் இருக்கிறான். நோன்பு நோற்பது அவனது உடல்நலத்தை நிச்சயம் பாதிக்கும். ஏனெனில், அவன் மிக இளம்பிள்ளையாகவும் உடல்நலம் குன்றியவனாகவும் இருக்கிறான். இந்நிலையில் அவன் தனது நோன்பை முறிக்கும்படி நான் அடித்துத் தடுக்கலாமா?" என்று ஷேக் அல்-உதைமீன் (ரஹ்) அவர்களிடம் வினவப்பட்டபோது,
"அவன் இளவயதினனாகவும் பருவம் எய்தாதவனாகவும் இருப்பின் அவன் நோன்பு நோற்பது கடமையில்லை. ஆனால் சிரமப்படாமல் அவனால் நோன்பு நோற்க இயலுமாயின் அவனுக்கு அவ்வாறு எடுத்துச் சொல்லப்பட வேண்டும்.

நபித்தோழர்கள் (ரலி-அன்ஹும்) தம் பிள்ளைகளை நோன்பு நோற்கச் செய்வார்கள். பிள்ளைகள் அழநேர்ந்தால் பொம்மைகளைக் கொடுத்து அவர்களது கவனத்தைத் திசை திருப்புவார்கள். ஆனால் நோன்பு நோற்பது அவனது உடல்நலத்திற்குக் கேடு விளைவிக்கும் என்பது உறுதி என்றால் அவன் நோன்பு நோற்பதைத் தடுக்க வேண்டும். 'இளவயதுப் பிள்ளைகள், அவர்களுடைய சொத்துகளைத் தவறாகப் பயன்படுத்திவிடுவார்கள் என்ற அச்சநிலை இருப்பின் அவர்கள் வசம் அவர்களது சொத்துகளை அளித்துவிடக் கூடாது' என்று அல்லாஹ் தடை ஏற்படுத்தியிருக்கும்போது அவர்களது உடல்நலத்திற்கு ஊறுவிளைவிக்குமோ என அச்சப்படும் செயல்களைத் தடுப்பது பொருத்தமானதே. ஆனால் அவர்களை அடித்துத் தடுக்கக் கூடாது. அது பிள்ளைகளை வளர்க்கும் முறையல்ல" என விளக்கமளித்தார்கள். (மஜ்மூ ஃபதாவா அல்-ஷேக் இப்னு உதைமீன், 19/83).
2) நோன்பு-தொழுகை ஆகிய கடமைகளுக்கான பயிற்சி

பிள்ளைகளுக்கு அன்பளிப்புகள் அளிப்பதன் மூலமாகவும் அவர்கள் தங்களைவிட மூத்தவர்களுடனும் இளையவர்களுடனும் போட்டிபோடும் குணத்தைத் தூண்டியும் அவர்கள் தாமாகவே நோன்பு நோற்கும்படி பெற்றோர்கள் ஊக்குவிக்க வேண்டும்.

தங்கள் தந்தையருடன் வெவ்வேறு பள்ளிவாசல்களுக்குச் சென்று தொழும் பழக்கத்தை அவர்களுக்கு ஊக்குவிக்க வேண்டும். அதற்காக அவர்களுக்கு வெகுமதிகள் அளித்து உற்சாகப்படுத்த வேண்டும். அது பாராட்டுச் சொற்களாக இருக்கலாம்; அவர்களுடனான சிறு பயணமாக இருக்கலாம்; அவர்கள் விரும்பும் பொருள்களை வாங்கித் தருவதாகவும் இருக்கலாம்.

வருத்தத்திற்குரிய விஷயம் என்னவெனில் சில தாய்-தந்தையர் தம் பிள்ளைகளை அவ்வாறு ஊக்குவிப்பதில்லை. வேறு சிலர் தம் பிள்ளைகள் தாமாக விரும்பிச் செய்யும் இறைக் கடமைகளையும் செய்யவிடாமல் தடுக்கின்றனர். இரக்கமும் பரிவும் என்பது தம் பிள்ளைகள் தொழுவதையும் நோன்பு நோற்பதையும் தடுப்பது என்று இவர்கள் தவறாக நினைத்துக் கொள்கிறார்கள்.
ஷரீஅத்தின் அடிப்படையிலும் சரி, விவேகத்துடன் கல்வி புகட்டுவதன் அடிப்படையிலும் சரி, இறைக் கடமைகளைச் செய்ய விரும்பும் பிள்ளைகளைப் பரிவின் பெயரால் தடுப்பது முற்றிலும் தவறானது.
ஆனால் ஒருபிள்ளை நோன்பு நோற்கும் வலிமையுள்ள வயதை எட்டியதும் நோன்பு நோற்கும்படி அப்பிள்ளையின் காப்பாளர் அறிவுறுத்த வேண்டும். ஏனெனில், இஸ்லாத்தின் தூண்களில் ஒன்றான நோன்புக் கடமையை அந்தப் பிள்ளை பயின்றுகொள்ளும் வகையில் அது அமையும். சிலர் தம் பிள்ளைகளைத் தொழவோ, நோன்பு நோற்கவோ அறிவுறுத்தாமல் விட்டுவிடுகிறார்கள். இது தப்பு. இதற்காகப் பெற்றோர் அல்லாஹ்வின் முன்னிலையில் பதில் கூறக் கடமைப்பட்டுள்ளனர்.

கேட்டால், பிள்ளைகளின் மேலுள்ள பாசத்தாலும் பரிவினாலும் அவர்களை நோன்பு நோற்கும்படிக் கூறவில்லை என்று அவர்கள் காரணம் கூறுகிறார்கள். ஆனால் தம் பிள்ளைகள் நல்ல பழக்கவழக்கங்களை ஏற்படுத்திக் கொள்ளவும் நல்லறங்கள் புரியவும் பயிற்சி அளிப்பவர்கள்தாம் உண்மையில் பரிவும் பாசமும் கொண்ட பெற்றோராரேயன்றி, பயனுள்ள வகையில் பிள்ளைகள் பயிற்சி பெறுவதையும் ஒழுக்கம் பழகுவதையும் தடுப்பவர்கள் அல்லர்" என அல்-ஷைக் அல்உதைமீன் கூறியுள்ளார் (மஜ்மூ ஃபதாவா அல்-ஷேக் இப்னு உதைமீன், 19/19, 20).

## நோன்பில் நடந்த சம்பவங்கள் 21

( நோன்புக்கு பகரம் )

ஸலமா இப்னு அக்வஃ(ரலி) அறிவித்தார்.
'நோன்பு நோற்கச் சக்தியுள்ளவர்கள் (நோன்பு நோற்கத் தவறினால்) அதற்குப் பரிகாரமாக ஓர் ஏழைக்கு உணவளிப்பது கடமையாகும்' எனும் (திருக்குர்ஆன் 02:184வது) இறைவசனம் அருளப்பட்டபோது, விரும்பியவர் நோன்பு நோற்காமல்விட்டுவிட்டு பரிகாரம் செய்துவந்தார்.
பின்னர் இதை மாற்றி இதற்குப் பின்னுள்ள வசனம் ('உங்களில் அந்த மாதத்தை அடைகிறவர் அதில் நோன்பு நோற்கட்டும்!' என்ற 02:185வது வசனம்) அருளப்பெற்றது. ஸஹீஹ் புகாரி : 4507.
நோன்பு நோற்றல் இஸ்லாமிய ஐந்து கடமைகளில் மூன்றாவது கடமையாகும். பெருமானார் (ஸல்) மூன்றாவது கடமை நோன்பாகும்
அவர்கள் திரு மதீனாவுக்கு வருவதற்கு ஒரு ஆண்டு முன்னர் திரு மக்காவிலிருந்தபொழுது, இறைவனுடன் பேசும் வாய்ப்பான "மிஃராஜ்" நிகழ்ச்சி நடைபெற்றது. அப்பொழுது ஐங்காலத் தொழுகைகள் கடமையாக்கப்பட்டன. அப்பால் பெருமானார் (ஸல்) அவர்கள் திரு மதீனாவிற்கு எழுந்தருளிய இரண்டாம் ஆண்டின் தொடக்கத்தில் 'ஜக்காத்' கடமையாக்கப்பட்டது.
பின்னர் இரண்டாம் ஆண்டின் மத்தியில் நோன்பு கடமையாக்கப்பட்டது. அந்த நோன்பு சம்பந்தப்பட்ட விபரங்கள் ( 2:185 ) இவ்வசனங்களில் கூறப்படுகின்றன.
இஸ்லாத்தின் ஆரம்ப காலத்தில் நோன்பு கடமையாக்கப்பட்ட பொழுது, நோன்பு நோற்கச் சக்தியுடையவர்கள் கூட நோற்காமல் நஷ்ட ஈடு வழங்கிவிடலாம் என்ற சலுகை வழங்கப்பட்டிருந்தது. அவர்கள் இஷ்டப்பட்டால், நோன்பு நோற்கலாம்; அல்லது அதை விட்டுவிட்டு ஒவ்வொரு நோன்பிற்குப் பதிலாக ஒரு ஏழைக்கு உணவளித்து ஈடு செய்து கொள்ளலாம்.
அவர்கள் அதுவரை நீண்ட நாட்கள் நோன்பு நோற்றுப் பழக்கப்படாதவர்களாகையால், ஒரேயடியாக அவர்களை நெருக்கிவிடக் கூடாது என்பதுதான் இச்சலுகைக்குக் காரணம்.
பின்னர், அவர்களுக்குக் கடமையின் மீது உறுதி பிறந்து விட்டது. நோன்பு நோற்றுத்தான் தீரவேண்டும் என்ற சட்டமும் அடுத்து வருகிற வசனத்தின் மூலம் திட்டவட்டம் செய்யப்பட்டு சக்தியுடையவருக்கு அளிக்கப்பட்டிருந்த நஷ்ட ஈட்டுச் சலுகைச் சட்டம் ரத்து செய்யப்பட்டு விட்டது.
ஆகையால் நோன்பு நோற்கச் சக்தியுடைய எவரும் நஷ்ட ஈடு கொடுத்துவிட்டு நோன்பு நோற்பதைத் தட்டிக்கழித்து விட முடியாது.

## நோன்பில் நடந்த சம்பவங்கள் 22

( இஃப்தார் நேரத்தில் நோன்பாளியின் துஆ )
ஒரு தடவை மூஸா அலை அல்லாஹ்விடம் :
"யா அல்லாஹ்! நீ என்னை உன்னுடன் நேரடியாக பேசவைப்பதன் மூலம் கௌரவப்படுத்தினாய். இது போன்ற பாக்கியத்தை வேறு எவருக்கேனும் கொடுத்ததுண்டா?" என கேட்டார்கள்
அதற்கு அல்லாஹு தஆலா :
"மூஸாவே! இறுதி காலப்பகுதியில் நான் முஹம்மத் (ஸல்) அவர்களின் கூட்டத்தினரை அனுப்புவேன். அவர்கள் காய்ந்த உதடுகளுடனும், வரண்ட நாவுடனும், மெலிந்து கண்கள் குழிவிழுந்த தோற்றத்துடனும் இருப்பதோடு வயிற்றில் பசியுடன் – என்னை அழைப்பர் (துஆ மூலம்). அவர்கள் தான் அதிகம் அதிகம் எனக்கு நெருக்கமானவர்கள்!
மூஸாவே! உங்களுக்கும் எனக்கும் மத்தியில் 70000 தடுப்புக்கள் இருந்தன. ..ஆயினும் இஃப்தார் நேரத்தில் எந்த ஒரு தடுப்பும் எனக்கும் நபி முஹம்மதின் உம்மத்திற்கும் இருக்காது.
மூஸாவே! இஃப்தார் நேரத்தில் நோன்பாளியின் துஆ நிராகரிக்கப்படாது. அதற்கான பொறுப்பை நானே ஏற்கிறேன்"என்றான்..
ஸூப்ஹானல்லாஹ்!!
ஆதாரம் : இஸ்மாயீல் ஹக்கி அல் ஹலூதி அவர்கள் தனது 'ரூஹுல் பயான்' எனும் தப்ஸீரில் (8/112) எழுதியுள்ளார்கள்

## ஆத்ம ஞானமெனும் சூஃபி வழிப்பாடங்கள் 1


கல்வி என்பது மூன்று வகைப்படும் .

ஒன்று மொழியறிவு என்னும் இலக்கண இலக்கியம் அவ்விரண்டுமின்றி ஒரு மொழியின் பொருளையும், உள்ளார்ந்த கருத்துக்களையும் அறிய முடியாது,
இரண்டாவது வேதத்தை தழுவியக் கருத்துக்களையும் வேத சார சாஸ்திரமான நபி மொழிகளின் கருத்துக்களையும் கற்றறிவது. இவையில்லாது மக்கள் நன்னடத்தை, நல்லொழுக்கம், வாழ்க்கைநெறி என்னும் ஷரீ அத் சட்டங்களைப் புரிந்து கொள்ள முடியாது.
வாழ்க்கை நெறிச் சட்டங்களையும் மார்க்கம் காட்டிய நல்லொழுக்க நற்பண்புகளையும் மக்கள் எடுத்து நடப்பதால் அவருடைய உள்ளத்தில் மூன்றாவது அறிவு ஒன்று தோன்றும். அதற்கே வேதாந்தம் , ஆத்ம ஞானம், மெஞ்ஞானம் என்பன போன்ற பெயர்கள் இடப்பட்டிருக்கிறது,
அந்த வேதாந்தத்திற்கு பண்பட்ட மாமக்களாகிய சூஃபியாக்கள் தமக்கு வெளியாகும் வேதாந்தக் கருத்துக்களை அவ்வப்போது கூறியதை தொகுத்து நூல் வடிவில் உருவாக்கி பலர் வெளியிட்டிருக்கின்றனர். அவைகளே ஆத்மஞான நூற்கள் என அழைக்கப்பட்டிருக்கின்றன.

அந்த நூற்களைப் படித்து மக்கள் தம் உள்ளத்தில் மறைந்து கிடக்கும் ஞானங்களை பெருக்கிக் கொள்வர்.
இத்தகைய ஞான நூற்கள் இவ்வுலகத்தில் உள்ள சகல மதத்தாரிடமும் இருந்து வருகின்றன என்றாலும், சத்திய சன்மார்க்கமான இஸ்லாத்தில் அந்த நூற்கள் நிறைய உள்ளன. இருந்தாலும் ,
தூய வழியில் இஸ்லாத்தை பரப்புவதாக சொல்லி அந்த ஆத்ம ஞானங்களையெல்லாம் மூடி மறைத்து புதைத்து அதற்கு ஷிர்க் என்ற பாவகரமான ஒரு பழியை சுமத்தியவர்களுக்கும் மீண்டும் ஒரு சந்தர்ப்பம் கொடுக்க மீண்டு வருகிறது ஆத்ம ஞானம்.
அந்த சூஃபியாக்கள் பெற்ற புனித ஆத்ம ஞானத்திற்கு வழிகோலிய சூஃபி வழிப்பாடங்களை பல கிதாபுகளிலும் , ஆடியோ, வீடியோ மற்றும் பலரின் சூஃபிப் பதிவுகளிலிருந்தும் ஒன்று திரட்டி " ஆத்ம ஞானமெனும் சூஃபி வழிப்பாடங்களாக பெரும் தொடராக இன்ஷா அல்லாஹ் சொல்ல வருகிறேன்

**ஆத்ம ஞானமெனும் சூஃபி வழிப்பாடங்கள் 2**

( பாவமும் பழிச்சொல்லும்)



நீங்கள் இதுவரை செய்து வந்துள்ள பாவச் செயற்களை நினைத்து மனம் வருந்தி உங்களது உள்ளத்தை ஒரு முகமாக இறைவன் பால் திருப்பி விடுங்கள். உங்களது மனம் அவன் பக்கம் திரும்புதலை அவன் பெரிதும் எதிர்பார்க்கின்றான்.மனம் திரும்பும் படி உங்களை அழைத்து,
"தாம் செய்து வந்த தவறுகளை உணர்ந்து மனம் திரும்புவோரையும் தூய்மையானவர்களையும் அல்லாஹுத் தஆலா நேசிக்கிறான்" என்று குர்ஆன் கூறியிருக்கிறது
"எனது உள்ளம் பல குழப்பங்களுக்கு இலக்காகிறது ஆதலால் நாளொன்றிற்கு 70 தடவை என்னை மன்னித்தருளும்படி இறைவனை வேண்டி வருகிறேன் " என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறியிருக்கின்றனர்.

நீங்கள் செய்த பாவச் செயல்களை நினைத்து பச்சாதாபப்பட்டு இறைவன் பக்கம் மனம் திரும்ப துணிவு கொண்டு விடுவாயின் உங்களது எஞ்சி உள்ள வாழ்நாள் முழுவதும் உங்கள் நடத்தையே கண்காணித்து வருவது அவசியம்.
நாள்தோறும் இரவில் நீங்கள் நித்திரைக்கு செல்லும் முன் அன்று பகலில் நீங்கள் செய்துள்ள செயல்கள் அனைத்தையும் உன் மனக்கண் முன் கொண்டு வந்து நிறுத்தி நன்கு பரிசீலனை செய்து பாருங்கள் . அவை அனைத்தும் இறைவன் ஆணைக்கு பொருந்துவனாக இருக்க கண்டால் அவைகளை அவ்வாறு அமைத்து தந்ததற்கு இறைவனுக்கு நன்றி செலுத்துங்கள்.
அவைகளில் ஏதாவது ஒன்று அவனது ஆணைக்கு மாறுபட்டிருக்க கண்டால் உடனே உங்கள் மனதை அச்சுறுத்தி எச்சரிக்கை செய்துவிட்டு, அந்த செயலை நீங்கள் செய்து விட்டதற்காக அவனிடம் பாவ மன்னிப்பு தேடுங்கள்.
அல்லாஹ்விடத்தில் உங்களுக்கு வாய்க்கும் நன்னிலைகளில் உங்களது உள்ளத்தை நீங்கள் எச்சரித்து அதனை திருத்த முயல்வதைவிட பயன் தரும் ஒரு நன்னிலையை உலகில் நீங்கள் பெற்றுக் கொள்ள மாட்டீர்கள்
நபி தோழர் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள் தேவையற்ற பேச்சுகளை பேசாதிருக்க வாயில் கூழாங்கற்களை அடைத்துக் கொள்வார்கள். தேவையற்ற பேச்சுக்கள் பாவத்தை சம்பாதிக்கும்

ஞானி மக்கீனுத்தீன் அஸ்மரி (ரஹ்) கூறுவதாவது:
" நான் எனது வாலிபக்காலத்தில் தையற் தொழில் நடத்தி ஜீவனம் செய்து வந்தேன். அப்பொழுது பகற் காலங்களில் நான் பேசும் வார்த்தைகளை கவனித்து வந்து இரவானவுடனே அந்த பேச்சுக்கள் பற்றி என்னை நான் விசாரிக்க ஆரம்பித்து விடுவேன்.
அப்பொழுது நான் பகலில் மிகச் சுருக்கமாகவே பேசி இருக்கிறேன் என்பது எனக்கு தெரியவரும். அந்த பேச்சுக்கள் நலன் தருபவையாக இருக்கக் கண்டால் அதற்காக இறைவனுக்கு நன்றி செலுத்துவேன்.
அவைகளில் ஏதோ ஒன்று குற்றமானதாய்க் காணப்படின் அப்படிப்பட்ட குற்றமானப் பேச்சுக்களை இனிமேல் நான் பேசக்கூடாது என என் மனதில் உறுதி கொண்டு விடுவேன்"
இந்த சாதனையை அவரை மிகப் பெரிய மகானாக விளங்கச் செய்து விட்டது

**ஆத்ம ஞானமெனும் சூஃபி வழிப்பாடங்கள் 3**
( ஆத்ம ஞான ரகசியங்கள் )



அபூபக்கர் ஷிப்லி (ரஹ்) அவர்களின் அந்தஸ்துகள் மேலும் உயர்ந்தபோது, அவர் மக்களிடையே நல்லுபதேசம் புரியத் துவங்கினார். பாமரர்களிடையே அகமிய மெய்நிலை-ஹகீகத்களை விவரிக்கத் தொடங்கிவிட்டார்.
ஜுனைத்துல் பாக்தாதி (ரஹ்) அவர்கள் ஷிப்லீயை நோக்கி, "நாம் இந்த ஆத்ம ஞான இரகசியங்களை தவசாலைகளுக்குள்ளேயே வரையறுத்து வைத்திருந்தோம், நீர் மிம்பர் மீதேறி பாமர ஜனங்களுக்கு முன்னிலையில் அவற்றை வெளிப்படுத்தத் துவங்கிவிட்டீரா?" என வினவினர்.
அதற்கு ஷிப்லீ, ''நான் விவரிக்கும் இரகசியங்களை என்னைத் தவிர எவரும் புரிந்து கொள்ள இயலாது. ஏன் தெரியுமா? நான் எதனைப் பேசுகிறேனோ அது இறைவனின் புறத்திலிருந்து உள்ளதாகும். இன்னும் என்னுடைய பேச்சு இறைவனின் பக்கமே செல்லக் கூடியது. மேலும் ஷிப்லீ இரண்டிற்குமிடையில் இருக்கவில்லை" என்றார்.
ஜூனைத் (ரஹ்), "ஏ ஷிப்லீ! உம்முடைய இக்கூற்று சரிதான்; இருந்தாலும் நீர் இவ்வாறு பேசுவதும் தண்டனைக்குரியதே," என்றார்.

ஷிப்லீ அவர்கள் "எவரது இதயம் இம்மை மற்றும் மறுமையைத் தேடுகிறதோ அவர் நமது சபையில் அமர்வது ஹராம் - விலக்கப்பட்டது" எனக் கூறி வந்தார்.
ஒரு நாள் அவர் தம் திருச்சபையில் பல தடவை 'அல்லாஹ் அல்லாஹ்' எனக் கூறிக்கொண்டிருந்தார். தர்வேஷும் ஒரு அவருடைய சபையில் வீற்றிருந்தார். அவர் ஷிப்லீயை நோக்கி, ''ஓ... ஷிப்லீ! நீர் ஏன் லா இலாஹ இல்லல்லாஹ் கூறுவதில்லை?" என வினவினார்.
அதற்கு ஷிப்லீ (ரஹ்), "நான் 'லா' (இல்லை) என்று கூறியவுடனே மரணித்துவிடுவேனோ என அஞ்சுகிறேன்" எனக்கூறினார்.
இந்தப்பதில் அந்த தர்வேஷிடம் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியது. இறையச்சத்தால் நடுநடுங்கினார். அதே நிலையில் அவர் உயிர் பிரிந்தது. அந்த தர்வேஷின் உறவினர்கள் ஷிப்லீ அவர்களை கொலையாளி எனக்கருதி கலீஃபாவின் முன்னிலையில் ஆஜராக்கக் கொண்டு சென்றனர்.
கலீஃபா : "ஷிப்லீ (ரஹ்) அவர்களை நோக்கி, "நீர் இதுபற்றி ஏதேனும் கூறவிரும்புகிறீரா?" என வினவினார். ஷிப்லீ (ரஹ்) கூறினார்:

"எவரது இதயம் இம்மை மற்றும் மறுமையைத் தேடுகிறதோ அவர் நமது சபையில் அமர்வது ஹராம் - விலக்கப்பட்டது" என ஏற்கனவே கூறியிருக்கிறேன். இந்த தர்வேஷ் அதை மீறி அமர்ந்திருந்தார்.
இந்த தர்வேஷின் உயிர் இறைமோகத்தில் மூழ்கி சிருஷ்டி கர்த்தாவின் கம்பீரத்தில் அழிந்துவிட்டிருந்தது.
இவரது ஆன்மா உலகத் தொடர்புகளை விட்டும் பிரிந்து, மனோ இச்சைகளைச் சார்ந்த ஆபத்துகள் மற்றும் தன்மைகளை விட்டும் அழிந்து விட்டிருந்தது. அவரது உயிர் ஆற்றலிலிருந்து ஆற்றலற்றதாகவும் , பொறுமையிலிருந்து பொறுமையற்றதாகவும் ஆகிவிட்டிருந்தது.

ஆகையால் என்னுடைய கூற்றைக்கேட்டு சகித்துக் கொள்ளும் சக்தி இல்லாமல் போய் விட்டது. மேலும் கண்கூடான பேரெழில் மின்னொளியினால் அவரது உயிர் உடலைவிட்டுப் பிரிந்து வெளியேறி சென்று விட்டது இதிலே ஷிப்லீயின் தவறு என்ன இருக்கிறது ?
கலீஃபா : "இந்த ஷிப்லீயை தர்பாருக்கு வெளியே கொண்டு செல்வீர் . ஏனெனில் சிறிது நேரம் இவர் உரையாடுவரானால் உறுதியாக நான் மூர்ச்சையாகி இறந்து விடுவேன் அந்த அளவுக்கு அது எனது இதயத்தில் தைத்து விட்டது" என்றார்.
ஜூனைத் (ரஹ்), "ஏ ஷிப்லீ! உம்முடைய இக்கூற்று சரிதான்; இருந்தாலும் நீர் இவ்வாறு பேசுவதும் தண்டனைக்குரியதே," என்று சொன்னது ஷிப்லீ (ரஹ்) அவர்களின் மனதில் நிழலாடியது.
ஆமாம் ! சூஃபியாக்கள் பேசும் ஆத்ம ஞானமெனும் சூஃபி வழிப்பாடங்களை பாமர மக்களால் தாங்கிக் கொள்ள முடியாததுதான் .

## ஆத்ம ஞானமெனும் சூஃபி வழிப்பாடங்கள் 4

( சூஃபி வழிப்பாடங்கள் )



ஷிப்லீ (ரஹ்) அவர்கள் , ஜூனைத் பக்தாதி (ரஹ்) அவர்களிடம் சென்று, "தங்களிடம் இரத்தினக்கல் இருப்பதாக அறிந்தேன். அதனைத் தாங்கள் என்னிடம் விற்று விடுவீர்; விற்கத்தகாது எனக் கருதினால் அந்த விலைமதிக்கவியலா இரத்தினத்தை ஹதியாவாக எனக்குத் தந்துவிடுவீர்" என்றார்.
ஜுனைத் (ரஹ்) கூறினார்: "நான் அந்த இரத்தினத்தை விற்க முன்வந்தால் உம்மால் அதனை விலை கொடுத்து வாங்க இயலாது; காரணம், அதன் கிரயத்தை நிறைவேற்றும் ஆற்றல் உமக்குக் கிடையாது. இலவசமாகத் தந்துவிட்டாலோ அதன் தகுதியையும் விலைமதிப்பையும் நீர் உணரமாட்டீர், ஏனெனில் எவருக்கு ஒரு பொருள் இலவசமாகக் கிடைக்கிறதோ அவரின் பார்வையில் அப்பொருளின் அருமை தெரியாது.
எதனை அடைவதில் கஷ்டங்களும் உழைப்பும் உயிருக்கு கூட ஆபத்தும் ஏற்படுமோ அதனை அடையும்போதுதான் அதன் அருமை பெருமை தெரியவரும். மேலும் நீண்ட நெடிய நாட்களுக்குப் பின்னர் அந்த விலைமதிப்பற்ற இரத்தினம் உம் கைக்குக் கிட்டிடவும் அதனை நீர் பெற்றிடவும் நாடினால் தவ்ஹீத் கடலில் மூழ்கி அழிந்து விடும்.

இறைவன் உமக்கு பொறுமை மற்றும் எதிர்பார்த்தல் ஆகியவற்றின் தலைவாயில்களை திறந்துவிடுவான். அப்போது அவையிரண்டையும் நல்லவிதமாக சகித்துக் கொண்டால் அச்சமயம் அந்த இரத்தினம் உம் கைக்கு கிடைக்கும்'' என்றார்.
ஷிப்லீ (ரஹ்) இப்பொழுது நான் என்ன செய்ய வேண்டும்?" என வினவினார்.
ஜுனைத்பக்தாதி (ரஹ்) "நீர் ஓராண்டுக் காலம் கந்தகம் விற்பனை செய்வீராக!" என்றார். அவ்வாறே ஷிப்லீ அவர்கள் ஓராண்டு காலம் கந்தகம் விற்பனை செய்தார்.
பிறகு ஜுனைத்பக்தாதி (ரஹ்) அவர்களை சந்தித்தார். மீண்டும் அவர் ஓராண்டு காலம் பிச்சை எடுக்கும்படி ஷிப்லீக்கு ஆணையிடுகின்றனர். "பிச்சை எடுப்பீர்; ஆனால் எந்தப் பொருளின் மீதும் ஈடுபாடு கொள்ளக் கூடாது" அவ்வாறே ஷிப்லீ அவர்கள் பிச்சை எடுத்தார். இறுதிகட்டமாக அவர் ஒவ்வொரு மஹல்லாவிலும் பிச்சைகேட்க அவருக்கு எவருமே பிச்சை போடவில்லை. இச்சம்பவங்களை எல்லாம் ஜுனைத்பக்தாதி (ரஹ்) அவர்களிடம் விவரித்தார். அவர் சிரித்துவிட்டுக் கூறினார்:
"சிருஷ்டிகளிடத்தில் உம்முடைய அந்தஸ்து ஒன்றுமே கிடையாது. எனவே நீர் இப்போது மனிதர்கள் எவரிடத்திலும் உள்ளம் பறிகொடுக்கக் கூடாது. சிருஷ்டிகளை எந்த ஒருவரிலும் மேலானதாகக் கருதாதீர்" எனக் கூறிவிட்டு

மேலும் இவ்வாறு ஆணையிட்டார். ''நீர் ஒரு சமயம் நிஹாவந்த் ஆணையராக இருந்தீர், அங்கே சென்று அங்குள்ள எல்லோரிடமும் நீர் உம்முடைய தவறுகளுக்கு மன்னிப்பு கோரிவிட்டு வாரீர்!"

ஷிப்லீ அவர்கள் அங்கே சென்று ஒவ்வொரு ஆண், பெண், ஏன் குழந்தைகளிடமும் கூட மன்னிப்புக் கேட்டுவிட்டு வந்தார். எனினும் ஒரு நபர் மட்டும் அங்கே இருக்கவில்லை. அதற்காக அவர் ஒரு இலட்சம் திர்ஹம் தானம் செய்தார். எனினும் அன்னாருக்கு மனம் அமைதி கொள்ளவில்லை. மீண்டும் ஜூனைத் பக்தாதி (ரஹ்) அவர்களிடம் வந்தார்.
ஜூனைத் பக்தாதி (ரஹ்), "இன்னும் உம்முடைய மனதில் சிறிதளவு பதவி மோகம் உள்ளது, எனவே நீர் ஒரு ஆண்டுகாலம் மெத்தையில் பஞ்சு திணிக்கும் தொழிலை செய்வீர்" என்றார்.
ஷிப்லீ அவர்கள் அவ்வாறே செய்து அதில் கிடைக்கும் காசுகளை ஜுனைத் பக்தாதி (ரஹ்) அவர்களிடம் அளித்தார். அவர் அதனை தர்வேஷ்களுக்குப் பங்கிட்டு அளித்து வந்தார்.
ஷிப்லீ (ரஹ்) அவர்களைப் பசித்திருக்கும்படிச் செய்தார். ஆண்டு முடிவில் ஜுனைத் (ரஹ்) அவர்கள், "இப்போது உம்மை நான் எனது சகவாசத்தில் உள்ள தர்வேஷ்களுக்கு நீர் பணிவிடை செய்யவேண்டும் என்ற நிபந்தனையின் பேரில் வைத்திருப்பேன்," என்றார்.
ஷிப்லீ அவர்கள் ஓராண்டு தர்வேஷ்களுக்குப் பணிவிடை செய்தார்.
பிறகு ஜுனைத் பக்தாதி அவரை நோக்கி, "ஷிப்லீ! இப்போது உம்முடைய நஃப்சு - ஆத்மாவின் அந்தஸ்து உம்மிடத்தில் எவ்வளவு?" என வினவினார்.
ஷிப்லீ , " அனைத்துப் படைப்பினங்களிலும் நானே இழிந்தவன் என என்னை அறிகிறேன்''
ஹலரத் ஜுனைத் பக்தாதி "இப்போதுதான் உம்முடைய ஈமான் - இறைநம்பிக்கை நிறைவை எய்தியது " என்றார்கள்

## ஆத்ம ஞானமெனும் சூஃபி வழிப்பாடங்கள் 5

( ஹிகம் கூறும் தத்துவம் )



“ஹிகம்” என்ற இந்நூல் அறபு மொழியில் எழுதப்பட்ட ஒரு ஞானக் களஞ்சியமாகும். இதை எழுதிய மகான் “ஷாதுலிய்யா தரீகா”வின் தாபகர் அபுல் ஹஸன் அஷ் ஷாதுலீ றஹிமஹுல்லாஹ் அவர்களின் தரீகா வழி வாழ்ந்த அவர்களின் “முரீத்” தாஜுத்தீன் அதாஉல்லாஹ் ஆவார்கள்.
இந்நூல் உள்வாங்கியுள்ள தத்துவங்களையும், அகமியங்களையும் அறிந்த அறிவுலக மேதைகள் இது பற்றிக் கூறுகையில் كَادَ الْحِكَمُ اَنْ يَكُوْنَ قُرْآنًا “ஹிகம் என்ற நூல் திருக்குர்ஆனுக்கு நெருங்கி விட்டது” என்று கூறியுள்ளார்கள்.
நூலாசிரியர் பின்வருமாறு கூறியுள்ளார்கள்.

إِنَّ الشُّهْرَةَ آفَةٌ ،كُلٌّ يَتَمَنَّاهَا ، وَإِنَّ الْخُمُوْلَ نِعْمَةٌ وَكُلٌّ يَأْبَاهَا .
“பிரசித்தி பெறுதல் அபாயகரமானதாகும். எனினும் அதை அனைவரும் ஆசைவைக்கிறார்கள். விரும்புகிறார்கள். பிரசித்தி பெறாமல் மறைந்திருப்பது அருளாகும். எனினும் அதை அனைவரும் வெறுக்கின்றார்கள்.”
இதன் சுருக்கமென்னவெனில் ஒருவன் உலகில் பிரசித்தி பெற வேண்டுமென்று விரும்புவது نَفْسُ أَمَّارَة – “நப்ஸ் அம்மாறா”வின் பண்பாகும். மனவெழுட்சியின் குணமாகும். வெளிப்பாடாகும். ஆயினும் மனிதர்கள் இதையே விரும்புகிறார்கள்.
இவ் விருப்பமுள்ள ஒருவன் திரையிடப்பட்டவனாவான். இவன் ஒருபோதும் ஆன்மீகத் துறையில் முன்னேற மாட்டான். அல்லாஹ்வை அறியவுமாட்டான். அவனை அடையவுமாட்டான்.
وَهَذَا الرَّجُلُ مَحْجُوْبٌ عَنِ الله تعالى بِالْحُجُبِ الظُّلْمَانِيَّةِ . مَنْ حُبِّ الْجَاهِ وَحُبِّ الشُّهْرَةِ وَغَيْرِهَا، وَكُلُّ مَحْجُوْبٍ بَعِيْدٌ عَنِ الله بُعْدَ الثَّرَى عَنِ الثُّرَيَّا وَأَعْمَى فِي الحقيقة ، وأمّا الأعْمَى فَلَا يَصِلُ إلى مَقْصُوْدِهِ، لِعَدَمِ مَعْرِفَتِه بِهِ،
திரையிடப்பட்டவன், பதவிமோகம், பிரசித்தி பெறுதல் என்ற திரைகளால் அல்லாஹ்வை விட்டும் திரையிடப்பட்டவனாவான். திரையிடப்பட்டவன் எதார்த்தத்தில் அந்தகனேயாவான். அந்தகன் ஒருபோதும் தனது குறிக்கோளை அடைந்து கொள்ள மாட்டான். குருடன் ஒரு போதும் அல்லாஹ்வை அறியவுமாட்டான், அவனை அடையவுமாட்டான்.
ஆகையால் இவன் தன்மீது போட்டுக் கொண்ட பிரசித்தி பெறுதல், பதவி மோகம் என்ற திரைகளை நீக்க வேண்டும். பாம்பு தனது சட்டையை கழட்டுவது போல் இவன் தன்னிலுள்ள திரைகள் அனைத்தையும் அகற்ற வேண்டும்.

அது கேட்டு மக்கள் பெரிதும் அதிர்ச்சியுற்றனர். பின்னர் விசாரித்ததில் உண்மை அவ்விதமே இருந்தது, தாவூத் தாயீ (ரஹ்) அவர்கள் காலமெல்லாம் வாழும் வண்ணம் காலமாகி விட்டார்கள்.
''அவர்கள் காலமாகிய செய்தி தங்களுக்கு எவ்வாறு
தெரிய வந்தது?" என்று மக்கள் இமாம் அவர்களிடம் வினவிய பொழுது,
அவர்களிடம் எஞ்சி இருந்த பணத்தையும் அவர்களின் அன்றாடச் செலவையும் கணக்கிட்டுப் பார்த்ததில் இன்று அவர்களிடம் ஒன்றும் எஞ்சியில்லாததைக் கண்டேன். அவர்களின் இறைஞ்சுதல் இறைவனால் நிச்சயமாக ஏற்றுக் கொள்ளப்படும். மேலும்
"அவனாக" ஆகிவிடும் பயிற்சியை கற்றவர்கள் என்பதை நான் நன்கு உணர்வேனாதலின், அவர்கள் இன்று இறப்பெய்துவார்கள் என்ற முடிவுக்கு வந்து அவ்வாறு கூறினேன்" என்று அவர்கள் மறுமொழி பகர்ந்தார்கள்.

**ஆத்ம ஞானமெனும் சூஃபி வழிப்பாடங்கள் 19**
( சூஃபியாக்களின் வழிமுறைப் பாடப்புத்தகத்தை எழுதிய சூஃபி )



மாபெரும் மகானாக விளங்கிய அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்கள், தங்களின் நஃப்ஸோடு (உணர்ச்சிகளோடு) பெரும் போராட்டம் தான் நிகழ்த்திக் கொண்டிருந்தார்கள்.
ஒரு தடவை மார்க்கப் போர் புரிவதற்காகச் சிலர் புறப்பட்ட பொழுது, அவர்களையும் அக்குழுவுடன் சேர்ந்து புறப்படுமாறு அவர்களின் 'நஃப்ஸ்' அவர்களுக்கு எடுத்துரைத்து, அதற்கு ஆதரவான பல நபி மொழிகளையும் கூறியது.
அதுகேட்டு அவர்கள் திடுக்குற்றார்கள். "என் நஃப்ஸ்" எனக்கு எப்பொழுதுமே இணங்கி வராதே. பிணங்கிக் கொண்டல்லவோ இருக்கும். இப்பொழுதென்ன இஃது என்னோடு இணங்கிப் போகின்றது.
ஒரு வேளை நான் இப்பொழுது நோன்பு நோற்பதைப் பிரயாணத்தில் நிறுத்தி விடுவேன் என்று எண்ணிக் கொண்டதோ, என்னவோ? அதன் காரணமாகவே தான் அது என்னை மார்க்கப் போரில் கலந்து கொள்ளுமாறு ஊக்குவிக்கின்றதோ,
என்னவோ சரி, எப்படி இருந்த போதினும் நான் பிரயாணத்தில் நோன்பு நோர்க்கவே போகின்றேன்" என்று தமக்குள்ளே கூறிக் கொண்டனர்.

அப்பொழுது அவர்களின், 'நஃப்ஸ்' 'மிகவும் நல்லது. அவ்விதமே, செய்யுங்கள்' என்று கூறியது.
தம் நஃப்ஸின் இந்த மறுமொழி, அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா {ரஹ்} அவர்களைத் தூக்கி வாரிப்போட்டது. "நான் என்னுடைய நஃப்ஸை இரவில் நெடுநேரம் நின்று தொழுது வருத்துவதனால் தான் அதிலிருந்து தப்ப இவ்வாறு சொல்கின்றதோ, என்னவோ?
பகலெல்லாம் பயணம் செய்து, இரவில் அலுத்துப் படுத்துறங்குவேன் என்று அது எண்ணிக் கொண்டது போலும். சரி; பகலெல்லாம் நான் பயணம் செய்த போதினும், இரவில் வழக்கம் போல் தொழுது வருவேன்" என்று அவர்கள் குளுரை பகர்ந்தார்கள்.

அதற்கும் அவர்களின் நஃப்ஸ், "நல்லது; அவ்விதமே செய்யுங்கள்" என்று அமைதியாகப் பதில் கூறியது.
தம் நஃப்ஸின் இப்பதில், மீண்டும் அவர்களுக்கு அளவற்ற வியப்பை வழங்கியது. 'நான் மக்களுடன் சேர்ந்து போவதால், அவர்களின் சகவாசத்தில் இன்பம் துய்க்கலாம் என்று அது எண்ணிக் கொண்டதோ. என்னவோ?
சரி; எப்படி இருந்த போதினும் நான் அக்குழுவுடன் சேர்ந்து சென்ற போதினும், அவர்களுடன் யாதும் உரையாடாது ஒதுங்கியே சென்று கொண்டிருப்பேன்" என்று அவர்கள் ஆணையிட்டுக் கூறினர்.
மிகவும் நல்லது. அவ்விதமே செய்யுங்கள்" என்று கூறி 'களு'க் கென்று சிரித்தது அவர்களின் நஃப்ஸ்

அது கண்டு அஹ்மது இப்னு கஸ்ரவிய்யா (ரஹ்) அவர்களுக்கு என் செய்வதென்றே விளங்கவில்லை. "இறைவ எம்பெரும! எக்காலும் என்னோடு பிணங்கிக் கொண்டிருக்கும் என் நஃப்ஸானது, இன்று வழக்கத்திற்கு மாறாக என்னுடன் எல்லாவற்றிலும் இணங்கிச் செல்கின்றதே. இதிலுள்ள சூது தான் யாது? இதனை நீ எனக்கு அறிவித்தருள்வாய். அல்லது என் நப்ஸை எனக்கு இதிலுள்ள இதை வெளிப்படுத்துமாறு செய்வாய்" என்று கூறினர்.
அப்பொழுது அவர்களின் நஃப்ஸ் பேசியது:
"தாங்களோ என்னுடைய வேணவா எதுவாக இருந்த போதினும், அதனைச் சிறிதேனும் சிந்தித்துப் பார்க்காது, அதனை நான் கூறிவிட்டேன் என்ற ஒரே காரணத்திற்காக, அதனை எதிர்த்து என்னை நாளொன்றுக்கு நூறு தடவை கொல்லாது கொல்கின்றீர்கள்.
எனவே இந்த மார்க்கப் போரில் ஈடுபட்டு ஒரேயடியாகக் கொல்லப்பட்டுத் தொலைந்து போகலாமென்று எண்ணியே அவ்வாறு கூறினேன். அதில் தாங்கள் இறந்துவிடின். தங்களுக்கு நற்புகழும் சுவனப் பெருவாழ்வும் கிடைக்கும்" என்று அது கூறியது.

அது கேட்டு அவர்கள், " என்ன நயவஞ்சகத்தனம், என்ன நயவஞ் சகத்தனம்" என்று அலறினார்கள். "இறப்பை விரைவில் ஏற்றுத் தப்பித்துக் கொள்ளலாம் என்று நீ எண்ணிக் கொண்டாயோ? இனிமேல் தாள் நான் உனக்குக் கடும் சோதனை வழங்கப் போகின்றேன்'' என்று அதனை முன்னைவிட அதிகமாக வருந்தத் துவங்கினார்கள்.
இவர்கள் ஓர் 'அவ்த்தாத்' ஆவர் என்று இறைநேசச் செல்வர் அனைவரும் ஒருமித்துக் கூறுகின்றனர். அகிலத்தின் ஆணிமுளையாக விளங்கும் குத்பென்றும் இவர்களைக் கூறப்படுகிறது.
எனினும் ஒரு தடவை இவர்களிடம், இப்பொழுது உயிர்வாழ்ந்து கொண்டிருக்கும் “குத்பு யார்?' என்று வினவப்பட்ட பொழுது இவர்கள் தம்மைக் கூறாது ஜுனைத் (ரஹ்) அவர்களைச் சாடையாகக் குறிப்பிட்டார்கள். இவர்கள் நாற்பது இறைநேசச் செல்வர்களுக்குப் பணிபுரிந்து அவர்களிடமிருந்து ஆன்மீகக் கல்வியைப் பயின்று 'சாஹிப் தம்கீன்' என்ற உயரிய பதவியை எய்தப் பெற்றனர்.
இவர்கள், ஆன்மீக வழியில் நடந்து செல்பவர்களுக்கு வழி காட்டியாக 'அல் ரியாயத் பி ஹுகூலல்லாஹ்' (அல்லாஹ்வுக்கு உரிய வற்றைக் கடைப்பிடித்தொழுகும் முறைகள் ) என்ற பெயருடன் ஒரு நூல் எழுதியுள்ளனர்.
'வழியும் தெளிவாக உள்ளது. உண்மையும் தெளிவாக உள்ளது. ஆடுமேய்ப்பவனும் கூவி அழைத்துவிட்டான். இதற்கு மேலும் ஒருவன் வழிதவறி விட்டானென்றால், அது குருட்டுத் தன்மையேயன்றி வேறில்லை" என்றும் அவர்கள் கூறினார்கள்.

**ஆத்ம ஞானமெனும் சூஃபி வழிப்பாடங்கள் 20**
( உணவு அது எங்கிருந்து வருகிறது என்பதிலிருந்து பாடம் பயின்ற சூஃபி )

ஒருநாள் அஹ்மது இப்னு ஹர்ப் (ரஹ்) அவர்கள், தம் இல்லத்தில் நகரப் பிரமுகர் சிலருடன் அமர்ந்து உரையாடிக் கொண்டிருக்கும் பொழுது, உள்ளே நுழைந்த அவர்களின் மூத்த மகன், அவர்களையோ, அங்கு வீற்றிருந்தவர்களையோ சிறிதேனும் பொருட்படுத்தாது, மது மயக்கத்தோடு புல்லாங்குழல் ஊதிக் கொண்டு சென்றான். அது கண்டு ஆங்கு வீற்றிருந்தவர்களுக்கு ஏற்பட்ட எரிச்சலுக்கு அளவில்லை.
அப்பொழுது அவர்களின் முக மாறுதலைக் கண்ட அவர்கள் "என்ன செய்தி?" என்று வினவினர்.
"இந்த இளவல் இத்துணை இழிவாக இங்கு நடந்து கொண்டது எங்களுக்குப் பெரிதும் மன வேதனையை அளிக்கிறது"

அப்பொழுது அவர்கள் அந்தப் பிரமுகர்களை நோக்கி, 'தவறு அவனுடையதல்ல, எங்களுடையது" என்று கூறினர்.
"எவ்வாறு?" என்று அவர்கள் வியப்புடன் வினவினர்.
"ஓரிரவு அண்டை வீட்டிலிருந்து எங்களின் வீட்டிற்கு உணவு வந்தது. அதனை நானும் என் மனைவியும் உண்டோம். அன்றிரவே இவன் ஜனித்தான். அன்றிரவு நாங்கள் எங்களை அறியாமல் உறங்கி விட்டதால், வைகறைத் தொழுகையும் எங்களுக்குத் தவறிவிட்டது. பின்னர் நாங்கள் விசாரித்ததில், அது ஓர் அரசாங்க ஊழியரின் இல்லத்தில் நடந்த திருமண விருந்துக்குச் சமைக்கப்பட்ட உணவு என்று தெரிய வந்தது" என்று அவர்கள் கூறினார்கள்.
فَلْيَنْظُرِ الْاِنْسَانُ اِلٰى طَعَامِهٖۤ
மனிதன் தன்னுடைய உணவை (அது எங்கிருந்து எவ்வாறு வருகின்றது என்பதைச்) சிறிது கவனித்துப் பார்க்கவும்
(அல்குர்ஆன் : 80:24)

இறைநேசச் செல்வர் அஹ்மது இப்னு ஹர்ப் ( ரஹ்) அவர்களுக்கு மற்றொரு சிறு மகனும் இருந்தார். இளமையிலிருந்தே அவரையாவது இறையருளில் நம்பிக்கையுள்ளவராக ஆக்க வேண்டுமென்ற எண்ணத்துடன், அவர்கள் ஒருநாள், தம் சின்னஞ்சிறு மகனை அருகழைத்து,
"மகனே! உனக்கு உண்பதற்கு ரொட்டி வேண்டுமாயின் என்னிடமோ, அம்மாவிடமோ வந்து 'பசிக்கிறது என்னவாவது தா' என்று கேட்டு அழாதே. அதற்கு மாறாக, அதோ சன்னல் இருக்கிறதே, அங்கு சென்று, ''இறைவனே! எனக்கு ரொட்டி தா' என்று கேள் கிடைக்கும்" என்று கூறினர்.
அவ்விதமே குழந்தை ஒவ்வொரு நாளும் சன்னல் அருகே சென்று ரொட்டி கேட்டுப் பெறும் வழக்கத்தை மேற்கொண்டது. பெற்றோர்களும் மறந்து விடாது சன்னல் அருகே ரொட்டியை வைக்கும் வழக்கத்தை மேற்க்கொண்டிருந்தனர்.

ஒருநாள் பெற்றோர் இருவரும் அவ்விதம் செய்ய மறந்து விட்டு வெளிலே சென்று விட்டவர், குழந்தை வழக்கம் போல் சன்னல் அருகே சென்று, "இறைவனே எனக்கு ரொட்டி தா" என்று கேட்டது. உடனே சன்னல் வழியாக ஒரு ரொட்டி விழுந்தது. அதனை எடுத்துக் கடித்துத் நின்று கொண்டிருந்தது குழந்தை,
அப்பொழுது பெற்றோர்களும் இல்லம் திரும்பி விட்டார்கள். தம் சின்னஞ்சிறு மகன் ரொட்டித் துண்டைக் கையில் வைத்துக் கொண்டு கடித்துத் தின்று கொண்டிருப்பதைக் கண்டதும் அவர்களுக்கு தம் கண்களையே நம்ப இயலவில்லை.
"யார் உனக்கு ரொட்டி தந்தது கண்ணே!" என்று அவர்கள் தம் சின்னஞ் சிறு மகனைச் செல்லமாக வினவினார்கள்.
"எப்பொழுதும் தருகிறவர் தாம் இன்றும் தந்தார்" என்று அது தன் பிஞ்சு வாய் திறந்து கூறியது. அப்பொழுது பெற்றோர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கும் மகிழ்விற்கும் அளவில்லை.
فَتَقَبَّلَهَا رَبُّهَا بِقَبُوْلٍ حَسَنٍ وَّاَنْۢبَتَهَا نَبَاتًا حَسَنًا ۙ وَّكَفَّلَهَا زَكَرِيَّا ۚ كُلَّمَا دَخَلَ عَلَيْهَا زَكَرِيَّا الْمِحْرَابَۙ وَجَدَ عِنْدَهَا رِزْقًا ۚ قَالَ يٰمَرْيَمُ اَنّٰى لَـكِ هٰذَا ؕ قَالَتْ هُوَ مِنْ عِنْدِ اللّٰهِ ؕ اِنَّ اللّٰهَ يَرْزُقُ مَنْ يَّشَآءُ بِغَيْرِ حِسَابٍ
அவளுடைய இறைவன் அவள் பிரார்த்தனையை அழகிய முறையில் ஏற்றுக் கொண்டான்; அக்குழந்தையை அழகாக வளர்த்திடச் செய்தான்; அதனை வளர்க்கும் பொறுப்பை ஜகரிய்யா ஏற்றுக்கொள்ளும்படி செய்தான். ஜகரிய்யா அவள் இருந்த மிஹ்ராபுக்குள் (தொழும் அறைக்குப்) போகும் போதெல்லாம், அவளிடம் உணவு இருப்பதைக் கண்டார், "மர்யமே! இ(வ்வுணவான)து உனக்கு எங்கிருந்து வந்தது?" என்று அவர் கேட்டார்;
"இது அல்லாஹ்விடமிருந்து கிடைத்தது - நிச்சயமாக அல்லாஹ் தான் நாடியவர்களுக்குக் கணக்கின்றி உணவளிக்கின்றான்" என்று அவள்(பதில்) கூறினாள்.
(குர்ஆன் : 3:37)
என்ற திருக்குர்ஆன் வசனம் அஹ்மது இப்னு ஹர்ப் (ரஹ்) அவர்களின் மனதில் நிழலாடியது.
இவ்வாறு இறையருளில் பரிபூரண நம்பிக்கை வைத்து, அவனுடைய ஆதரவையே தாம் மட்டும் நம்பி வாழ்ந்ததோடல்லாது, தம் சின்னஞ்சிறு மகனையும் இறைவழியிலேயே நடக்கும்படியான நம்பிக்கையை ஊட்டினார்கள் பெற்றோர்களான அஹ்மது இப்னு ஹர்ப் (ரஹ்) தம்பதிகள்.

## ஆத்ம ஞானமெனும் சூஃபி வழிப்பாடங்கள் 21

(அஹ்லே பைத்துகளை கண்ணியம் செய்யும் பாடத்தை பயின்ற சூஃபி மஹான்)



அந்த பக்தாத் மாநகரத்தில் நடைபெறுகிற மல்யுத்தப் போட்டிகளில் இவரை மட்டும் வெற்றிகொள்ள யாராலும் முடியவில்லை..
பல நகரங்களில் இருந்தும் வந்து மோதி பார்த்தும் இவரிடம் தோல்வியை தழுவியவர்களே அதிகம்..
பகுதாத் நாட்டை ஆண்ட சிற்றரசருக்கு இவருடைய புகழ் உயர உயர செல்வது பொறாமையை ஏற்படுத்தியது..
ஒரு கட்டத்தில் அந்த பக்தாத் மாநகரத்தில் தன் பெயரை விட மல்யுத்த வீரர் ஜுனைதுல் பக்தாதியின் பெயர் மக்களால் பெருமையோடு மொழியப் படுவது கண்டு அவரால் பொறுத்திருக்க முடியவில்லை..
அந்த சிற்றரசர் பக்தாத் மாநகரத்தில் ஓர் அறிவிப்பை வெளியிட்டார்.. "யார் இந்த ஜுனைதுல் பகுதாதியை மல்யுத்த போட்டியில் தோற்கடித்து விடுகிறாரோ அவருக்கு ஒரு லட்சம் தீனார் தங்கக் காசுகள் பரிசாக வழங்கப்படும்"..என்று அறிவித்தார்..

பக்தாதில் இருந்தும் , வெளி நகரத்தில் இருந்தும் பல்வேறு மல்யுத்த வீரர்கள் வந்து அவரிடம் மோதிப் பார்த்தும் யாரும் அவரை வெற்றி கொள்ள முடியவில்லை.. பலர் தோற்றுப் போனார்கள். சிலர் அவர் அடித்த அடியில் எழவே முடியாமல் சிலரால் அரை குறை உடம்பாக தூக்கி செல்லப்பட்டார்கள்..
அன்று மாலை மற்போர் மன்றம் மக்கள் வெள்ளத்தால் நிரம்பி வழிந்து கொண்டிருந்தது. அம்மன்றத்தின் நடுவே அலங்காரமாச் சோடிக்கப்பட்டிருந்த ஒரு மேடையின் மீது, அரசர் தம் அமைச்சர் பிரதானிகள் புடை சூழ ஒய்யாரமாக வீற்றிருந்தார்.
சற்று நேரத்தில் மற்போர் துவங்கியது. ஆஜானுபாகுவான அரசாங்க மாமல்லர் ஜுனைதுல் பகுதாதி மற்போர் மன்றத்தில் குதித்ததும், அவரை எதிர்க்க ஒல்லிய உருவினர் ஒருவர் எதிர்ப்பட்டார். அது கண்டு மக்களின் புருவங்கள் மேலேறின.
அரசர் அவருக்கு எவ்வளவோ அறிவுரை கூறித் தம் அரசாங்க மாமல்லரை, மற்போருக்கு அறைகூவி அழைக்க வேண்டாமென்று எடுத்துரைத்தும், அவர் கேட்கவில்லையாமே. என்னையும் அவரையும் களத்திலே மோதவிடுங்கள். அவரைக் கணத்திலே மண்ணைக் கௌவச் செய்கிறேன்" என்று அரசவையிலே வைத்துச் சூளுரைத் தாராமே அவர்!'' என்று கூறினார் அவர்.
அப்பொழுது அருகே இருந்த வேறொருவர் "அப்படி ஒன்றும்
அவசரப்பட்டுக் கூறி விடாதீர்கள். பென்னம்பெரிய யானையைச் சின்னஞ்சிறிய சிற்றெறும்பு வீழ்த்திவிடுவதை நீங்கள் அறியமாட்டீர்களா,

என்ன? யார் கண்டது, யார் வெற்றியுறுவார், யார் தோல்வியுறுவார். என்பதை?'' என்று இடைமறித்துக் கூறினார்.
"பொறுத்திருந்து பார்ப்போம், சற்று அமைதியாக இருங்கள்" என்று பிறிதொருவர் கூறிவாய் மூடு முன், அரசாங்க மாமல்லர் தம் எதிரியை ஒரே பிடியாகப் பிடித்து உயரத் தூக்கி நிலத்திலே அறையப் போனார்.
அது கண்டு அந்நகர மக்கள் அனைவருக்கும் ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவில்லை. ஆனால் என்ன வியப்பு!
அடுத்தகணம் நிலத்திலே தம் முதுகில் மண்பட அரசாங்க மாமல்லர் மல்லார்ந்து கிடக்கவும், அவரின் மீது அந்த ஒல்லிய உருவினர் வீற்றிருக்கவும் கண்டு, ஆங்குக் குழுமி இருந்த மக்களுக்குத் தங்களுடைய கண்களையே தங்களால் நம்ப இயலவில்லை.
"இதில் என்னவோ சூது (Match Fix ) உள்ளது. நாங்கள் இத் தோல்வியை ஒரு போதும் ஏற்றுக் கொள்ள மாட்டோம்" என்று கூட்டத்திலிருந்து பலர் கூக்குரலிட்டனர். 'தோல்வி, தோல்விதான், தோல்வியை ஏற்றுக் கொள்வதற்குத் தயக்கம் ஏன்?'' என்று மற்றொரு கும்பல் முழங்கியது.
அரசருக்கோ முகத்தில் ஈயாடவில்லை. தம் மாபெரும் அரசாங்கத்திற்கே மாசு ஏற்பட்டுவிட்டதாக அவர் கருதினார். எனவே மீண்டும் ஒரு முறை மற்போர் நடத்தி, எதிர்பாராது ஏற்பட்ட இந்த இழிவைத் துடைத்துவிட எண்ணினார். எனவே 'மீண்டும் ஒருமுறை" என்ற சொற்கள் அவருடைய வாயிலிருந்து கணீரென்று வெளிவந்தன.

மீண்டும் மற்போர் துவங்கியது. அப்பொழுது மற்போர் அரங்கத்தைச் சூழ வீற்றிருந்த மக்களின் இதயங்கள் படபட வென்று அடித்துக் கொண்டன. மற்போர் அரங்கத்தில் மல்லர்கள் இருவரும் இறங்கிச் சிறிது நேரம் தான் ஆகி இருக்கும். அதற்குள் அரசாங்க மாமல்லர் மீண்டும் ஒருமுறை மண்ணைக் கௌவி விட்டார்.
"மீண்டும் ஒரு முறை" என்று மன்னர் கூறியது, மீண்டும் ஒருமுறை அவருக்கும் அவரின் அரசாங்கத்திற்கும் அவமானத்தையே நல்கி விட்டது. எனினும் வெற்றி பெற்ற வேற்றூர் மல்லருக்கு விருதுகள் பல வழங்கிப் பரிசில்கள் பல நல்கிப் பாங்குடன் அனுப்பி வைத்தார் மன்னர்.
அன்றிரவு அரசாங்க மாமல்லர் தம் இல்லத்தில் என்றுமில்லா மன அமைதியுடன் உறங்கிக் கொண்டிருந்தார். அப்பொழுது அவருடைய கனவில் முஹம்மதெங்கள் நபிகள் கோமான் (ஸல்) அவர்கள் திருக்காட்சி வழங்கி, "எம் வழி வந்த ஒருவர், உம்முடன் மற்போர் புரியுங்கால் நீர் அவரை நிலத்தில் அறைய உயரத் தூக்கிய பொழுது, அவர் உம் காதோடு காதாகத் "தாம் ஒரு ஸையித் " என்று கூறியதும், அவரை என் பொருட்டு நீர் வெற்றியடையச் செய்து, தோல்வியை நீர் தழுவிக் கொண்டீர்.
இரண்டாவது முறையும் அவ்விதமே செய்து என் கௌரவத்தைக் காத்தீர். அதன் காரணமாக நாம் உம்முடைய கௌரவத்தை இம்மையிலும், மறுமையிலும் காப்போம், இது உறுதி. இன்று முதல் நீர் ஸையிதுத் தாயிஃபா (ஆன்மீகக் குழுவினரின் தலைவர்) ஆக நியமிக்கப்பட்டுள்ளீர்" என்று அருண்மொழி பகர்ந்து மறைந்தனர்.
திடுக்கிட்டு விழித்தெழுந்த அரசாங்க மாமல்லருக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவில்லை. எப்பொழுது புலரும் என்று ஏங்கிக் கொண்டிருந்த அவர், தாம் அரசரிடமிருந்து இதற்கு முன் பெற்றிருந்த விருதுகள், பரிசில்கள் ஆகியவற்றை எல்லாம் திருப்பி அனுப்பினார்.

அவற்றைப் பெற்றதும் அரசர் அவரைத் தம் அரண்மனைக்கு அழைத்து வரச் செய்து, அவரின் வாழ்விலே ஏற்பட்ட திடீர் மாற்றத்திற்குக் காரணம் என்னவென்று வினவினார்.
நானும் ஒரே அடியில் வீழ்த்துவதற்கு அவரை பிடித்து தூக்கினேன். அப்போது அவர் என் காதருகில் "நான் யார் தெரியுமா..? நபி ஸல்லல்லாஹு அலைஹிவசல்லம் அவர்களின் வம்ச வழியில் வந்தவன் . நான் ஒரு ஏழை. எனக்கு சில பெண் குழந்தைகள் இருக்கிறார்கள்.. அவர்களுக்கு திருமணம் செய்து வைக்க வேண்டிய சூழலில் இருக்கிறேன்.

நபியின் வாரிசான எங்களுக்கோ தர்மப் பொருளை வாங்குவது தடை செய்யப்பட்டிருக்கிறது. எனவே யாரிடமும் கையேந்த மனமில்லை. இப்படி ஒரு போட்டி அறிவிப்பு செய்யப்பட்டிருப்பதை தெரிந்து அந்த ஒரு லட்சம் தீனார் எனக்கு கிடைக்க வேண்டும் என்பதற்காக வந்திருக்கிறேன். அண்ணல் நபியின் வாரிசை கண்ணியப்படுத்துவீர்களா..?" என்று கேட்டார்"..
நான் பதைபதைத்து "என்னை நீங்கள் அடிப்பது போல் ஓங்கி அடியுங்கள்.. நான் கீழே சரிந்து விழுந்து விடுகிறேன்"... என்று கூறினேன். அதுதான் இங்கு நடந்தது".. என்பதாக சிற்றரசரிடம் ஜுனைதுல் பகுதாதி என்ற மல்யுத்த வீரர் அமைதியாய் தெரிவித்தார்..
அப்பொழுது அவர் உள்ளதை உள்ளவாறு எடுத்துரைத்து, "எம்பெருமானார் (ஸல்) அவர்கள் இப்பொழுது எனக்கு அளித்துள்ள மேலாம் பதவிக்கு முன் அரசாங்க மாமல்லர் பதவி எம்மாத்திரம்? எனவே தான் அதற்கான விருதுகள், பரிசில்கள் ஆகிய அனைத்தையும் திருப்பி அனுப்பி விட்டேன். சென்று வருகிறேன்" என்று கூறி விடை பெற்றார்.
அக்கணத்திலிருந்து அரசாங்க மாமல்லர் ஜுனைத் இறைநேசச் செல்வர் ஜுனைதுல் பக்தாதியாக மாறி விட்டார். பிற்காலத்தில் `தாவூஸுல் உலமா' (மார்க்க அறிஞர்களின் மயில் என்றும் 'மஷாயிஹெ பாத்தின்' (அகமியக் கல்வியின் தலைவர்) என்றும், சிறப்புப் பெயர் பெற்று, ஆலிம்களின் அரசராகவும், வலிமார்களின் மன்னராகவும் விளங்கிய ஜுனைதுல் பக்தாதி (ரஹ்) அவர்கள் .....
நூஹ் (அலை) அவர்களால் நிர்மாணிக்கப்பட்ட 'நுஹாவந்த்' என்ற ஊரிலிருந்து பிழைப்பின் நிமித்தம் பக்தாது வந்து குடியேறிய முஹம்மது இப்னு காஜுர் ஜுனைதின் மகனாவார். அவர்களின் தந்தை ஒரு சாமான்யர். அவர் பக்தாதில் ஒருசிறு கண்ணாடிக் கடை வைத்து வாணிபம் செய்து வந்தார்.

## ஆத்ம ஞானமெனும் சூஃபி வழிப்பாடங்கள் 22



(தஸவ்வுஃப் என்ற சூஃபி வழிப்பாடங்கள் )

தஸவ்வுஃப் என்றால் என்ன ? இக் கேள்வியை ஜுனைதுல் பக்தாதி (ரஹ்) அவர்களிடம் கேட்டதற்கு, தஸவ்வுஃப் என்றால் " எதிலும் தொடர்பின்றி அல்லாஹ்வுடன்

ஒன்றித்து இருத்தல் "

" தஸவ்வுஃப் எட்டு நபிமார்களின் நற்பண்புகளின் மீது எழுப்பபட்டதாகும் "

1) தம் அன்புத் திருமகனார் இஸ்மாயீல் (அலை) அவர்களை இறைவனுக்காகப் பலியிட முன்வந்த இப்ராஹீம் (அலை) அவர்களின் **#தியாகம்**

2) தம் இன்னுயிரை இறை கட்டளைக்குக் கீழ்படிந்து இழக்க முன் வந்த இஸ்மாயீல் (அலை) அவர்களின் **#இணக்கம்** .

3) துன்பத்தை இன்பமாகக் கருதி எவ்வித முணக்கமும் இன்றி நோயை சகித்துக் கொண்ட ஐயூப் (அலை) அவர்களின் **#பொறுமை**

4) ஜகரிய்யா (அலை) அவர்களை நோக்கி இறைவன் , "நீர் மூன்று நாட்கள் வரைச் சாடையாகவன்றி மனிதர்களுடன் பேசமாட்டீர் குர்ஆன் 3:41 என்று கூறியதற்கேற்ப ஜகரிய்யா (அலை) மேற் கொண்ட **#மௌனம்**

5) தம்முடைய நாட்டிலேயே ஓர் அந்நிய நாட்டான் போன்றும், தம்முடைய உறவினர்களிடையே அயலான் போன்றும் வாழ்ந்த யஹ்யா (அலை) அவர்களின் **#பற்றற்றத்தன்மை** .

6) உலகப் பொருள்களை வெறுக்கத் தொடங்கி , தம்மிடம் ஒரு சீப்பையும், ஒரு குவளையுமே வைத்திருந்து , ஒருவர் தம் கையால் தண்ணீர் அள்ளி பருகுவதைக் கண்டு குவளையையும் , ஒருவர் தம் விரல்களால் தம் தலைமுடியை ஒழுங்கு செய்வதைக் கண்டு தம்மிடமிருந்த சீப்பையும் தூக்கி எறிந்த ஈஸா (அலை) அவர்களின் **#துறவு**

7) கம்பளி உடையணிந்து தம்மை வருத்திக் கொள்ளும் நபி மூஸா (அலை) அவர்களின் **#இயல்பு**

😎உலகக் கருவூலங்களின் திறவுகோலை அவர்களுக்கு இறைவன் அனுப்ப , " இறைவனே ! அவற்றை நான் விரும்பவில்லை .ஒரு நாளைக்கு எனக்கு உணவைத் தா ; அடுத்த நாளைக்கு என்னைப் பசித்திருக்கச் செய் " என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் விரும்பிய **#ஏழ்மை**

**ஆத்ம ஞானமெனும் சூஃபி வழிப்பாடங்கள் 23**
( இறை நாட்டத்திற்கு அடிமைத் தனத்துடன் தலை சாய்க்கும் பாடத்தை கற்றுக் கொடுத்த சூஃபி )



சுல்தானுல் ஆரிஃபீன் சையிது அஹ்மதுல் கபீர் ரிஃபாயீ (ரஹ்) ஆண்டகை அவர்களின் சகோதரி மகன் சையிது ஜலீல் என்பவர் தம் மாமாவைக் காணச் சென்ற பொழுது அறையில் எவரோ ஒருவர் அவர்களுடன் நீண்ட நேரம் உரையாடிக் கொண்டிருப்பதைக் கதவிடுக்கின் வழியே கண்டார்.
பின்னர் அவர் வாயில் வழியே வெளி வராது, அந்த அறையின் மதில்சுவரைப் பிளந்து மின்னென மறைந்து விட்டதையும் கண்டார்.
இதன்பின் உள்ளே சென்ற மருகர் தம் மாமாவை நோக்கி "தங்களுடன் நெடுநேரமாகப் பேசிக் கொண்டிருந்தாரே அவர் யார் ? என்று வினவினார்.
"அவரை நீ பார்த்தாயோ?" என்று ஆண்டகை வினவினர்.
"ஆம்" என்று பதிலுரைத்தார் மருகர்.
அப்பொழுது ஆண்டைகை அவர்கள் தம் மருகரை நோக்கி, "அவர் "பஹ்குல் முஹீத்" என்னும் கடலைப் பாதுகாக்க இறைவனால் நியமிக்கப்பட்டுள்ள நான்கு அவ்தாதுகளில் ஒருவர். மூன்று நாட்களாக இறைவன் அவர் மீது வெறுப்படைந்துள்ளான். எனினும் இச்செய்தி அவருக்குத் தெரியாது'' என்று கூறினர்.
ஏன் இறைவன் அவர் மீது வெறுப்படைந்துள்ளான்?" என்று வினவினார் மருகர்,
''மூன்று நாட்களுக்கு முன் அங்கு கடும் மழை பெய்தது. அது கண்டு இவர், பெய்ய வேண்டிய இடத்தில் பெய்யாது, கடலில் வந்து பெய்கின்றதே இப்பேய் மழை'' என்று எண்ணினார். பின்னர் தம் தவற்றை உணர்ந்து, தம் பிழை பொறுத்தருளுமாறு இறைவனிடம் வேண்டினார்.எனினும் இறைவன் அவரின் பிழை பொறுக்கவில்லை என்று கூறினார்கள் ஆண்டகை.
''இறைவன் அவர் மீது கொண்டுள்ள வெறுப்பையும், அவரின் பிழை பொறுக்காததையும் தாங்கள் அவர்களிடம் கூறினீர்களா ?
''இல்லை; அதனை அவரிடம் எடுத்துரைக்காது நாணம் என நாவுக்குத் தாளிட்டது.'' '
'அவ்விதமாயின், தாங்கள் அனுமதியளிப்பின், நான் அதனை
ஆற்றுகின்றேன்.''
"அப்படியா! நல்லது; உன் சட்டைக் கழுத்தை உன் தலைக்கு மேல்
உயர்த்து!''

அவ்விதமே அவர் செய்தார். என்ன வியப்பு! அடுத்த கணம் அவர் பஹ்குல் முஹீத்தீன் நடுவில் அமைந்த ஒரு தீவில் நின்றுகொண்டிருந்தார். என்ன செய்வதென்றே அவருக்குத் தெரியவில்லை. எனினும் திடப்படுத்திக் கொண்டு, அத்தீவிற்குள் நடந்துசென்றார்.
அங்கே ஒரு பெரியார் நின்று கொண்டிருந்தார். அவரைப் பார்த்ததும் தாம் சற்றுமுன் தம் மாமாவின் அறையில் பார்த்த அதே மனிதர் தாம் என்பதை விளங்கிக் கொண்ட அவர் அப்பெரியாரை அணுகி அவருக்கு ஸலாம் உரைத்து, நிலைமையை எடுத்துரைத்தார்.

அதுகேட்டு அப்பெரியாரின் தளர்வுற்ற உடலெல்லாம் அதிர்ந்தது.
''மகனே! அல்லாஹ்வின் மீது ஆணையாகக் கேட்கிறேன். நீ எனக்கோர் உதவி செய்கின்றாயா?” என்று தளதளத்த குரலில் வினவினார் அவர்.
"செய்கிறேன்" என்றார் ஜலீல்,

“நீ நான் அணிந்திருக்கும் இந்த கிர்க்காவை எடுத்து, நன்கு முறுக்கி என் கழுத்திலிட்டு இறுக்கி, என்னை முகம் குப்புற ஆக்கிக், கல்லிலும், கரடிலும், முள்ளிலும், செடியிலும் இழுத்துச் செல்ல வேண்டும். அல்லாஹ்வுக்கு மாறு செய்பவனுக்கு, அல்லாஹ்வின் நாட்டத்தில் குறை காண்பவனுக்கு இதுவே சரியான தண்டனையாகும்" என்று கூறினார் அவர்.
அவ்விதமே செய்தார் ஜலீல். அப்பொழுது, ''ஜலீல்! நிறுத்தும்.உம் இழுப்பை! ஏழுவானங்களிலும் உள்ள அமரர்கள் அனைவரும். அவருக்காக இறைவனிடம் அழுது மன்றாடுகின்றார்கள். அதன் காரணமாக இறைவன் அவரின் பாவம் பொறுத்து அவரைப் பொருந்திக் கொண்டான்". என்று அசரீரி முழங்கியது.
அதனைச் செவியுற்றதும் ஜலீல் மயங்கிக் கீழே விழுந்தார். பின்னர் உணர்வுப் பெற்று அவர் கண் விழித்த பொழுது, தாம் தம் மாமாவின் தியான அறையில் இருப்பது அவருக்குத் தெரியவந்தது.
அப்பொழுது அவரின் மாமா அவரைநோக்கி, 'மருகரே! இதிலிருந்து நீர் ஒரு நல்ல பாடத்தைக் கற்றுக் கொள்ள வேண்டும். இறைவனின் பேரபிமானத்தை ஒருவனுக்கு ஈட்டித்தருவது, அவனுடைய நாட்டத்திற்கு அடிமைத் தனத்துடன் தலை சாய்ப்பதேயாகும்
அதற்கு மாறாக நடந்து கொள்வது, இறை முனிவை ஈட்டித் தரும் என்பதை நீர் ஒருபோதும் மறந்து விட வேண்டாம்!" என்று அருள்போதம் செய்தார்கள்

## ஆத்ம ஞானமெனும் சூஃபி வழிப்பாடங்கள் 24

( விலாயத் எனும் சூஃபி வழிப்பயிற்சி பாடங்கள் )



கௌதுல் அஃலம் முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்கள் பெரும்பாலும் நோன்பு நோற்றவர்களாகவே இருப்பார்கள்.
அவர்களுக்குரிய நிலத்தில் பயிரிடப் பெற்ற கோதுமையை அரைத்துச் சுடப் பெற்ற ரொட்டிகளைக் கொண்டே அவர்கள் நோன்பு திறந்து வந்தனர்.
அவர்களுக்கென நான்கு அல்லது ஐந்து ரொட்டிகள் கொண்டு வந்து வைக்கப்படும். அவற்றைச் சிறு சிறு துண்டுகளாக அவர்கள் நறுக்கிக் கொண்டிருப்பார்கள்.
அப்பொழுது அவர்களின் ஊழியர் வெளியில் சென்று, ''ஆண்டகை அவர்கள் நோன்பு திறக்கப் போகின்றார்கள் அவர்களுடன் சேர்ந்து உண்ண விரும்புவோர் வரலாம்" என்று கூவி அழைப்பர்.
அப்பொழுது பலர் வந்து அவர்களுடன் உணண அமர்வர் அவர்களுடன் சேர்ந்து கௌதுல் அஃலம் (ரஹ்) அவர்களும் உண்பார்கள் விருந்தினர்கள் இல்லையெனில், அவர்கள் உண்ணமாட்டார்கள்.
கௌதுல் அஃலம் ஆண்டகை அவர்கள் எக்காலமும் ரொட்டியை மட்டும் உண்டு உயிர் வாழ்ந்து வரவில்லை. சில பொழுது அவர்கள் நல்ல உணவுகளையும் உண்டு வந்தார்கள்.
ஒரு நாள் ஒருகிழவி கௌதுல் அஃலம் ஆண்டகை அவங்கள் நடத்திய கல்லூரியில், நம் மகனையும் சேர்த்துக் கல்வி பயிற்றுவிக்குமாறு ஆண்டகை அவர்களைப் பெரிதும் வேண்டிக் கொண்டாள். அதற்கு ஆண்டகை அவர்கள் இணங்கி, அவ்வாறே செய்தார்கள்.
சிலகாலம் கழித்து, அக்கிழவி தன்மகனைக் காண வந்த பொழுது, அவன் மெலிந்து துரும்பாகி, காய்ந்த ரொட்டிகளை உண்டு கொண்டிருந்தான். அது பெற்ற மனம் பித்தாகியது. பின்னர் அவள் ஆண்டகை அவர்களிடம் வந்த பொழுது, அவர்கள் பொறித்த கோழியை உண்டு கொண்டிருப்பதைக் கண்டதும், அவளுக்கு ஏற்பட்ட ஆத்திரத்திற்கு அளவில்லை.

அவள் ஆண்டகை அவர்களை நோக்கி, 'ஷைகு அவர்களே! தங்க பெரிய மகாத்மா என்றும், மாமேதை என்றும் கூறுகிறார்கள். என் மகன் இங்கு தங்களிடம் ஓத வந்து, காய்ந்த ரொட்டிகளை உண்டு உருத் தெரியாது ஓடாகிவிட்ட பொழுது, தாங்கள் மட்டும் பொறித்த கோழியை உண்ணுவது எந்த நியாயத்தின் பாற்பட்டது" என்று விளவினாள்
அதுகேட்ட ஆண்டகை அவர்கள், ஒரு புன்முறுவலை உதிர்த்த வண்ணம், தாங்கள் மென்று கக்கியிருந்த அக்கோழியின் எலும்புகளை எல்லாம் ஒருங்கு சேர்த்து, ''மக்கிப்போன எலும்புகளை உயிர்ப்பிக்கக் கூடிய அல்லாஹ்வின் ஆணையினால் நீ உயிர் பெற்றெழுக! " என்ற கூறினார்கள்.
அடுத்தகணம் அக்கோழி, உயிர் பெற்றுக் கொக்கரித்துச் கொண்டு நின்றது. அதுகண்டு அக்கிழவிக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.
அப்பொழுது ஆண்டகை அவர்கள் அவளை நோக்கி, "அம்மணீ" உம் மகன் இத்தகு தகுதியைப் பெற்றுவிடின், அவன் இதனை உண்பதற்கு யாதொரு தடையுமில்லை" என்று கூறினார்கள்.
பிற்காலத்தில் அவளின் மகன் ஞானமார்க்கத்தில் நெடுஞ்தொலைவு சென்று, சிறப்புற்று விளங்கிய பொழுது, தம் மகனைப் பார்க்க மீண்டும் அவள் வந்த சமயம்...
ஆண்டகை அவர்களுடன் தம் மகனும் அமர்ந்து பொறித்த கோழியை உண்டு கொண்டிருப்பதை வைத்த கண்வாங்காது பார்த்து மகிழ்ந்து கொண்டிருந்தாள்.
அப்பொழுது ஆண்டகை அவர்களின் ஆணையின்படி, அவர்கள் தின்று குவித்திருந்த எலும்புகளை நோக்கி. " உயிர் பெற்றெழுமாறு அவளின் மகன் கூற, அவை ஒரு நொடியில் சேவலாக உருவெடுத்து 'கொக்கரக்கோ' என்று கூவியது.
அப்பொழுது கிழவிக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு மட்டில்லை. தம் மகனை வாழ்த்தி ஆண்டகை அவர்களின் ஊழியத்திலேயே தொடர்ந்து இருக்குமாறு பணித்துவிட்டு விடை பெற்றாள்.

## ஆத்ம ஞானமெனும் சூஃபி வழிப்பாடங்கள் 25

( துன்பத்தில் பொறுமைப் பாடத்தை கற்ற சூஃபி மஹான்)



ஹிஜ்ரி 270ஆம் ஆண்டில் ஈரான் நாட்டு அரச குடும்பம் ஒன்றில் ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அதற்கு, அதன் பெற்றோர்கள் முஹம்மது என்னும் அழகுசால் திருப்பெயரிட்டு, அருமை பெருமையுடன் வளர்த்து வந்தார்கள். வயதேற ஏற அரண்மனை ராஜகுமாரன் மற்றும் அரசுத் துறையில் கவனம் செலுத்தாது ஆன்மீகத் துறையிலும் அதிக அக்கரை செலுத்தினார்கள்.

உலகக் கருவூலங்களின் திறவுகோலை நபி முஹம்மது முஸ்தபா ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களுக்கு இறைவன் அனுப்ப , " இறைவனே ! அவற்றை நான் விரும்பவில்லை .ஒரு நாளைக்கு எனக்கு உணவைத் தா ; அடுத்த நாளைக்கு என்னைப் பசித்திருக்கச் செய் " என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் விரும்பிய **#ஏழ்மை** இவர்களுக்கு பிடித்துப்போக அரச வாழ்வைத் துறந்து எளிய வாழ்க்கையை மேற்கொண்டார்கள்.

அவர்களுடைய துறவு நிலையோ மகோன்னதமாக இருந்தது.' ஒவ்வொரு நாளும் நோன்பு நோற்றார்கள். அவர்கள் தம் வாழ்நாளில் 40 நாட்கள் தொடர்ந்து நோன்பு நோற்றார்கள். இவ்வாறு 40 தடவை நோன்பு நோற்றுள்ளார்கள்.

இருபதாண்டு காலமாக ஒரே கம்பளி ஆடையையே அணிந்திருந்தார்கள். சூஃபியாகப் பல நாடுகளிலும் சுற்றுப் பயணம் செய்தார்கள்

எனவே " எளியவர் " என்று பொருள்படும் "அஃபீஃப் என்ற பெயர் இவருக்கு ஏற்பட்டது. நாளடைவில் " இப்னு அஃபீஃப் (ரஹ்) " என்றழைக்கப்பட்டார்கள்

அவர்கள், ஆன்மிகம் பற்றிய எல்லா நூல்களையும் கற்றுத் தேர்ந்தார்கள். பின்னர் பகுதாது சென்று ஹல்லாஜ், ஷிப்லி முதலான ஞானிகளையெல்லாம் கண்டு, அவர்களுடன் அளவளாவி மகிழ்ந்தார்கள்.

பின்னர் ஹஜ்ஜு செய்ய மக்கமா நகரம் சென்ற அவர்கள், தம் வாணாளில் ஆறு 'ஹஜ்'ஜுகள் வரை செய்தார்கள். .

ஒரு தடவை மக்கமாக நகர் நோக்கிப் புறப்பட்ட அவர்கள், வழியில் பகுதாது மாநகரம் வந்து சேர்ந்தார்கள். சில நாட்கள் அந்நகரில் தங்கி இருந்துவிட்டு, அவர்கள் மக்கமா நகரம் நோக்கிப் புறப்பட்டார்கள் .

பாலையில் நடந்து செல்லுங்கால், தாகவிடாய் அதிகரிக்கவே, எங்கேனும் தண்ணீர் கிடைக்கிறதா வென்று, வாளியையும் கயிற்றையும் எடுத்துக் கொண்டு அங்குமிங்கும் அலைந்து திரிந்தார்கள். இறுதியாக வெகு தொலைவில் ஒரு கிணற்றைக் கண்டு, அதை நோக்கி அவர்கள் நடந்து சென்றார்கள்.

அப்பொழுது அதன் விளிம்பின் மீது ஒரு மான் நின்று தண்ணீர் அருந்திச் செல்வதைக் கண்டனர். ஆனால் அவர்கள், அதன் விளிம்பை அண்மியதும், தண்ணீர் பாதாளத்திற்கு ஓடி விட்டதைக் கண்டார்கள். அது கண்டு அவர்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கும், ஏமாற்றத்திற்கும் அளவில்லை.

''இறைவனே! உன்னுடைய இந்த அடியான், இந்த மானை விட இழிந்தவனாக ஆகிவிட்டானா என்ன?' என்று அலறினார்கள்.

அப்பொழுது அசரீரியாக 'அந்த மான், வாளியும், கயிறும் கொண்டு வரவில்லையே. அது நம்மீது அல்லவோ முழு நம்பிக்கை வைத்திருந்தது'' என்று ஓர் ஒலி முழங்கியது.

அதனைச் செவியுற்றதும், இப்னு அஃபீஃப் (ரஹ்) அவர்கள், மகிழ்ச்சி மீக்குற்றவர்களாய் அந்த வாளியையும் கயிற்றையும் தூக்கி எறிந்து விட்டு, வந்த வழியே திரும்பிச் சென்று விட்டார்கள்.

அவர்கள் சில அடிகள் தாம் எடுத்து வைத்திருப்பர்கள். ''அல்லாஹ்வின் நல்லடியாரே! நாம் உம்மைச் சோதித்துப் பார்த்தோம். ஏழ்மையில் பொறுமையை மேற்கொண்ட நீர், துன்பத்திலும் பொறுமையை மேற்கொண்டீர். எனவே நீர் திரும்பிச் சென்று, நீர் அருந்தும்” என்று மீண்டும் அசரீரி முழங்குவதைச் செவியுற்றார்கள்.

இது அவர்களுக்கு முன்பை விடப் பன்மடங்கு மகிழ்ச்சியையும்

வியப்பையும் நல்கியது. அவர்கள் கிணற்றை நோக்கி அடியெடுத்து

வைத்து நடந்தார்கள்.

என்ன வியப்பு! அவர்களுடன் போட்டியிட்டுக் கொண்டு தண்ணீரும், அக்கிணற்றின் விளிம்பு வரைப் பொங்கி வந்தது. அதன் மீது குமிழிகள் நீந்தி விளையாடி மின்னியது.

இதன்பின் அத்தண்ணீரை அள்ளி அள்ளி வயிறார உண்டு தாகம் தீர்ந்தபின், அதைக் கொண்டு அவர்கள் உளூவும் செய்து கொண்டார்கள் இதன்பின் அவர்கள் மதீனா வந்து சேரும் வரையில், அவர்களுக்குத் தாகவிடாயே ஏற்படவில்லை.

## ஆத்ம ஞானமெனும் சூஃபி வழிப்பாடங்கள் 26
(கஃபாவினுள் அகமிய பாடங்கள் பயின்ற சூஃபி மஹான்)




ஹிஜ்ரி 598 -ல் முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்) அவர்கள் மக்காவில் தங்கியிருந்த பொழுது, பல அற்புதமான கனவுகளையும், காட்சிகைளயும் கண்டனர். ஓரிரவு அவர்கள் அயர்ந்து படுத்துறங்கும் பொழுது, கஃபா தங்கம், வெள்ளியால் ஆன பாளங்களால் கட்டப்பட்டிருப்பதாகக் கனவு கண்டனர்.
அதில் ருக்னெ யமனீக்கும், ருக்கென ஷாமீக்கும் இடையிலுள்ள சுவர்ப் பகுதியில், மேல் வரிசையில் ஒரு தங்கப்பாளமும், அதற்குக் கீழுள்ள வரிசையில் ஒரு வெள்ளிப் பாளமும் வைக்கப்படாது இருந்தன. வெள்ளிப் பாளம் வைக்கப்படா திருந்த இடத்தில் அவர்கள் தூக்கி வைக்கப்பட்டனர்.
விழித்தெழுந்த பொழுது அவர்களுக்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறிய பின்வரும் ஹதீது நினைவுக்கு வந்தது.
"செங்கல்லால் ஒரு சுவர் எழுப்பி, அதில் ஒரு செங்கல் மட்டும் வைக்கப்படாமல் விடப்பட்டுள்ளது என்று வைத்துக் கொள்ளுங்கள் அந்தச் செங்கல் தான் நான். எனக்குப் பின் எந்த நபியும் வரமாட்டார்." இந்த ஹத்து அவர்களுக்கு நினைவு வந்ததும்,
எவ்வாறு அண்ணல் நபி (ஸல்) அவர்கள், நபிமார்களுக்குத் தலைவராக இருக்கின்றார்களோ, அதே போன்று தாம் வலிமார்களுக்குத் தலைவராக ஆக்கப்பட்டதாக எண்ணி இறைவனுக்கு நன்றி செலுத்தினார்கள்.
மற்றொரு தடவை அவர்கள் கஃபாவைச் சுற்றி வரும் பொழுது அவர்களே போன்று ஒரு வானவரும், இளைஞனின் உருவில் அதனைச் சுற்றி வருவதைக் கண்டனர்.
எவ்வாறு தெய்வீகக் கருத்துக்கள், மார்க்க சட்டதிட்டங்கள் என்ற திரைக்குள் மறைந்து கிடக்கின்றனவோ, அதே போன்று கற்களால் நிர்மாணிக்கப்பட்ட கஃபாவிற்குள் மறைந்து நிற்கும் அகமியக் கஃபாவை வானவர் இளைஞர் முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்) அவர்களுக்குக் காட்டினார். அதனைக் கண்டதும் அவர்கள் மயங்கிக் கீழே விழுந்தார்கள்.

அவர்கள் மயக்கம் தெளிந்து உணர்வு பெற்றதும், அந்த இளைஞர் அவர்களை நோக்கி, 'நீர் கண்ட இரகசியங்களை எழுதுவீராக!" என்று பணித்தார். தனக்கு அகமிய ஞானப் பாடங்கள் அந்த வானவரால் கற்பிக்கப்பட்டதாக முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்) அவர்கள் உணர்ந்து கொண்டார்கள்
அதன்பின் அவ் இளைஞர், இப்னு அரபி (ரஹ்) அவர்களையும், அழைத்துக் கொண்டு, கஃபாவிற்குள் நுழைந்தார். அங்கு நின்ற மூன்று கால்களையுடைய குதிரையின் மீது அமர்ந்து, ( மூன்று கால் என்பது நம்மூர் ஆட்டோ மாதிரி இருக்கலாம்)
அவ் இளைஞர் அவர் இப்னு அரபி (ரஹ்) அவர்களுக்குக் காட்சி வழங்கினார். பின்னர் அவர், அவர்களின் உள்ளத்தில் அனைத்துப் பொருள்கள் பற்றிய அகமிய இரகசியங்களையும் ஊதி, அவற்றை மக்களுக்கு எடுத்துரைக்குமாறு மீண்டும் ஒரு முறை பணித்தார்.
அவ்வாறே "புத்தூஹாத்துல் மக்கிய்யா" (மக்காவின் வெளிப்பாடு) என்னும் பெயருடன் அவர்கள் ஒரு நூலை எழுதத் தொடங்கினர். அதன் முகவுரையை எழுதும் பொழுதே, அவர்களுக்கு மற்றொரு காட்சி தோற்றமளித்தது. அதனை அவர்கள் இதோ அந்நூலிலேயே எடுத்துரைக்கின்றார்கள்:
"நான் இந்த முகவுரையை எழுதும் பொழுது, மாபெரும் சந்நிதியின் முன் அண்ணலெம் பெருமான் (ஸல்) அவர்களைக் கண்டேன். அவ்விடத்தின் தலைவராக இருந்த அவர்கள், என்னை அன்போடு வரவேற்று, 'நம் இருவருக்கும் பொதுவான நற்பண்பு இதோ உள்ளது' என்று கூறினர். பின்னர் அந்தப் புனித மிகு இடத்தில் ஒரு மேடை நிறுவுமாறு பணிக்கப்பட்டது.

அந்த மேடையின் உச்சியில், 'இது 'மகாமெ மஹ்மூது என்னும் முஹம்மதுக்குரிய புனித இடமாகும். இதில் ஏறுகின்றவர் உண்மையின் பொறுப்பாளராக ஆவதுடன், ஷரீ அத்தின் பாதுகாவலராகவும் ஆகிவிடுவார்' என்னும் வாசகம் பெறிக்கப்பட்டிருந்தது.

அவ்விடத்தில் வைத்து எனக்கு எல்லாவிதமான அறிவுகளும் வழங்கப்பட்டன. சுருங்கக்கூறி விளங்க வைக்கும் ஆற்றலும், எனக்கு வழங்கப்பட்டது. நான் இறைவனுக்கு நன்றி கூற, அந்த மேடை மீது ஏறி மகாமெ மஹ்மூது வரை சென்றேன். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் திருப்பாதம் வைத்த இடத்தில், என் பாதங்கள் படாவண்ணம் அவ்விடத்தில் வெண்ணிறத் துணிகள் பல விரிக்கப்பட்டிருந்தன.''
இவ்வாறு எழுதிய இப்னு அரபி (ரஹ்) அவர்கள், இதன் பின் தமக்கும் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கும் இடையே நடந்த உரையாடலை விரிவாக எடுத்துரைக்கிறார்கள்.
பின்னர் அவர்கள் ஒரு தடவை அண்ணல் நபி (ஸல்) அவர்களைக் கனவில் கண்டனர். அப்பொழுது ஒருவர் அவர்களின் முன் ஸஹீஹ் புகாரியை ஓதிக் கொண்டிருக்கிறார்.
அவர் அதனை ஓதி முடித்ததும், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் 'இறைவனே! நல்லவற்றையே பார்க்கவும், கேட்கவும், எங்களைச் செய்வாயாக! எங்கள் மீது உன் மன்னிப்பைச் சொரிவாயாக! நன்மையில் எங்களின் இதயத்தை நிலை நிறுத்துவாயாக! நீ விரும்பும், நீ மகிழும் செயல்களில் எங்களை ஈடுபடுத்துவாயாக!" என்று இறைஞ்சினார்கள்.

## ஆத்ம ஞானமெனும் சூஃபி வழிப்பாடங்கள் 27

( அல்லாஹ்வின் திருச்சந்நிதானம் கொண்டு சேர்க்கும் பாடத்தை போதித்த சூஃபி மஹான் )



உதுமான் ஹாரூனி (ரஹ்) அவர்களின் கரம்பிடித்து தீட்சை பெற வந்ததாக முப்பத்திரண்டு வயதை எய்திய ஒருவர், அவர் வந்து 'ஸலாம் உரைத்து, தாள் மடித்து அமர்ந்தார்.
நாம் இதுகாறும் எதிர்பார்த்திருந்த அவர் தம் முன் வந்து அமர்ந்தது. கண்டு பெரிதும் மகிழ்வுற்ற அவர்கள், போய் இரண்டு ரகஅத் நஃபில் தொழுகை தொழுதுவிட்டு வாரும்!"உடனே அவரும் அவ்வாறே செய்தார். "நல்லது; கிப்லாவை முன்னோக்கிய வண்ணம் அமர்ந்து சூரா பகராவை ஓதும்' என்று அவர்கள் கூறினார்கள். அவ்வாறே ஓதினார்.
பின்னர் அவர்கள் அவரை நோக்கி அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மீது இருபத்தியொரு தடவை 'ஸலவாத் ஓதும்!" என்று சொன்னார்கள். அவ்விதமே அவர் செய்தார். பிறகு 'ஸுப்ஹானல்லாஹ்' என்னும் தஸ்பீஹை அறுபது தடவை ஓதுமாறு அவர்கள் பணிக்க அவ்வாறே அவர் செய்தார்.
உடனே உதுமான் ஹாரூனி (ரஹ்) அவர்கள் எழுந்து, அவரின் கையைப் பிடித்த வண்ணம், வானத்தை அண்ணாந்து பார்த்து, "வாரும் நான் உம்மை அல்லாஹ்வின் திருச்சந்நிதானம் வரைக்கும் கொண்டு போய் சேர்க்கிறேன்" என்று கூறினர்.
அதன்பின் அவர்கள், பக்கீர்கள் அணியும் நான்கு முனைகளுள்ள தொப்பியை அவரின் தலையில் சூட்டி, போர்வை ஒன்றால் அவரைப் போர்த்திக் கீழே அமருமாறு கூறினர். அவ்விதமே அவர் அமர்ந்தார்.

அப்பொழுது அவர்கள் அவரை நோக்கி, "நம்முடைய தரீக்காவில் முதன் முதலாகப் புகுகின்றவர்கள், ஓரிரவு ஒரு பகல் துறவு நிலையை மேற்கொள்ள வேண்டும். நீரும் அவ்விதமே செய்து விட்டு நாளை வாரும்!" என்று கூறினர். அவ்வாறே செய்து விட்டு, அடுத்த நாள் அவர் அவர்களை அடைந்த பொழுது, "சூரா இக்லாஸை நாலாயிரம் தடவை ஓதும் ! " என்று பணித்தனர். அவர் அவ்விதமே ஓதி முடித்ததும், வானத்தை பார்க்குமாறு கூறினர். அவ்வாறே அவர் அண்ணாந்து பார்த்த பொழுது "எது வரையில் தெரிகிறது?" என்று அவர்கள் வினவினார்கள் "அர்ஷ் வரை'' என்றார்
அவர். பின்னர் அவர்கள் அவரை நோக்கி "கீழே பாரும்!" என்றனர். அவ்விதமே அவர் பார்க்க, " எதுவரையில் தெரிகிறது?" என்று அவர்கள் வினவினர்.''அதள பாதாளம் (தஹ்தஸ்ஸரா) வரை" என்றார்
நல்லது நீர் இப்பொழுது சூரா இக்லாஸை மீண்டும் ஆயிரம் முறை ஓத வேண்டும்!" என்று பணித்தார்கள். அவ்வாறே அவர்கள் ஓதி முடி அதும் அவர்கள் அவரை நோக்கி வானத்தை மீண்டும் அண்ணாந்து பார்க்குமாறு கூறினார்கள்.
அவ்வாறே அவர் பார்த்த பொழுது. இப்பொழுது எது வரை தெரிகிறது?" என்று வினவினார்கள் அவர்கள். "மாண்பார்ந்த திரை வரை" என்று பதிலிறுத்தார்.
"கண்களை மூடும்!" என்றார்கள் அவர்கள். கண்களை அவர் மூடினார். இப்பொழுது திறவும்.'' என்றார்கள் அவர்கள். திறந்தார் அவர். தங்களின் இரு விரல்களையும் காட்டி, "இப்பொழுது உமக்கு என்ன தெரிகிறது?" என்று அவர்கள் அவரை வினவினார்கள்.
"பதினொண்ணாயிரம் கிரகங்களையும் நான் காண்கிறேன்" என்று அவர் பதில் கூறினார். இதைக் கேட்டதும் அவர்கள் மகிழ்வுற்று, "இப்பொழுது உம் அலுவல் முடிந்து விட்டது" என்று கூறி...
சற்றுத் தொலைவிலிருந்த ஒரு செங்கல்லைத் தூக்குமாறு அவரைப் பணித்தார்கள். அவ்வாறே அவர் செய்தபோது, அதன் கீழே பல பொற்காசுகள் மின்னின. அவற்றை எடுத்துச் சென்று ஏழைகளுக்கு தர்மம் செய்துவிட்டு வாரும்!'' என்று கூறினார்கள்.
அவ்விதமே அவர் செய்து விட்டு வந்த பொழுது. "நம்முடன் சில காலம் இரும் என்று பணித்தார்கள். "தங்களின் பணி, தலைமேற் கொண்டேன் என்றார் அவர்.
அந்த 'அவர்' யார்? அவரே காஜா முயீனுத்தீன் சிஷ்தி (ரஹ்) அவர்கள்,
இதன் பின் காஜா முயீனுத்தீன் சிஷ்தி (ரஹ்) அவர்கள், உதுமான் ஹாரூனி (ரஹ்) அவர்களின் ஊழியத்தில் ஒரு நாளல்ல, இரண்டு நாட்களல்ல, இருபது ஆண்டுகள் இருந்தார்கள்.

## ஆத்ம ஞானமெனும் சூஃபி வழிப்பாடங்கள் 28

( ஆன்மிக பாடமும், கிடைத்த பட்டங்களும் )



குவாரிஸ்மிலுள்ள கிவாக் என்ற ஊரில் ஹிஜ்ரி 540 ஷைகு நஜ்முத்தீன் குப்ரா (ரஹ்) பிறந்தார்கள்.மிகச் சிறந்த சொற் செல்வராக இருந்தார்கள்.
மணிக்கணக்காக எதிரி பேசிக்கொண்டே சென்று தன் வாதத்தை முடிப்பார். அதன் பின் இவர்கள் எழுந்து சென்று, ஒரு சில நிமிடங்கள்தான் ஓரிரு வார்த்தைகள்தான் பேசுவர். எதிரியின் சொற்கோபுரம் தவிடு பொடியாகி துகள் துகளாகச் சிதறிவிடும்.
எனவே, அவர்களுடன் வாதம் செய்ய இயலாது,அவர்களின் நண்பர்கள் எல்லாம் வெருண்டோடுவர். எனவே அவர்களை அவர்கள் அல் தாம்மத்துல் குப்ரா என்னும் பட்டப் பெயரால் அழைத்தனர். இதன் பொருள் "மாபெரும் பீடை" என்பதாகும். ஆம் அவர்களுக்கு அவர்கள் பெரும் பீடையாக, அவர்களின் வாதங்களையெல்லாம் மாய்தொழிக்கும் பீடையாகத் தான் இருந்தார்கள்.

ஆனால் பின்னர் ஷைகு அபுந் நஜீப் சுஹ்ரவர்தி (ரஹ்) அவர்களின் தாள் அமர்ந்து அவர்களின் அன்பிற்குரிய ஆன்மீக மாணவராக இருந்தபொழுது , அவர்கள் தம் மாணவரை 'ஷைகுல் ஃபிர்தௌஸ்' (சுவனத்தில் தலைவர்) என்று அழைத்தார்கள். அதன் காரணமாக அவர்களின் பள்ளித் தோழர்களெல்லாம் அவர்களை, ஃபிர்தௌஸி என்று அழைக்காலானார்கள்.

இதன்பின் அவர்கள் ஆன்மீகத்தில் மிகவும் பெரிய படித்தரத்தை அடைந்த பொழுது, மக்கள் அவர்களை 'வலி தராஷ்' (இறைநேசர் செல்வர்களை உண்டுபண்ணுபவர்) என்று அழைத்தார்கள்.
இவ்வாறு நண்பர்களால் 'அல் தாம்மத்துல் குப்ரா' என்றும் ஆசிரியரால் ஷைகுல் ஃபிர்தௌஸ்' என்றும், சக மாணவர்களால் ஃபிர்தௌஸ் என்றும் உலக மக்களால் "வலீ தராஷ்" என்றும் அழைக்கப்பட்ட அவர்களுக்கு அவர்களின் தந்தை உமர் சூட்டிய பெயரோ அஹமது என்பதாகும்.
பிற்காலத்தில் அவர்கள் மார்க்கத்தின் மிகப்பெரிய விண்மீன் போன்று ஒளி வீசியதன் காரணமாக அவர்கள் " நஜ்முத்தீன் குப்ரா " என்று அழைக்கப் பெரும் பேறு பெற்றார்கள்.
எகிப்தில் புகழுடன் வாழ்ந்து வந்த ஷைகு ரூஸ்பி ஹான் அல் வஸ்ஸான் அல் மிஸ்ரியின் தவமடம் சென்று, அவர்களின் முன் தாள் மடித்து அமர்ந்து, தம்மையும் அவர்களின் மாணவர் குழுவில் ஒருவராகச் சேர்த்துக் கொள்ளுமாறு வேண்டினர்.

அவர்களின் முகத்தோற்றத்தையும், அடக்க உணர்வையும், ஆழ்ந்த அறிவு ஞானத்தையும் கண்ட அப்பெரியார், அவர்களைத் தம் மாணவராக ஏற்றுக் கல்வி போதித்து வந்தனர்.
இவ்வாறு தொடங்கிய குரு -சீடர் தொடர்பு விரைவில் மாமனார் - மருகர் தொடர்பாக மாறியது. அவர்களின் அறிவுக் கூர்மையையும், அரிய நற்பண்புகளையும் கண்ட அப்பெரியார், அவர்களுக்குத் தம் அருமை மகளை மணமுடித்து வைத்து மகிழ்ந்தனர்.
இதன்பின் அவர்கள் தப்ரீஸில் வாழ்ந்து வந்த இமாம் அப்துந் நஸர் ஹஃப்தாவின் மார்க்கச் சொற்பொழிவுகளைப் பற்றிக் கேள்வியுற்று அவர்களிடம் சென்று, ஃபிக்ஹுக் கலையைப் பயின்றனர்.
அதில் பெரிதும் தேர்ச்சியுற்ற அவர்கள், மார்க்கத்தின் பல்வேறு சட்டதிட்டங்கள் பற்றிப் பெரிதும் ஆய்வு நிகழ்த்தி, 'ஸரஹுல் ஸுன்னா வல் மஸாலீஹ்' என்னும் பெயருடன் ஒரு நூல் எழுதினர். அதில் அவர்கள் கூறிய பல கருத்துக்கள் மக்களிடையே பெரும் அறிவு தாக்கத்தையும், தர்க்க வாதங்களையும் கிளப்பிவிட்டன.
இச் சமயத்தில் அவர்கள், ஷைகு பாபா ஃபரஜ் என்னும் சூஃபியைச் சந்தித்தனர். நஜ்முத்தீன் குப்ரா அவர்களின் ஆழிய அறிவையும், மார்க்க பக்தியையும் கண்ட அந்த ஷைகு, அவர்களை சூஃபிகளின் பாட்டையில் வஹ்ததுல் வுஜூத் என்னும் இறைஞானம் பக்கம்
திருப்பிவிட்டனர்.
இதன்பின் ஷைகு அபுந் நஜீப் சுஹ்ரவர்தீ (ரஹ்) அவர்களை அடைந்து, அவர்களிடம் சுஹ்ரவர்தியா தரீக்காவில் தீட்சையும் கிலாஃபத் பதவியும் பெற்றனர்.

நஜ்முத்தீன் குப்ரா அவர்களின் தாயகமான குவாரிஸ்ம் திரும்பி, அங்கு ஒரு தரீக்காவைத் துவங்கினர். அதுவே இன்று
குப்ரவிய்யா அல்லது தஹபிய்யா அல்லது ஃபிர்தௌஸிய்யா என்று அழைக்கப்படுகிறது.
அவர்கள் ஆன்மீகத்தில் அடைந்த உச்சநிலையும், அவர்கள் ஆற்றிய அற்புதங்களும், மக்களைப் பெரிதும் கவர்ந்து நின்றன.
'ஏக் ஸமானா ஸுஹ்பத்தெ பாஅவ்லியா
பெஹத்த ரஸ் ஸத்ஸாலதா அத் பேரியா '
என்று ஃபார்ஸியில் ஒரு கவிதை உண்டு. அதன் பொருள், "வலிமார்களுடன் சிறிது காலம் தொடர்பு கொண்டிருப்பது, நூறாண்டு வெறுமனே வணக்கம் செய்வதை விட மேலானதாகும்" என்பதாகும்.
இந்த அடிகளில் கூறப்பட்டிருக்கும் கருத்துக்கு, அவர்கள் முற்றிலும் பாத்திரமானவர்களாக இருந்தனர். அவர்களுடன்

தங்கியிருந்தவர்கள் மட்டுமின்றி, அவர்கள் 'ஜத்பு' நிலையில் இருக்கும்பொழுது, அவர்களின் கடைக்கண் பார்வை பெற்றவர் கூட விலாயத்தை எய்தப் பெற்றார்கள். இதன் காரணமாகவே அவர்களுக்கு 'வலிமார்களை உண்டு பண்ணுபவர்கள்' என்று பொருள்படும், 'ஷைகுல் வலீ தராஷ்' என்ற பட்டமும் ஏற்பட்டிருந்தது.
அவர்கள் தம்மை மறந்த 'ஜத்பு' நிலையில் கொந்தளிக்கும்பொழுது, அவர்கள் கடைக் கண் பார்வைப்பட்ட மனிதர்கள் மட்டுமல்லாது, மிருகங்கள் கூட விசேடத் தன்மையைப் பெற்றன. ஒரு நாள் அவர்கள் தம்மை இறைவனளவிலே அழித்துக் கொண்டு தன்னுணர்வற்ற நிலையில், தம் தவமடத்தில் அங்குமிங்கும் நடந்து கொண்டிருந்தார்கள்.

திடீரென அவர்கள், தம் தவமடத்தின் வாயிலில் நின்று தெருவைப் பாத்தார்கள். அப்பொழுது தெருவிலே ஓடிக் கொண்டிருந்த ஒரு நாயின் மீது அவர்களின் பார்வைபட்டது. அவ்வளவு தான், அந்த நாய்க்கு ஒருவித மயக்க நிலை ஏற்பட்டது. அதன்பின் அதனுடைய போக்கே மாறி விட்டது. மஸ்துப் பிடித்தது போன்று அது, தன்னிலை மறந்து நடந்து சென்றது.

அதைக் கண்ட மற்ற நாய்களெல்லாம் குரைக்காது, அதன் முன் மரியாதையுடன் வந்து தங்களின் முன்னங்கால்களை, அதன் முன்னங்கால்களின் மீது வைத்து 'பை அத்' செய்வது போன்று செய்து, அதனைச் சூழச் சற்றுத் தொலைவில் பணிவுடன் நின்றன. சில நாட்களுக்குப் பின் அந்நாய் இறந்துவிட்டது. அதனை அறிந்த அவர்கள், அதை எடுத்துப் புதைத்து விடுமாறு தம் சீடர்களுக்குப் பணிந்தார்கள்.
அவர்கள் தம் தவமடத்தில் அமர்ந்து தம் சீடர்களுக்கு ஆன்மீகப் பயிற்சியளித்துக் கொண்டிருக்கும் பொழுது தான், காஜா முயீனுத்தீன் சிஷ்தி (ரஹ்) அவர்கள், அம்மேதகையின் மாண்பினைப்பற்றிக் கேள்வியுற்று சஞ்சர் வந்து ஞான சந்திப்பை பெற்றுக் கொண்டார்கள்.
அவர்களின் மாண்பை பற்றி கேள்வியுற்று மஜ்துத்தீன் பக்தாதியும் சஞ்சர் வந்து அவர்களின் ஆன்மீக மாணவரானார் . அவரே ஃபரீதுத்தீன் அத்தாரின் ஞானாசிரியராவர் என்பது இங்கு குறிபிடத்தக்கது.

## ஆத்ம ஞானமெனும் சூஃபி வழிப்பாடங்கள் 29

( ஜின் அரசனுக்கும், காஜிக்கும் பாடம் புகட்டிய சூஃபி மஹான் )



சிந்தா ஷாஹ் மதார் (ரஹ்) ஆண்டகை அவர்கள் குராஸானை விட்டு வெளியேறி சீடர்கள் புடைசூழ நடந்து வந்து, அங்கு ஓரிடத்தில் தங்கி இரவில் இறை வணக்கத்தில் ஈடுபட்டிருந்தனர்.
அப்பொழுது அங்கு வாழ்ந்து வந்த ஜின்களின் அரசர், இமாதுல் முல்க் ஆண்டகை அவர்களின் மாண்பினை அறிந்து, அவர்களின் திருமுன் மரியாதையுடன் வந்து நின்று வலம் கூறி, ''ஆண்டகையீர்! இந்த பக்கீரையும் தங்களைப் போன்ற இறைநேசச் செல்வராக்குவது தங்களுக்கு இயலாத செயலல்ல" என்று மிகவும் வினயமாக எடுத்துரைத்தார்.
அதற்கு ஆண்டகை அவர்கள், "வலா துஹிப்புத் துன்யா பதகூனூ மினல் காஸிரீன்'' (நீங்கள் உலகை நேசித்து நஷ்டவாளர்களாக ஆகிட வேண்டாம்) என்று கூறினர்.
அதுகேட்டு அவர் நடுக்கம் கொண்டவராய், ''ஆண்டகையில் தாங்கள் கூறுவது முழுக்க முழுக்க உண்மை என்பதில் ஐயமில்லை.
எனினும் நான் என் செய்வேன்? நான் உலக ஆசாபாசங்களில் மூழ்கி, அதிலிருந்து வெளியேற இயலா வண்ணம் மயக்குற்று உள்ளேனே" என்று அழுங்குரலில் கூறினார்.

அப்பொழுது ஆண்டகை அவர்கள் அவரை நோக்கி, "வல்லாஹுு காலிபுன் அலா குல்லி காலிபின்'" (அல்லாஹ் மிகைக்கிறவன்; அனைத்தையும் மிகைத்து ஆளுகிறவன்) என்று கூறினர்.
அதற்கு அவர், "நான் மறதியில் சிக்குண்டவனாக உள்ளேனே. என் செய்வேன்?" என்று கூறித் தம் ஆற்றாமையை வெளியிட்டார்.
அப்பொழுது ஆண்டகை அவர்கள் அவரை நோக்கி, 'வலா தக்னத்தூ மின் ரஹ்மத்தில்லாஹி ஃப இன்னஹுுஅர் ஹமுர் ராஹிமீன்" (நீங்கள் இறைவனின் பேரருளில் அவ நம்பிக்கை கொண்டு விட வேண்டாம்! அவன் அருளாளர்களிலெல்லாம் அருளாளன்) என்று கூறினர்.
அதற்கு அவர், "என் அரசும், அதற்கான பொறுப்பும் என்னைச் சூழ்ந்து வளைந்து கொண்டுள்ளனவே. அவற்றை விட்டும் அப்புறப்பட என்னால் இயலவில்லையே. இந்நிலையில் நான் என் செய்வேன்?'' என்று கூறி அழுதார்.
அப்பொழுது ஆண்டகை அவர்கள் அவரை நோக்கி, "கைருல் கினா கினன்னஃப்ஸி, வ கைருஸ் ஸாதித் தக்வா" (சீமான் தனத்தில் மேலானது, ஒருவன் தன் நஃப்ஸை அதன் போக்கில் போகவிடாது தடுத்து நிறுத்துவதும், நீண்ட வழிப் பயணத்திற்காக தக்வா (பயபக்தி) என்ற தங்கரிப்பைச் செய்து கொள்வதுமேயாகும்) என்று கூறினர்.
ஆண்டகை அவர்களின் இவ்விறுதிச் சொல் அவருக்கு அறிவுத் தெளிவை அளித்தது. ஆண்டகை அவர்களிடம் விடைபெற்றுச் சென்ற அவர், தம் மகளுக்கு முடிசூட்டி, அவளிடம் அரசை ஒப்படைத்து விட்டு, ஆண்டகை அவர்களிடம் மீண்டும் வந்து, அவர்களிடம் தீட்சை பெற்று அவர்களின் ஊழியத்தில் சேர்ந்து விட்டார்.

பின்னர் ஆண்டகை அவர்கள் மாவராவுன் நகர் என்ற ஊரை அடைந்த பொழுது, அங்கு காஜியாகப் பணியாற்றி வந்த மள்ஹர் என்பவர், ஆண்டகை அவர்களை வந்து சந்தித்து அவர்களுடன் பல்வேறு விஷயங்கள் பற்றி வாக்கு வாதம் செய்தார்.

அவர்களின் கேள்விகளுக் கெல்லாம் ஆண்டகை அவர்கள் சரியாக பதில் கொடுத்தனர். இறுதியாக அவர் ஆண்டகை அவர்களை நோக்கி, "அண்ணல் நபி (ஸல்) அவர்கள் 'திருமணம் செய்து கொள்வது என் வழி முறை (சுன்னத்)' என்று கூறியிருக்க. தாங்கள் திருமணம் செய்து கொள்ளாதது ஏன்? மேலும் தாங்கள் உணவுண்ணாத காரணம் என்ன?" என்று வினவினார்.
அதற்கு ஆண்டகை அவர்கள், 'அத்துன்யா யவ்முன்லீ வ அன ஃபீஹா ஸாயிமுன்' (இவ் உலக வாழ்வு எனக்கு ஒரு நாள் வாழ்வாகவே உள்ளது. அதில் நான் நோன்பு நோற்றவனாக உள்ளேன்) என்று பதிலிறுத்தார்கள்.
இந்த ஒரு பதில் மூலமாக அவர்கள் அவரின் இரு கேள்விகளுக்கும் பதிலளித்துவிட்டார்கள். எவ்வாறெனின்,

நோன்பில் மூன்று செயல்கள் கடமையாக (ஃபர்ளாக) உள்ளன. அவை:
(1) நோன்பு நோற்பதாக நிர்ணயம் கொள்ளுதல்,
(2) உண்ணவோ, அருந்தவோ செய்யாதிருத்தல்,
(3) மனைவியை மருவாதிருத்தல்.
எனவே உலக வாழ்வையே அவர்கள் நோன்பாகக் கொள்ளும் பொழுது, அவர்களுக்கு உண்பதும். அருந்துவதும், மணமுடித்து மனைவியை மருவுவதும் ஆகாததாகி விடுகிறது.
ஆண்டகை அவர்களின் இப்பதில், காஜி மன்ஹறரைப் பெரிதும் வியப்படையச் செய்தது. அடுத்த கணம் அவர் ஆண்டகை அவர்களின் கரம் பற்றி தீட்சை பெற்றார்

## ஆத்ம ஞானமெனும் சூஃபி வழிப்பாடங்கள் 30

(ஹதீதுகளை மனப்பாடம் செய்து ஹதீதுக் கலையை பயன்படுத்திய சூஃபி மஹான்)



மன்னாதி மன்னர்களும் தகிய்யுத்தீன் முஹம்மது இப்னு அஹ்மது அல் யூனீனி (ரஹ்) அவர்களுக்கு அளவற்ற மரியாதை செய்தார்கள். அவர்களின் தரிசனத்திற்காக மகுடாதிபதிகள் அவர்களின் தவமடத்தின் வாசலில் காத்துக் கிடந்தார்கள்.
திமிஷ்கின் மாமன்னர் அல் மாலிக் அல் ஆதியின் திருமகன், அல் மாலிக் அல் அஷ்ரஃப், அவர்களுக்கு அளவற்ற மரியாதை செலுத்தினார்.
ஒரு தடவை அவர்கள் 'உளுச் செய்து விட்டு தரையில் வெறுங்காலுடன் நடந்து வரத் தயங்கி நின்ற பொழுது, அங்கு வந்த அவ் இளவரசர் உடனே தம் தலைப்பாகையைக் கழற்றி விரித்து, "இது தூய்மையானது, இதன் மீது நடந்து வாருங்கள்!" என்று அன்பும் பக்தியும் ததும்பக் கூறினார்.
அவர் மட்டும் இவ்வாறு செய்யவில்லை. முன்னர் திமிஷ்கை ஆண்ட அல் மலிக் அல் ஸாலிஹ் இஸ்மாயீலும் இவ்வாறே அவர்களுக்கு மரியாதை செய்தார். இவ்வளவுக்கும் அவர்கள் ஓர் அகிலமாளும் பேரரசர் அல்லர். ஆனால் ஆன்மீகப் பேரரசர்.

மார்க்கச் சட்டதிட்டங்களைக் கற்றுத் தேர்ந்த முஹம்மது (ரஹ்) அவர்கள் ஹதீதுக் கலையைப் படிக்க விரும்பி, ஹாஃபிஸ் அப்துல் கனி அவர்களை அணுகி, அவர்களின் காலடியில் அமர்ந்து அதனைக் கற்றனர்.
ஆசிரியர், அவர்கள் மீது கொண்டிருந்த மதிப்போ அளப்பரியதாக இருந்தது. எவரும் அவரிடம் வந்து ஹதீது பற்றி ஏதேனும் கேள்வி கேட்பின், உடனே அவர் தம் மாணவர் தகிய்யுத்தீன் முஹம்மது (ரஹ்) அவர்களின் பக்கல் திரும்பி, ''இது பற்றி நீர் என்ன கூறுகிறீர்?" என்று வினவுவர். உடனே அவர்கள் அதற்கான விடையைக் கூறுவர்.

அப்பொழுது ஆசிரியர் முகத்திலே புன்முறுவல் தவழ, கேள்வி கேட்டவரை நோக்கி, "இது தான் நீர் கேட்டதற்கான சரியான விடை" என்று கூறுவர்.

ஹத்துக் கலையில் தம் காலத்தில், தமக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லை எனும்படிச் சிறந்து விளங்கிய அவர்கள், ஹுமைதீ தொகுத்த ஸஹீஹ் புகாரீ, ஸஹீஹ் முஸ்லிம் ஆகிய இரண்டு உண்மையான ஹதீது நூல்களையும் மனனமாக்கி இருந்தார்கள்.
இவற்றை வேண்டும் பொழுது மள மள வென்று ஒப்புவிப்பார்கள். இவற்றைத் தவிர்த்து அஹ்மது இப்னு ஹம்பல் (ரஹ்) அவர்களின் 'முஸ்னத்' என்னும் ஹதீதுத் திரட்டிலும் பெரும்பாலான பகுதி அவர்களுக்கு மனனம்.
அவர்களுக்கு அபார நினைவாற்றல் இருந்தது. அதன் காரணமாக அவர்கள் ஒரே இருப்பில் அமர்ந்து, எழுபது ஹதீதுகளை மனனமாக்கி விடுவர். சூரா அன்ஆமை ஒரே நாளிலும் ஹரீரி எழுதிய 'மகாமா'வை அரை நாளிலும், ஸஹீஹ் முஸ்லிமை நான்கு மாதங்களிலும் அவர்கள் மனனமாக்கினர்.
ஷாம் தேசத்திலுள்ள பால்பக் என்னும் மாநிலத்தின் ஆளுநராக, ஐம்பதாண்டுகளாக இருந்து ஆட்சி செய்து வந்தார் மலிக் அல் அம்ஜத். அப்பொழுது எகிப்து நாட்டு அமைச்சர் மாவாரின் உறவினர் என்று கூறிக் கொண்டு ஒருவர் அவரிடம் வந்து, வேலை வேண்டிய பொழுது, வாரிசின்றி இறப்பவரின் சொத்துக்களைப் பரிபாலிக்கும் வாரியத்தின் தலைவராக அவரை நியமித்தார் மலிக் அல் அம்ஜத்.
ஒரு தடவை மலிக் அல் அம்ஜத் வெளியூர் சென்றிருந்த பொழுது, ஒருவர் இறக்கவே, அவருக்கு வாரிசில்லை என்று கூறி, அவரின் சொத்துக்களைக் கைப்பற்றி அரசாங்க உடைமையாக ஆக்கிக் கொண்டார் புதிய வாரியத் தலைவர்.
இதனை அறிந்த மாபெரும் வலி ஷைகு தகிய்யுத்தீன் முஹம்மது இப்னு அஹ்மது அல் யூனீனி ஆண்டகை அவர்கள் அந்தப் புதிய வாரியத் தலைவரை அழைத்து வரச் செய்து, இறந்தவருக்குப் பல வாரிசுகள் இருக்கிறார்களென்றும், அவர்களைத் தமக்கு நீண்ட காலமாக நன்கு தெரியுமென்றும், எனவே இறந்தவரின் சொத்துக்களை அவர்களிடமே ஒப்படைக்க வேண்டுமென்றும் பெரிதும் இதமாக எடுத்துரைத்தனர்.
அதற்கு அவர், "இறந்தவர் எவராயிருந்த போதினும், அவரின் சொத்துக்களைக் கைப்பற்றி அரசாங்க உடைமையாக்க வேண்டுமென்று ஆளுநர் எனக்கு ஆணையிட்டுச் சென்றுள்ளார். ஆதலின் அவரின் ஆணையை நான் அணுவத்தனையும் தவறாது செயலாற்றுவேன்" என்று கூறினார்.
அதற்கு ஆண்டகை அவர்கள், "இதுவென்ன அநியாயமாக இருக்கிறது. வாரிசின்றி இறப்பவரின் சொத்துக்களை அரசாங்க உடைமையாக்குவது தானே முறை. இப்பொழுது இறந்தவருக்கு வாரிசுகள் இருக்கிறார்களே என்று கூறினர்.
அதற்கு அவர், அதுவெல்லாம் எனக்குத் தெரியாது. இறந்தவரின் சொத்துக்களைக் கைப்பற்றி, அரசாங்க உடைமையாக்குமாறு ஆளுநர் எனக்குக் கண்டிப்பான ஆணைப்பிறப்பித்துச் சென்றுள்ளார். அதனை நிறைவேற்றுவது தான் என்னுடைய கடமை" என்று இறுமாப்புடன் கூறினார்.
அதுகேட்டு ஆண்டகை அவர்களுக்குக் கடும் சினம் ஏற்பட்டது. எழுந்து சொல்! இங்கு இருக்காதே! அல்லாஹ் உன்னுடையவும், உன் ஆளுநருடையவும் கைகளைத் துண்டிப்பானாக!" என்று முனிந்தனர்.
இதன்பின் சில நாட்கள் தாம் ஆயின. பால்பக் திரும்பிய ஆளுநர் மலிக் அல் அம்ஜத், வாரியத் தலைவரைப் பதவியிலிருந்து நீக்கினார். பதவி நீக்கம் பெற்று, திமிஷ்க் சென்ற அவர் முக்கியமான பத்திரம் ஒன்றில் பொய்க் கையெழுத்திட்ட குற்றம் சாட்டப்பட்டு கை துண்டிக்கப்பட்டார்.
மலிக் அல் அம்ஜதின் நிலையும், பரிதாபத்திற்கிடமாகியது. ஹிஜ்ரி 628 ஆம் ஆண்டில், திமிஷ்க் மன்னர் மலிக் அல் அஷ்ரஃப், அவரை ஆளுநர் பதவியிலிருந்து நீக்கினார். இதன் பின் அவர் திமிஷ்க் சென்று, அங்கிருந்த தம் 'இன்பமாளிகை'யில் வாழ்ந்து கொண்டிருக்கும் பொழுது, அது அவருக்குத் துன்ப மாளிகையாக ஆகிவிட்டது. ஒருநாள் அவரின் அடிமை ஒருவன் அவரை வாளினால் வெட்டி, அவரின் கை புயத்தைச் சரித்தான். அதன்பின் அவன் அவரை மீண்டும் வாளினால் வெட்ட, அதன் காரணமாக அவர் இரண்டு நாட்கள் கழித்து உயிர் நீத்தார்.

**சிரம் பணிதல் (ஸுஜூது என்னும் ஸஜ்தா) 1**



اِنَّ الَّذِيْنَ عِنْدَ رَبِّكَ لَا يَسْتَكْبِرُوْنَ عَنْ عِبَادَتِهٖ وَيُسَبِّحُوْنَهٗ وَلَهٗ يَسْجُدُوْنَ۩

நிச்சயமாக எவர்கள் உமது இறைவனிடத்தில் (மிக நெருங்கி) இருக்கிறார்களோ; அவர்கள் நிச்சயமாக பெருமை கொண்டு அவனை வணங்காமல் இருப்பதில்லை. மேலும் அவனுடைய (புகழைக் கூறித்) துதித்துகொண்டும், அவனுக்குச் சிரவணக்கம் (ஸுஜூது என்னும் ஸஜ்தா) செய்து கொண்டும் இருக்கின்றனர்.
(குர்ஆன் : 7:206)
குர்ஆனில் 14 ஸஜ்தா வசனங்களில் இது முதல் வசனமாகும். இதே சூராவில் இது கடைசி வசனமாகும்
"ஸஜ்தா " என்பது மனிதன் தன் தலையில் அகந்தை பெருமை தலைக்கணம் இறுமாப்பு இவைகளெல்லாம் இருந்தாலும் தன்னைப் படைத்த இரட்சகனிடத்தில் மன்றாடும்போது, பூமியில் தன் தலையை வைக்கும்போது இவைகள் எல்லாம் அற்றுப் போய் இறை நெருக்கம் கிடைக்கிறது என்பதாக இறை பெரியவர்கள் குறிப்பிடுகின்றனர்
நிச்சயமாக எவர்கள் உம்முடைய இரட்சகனிடத்தில் மிக நெருக்கமாக இருக்கின்றார்களோ அவர்கள்தாம் மலக்குகள், வானவர்கள்: அவர்கள் பாவங்களிலிருந்து பரிசுத்தமானவர்கள்; மிக உயர்த்த பதவிகளைப் பெற்றவர்கள். அப்படியிருந்தும் அவர்கள் அவனை வணங்குவதை விட்டும், அவனுக்குக் கீழ்ப்படிவதை விட்டும் அவர்கள் இறுமாப்பு அடைவதில்லை. எப்பொழுதும் அவனை வணங்கிக் கொண்டிருக்கின்றனர்.
"நீ எங்களுடைய இரட்சகன்; எத்தகைய குறையும், குற்றமும் அற்ற தூய்மையானவன் ! என அவர்கள் அவனைத் தூய்மைப்படுத்துகிறார்கள். அவனுக்கே சிரம் பணிந்து ஸுஜூது செய்து கொண்டிருக்கிறார்கள். அவனைத் தவிர வேறு எதற்கும் அவர்கள் 'ஸுஜூது' செய்வதில்லை என்பது இவ்வசனத்தின் கருத்தாகும்.
இத்தகைய நிலை மனிதர்களிடம் ஏற்படும்போது அவர்களும் இறைவனுக்கு மிக நெருக்கமான அடியார்களாக ஆகிவிடுகின்றனர்
ஆனால் மலக்குகளோ உலக ஈடுபாடுகள், தொழில் துறைகள் எதுவும் அற்றவர்கள். எப்போதும் அவர்கள் அல்லாஹ்வின் கட்டளைகளை நிறைவேற்றிக்கொண்டும். அவனைத் தூய்மைப்படுத்திக் கொண்டுமிருப்பதைத் தவிர அவர்களுக்கு வேறு எந்த வேலையும் இல்லை.
ஆனால் மனிதன் அப்படியல்ல. உலக ஈடுபாடு கொண்டவன். பலவிதமான பராக்குகளில் மூழ்கியவன். அந்த நிலையிலும் அவற்றைப் பொருட்படுத்தாமல் அல்லாஹ்வை முறைப்படி குறிப்பிட்ட நேரங்களில் வணங்குவதிலும். அவனைத் தூய்மைப்படுத்துவதிலும், அவனுக்குச் சிரம் பணிந்து ஸுஜுது செய்வதிலும் தன்னை அர்ப்பணித்துக் கொண்டானானால் அவன் மலக்கையும் விடவும் அல்லாஹ்விற்கு மிக உகந்தவனாக ஆகிவிடுகின்றாள்.

வணக்கங்கள் இரு வகைப்படுகின்றன.
1. இதயங்களின் வணக்கம்.
2. உறுப்புகளின் வணக்கம்.
இவ்விரு வணக்கங்களும் இந்த வசனத்தில் கூறப்படுகின்றன.
இதயங்களின் வணக்கம் என்பது, இறைவனைக் குறையற்றவன் எனப் பரிசுத்தப்படுத்தும் 'தஸ்பீஹ்', 'திக்ரு' மூலம் நிறைவேறுகிறது. இதைக் குறித்தே. அவர்கள் அவனைத் தூய்மைப்படுத்துகிறார்கள் எனக் கூறப்படுகிறது.
உறுப்புக்களின் வணக்கம் என்பது, சிரம் பணிந்து ஸுஜுது செய்தல், தொழுகையை நிறைவேற்றுதல் மூலம் நிறைவு பெறுகின்றது. இதனைக் குறித்தே. அவனுக்கே சிரம் பணிந்து வணங்கிக் கொண்டிருக்கின்றனர் என இவ்வசனத்தில் கூறப்படுகிறது.
இவ்விரு வணக்கங்களும் ஒரு மனிதனிடம் ஒன்றுசேரும் போது அவன் அல்லாஹ்வுக்கு மிக நெருக்கமான நேசனாக ஆகிவிடுகின்றான்.
இத்தகைய தேசனுக்கு அல்லாஹ்வைத் தவிர்த்து வேறு எதைப் பற்றிய அச்சமோ, கவலையோ ஏற்படுவதே கிடையாது.

இந்த அத்தியாத்தில் இந்த இறுதி வசனத்தை ஓதியவரும், அதனைச் செவியேற்றவரும் இறையனுக்காக ஒரு ஸுஜூது செய்வது கடமையாகும்.
இறைவனது ஏவல், விலக்கல்களை கடைபிடிக்க வேண்டிய எல்லா மனிதர்களுக்கும் ஜின்களுக்கும் அவனை வணங்க வேண்டும் என்பதை தூண்டுவதாக இருக்கிறது எனவே தான் இந்த ஆயத்தை ஓதியவுடன் அவனுக்கு சுஜுது செய்ய வேண்டும் என்ற விதி ஏற்பட்டது. ஒலு இல்லாமல் இப்பதிவை படிக்கும்போது கூட ஸஜ்தா செய்ய வேண்டும்.

நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் ஸஜ்தா (சிரம் பணிதல்) வருகிற ஒரு அத்தியாயத்தை ஓதினார்களானால் ஸுஜூது செய்வார்கள் நாங்களும் அவர்களுடன் சேர்ந்து ஸுஜூது செய்வோம். எதுவரையெனில் (சிலசமயம்) எங்களில் சிலருக்கு தங்களது நெற்றியை வைக்கக்கூட இடமிருக்காது என ஹஜ்ரத் அப்துல்லாஹ் பின் உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். (புகாரி, முஸ்லிம்)
அதாவது எல்லாரும் ஏக காலத்தில் ஸுஜூது செய்வோம். அதனால் தெருக்கடி ஏற்பட்டுவிடும் என்பதாகும்
*ஆதமின் குமாரர் இந்த ஸஜ்தாவைக் கொண்ட (வசனத்)தை ஓதி அவர் உடனேயே ஸுஜூதும் செய்தாரானால் ஷைத்தான் அவரை விட்டு விலகி, அழுதவனாக , " ஆதமின் குமாரன் ஸுஜூது செய்யுமாறு கட்டளையிடப்பட்டான். உடனேயே ஸுஜூது செய்து விட்டான் அவனுக்கு சுவனம் உரித்தாகிவிட்டது நான் ஸுஜூது செய்யுமாறு கட்டளையிடப்பட்டேன் (அவ்வாறு செய்ய மறுத்துவிட்டேன், எனக்கு நரகம் உரித்தாயிற்று எனக் கூறுகின்றான் எனவும் பெருமானார் (ஸல்) அவர்கள் பகர்ந்தார்கள். ( அபூஹுரைரா (ரலி)அவர்கள் நூல்: முஸ்லிம் 254 )

இந்த வசனத்தைத் தொழுகையிலோ, தொழுகைக்கு வெளியிலோ ஓதுகிறவர் உடனேயே ஒரு ஸத்ஜா ஸுஜூது என்னும் செய்தல் கடமையாகும்.
ஸுஜூதின் மூலம் இறைவனுடன் மிக நெருக்கமான தொடர்பு ஏற்படுகிறது. தொழகையில் ருகூவையும் ஸுஜூதையும் நிம்மதியாகவும், நீட்டியும் செய்வது அதிகப் பலனைத் தரும்.
"அல்லாஹ்வுக்கு ஸுஜூது செய்வதை நீ அதிகரித்துக் கொள். அல்லாஹ்வுக்கு நீ செய்கிற ஸுஜூதின் மூலம் உனது பதவியை அல்லாஹ் உயர்த்துகின்றான், ஒரு பாவத்தை அழித்துவிடுகின்றான்" எனவும் பெருமானார் (ஸல்) அவர்கள் கூறியதாக தௌபான் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் (முஸ்லிம்)
அல்லாஹ், நம்மனைவரையும் அவனுக்கு நெருக்கமான நல்லடியார்கள் கூட்டத்தில் சேர்ந்தருள்வாளாக ஆமீன்!

## சிரம் பணிதல் (ஸுஜூது என்னும் ஸஜ்தா) 2



وَلِلّٰهِ يَسْجُدُ مَنْ فِى السَّمٰوٰتِ وَالْاَرْضِ طَوْعًا وَّكَرْهًا وَّظِلٰلُهُمْ بِالْغُدُوِّ وَالْاٰصَالِ ۩
வானங்களிலும், பூமியிலும் இருப்பவையெல்லாம், விரும்பியோ விரும்பாமலோ அல்லாஹ்வுக்கே ஸுஜூது செய்(து சிரம் பணி)கின்றன; அவற்றின் நிழல்களும் காலையிலும் மாலையிலும் அவ்வாறே ஸஜ்தா செய்கின்றன. (குர்ஆன் : 13:15)

வானங்களிலுள்ள அனைத்தும் பூமியிலுள்ள அனைத்தும் விருப்பத்துடனோ அல்லது கட்டாயப்படுத்தப்பட்டோ அல்லாஹ்வுக்கு ஸுஜூது செய்கின்றன.
அதாவது, அவனுடைய உத்தரவுகளுக்குத் தலைசாய்க்கின்றன. இதில் மனிதர்களும் அடங்குகின்றனர். ஓர் உண்மை விசுவாசி மன விருப்பத்துடன் சிரம் பணிகின்றான். நிராகரிப்போன் நிர்ப்பந்தமாகப் பணிய வேண்டிய நிலை ஏற்பட்டு விடுகிறது.
அனைத்தும் அல்லாஹ்வின் உத்தரவுப்படியே நடக்கின்றன. அதனைச் சரியென்று ஒரு விசுவாசி எண்ணி அப்படியே ஏற்கிறான் ஒரு நிராகரிப்போனுக்கு அது பிடித்தமில்லா விட்டாலும் இறைவனின் உத்தரவுப்படிதான் நடக்கும் என்ற நிலையில் அவன் அதற்குப் பணிந்துதான் தீர வேண்டியதாகிறது.

பகல், இரவு மாறி மாறி வருகின்றன. மழை பொழிகிறது. வெயில் காய்கிறது, காற்று வீக்கிறது. வெள்ளம் பெருகுகிறது, குழந்தை பிறக்கிறது, மரணம் வருகிறது. இவை போன்று எத்தனை எத்தனையோ, எல்லாம் அல்லாஹ் விதித்தவை அவனுடைய உத்தரவின்படியே அவை அனைத்தும் நடக்கும்.
இவற்றில் மனிதன் விரும்புவதும் இருக்கும். விரும்பாததும் இருக்கும் இரு நிலையிலும் அவன் அவற்றை ஏற்றுத்தான் தீரவேண்டும். அப்பொழுது அவன் அல்லாஹ்வின் கட்டளைக்கு விரும்பியோ விரும்பாமலோ தலைசாய்த்துத்தான் தீருகின்றான். இக்கருத்தைத்தான் இவ்வசனம் எடுத்துரைக்கிறது.
நிழல் காலையில் ஒரு பக்கமும் மாலையில் எதிர்பக்கமும் சாய்கிறது. இதனை மனிதன் மாற்றி அமைத்து விட முடியாது. எந்தவொரு காரணமும் இல்லாமல் நிழல் விழுவதாக நாம் நினைத்துவிடக் கூடாது.
அனைத்துப் படைப்பினங்களும் படைப்பாளனான அல்லாஹ்விற்குக் கட்டுப்பட்டு நிழல் பணிகின்றன. அவன் விதித்தபடி செயலாற்றிக் கொண்டிருக்கின்றன. அவற்றுள் நிழலும் ஒரு அங்கம். எந்த நேரத்தில் எப்படி விழவேண்டும் என்று வல்ல இறைவன் செயல்திட்டம் வகுத்தானோ அதன்படி அங்குலம் மாறாமல் அப்படியே அடிபணிகிறது நிழல்.

اَوَلَمْ يَرَوْا اِلٰى مَا خَلَقَ اللّٰهُ مِنْ شَىْءٍ يَّتَفَيَّؤُا ظِلٰلُهٗ عَنِ الْيَمِيْنِ وَالشَّمَآئِلِ سُجَّدًا لِّلّٰهِ وَهُمْ دٰخِرُوْنَ
அல்லாஹ் படைத்திருக்கும் பொருட்களில் அவர்கள் எதையுமே (உற்றுப்) பார்க்கவில்லையா? அவற்றின் நிழல்கள் வலமும், இடமுமாக (ஸுஜூது செய்தவையாகச்) சாய்கின்றன; மேலும் அவை பணிந்து (கீழ்படிதலுடன் இவ்வாறு) அல்லாஹ்வுக்கு வழிபடுகின்றன. ( குர்ஆன் : 16:48)

ஆகவே, உலகிலுள்ள எல்லாம் அல்லாஹ்வின் கட்டளைக்குப் பணிந்துதான் தீரவேண்டும். அதை விட்டு வேறுவழியே கிடையாது என்பது திட்டவட்டமான உண்மை என்பதை இவ்வசனம் தெளிவுபடுத்துகிறது.
இந்த உலகத்தில் தரப்பட்டிருக்கும் இன்பங்களைப் பற்றி மறுமைநாளில் விசாரிக்கும்போது, நிழல் தொடர்பாகவும் நம்மிடம் விசாரிக்கப்படும், நிழல் என்ன பொருளா அதைப் பற்றி விசாரிக்க ? இல்லை நிழல் என்பது அருள். அருளின் ஒரு குறியீடுதான் நிழல் என்பதற்கு கீழ்கண்ட வசனத்தில் ....
இன்னும் அல்லாஹ்தான் படைத்துள்ளவற்றிலிருந்து உங்களுக்கு நிழல்களையும் ஏற்படுத்தினான்;
மலைகளிலிருந்து உங்களுக்குத் தங்குமிடங்களாக குகைகளையும் ஏற்படுத்தினான் (குகை என்பதும் தங்குமிடத்திற்கு ஒரு வகை நிழல் )
இன்னும் வெப்பத்திலிருந்து உங்களைப் பாதுகாக்கக்கூடிய சட்டைகளையும் (சட்டை என்பது வெப்பத்திற்கு நிழல்)
உங்களுடைய போரில் உங்களை பாதுகாக்கக்கூடிய கவசங்களையும் உங்களுக்காக அமைத்தான்; (கவசம் என்பது ஆபத்திற்கு நிழல் )
நீங்கள் அவனுக்கு முற்றிலும் வழிப்பட்டு நடப்பதற்காக, இவ்வாறு தன் அருட்கொடையை (நிழலை) உங்களுக்குப் பூர்த்தியாக்கினான். (குர்ஆன் : 16:81)
வானங்களிலும், பூமியிலும் இருப்பவையெல்லாம், விரும்பியோ விரும்பாமலோ அல்லாஹ்வுக்கே ஸுஜூது செய்(து சிரம் பணி)கின்றன; அவற்றின் நிழல்களும் காலையிலும் மாலையிலும் அவ்வாறே ஸஜ்தா செய்கின்றன. (குர்ஆன் : 13:15)
அல்லாஹ் படைத்த ஒவ்வொரு பொருளையும் அவர்கள் பார்க்கவில்லையா? அதன் நிழல் வலம் மற்றும் இடப்புறங்களில் சாய்ந்து அல்லாஹ்வுக்கு விழுந்து பணிகின்றன. (குர்ஆன் 16:48)
மேற்கண்ட இவ்வசனங்களை ஓதியவரும், செவியேற்றவரும். தொழுகையிலோ, தொழுகைக்கு வெளியிலோ எச்சமயமாயினும் ஒரு ஸுஜூது செய்வது கடமையாகும். நானும் ஸுஜூது செய்துவிட்டேன். இதைப் படித்த நீங்களும் அவனுக்கு ஸுஜூது செய்து கொள்ளுங்கள்.
மறைவான செய்தி : " நிழல் என்றாலே அடிபணிதல் தானே ! ஒவ்வொரு பொருளுக்கும் நிழல் உண்டு. அந்நிழலே அப்பொருளின் ஆன்மா " என்கிறார்கள் சூஃபியாக்கள். இதன் விளக்கம் நம்மை ஆன்மிகத்தின் உச்சத்திற்கு கொண்டு சென்றுவிடுகிறது.

**சிரம் பணிதல் (ஸுஜூது என்னும் ஸஜ்தா) 3**
( இசுலாமிய இறை வணக்கமும் –யோகாசனமும் ஓர் ஒப்பு நோக்கு )




இசுலாத்தின் ஐந்து கடமைகளில் மற்ற நான்கிற்கும் இல்லாத சிறப்புகள் தொழுகை எனப்படும் இறை வணக்கத்திற்கு உண்டு

ஈமான் எனப்படும் உறுதி வாழ்வில் ஒரு முறை மேற்கொண்டால் போதும்.
நோன்பு ஆண்டிற்கு ஒரு முறை முப்பது நாட்கள் மேற்கொள்ளப்படுவது.
சக்காத்து (40 ல் 1 பங்கு ) வசதி படைத்தவர்கள் நோன்பு மாதத்தில் கொடுப்பது.
புனித ஹஜ் பயணம் வசதி படைத்தவர்கள் வாழ்நாளில் ஒரு முறை மேற்கொண்டால் நிறைவு பெற்று விடுகிறது.
ஆனால் தொழுகை மட்டும் ஏழு வயது முதல் ஆயுள் உள்ளவறை தினமும் ஐந்து வேளை ஏழை பணக்காரர் ஆண் பெண் என்ற பாகுபாடின்றி அனைவருக்கும் கட்டாயக் கடமையாக்கப்பட்டுள்ளது..
தொழுகையின் சிறப்புக் கருதி ஆதி ஏக இறைவன் முஹம்மது நபி (ஸல் ) அவர்களை நேரில் அழைத்துப் பேசி கொடுக்கப்பட்டது
யோகாசனம்
பிரணாயமம்
தாரணா தியானம்,
சமாதி
இவற்றை உள்ளடக்கியதுதான் தொழுகை
தனிமையில் கண்களை மூடி அமர்ந்து மூச்சைக் கட்டுப்படுத்தி மனதாலும் நாவாலும் இறைவன் பெயரைத் திரும்பத் திரும்ப உச்சரிக்கும் திக்ரு எனப்படும் இசுலாமிய தியானம் பிராணயாம தாரண தியான நிலைகளை உள்ளடக்கி தன்னை அறிந்து இறைவனை அறியும் சமாதி நிலைக்கு மிகச் சிறப்பாக வழி வகுக்கிறது..
இதன் வழி வகைகள் பற்றியும் நெறி முறைகள் பற்றியும் பல்வேறு கருத்து வேறுபாடுகள் நிலவுகின்றன.
மேலும் இந்த முறைக்கு கடும் பயிற்சி தேவை..
எனவே அது பற்றி இத்துடன் நிறுத்தி விட்டு எல்லோரும் எளிதில் கடைபிடிக்கக்கூடிய தொழுகை முறை பற்றிப் பார்ப்போம்.
யோகாசனம் பிரணாயாமம் தாரணா, தியானம், சமாதி நிலைகளை உள்ளடக்கிய இசுலாமியத் தொழுகை பற்றி இனி சற்று விரிவாகப் பார்ப்போம்.
ஒரு நாளைக்கு ஐந்து வேலை தொழுகை நிறைவேற்றப்படுகிறது..
அவை பஜ்ர் (விடியல்),
லொகர் (மதியம்),
அசர் (மாலை) ,
மக்ரிப் (அந்தி),
இஷா (இரவு)
என சூரிய உதயம் மறையும்,
நேரங்களுக்கேற்ப அமைகிறது.
இது போக நிறைய சிறப்புத்தொழுகைகள் உண்டு
உலகெங்கும் தொழுகை அரபு மொழியில் மட்டுமே நடத்தப்படுகிறது.
உலக முசுலிம்கள் அனைவரும் புனித நகரான மக்காவில் அமைந்துள்ள காபா எனும் ஏக இறைவனுக்காக எழுப்பப்பட்ட முதல் ஆலயத்தின் திசையில் நின்று ஏக இறைவனை வழிபடுகிறார்கள் (இந்தியாவில் இது மேற்கு நோக்கி அமைந்துள்ளது)
இவை இரண்டும் நாடு என்ற நிலை கடந்து உலகளாவிய ஒற்றுமையையும் சகோதரத்துவத்தையும்(universal Brotherhood) பறை சாற்றுகின்றன,.
சலாத் என்பது தொழுகையைக்குறிக்கும் அரபுச் சொல்லாகும்..
இந்தச்சொல்லுக்கு மூலப்பொருள் முதுகை வளைத்தல் என்பது.,
இதுவே பாரசீக மொழியில் குனிவது என்ற பொருள்படும் நமாசு என்ற . தொழுகையைக்குறிக்கும் சொல்லாக உருமாறி வடமொழியில் நமசுதே (நமஸ்தே) என்று மாறியதாகக் குறிப்பிடுகிறார் இந்திய இசுலாமிய அறிஞரான அசுரப் ப நிசாமி .

நூல் இசுலாத்தின் யோகா :-
யோகாசனத்தின் பல நிலைகளை நிற்கும் நிலை , தலைகீழ் நிலை , இருக்கும் நிலை, முதுகுத்தண்டை இழுத்தல்,, முதுகுத்தண்டை முறுக்குதல் என்ற அடிப்படையில் பகுக்கலாம்..
இந்த நிலைகளை எல்லாம் அடிப்படை நிலையில் எளிய சுருக்கமான முறையில் எல்லோருக்கும் பயன்படும் விதத்தில் தொழுகை தன்னுள் கொண்டுள்ளது.
நிற்கும் நிலைதான் ஆசனங்களின் ஆரம்ப நிலையாகும்.
.தடாசனா எனப்படும் மலை ஆசனம் தொழுகையின் முதல் நிலையான நிற்கும் நிலையை ஒத்திருக்கிறது .
பாதங்கள் பூமியில் உறுதியாகப் பதிந்த நிலையில் தலை வானத்தை நோக்கிய நிலையில் அசையாமல் நிற்பது உடல் ,கால்கள் பாதம் முதுகுத்தண்டு அனைவற்றிற்கும் ஒரு நல்ல பயிற்சியாக அமைகிறது.
முதுகுத்தண்டை இழுத்தல்:.முதுகுத் தண்டு இளக்கமாக இருத்தல் உடல் நலத்துக்கும் இளமைக்கும் இன்றியமையாதது என்பது யோகிகளின் கருத்து// எனவே யோகாசனக்கலையில் முதுகை நன்றாக வளைத்து தலையை முட்டிகளுக்கு இடையில் கொண்டு வருவது ஒரு முக்கியப் பயிற்சியாக இருக்கிறது.. உடலின் எல்லா நரம்புகளும் முதுகுத்தண்டு வழியாகவே செல்கின்றன,

தொழுகையின் ஒரு நிலையான ருகுவில் இந்த நிலை மிக எளிதாக அடையப்பெருகிறது.. ருக்கூ நிலையில் முதுகை வளைத்து கைகள் விரல்களை விரித்த நிலையில் முழங்காலகளை இறுகப்பற்றி நிற்க வேண்டும்.. கைகள் கால்கள் வளையாமல் , முதுகு தரைக்கு இணையாக இருக்க வேண்டும்.
இது போல் ஒரு நாளை குறைந்தது பதினேழு முறை வளைக்கப்படுகிறது.. எனவே இது முதுகுத்தண்டுக்கு மிகச்சிறந்த எளிதான பயிற்சி ஆகிறது.

தலைகீழ் நிலைகள் உடலெங்கும குருதியைப் பாய்ச்சும் வேலையை இதயம் மிக நளினமாகச் செய்கிறது. ஆனால் புவிஈர்ப்பு விசையை எதிர்த்து தலைக்கு- மூளைக்கு – குருதி பாய்வதும் கால்களில் இருந்து இதயத்திற்கு குருதி பாய்வதும் இதயத்தின் வேலைப்பளுவை அதிகரிப்பதாக உள்ளது..இந்த வேலைப்பளுவைக் குறைக்க தலை கீழ் ஆசனங்கள் பெரிதும் உதவுகின்றன..
இதன் காரணமாகவே தலைகீழ் ஆசனங்களான சிரசாசனமும் சர்வாங்க ஆசனமும் ஆசனங்களின் தலைமை ஆசனங்களாகப் போற்றப்படுகின்றன.. இந்த இரு ஆசனங்களிலும் தலை இதயத்திற்கு கீழே கொண்டு செல்லப்படுகிறது..
தொழுகையின் சுஜுத் என்னும் நிலையில் இது மிக எளிதான முறையில் எல்லோரும் செய்யும் வகையில் செயல்படுத்தப்படுகிறது.

இது பற்றி இசுலமியாய அறிஞர் அசுரபு நிசாமி “ அர்த்த சிரசாசனத்தை ஒத்திருக்கும் இந்த (சுஜுத்) நிலையில் மூளைக்கும் உடலின் மேல் பகுதிக்கும் கண் காது மூக்கு நுரையீரலுக்கும் முழு அளவில் குருதி பாய்கிறது “ என்று குறிப்பிடுகிறார்,
சுஜுத் நிலையில் உள்ளனங்கைகள் தரையில் காதுகளுக்கு கீழ் அமைகின்றன...நெற்றி.,இரு உள்ளங்கைகள் ((விரிக்காத நிலையில் விரல்கள் நீட்டப்பட்டு) இரு முழங்கால்கள் ,இரு கால்களின் விரல்களின் அடிப்பகுதி ஆகியவை தரையைததொட வேண்டும்.
இது பாலாசனத்தை நினைவு படுத்துகிறது ஒரு நாளில் குறைத்து முப்பத்தி நான்கு முறை சுஜுத் செய்யப்படுகிறது/
ருக்கூ பதினேழு சுஜுத் முப்பத்திநான்கு என்பது ஒரு நாள் தொழுகையில் செய்யவேண்டிய மிகக் குறைந்த அளவாகும்..
வழக்கமாகத் தொழுபவர்கள் சாதாரணமாக ருக்கூ நாற்பது முறையும் சுஜுத் எண்பது முறையும் செய்வார்கள் .இன்னும் சற்று அதிகமாகத் தொழுகையில் ஈடு படுபவர்கள் ஒரு நாளில் எழுபது முறைக்குமேல் ருக்கூவும் அதற்கு இரட்டிப்பாக சுஜுதும் செய்வர்.
(சிரசாசனத்திலும் , சர்வாங்க ஆசனத்திலும் வழக்கத்தை ஏழு பங்கு குருதி அதிகமாக மூளைக்குப் பாய்கிறது; எனவே இவ்விரு ஆசனம்களும் எந்த வயதினருக்கும் ஏற்றது அல்ல என்று உலக சுகாதார நிறுவனம் தெரிவித்திருப்பதாக அண்மையில் ஒரு தொலைக்காட்சி நிகழ்ச்சியில் சென்னையில் உள்ள புகழ் பெற்ற இதய நோய் நிபுணர் சொன்னார். சுஜுது நிலையில் இவ்வளவு அதிகமான குருதி பாயாமல், தேவையான அளவே பாய்கிறது)
இறை அருள் வைத்தியர் மாலிக் பதிவிலிருந்து....

## சிரம் பணிதல் (ஸுஜூது என்னும் ஸஜ்தா) 4



وَاِذْ قَالَ رَبُّكَ لِلْمَلٰٓٮِٕكَةِ اِنِّىْ خَالِـقٌ بَشَرًا مِّنْ صَلْصَالٍ مِّنْ حَمَاٍ مَّسْنُوْنٍ
(நபியே!) உம்முடைய இறைவன் மலக்குகளிடம்: "ஓசை தரும் கருப்பான களிமண்ணிலிருந்து, மனிதனை நிச்சயமாக நான் படைக்கப்போகிறேன்" என்றும், (குர்ஆன் : 15:28)

فَاِذَا سَوَّيْتُهٗ وَنَفَخْتُ فِيْهِ مِنْ رُّوْحِىْ فَقَعُوْا لَهٗ سٰجِدِيْنَ
அவரை நான் செவ்வையாக உருவாக்கி, அவரில் என் ஆவியிலிருந்து ஊதியதும், "அவருக்கு சிரம் பணியுங்கள்" என்றும் கூறியதை (நினைவு கூர்வீராக)! (குர்ஆன் : 15:29)

فَسَجَدَ الْمَلٰٓٮِٕكَةُ كُلُّهُمْ اَجْمَعُوْنَۙ
அவ்வாறே மலக்குகள் - அவர்கள் எல்லோரும் - சிரம் பணிந்தார்கள். (அல்குர்ஆன் : 15:30)
اِلَّاۤ اِبْلِيْسَ اَبٰۤى اَنْ يَّكُوْنَ مَعَ السّٰجِدِيْنَ
இப்லீஸைத்தவிர - அவன் சிரம் பணிந்தவர்களுடன் இருப்பதை விட்டும் விலகிக்கொண்டான். (குர்ஆன் : 15:31)

நல்லவர்களை விட்டு கெட்டவர்களைப் பிரித்து ஒதுக்குவதற்காக, பரீட்சை செய்யும் நோக்கத்துடன் இறைவன் மலக்குகளிடம் மனிதனைச் சிருஷ்டிக்கப் போகும் விஷயத்தை இந்த ஆயத்தில் கண்டவாறு கூறினான்.
இப்பரீட்சையில் மலக்குகள் தேறினர், இப்லீஸ் தோற்று பாக்கியமற்றவனாகி விட்டான்.
' மனித வர்க்கத்தின் முதல் மனிதரை நான் மேற்குறிப்பிட்ட பொருளினால் படைக்கப் போகிறேன். அவர் சிறப்பு மிக்கவர். அவரை நான் நாடும் உருவில் உருவாக்கி என்னுடைய ரூஹிலிருந்து அவருக்கு வேண்டிய ஜீவனை நான் ஊதிவிட்டால் அவர் அழகிய ஜீவனுள்ள மனிதராக ஆகிவிடுவார்.
அப்பொழுது நீங்கள் அவரைக் கௌரவிக்க வேண்டும். அவருக்காக நீங்கள் சிரம் பணித்து வீழ்ந்து ஸுஜூது செய்யுங்கள். இது அவருக்கு நீங்கள் வழங்கும் காணிக்கையாகும்.

மனிதனுக்கு ஏற்பட்ட திறமை பூர்த்தியாகி, அவரில் ஆன்மாவை நாயன் ஏற்படுத்தி, அவரது அங்கங்களில் அதன் குணம் வெளியாகி அவர் உணர்வுள்ளவராக சுவாசம் வாங்கி விடுபவராக ஆகும் பொழுது 'அவருக்கு ஸுஜூது செய்தவர்களாக நீங்கள் விழ வேண்டும்' என கூறினான் என்பது இந்த ஆயத்தின் கருத்து.
இதிலிருந்து சாதாரணமான முறையில் தலை சாய்த்தல் அல்லது குனிதல் மட்டும் போதாது. சாஷ்டாங்கமாக விழுந்துவிட வேண்டும் என்பது இக்கட்டளையின் கருத்து.
அல்லாஹுதஆலாவுடைய ஆற்றலின் நூதனமான அடையாளங்களெல்லாம் மனிதனில் வெளியாவதால் முதல் மனிதனை அதாவது ஹளரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களை கிப்லாவாக வைத்து தனக்கு சுஜூது செய்யுமாறு இறைவன் கட்டளையிட்டான்.
ஸுஜூது செய்தல், அல்லாஹ் ஒருவனுக்காகவே இருத்தல் வேண்டும். அதனை இங்கு ஒரு மனிதருக்குச் செய்யுமாறு கூறப்படுவது வணக்க முறையில் அல்ல. மரியாதையின் நிமித்தம் காணிக்கை செலுத்துவதற்காகச் செய்யப்படுவதாகும் என்பதாக ஷரியத் மூலமாக விளக்கப்படுகிறது.
ஆனால் தரீக்கத், ஹக்கீகத் , மஃஹ்ரிபத் மூலமாக இச்செய்கை குறித்து விளக்கமளிக்கும்போது அவைகள் ஆன்மிகத்தின் பல படித்தரங்களின் உச்சங்களை தொடுகிறது.

இறைவனின் இவ்வுத்தரவுக்குப் பணிந்து மலக்குகள் அனைவரும் ஸுஜூது செய்தனர். அவனுடைய உத்தரவுக்குச் சிறிதளவுகூட இவர்கள் மாறு செய்ய மாட்டார்கள்.
ஆனால் இப்லீஸைத் தவிர்த்து, அவன் அவர்களுடன் சேர்ந்து கொண்டு ஸுஜூது செய்யவில்லை. விலகிக் கொண்டான். அல்லாஹ்வின் கட்டளையை மறுத்துவிட்டான்.
ஸுஜூது செய்பவர்களுடன் இருப்பதை விட்டு அவன் விலகிக் கொண்டான் என்ற இவ்வசனத்தில் இப்லீஸ் ஹளரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்கு ஸுஜூது செய்யாத ஒரு குற்றத்தை மட்டும் செய்தான் என்பது கூறப்படவில்லை. அவன் மூவகை குற்றங்களைச் செய்தான் என்பது இவ்வசனத்தில் விளங்குகிறது.
முதலாவது, அவன் சுஜூது செய்யாமலிருந்தது. சந்தேகப்பட்டு (அதாவது இக்கட்டளை மலக்குகளுக்குத்தானே, ஜின் வர்க்கத்தைச் சேர்ந்த எனக்குமா இக்கட்டளை என்று சந்தேகப்பட்டு அவன் ஸுஜூது செய்யாமல் இருந்தான் என்பதில்லை. அவன் தனக்கும்தான் இந்தக் கட்டளை விதிக்கப்பட்டது என்பதை உணர்ந்து கொண்டே, அவன் சுஜூது செய்யாமலிருந்தான்.
இரண்டாவது, அவன் தன்னை உயர்வாகவும் ஹளரத் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்களை அற்பமாகவும் மதித்துத் தற்பெருமை கொண்டது.
மூன்றாவது. மற்றவர்களுடன் சேராமல் தனித்துப் பிரிந்து நின்றது. ஆகவே, மூவகைக் குற்றங்களையும் ஒருங்கே செய்துள்ளான்

## சிரம் பணிதல் (ஸுஜூது என்னும் ஸஜ்தா) 5



قُلْ اٰمِنُوْا بِهٖۤ اَوْ لَا تُؤْمِنُوْا‌ ؕ اِنَّ الَّذِيْنَ اُوْتُوا الْعِلْمَ مِنْ قَبْلِهٖۤ اِذَا يُتْلٰى عَلَيْهِمْ يَخِرُّوْنَ لِلْاَذْقَانِ سُجَّدًا ۙ
(நபியே!) "அதனை நீங்கள் நம்புங்கள், அல்லது நம்பாதிருங்கள்; (அதனால் நமக்கு கூடுதல், குறைவு எதுவுமில்லை.) நிச்சயமாக இதற்கு முன்னர் எவர் (வேத) ஞானம் கொடுக்கப்பட்டிருந்தார்களோ, அவர்களிடம் அது (குர்ஆன்) ஓதிக்காண்பிக்கப்பட்டால் அவர்கள் ஸுஜூது செய்தவர்களாக முகங்களின் மீது (பணிந்து) விழுவார்கள்" என்று (நபியே!) நீர் கூறும். (அல்குர்ஆன் : 17:107)

திருக்குர்ஆனின் உண்மை பற்றி ஆதாரங்களும், அத்தாட்சிகளும் வரலாறுகளும் கூறப்பட்ட பின்னரும் விசுவாசங் கொள்ளாத கூட்டத்தினரை நோக்கி, நபியே ! நீர் இவ்வாறு கூறிவிட்டு அமைதி கொள்ளும்.
நீங்கள் இந்த குர்ஆனை விசுவாசங் கொள்ளுங்கள் (நம்புங்கள் ) அல்லது விசுவாசங் கொள்ளாதிருங்கள் (நம்பாதிருங்கள்) நீங்கள் விசுவாசங் கொண்டால் தான் இதன் மதிப்பு உயரும் என்றோ நீங்கள் இதனை விசுவாசம் கொள்ளாவிட்டால் இதன் மதிப்பு குறைந்து விடுமென்றோ எதுவும் கிடையாது.
இதற்கு முன்னர் இறக்கப்பட்ட வேதங்களைப் பற்றிய ஞானமுள்ளவர்களிடம் இது ஓதப்படும்பொழுது, அவர்கள் இதன் உண்மையைப் பூரணமாக அறிந்து கொள்கின்றனர்.

உதாரணமாக, ஜைது பின் நுபைல், ஸல்மானுல்பார்ஸீ, அபூதர்ரு போன்ற தோழர்கள், இவர்கள் முன்னருள்ள வேதங்களை நன்கு அறிந்தவர்கள். அவற்றில் இத்திருக்குர்ஆன் பற்றியும், இறுதி நபி பற்றியும் தெளிவாகக் கூறப்பட்டிருப்பதை உணர்ந்து, இறுதி நபியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். அந்த இறுதி நபி தோன்றியதும் அவர்களிடம் வந்து அவர்களை விசுவாசங் கொண்டு இஸ்லாம். மார்க்கத்தில் சேர்ந்து கொண்டனர்.
அப்பொழுது அவர்களிடம் இந்த குர்ஆன் ஓதப்பட்டது. அவர்கள் அப்படிவே சிரம் பணிந்து ஸுஜூது செய்தவர்களாக முகங்குப்புற வீழ்ந்துவிட்டனர்.
அத்துடன் அவர்கள் நிற்கவில்லை; எங்களுடைய இரட்சகன் மிகவும் தூய்மையானவன் அவன் முந்தைய வேதங்களின் வாயிலாக இறுதி நபியை அனுப்புவதாகவும், அவர் மூலம் திருக்குர்ஆனை இறக்குவதாகவும் வாக்களித்திருந்தான். அவனுடைய வாக்குறுதி நிச்சயமாக இப்பொழுது நிறைவேறிவிட்டது என்றும் கூறினார்கள்.
அவர்களுக்கு இறைவனின் மீது அதிக பக்தியும், விசுவாசமும், உள்ளச்சமும் உண்டாகி விட்டன. மீண்டும் உள்ளச்சத்தால் அழுதவர்களாக முகங்குப்புற வீழ்ந்து தங்களது பணிவைக் காட்டினார்கள்.
திருக்குர்ஆன் அவர்களுக்கு அந்த உள்ளச்சத்தை மென்மேலும் அதிகரித்து விட்டது.

திருக்குர்ஆனை உண்மையான உள்ளத்துடன் உள்ளச்சங் கொண்டு அதற்குத் தலைசாய்த்து இறைவனிடம் பூரண விசுவாசத்தைக் காட்டுகிறவர்கள் எல்லாக் காரியங்களிலும் இருக்கின்றனர். அவர்களுக்கு திருக்குர்ஆன் ஓதப்பட்டால் அவர்களுடைய இதயங்கள் அச்சத்தால் நடுங்கி விடுகின்றன.

நபிகள் பெருமானார்(ஸல்)அவர்கள் இத்தகையோரின் சிறப்புப் பற்றி விளக்குகையில்,
"அல்லாஹ்வுக்கு அஞ்சி அழுது கொண்டிருக்கும் மனிதன், கறந்த பால் மீண்டும் மடியினுள் நுழைத்தாலன்றி நரகில் நுழைய மாட்டான்"என்று கூறியுள்ளார்கள். (அல்ஹதீது, அறிவித்தவர்: ஹஜரத் அபூஹுரைரா (ரலி) நூல்கள்: திர்மிதி, நஸயீ)

"இரு கண்களை நரகம் தீண்டாது.
(1)அல்லாஹ்வின் மீது கொண்டுள்ள உள்ளச்சத்தால் அழுது கொண்டிருக்கும் கண்,
(2).அல்லாஹ்வின் பாதையில் காவல் காத்து விழித்திருக்கும் கண்" என்றும் பெருமானார் (ஸல்)அவர்கள் கூறியுள்ளார்கள். (அல்ஹதீது, அறிவித்தவர் : ஹளரத் இப்னு அப்பாஸ்(ரலி)நூல் திர்மிதி)
அல்ஹதீஸ்: "கெஞ்சுங்கள். அழுங்கள். ஏனெனில் வானம். பூமி, சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் யாவும் அல்லாஹுத் தஆலாவைப் பயந்து அழுகின்றன" என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியதாக அப்துல்லாஹிப்னு உமர் ரலியல்லாஹுதஆலா அன்ஹுமா அவர்கள் ரிவாயத்துச் செய்திருக்கிறார்கள்.
அறிந்துகொள்ளுங்கள் : பணிவும் சுஜூதும் ஆன்மாக்களின் நிலையைச் சேர்ந்தவை. அழுகையும், தாளாண்மை (விடாமுயற்சியும் உடல் நிலையைச் சேர்ந்தவை.
(நபியே!) "அதனை நீங்கள் நம்புங்கள், அல்லது நம்பாதிருங்கள்; (அதனால் நமக்கு கூடுதல், குறைவு எதுவுமில்லை.) நிச்சயமாக இதற்கு முன்னர் எவர் (வேத) ஞானம் கொடுக்கப்பட்டிருந்தார்களோ, அவர்களிடம் அது (குர்ஆன்) ஓதிக்காண்பிக்கப்பட்டால் அவர்கள் ஸுஜூது செய்தவர்களாக முகங்களின் மீது (பணிந்து) விழுவார்கள்" என்று (நபியே!) நீர் கூறும். (குர்ஆன் : 17:107)
அன்றியும், "எங்கள் இறைவன் மிகப் பரிசுத்தமானவன்; எங்களுடைய இறைவனின் வாக்குறுதி நிறைவேறி விட்டது" என்றும் அவர்கள் கூறுவார்கள். (குர்ஆன் : 17:108)
இன்னும் அவர்கள் அழுதவர்களாக முகங்கள் குப்புற விழுவார்கள்; இன்னும் அவர்களுடைய உள்ளச்சத்தையும் (அது) அதிகப்படுத்தும்.
(குர்ஆன் : 17:109)
மேலே குறிப்பிட்டுள்ள 107, 108, 109 ஆகிய மூன்று வசனங்களை ஓதியவரும், ஓதுவதைச் செவியேற்றவரும், தொழுகையில் ஓதினாலும் ஒரு ஸுஜுது செய்து கொள்ள வேண்டும். அல்லாஹ்விற்காக ஒரு ஸுஜூது செய்வது (வாஜிப் எனும்) கடமையாகும்.

## சிரம் பணிதல் (ஸுஜூது என்னும் ஸஜ்தா) 6



أُولٰٓئِكَ الَّذِيْنَ اَنْعَمَ اللّٰهُ عَلَيْهِمْ مِّنَ النَّبِيّٖنَ مِنْ ذُرِّيَّةِ اٰدَمَ وَمِمَّنْ حَمَلْنَا مَعَ نُوْحٍ وَّمِنْ ذُرِّيَّةِ اِبْرٰهِيْمَ وَاِسْرَآءِيْلَ وَمِمَّنْ هَدَيْنَا وَاجْتَبَيْنَا اِذَا تُتْلٰى عَلَيْهِمْ اٰيٰتُ الرَّحْمٰنِ خَرُّوْا سُجَّدًا وَّبُكِيًّا ۩
இவர்கள் (எல்லோரும் ) ஆதமுடைய சந்ததியிலும், நூஹ்வுடன் (கப்பலில்) நாம் ஏற்றிக் கொண்டவர்களி(ன் சந்ததியி)லும், இப்ராஹீமுடையவும், இஸ்ராயீல் (யஃகூபின்) சந்ததியிலும், இன்னும் நாம் தேர்ந்தெடுத்து நேர்வழியில் நடத்தியவர்களிலுமுள்ள நபிமார்களாவார்கள் - இவர்கள் மீது அல்லாஹ் அருளைப் பொழிந்தான்; அர்ரஹ்மானுடைய வசனங்கள் அவர்களின் மீது ஓதப்பட்டால், அவர்கள் அழுதவர்களாகவும், ஸுஜூது செய்தவர்களாகவும் விழுவார்கள். (அல்குர்ஆன் : 19:58)
முந்தைய வசனங்களில் ஸகரிய்யா, ஈஸா, இப்ராஹீம், இஸ்ஹாக், யஅகூப் (இஸ்ராயீல்) , மூசா, ஹாரூன். இஸ்மாயில், இத்ரீஸ் (அலை) ஆகியோரின் குறிப்புகளையும் மாண்புகளையும் உயர்ந்தோன். அல்லாஹ் எடுத்துரைத்தான்.

இந்த ஒன்பது பேர் மட்டுமன்றி எல்லா நபிமார்களுமே இறைவளின்

அருளுக்கு இலக்கானவர்கள் என்றும் இறைவனால் தேர்ந்தெடுக்கப்பட்டு நல்வழிப்படுத்தப்பட்டவர்கள் என்றும் இங்கு அல்லாஹ் சிலாகிக்கின்றான்.
இவர்கள் எல்லோரும் என்றால் இந்த நபிமார்கள் எல்லோரும் என்பது பொருளாகும். ஆனால் இந்த அத்தியாயத்தில் குறிப்பிடப்பெற்ற நபிமார்களை மட்டும் இன்றி நபிமார்கள் வரிசையில் அந்த அனைவருமே இது குறிக்கும் சிலரை மட்டும் குறிப்பிட்டு விட்டு அந்த இனத்தையே கருத்தில் கொண்டுள்ளான் இறைவன்
இவர்கள் (எல்லாரும்) அல்லாஹ்வின் அருள்பெற்ற நபிமார்கள் ஆவர் ஆதமுடைய வழித்தோன்றல்களிலும் உள்ளவர்கள் ஆவர்" என இந்த வசனம் தெரிவிக்கின்றது.
இங்கு ஆதம் (அலை) அவர்களின் வழித்தோன்றல்கள் என்பது இத்ரீஸ்(அலை) அவர்களைக் குறிக்கும்.நூஹுடன் (கப்பலின்) நரம் ஏற்றிக்கொண்டவர்கள் என்பது இப்ராஹீம் (அலை) அவர்களையும் இப்ராஹீம் (அலை) அவர்களின் வழித்தோன்றல்கள் என்பது இஸ்ஹாக் (அலை) யஅகூப் (அலை) இஸ்மாயீல் (அலை) ஆகியோரையும் குறிக்கும்.
அவ்வாறே இஸ்ராயீலுடைய (அதாவது யஅகூபுடைய) வழித்தோன்றல்கள் என்பது மூஸா ( அலை ) ஹாரூன் (அலை) ஸகரியா ( அலை) மரியமின் மைந்தர் ஈஸா( அலை ) ஆகியோரைக் குறிக்கும்.
இவர்கள் அல்லாஹ்வின் அருள்பெற்ற பெருமக்கள். இவர்கள் மீது ரஹ்மானின் திருவசனங்கள் ஓதப்பட்டால் அவற்றைச் செவியேற்றதும் இறைவன் மீது கொண்ட அச்சத்தால் அவர்கள் அழுதவர்களாக அப்படியே ஸுஜூதில் வீழ்த்து விடுவார்கள் என்பது இதன் கருத்தாகும்.
அல்ஹதீஸ்: திருக்குர்ஆனை ஓதுங்கள். இன்னும் அழுங்கள். நீங்கள் அழவில்லையானால் பலவந்தமாக அழுங்கள்.
இந்த ஆயத்தை ஓதினாலும், பிறர் ஓதச் செவிமடுத்தாலும்
ஸுஜூது செய்ய வேண்டும். திருக்குர்ஆனில் இம்மாதிரியான ஸஜ்தா ஆயத்து இதற்கு முன் நான்கு இடங்களில் வந்திருக்கின்றன. இது ஐந்தாவதாகும். இவ்வாறான ஆயத்துகளை ஓதி ஸஜ்தா திலாவத்
செய்யும் பொழுது அந்தந்த ஆயத்துகளில் கூறப்பட்டுள்ள கருத்துகளுக்கு ஏற்றவாறாக ஸஜ்தாவில் பிரார்த்திக்கவும் வேண்டும்.

இந்த வசனத்தை ஓதியவரும், அது ஓதப்படுவதைச் செவியேற்பவரும் ஒரு ஸுஜூது செய்வது கடமையாகும்.
இந்த ஆயத்தை ஓதி ஸஜ்தா செய்தால் "நாயனே! உனது வேத வசனங்களை ஓதும்போது அழுபவர்களாக, உனக்கே ஸுஜூது செய்பவர்களாக, நேர்வழி பெற்றவர்களால் உன்னால் அருட்கொடை வழங்கப்பட்டவர்களாக இருக்கிற உன் அடியார்களில் என்னையும் சேர்ப்பாயாக” என்று பிரார்த்திக்க வேண்டும்.

## சிரம் பணிதல் (ஸுஜூது என்னும் ஸஜ்தா) 7

(எல்லாம் சிரம்பணிகின்றன ஏகனுக்கு)



اَلَمْ تَرَ اَنَّ اللّٰهَ يَسْجُدُ لَهٗ مَنْ فِى السَّمٰوٰتِ وَمَنْ فِى الْاَرْضِ وَالشَّمْسُ وَالْقَمَرُ وَالنُّجُوْمُ وَ الْجِبَالُ وَالشَّجَرُ وَالدَّوَآبُّ وَكَثِيْرٌ مِّنَ النَّاسِ وَكَثِيْرٌ حَقَّ عَلَيْهِ الْعَذَابُ وَمَنْ يُّهِنِ اللّٰهُ فَمَا لَهٗ مِنْ مُّكْرِمٍ اِنَّ اللّٰهَ يَفْعَلُ مَا يَشَآءُ ۩

(நபியே) வானங்களில் இருப்போரும், பூமியில் இருப்போரும் சூரியன், சந்திரன் , விண்மீன்கள் (நட்சத்திரங்கள் ) , மலைகள், மரங்கள், உயிரினங்கள் ஆகியவையும் மனிதர்களில் அதிகமானோரும் அல்லாஹ்வுக்குச் சிரம்பணிகின்றனர் என்பதை நீர் காணவில்லையா?
(மனிதர்களில்) அதிகமானோர்மீது வேதனை உறுதியாகிவிட்டது. அல்லாஹ் யாரை இழிவுபடுத்துகின்றானோ அவரைக் கண்ணியப்படுத்துபவர் யாருமில்லை. நிச்சயமாக அல்லாஹ், தான் நாடுவதைச் செய் கின்றான். (குர்ஆன் : 22:18)

இங்கு உயர்ந்தோன் அல்லாஹ். இணை துணையற்ற தான் மட்டுமே வழிபாட்டிற்குத் தகுதியானவன் எனத் தெரிவிக்கின்றான்.
ஏனெனில் அவனது மாண்புக்கு முன்னால் விரும்பியோ விரும்பாமலோ எல்லாப் பொருட்களும் சிரம்பணிகின்றன. பொருடகள் சிரம்பணிவதென்பது. அதன் தனித்தன்மையைப் பொறுத்து வேறுபடும். மற்றொரு வசனம். 'அல்லாஹ் படைத்துள்ள பொருட்களை அவர்கள் கவனிக்கவில்லையா? அவற்றின் நிழல்கள் அல்லாஹ்வுக்குச் சிரம்பணிந்து கீழ்மையுடன் வலப்பக்கமும் இடப் பக்கமும் தாழ்கின்றன (16:48) என்று கூறுகின்றது.

இங்கு. "(நபியே!) வானங்களில் இருப்போரும் பூமியில் இருப்போரும் அல்லாஹ்வுக்குச் சிரம்பணிகின்றனர் என்பதை நீர் காணவில்லையா?" என்று வணக்கம் செய்யுங்கள்" (41: 37) என்று அல்லாஹ் கேட்கின்றான்.
இதில், வானங்களில் இருப்போர்' என்பது வானத்தின் பல்வேறு பகுதிகளில் இருக்கும் வானவர்களையும், பூமியில் இருப்போர்' என்பது (பூமியின் பல்வேறு. திசைகளில் இருக்கும் மனிதர்கள். ஜின்கள், விலங்குகள், பறவைகள் ஆகிய உயிரினங்களையும் குறிக்கும்.)
ஆக "எந்தப் பொருளும் அவனது புகழைப் போற்றாமல் இருப்பதில்லை" (17:44)
அடுத்த தொடரில், "சூரியன், சந்திரன் , வின்மீன்கள் ஆகியவையும் தனக்குச் சிரம்பணிகின்றன" என்று அல்லாஹ் தெரிவிக்கின்றான்.

படைப்புகளுக்கு மத்தியில் இவற்றைக் குறிப்பிட்டுச் சொன்னதற்குக் காரணம் உண்டு. அல்லாஹ்வை விடுத்து இவற்றுக்கு வழிபாடு செய்யப்பட்டது. ஆனால், இவை தம்மைப் படைத்தவனை வழிபடுகின்றன; படைத்தவனால் பராமரிக்கப்படுகின்றன. கட்டுப்படுத்தப்படுகின்றன என்று விவரிப்பதுதான் அந்தக் காரணமாகும்.
மற்றொரு வசனம், "நீங்கள் வழிபடுவது அல்லாஹ்வைத்தான் என்றால் சூரியனுக்கோ சந்திரனுக்கோ சிரவணக்கம் செய்யாதீர்கள்; அவற்றைப் படைத்த அல்லாஹ்வுக்கே சிர வணக்கம் செய்யுங்கள் " (41:37) என்கிறது.
1 அபூதர் (ரலி) அவர்கள் கூறியதாவது. (ஒருநாள்) அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் என்னிடம், "இந்தச் சூரியன் எங்கே செல்கிறது என்று உமக்குத் தெரியுமா? எனக் கேட்டார்கள். நான், ''அல்லாஹ்வும் அவனுடைய தூதருமே நன்கு அறிந்தவர்கள் என்று கூறினேன்.
நபியவர்கள், 'அது, (இறை) அரியணைக்குக் கீழே சென்று தலை வணங்குகிறது. பின்னர் கிழக்கிலிருந்து உதயமாவதற்கு அனுமதி கோருகிறது. உடனே அதற்கு அனுமதியளிக்கப்படுகிறது

இறுதியில் ஒருநாள் அதனிடம், நீ வந்த வழியே திரும்பிச் சென்றுவிடு என்று கூறப்படும். (அப்போது அது மேற்கிலிருந்து உதயமாகும்)" என்று கூறினார்கள் புகாரி : 3199, 7424 முஸ்லிம் 250
2 அபுல்ஆலியா (ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள்: "வானத்தில் இருக்கும் விண்மீன், சூரியன், நிலவு ஆகிய அனைத்தும் அவை மறையும்போது அல்லாஹ்வுக்குச் சிரம்பணிந்து (சஜ்தாவில்) விழாமல் இருப்பதில்லை. பின்னர் அனுமதி வழங்கப்படாத அவை திரும்புவதில்லை. அனுமதி வழங்கப்பட்டால் அவை வலப்புறமாக எழுந்து இறுதியில் தாம் உதயமாகுமிடத்துக்குத் திரும்புகின்றன.
அடுத்த தொடர், 'மலைகளும் மரங்களும் அல்லாஹ்வுக்குச் சிரம்பணிகின்றன" என்று கூறுகின்றது. அதாவது மலைகள். மரங்கள் ஆகியவற்றின் நிழல். வலப்புறமும் இடப்புறமும் சாய்வதன் மூலம் அவை இறைவனுக்குச் சிரவணக்கம் செய்கின்றன.

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறியதாவது: "ஒரு மனிதர் நபி (ஸல்) அவர்களிடம் வந்து அல்லாஹ்வின் தூதரே நேற்றிரவு நான் உறங்கும்போது கனவொன்று கண்டேன். அக்கவில் நான் ஒரு மரத்திற்குப் பின்னால் தொழுதுகொண்டிருக்கிறேன். நான்
சஜ்தா செய்யும்போது என்னுடன் அந்த மரமும் சஜ்தா செய்தது !
அப்போது அந்த மரம். "இறைவ இந்த சஜ்தாவை நான் செய்ததற்காக உன்னிடம் எனக்கு ஒரு நன்மையைப் பதிவு செய்வாயாக! இதை முன்னிட்டு என் பாவங்களில் ஒன்றை மன்னித்த விடுவாயாக ! இதை எனக்குரிய சேமிப்பாக உன்னிடம் வைத்திருப்பாயாக ! உன் அடியார் தாவூதிடமிருந்து இதை ஏற்றுக்கொண்டதைப் போன்று என்னிடமிருந்தும் ஏற்றுக்கொள்வாயாக ! என்று பிரார்த்திப்பதை நான் செவியுற்றேன் என்றார்.
அப்போது நபி(ஸல்) அவர்கள் ஒரு சந்தா வசனத்தை ஓதி சஜ்தா செய்தார்கள். அந்த மரம் ஓதியதாக அம்மனிதர் தெரிவித்த அதே பிரார்த்தனையை நபி (ஸல்) அவர்களும் ஓதியதை நான் செவியுற்றேன் - நுஅமான் பின் பஷீர் (ரலி) இப்னுமாஜா நஸயீ
முஆத் பின் அனஸ் (ரலி அவர்கள் : "ஊர்திப் பிராணிகள் முதுகுகளை சொற்பொழிவு மேடைகளாக ஆக்கிக் கொள்வதை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் தடை செய்துள்ளார்கள். ஏனெனில், எத்தனையோ ஊர்திப் பிராணிகள் அவற்றின் பயணிப்பவரை விடச் சிறந்தவையாகவும் உயர்ந்தோன் அல்லாஹ்வை அதிகம் நினைவு கூறக்கூடியதாகவும் இருக்கின்றன!

எத்தனையோ ஊதிப் பிராணிகள், பயணிப்பவரை விடச் சிறந்தவையாகவும் உயர்ந்தோன் அல்லாஹ்வை அதிகம் நினைவுக்கூரக் கூடியவையாகவும் இருக்கின்றன.
அடுத்த தொடர், மனிதர்களில் அதிகமானோரும் அல்லாஹ்வுக்குச் சிரம் பணிகின்றனர்" என்று தெரிவிக்கின்றது. அதாவது மனிதர்களில் அதிகமானோர் வழிபட வேண்டும் என்ற விருப்பத்தில் சுயமாகவே இறைவனுக்குச் சிரவணக்கம் செய்கின்றனர்.
அடுத்து "(மனிதர்களில் அதிகமானோர் மீது "அதாவது (சிரம்பணிய மறுத்து கர்வம் கொள்வோர்மீது- வேதனை உறுதியாகிவிட்டது. அல்லாஹ் யாரை இழிவுபடுத்துகின்றானோ அவரைக் கண்ணியப்படுத்துபவர் யாருமில்லை. நிச்சயமாக அல்லாஹ். தான் நாடுவதைச் செய்கின்றான்" என இந்த வசனம் கூறுகின்றது.

## சிரம் பணிதல் (ஸுஜூது என்னும் ஸஜ்தா) 8

( எல்லாம் சிரம்பணிகின்றன ஏகனுக்கு 2 )



" வானங்களில் உள்ளவர்களும், பூமியிலுள்ள வர்களும், சூரியனும். சந்திரனும், நட்சத்திரங்களும், மலைகளும், மரங்களும் (பூமியில்) ஊர்ந்து திரிபவைகளும், மனிதர்களில் அதிகமானோரும் நிச்சயமாக அல்லாஹ்வுக்குச் சிரம் பணிவதை நீர் பார்க்க வில்லையா?
ஆயினும், (மனிதாகளில்) அதிகமானேம் மீது வேதனை விதியாகி யிருக்கின்றது. எவரை அல்லாஹ் இழிவாக்கு கின்றானே அவருக்குச் சங்கை அளிப்பவர் எவரும் இல்லை. நிச்சயமாக அல்லாஹ் தான் நாடியவற்றைச் செய்வான் ( குர்ஆன் 22 : 18)
வாளங்களிலுள்ளவர்களும், பூமியிலுள்ளவர்களும் அல்லாஹ்வுக்குச் சிரம் பணிகின்றனர்.

ஸுஜூது - சிரம்பணிதல் என்பது அவனுக்குக் கீழ்ப்படிந்து அவனிடம் தேவையுற்றிருப்பதாகும். இங்கு கூறப்படுகிற அனைத்தும் அல்லாஹ்வுக்கே கீழ்ப்படிந்து அவனுக்கே பணிந்து கொண்டிருக்கின்றன.

(1) வானங்களிலுள்ளவர்கள் :- வானவர்கள். இவர்களை பூமியிலுள்ள சிலர் தேவர்கள் எனக் கூறிக் கொண்டு வணங்குகின்றனர். ஆனால், இந்தத் தேவர்களோ அல்லாஹ்விடமே
தேவையுடையவர்களாக இருந்து கொண்டு அவனை வணங்குகின்றனர். இப்படியிருக்க, இவர்கள் எவ்வாறு வணங்கப்படத் தகுந்தவர்களாக ஆக முடியும்?
(2) பூமியிலுள்ளோர்:- பூமியில் வசிக்கும் சில பெரிய மனிதர்களைச் சிலர் வணங்குகின்றனர். பெரிய மனிதரும் தன்னை கடவுளாக வழிபடச் சொல்கிறார்.
இப்படிதான் ஃபிர்அவ்ன் "பிரமுகர்களே! என்னைத் தவிர உங்களுக்கு வேறு கடவுளை நான் அறியவில்லை என்று ஃபிர்அவ்ன் கூறினான். ஹாமானே! எனக்காக களிமண்ணைச் சுட்டு எனக்கொரு மாளிகையைக் கட்டு! (அதன் மீது ஏறி) மூஸாவின் இறைவனைப் பார்க்க வேண்டும். அவர் பொய்யர் என்றே நான் நினைக்கிறேன் என்றான்.
(குர்ஆன்: 28:38)
"நானே உங்களின் மிகப் பெரிய இறைவன்" என்றான் ஃபிர்அவ்ன்
(குர்ஆன்: 79:24)
ஃபிர்அவ்னுக்கு அடுத்தடுத்து சோதனைகள் சூழும்போது , இரவில், "மூஸாவின் இறைவனே என்னை காப்பாற்று"என்று பிரார்த்திப்பான்
இறைவனிடமே தேவையுடையவர்களாக இருந்து கொண்டு எப்படி இவன் போன்றவர்கள் கடவுள்களாக ஆக முடியும்?
(3) சூரியன்: சூரியனை வணங்குவோரும் உண்டு. அதுவோ இறைவனுக்குக் கீழ்ப்படிந்து 'அவன் விதித்த பிரகாரம் தனது வேலையைச் செய்து கொண்டு வருகிறது. தன்னை வணங்குகிறவர்களுக்கு எதனையும் அது செய்து விடுவதில்லை.
(4) சந்திரன்: இதனையும் வணங்குவோர் உண்டு. இதுவும் இறைவனுக்கே பணிந்து நடக்கிறது.
(5) நட்சத்திரங்கள், கிரகங்கள் ஆகியவற்றிற்குத் தெய்வத் தன்மையைக் கொடுத்து அவற்றை ஆராதனை செய்வாரும் உண்டு. அவற்றின் மாறுபாட்டினால் நல்லவை, கெட்டவை உலகில் நிகழும் என நம்பிக்கைக் கொண்டு இறைவனையே மறந்திருப்பவர்களும் உண்டு.
ஆனால் இவைகளோ அல்லாஹ்வுக்கே கீழ்ப்படிந்து நடக்கின்றன. தங்களை நம்புவோருக்கு ஏதும் செய்து விடுவதில்லை. அவ்வாறு செய்யும் சக்தியும் இவற்றிற்குக் கிடையாது.
(6) மலைகள்:- இவையும் அல்லாஹ்வுக்கே பணிகின்றன. சிலர் இவற்றிலிருந்து சிலை செய்துகொண்டு அவற்றை வணங்குகின்றனர்.
(7) மரங்கள்: சிலர் சில மரங்களை வணங்குவது உண்டு குழந்தையற்றவர்கள் அரச மரத்தைச் சுற்றுகின்றனர். சிலர் இம்மரங்களிலிருந்து சிலைகளைச் செய்து வைத்துக் கொண்டு அவற்றிற்குத் தெய்வப்பட்டம் சூட்டி வணங்குவதும் உண்டு. ஆனால் அவைகளோ ஏக இறைவனுக்கே கட்டுப்பட்டு பணிந்து நடக்கின்றன.

وَّالنَّجْمُ وَالشَّجَرُ يَسْجُدٰنِ
செடிகள், (கொடிகள்,) மரங்கள் (ஆகிய அனைத்தும் அல்லாஹ்வுக்கு வழிப்பட்டுச்) சிரம் பணிகின்றன. (குர்ஆன் : 55:6)

(😎 பூமியில் ஊர்ந்து திரிபவை:- பூமியில் ஊர்ந்து திரியும் பிராணிகளில் சிலவற்றை வணங்குவோரும் உண்டு. பாம்பை வணங்குவோரும், காளைமாட்டை வணங்குவோரும், பசுவைத் தெய்வமாக மதிப்பவரும் இவை போன்று சில பிராணிகளைக் கடவுள்களாக ஆக்கிக் கொண்டு வணங்குவோரும் உண்டு. ஆனால் இவை அனைத்தும் ஒரே இறைவனுக்குக் கீழ்ப்படிந்து அவனுக்கே பணிகின்றன.
(9) மனிதர்களில் அதிகமானோர்: இறைவனுக்கு விரும்பியோ, விரும்பாமலோ பணிகின்றனர். சிலர் இறைவனுக்கு ஸுஜூது செய்து அவனையே வணங்குகின்றனர். அவர்கள் இறைவனை உணர்ந்து விரும்பியே இவ்வாறு செய்கின்றார்கள்.

சிலர் முதலில் விரும்பாவிட்டாலும் உலகில் சில நெருக்கடிகள் அவர்களுக்கு ஏற்படும் பொழுது வலியவே இறைவனிடம் சரணடைந்து அவனுக்குப் பணிந்து நெருக்கடிகளை அகற்றுமாறு கேட்கின்றனர்.
இங்கு கூறப்படுகிற ஒன்பதும் இறைவனைப் பணிந்தல்லாமல் இருக்க முடியாது என்பது உறுதியாகும். இவற்றை அறிந்திருந்தும் மனிதர்களில் பெரும்பாலார் அல்லாஹ்வுக்கு மாறு செய்கின்றனர்.
அவர்களின் மீது வேதனையே விதியாகி விட்டது.
அவரை இறைவன் இழிவாக்கினால் அவருக்கு எவரும் சங்கையை அளித்து விட முடியாது. அல்லாஹ் எவரைக் கண்ணியப்படுத்து கின்றானோ அவரை எவரும் இழிவாக்கி விடவோ, அவன் இழிவாக்கியவரை எவரும் கண்ணியப்படுத்தி விடவோ முடியாது.
அவன் நாடியதைச் செய்வான். அவனை யாரும் கேட்க முடியாது.
இந்த 18-வது வசனத்தை ஓதியவரும், ஓதுவதைச் செவியேற்றவரும் இறைவனுக்காக ஒரு ஸுஜூது செய்வது கடமையாகும்.

## சிரம் பணிதல் (ஸுஜூது என்னும் ஸஜ்தா) 9

( இரண்டு ஸஜ்தா வசனங்களுக்கு இரண்டு இமாம்களின் கருத்துகள் )



குர்ஆனில் ஸஜ்தா வசனத்தை ஓதும்போது செய்யும் ஸஜ்தாவின்போது ஓத வேண்டிய துஆ
سَجَدَ وَجْهِى لِلَّذِى خَلَقَهُ وَشَقَّ سَمْعَهُ وَبَصَرَهُ تَبَارَكَ اللَّهُ أَحْسَنُ الْخَالِقِينَ
ஸஜத வஜ்ஹிய லில்லதீ கலகஹு, வஷக்க ஸம்அஹு, வபசரஹு பிஹவ்லிஹி வகுவ்வதிஹி ஃப தபாரகல்லாஹு அஹ்ஸனுல் காலிகீன்.
பொருள் :- எனது முகம், அதனை படைத்து, தனது ஆற்றலாலும் சக்தியாலும் அதன் காது-கண் புலன்களுக்கு வழி அமைத்துக் கொடுத்து இறைவனுக்கு ஸஜ்தா செய்துவிட்டது. படைப்பாளர்களில் மிகச் சிறந்தவனாகிய அல்லாஹ் பாக்கியம் உடையவன்.
ஆதாரம் : திர்மிதி, அஹ்மத்
இந்த ஸஜ்தாவிற்கு வுழூ தேவையில்லை. தக்பீர் இல்லை. ஸலாம் சொல்ல வேண்டியதில்லை. அதே நேரம் தொழுகையில் இந்த ஸஜ்தாவை செய்யும்போதும் எழும்பும் பொழுதும் தக்பீர் சொல்லலாம் என்பதற்கு பின்வரும் செய்தி ஆதாரமாக உள்ளது.
البخاري 785 – عَنْ أَبِي هُرَيْرَةَ، أَنَّهُ كَانَ «يُصَلِّي بِهِمْ، فَيُكَبِّرُ كُلَّمَا خَفَضَ، وَرَفَعَ»، فَإِذَا انْصَرَفَ، قَالَ: إِنِّي لَأَشْبَهُكُمْ صَلاَةً بِرَسُولِ اللَّهِ صَلَّى اللهُ عَلَيْهِ وَسَلَّمَ
‘குனியும் போதும் நிமிரும் போதும் தக்பீர் கூறி அபூ ஹுரைரா(ரலி) தொழுகை நடத்திவிட்டு ‘நான் உங்களுக்கு நபி(ஸல்) அவர்களின் தொழுகை போன்றே தொழுது காட்டினேன்’ என்றும் கூறினார்கள்.
அறிவிப்பவர்:அபூஸலமா ஆதாரம்:புகாரி-785
திருக்குர்ஆனில் ஸஜ்தா வசனங்கள் எத்தனை?
திருக்குர்ஆனில் 15 வசனங்களின் ஓரத்தில் ஸஜ்தா என்று எழுதப்பட்டிருக்கும். இவ்வசனங்களை நாம் ஓதும்போது ஸஜ்தா செய்ய வேண்டும் என்பதைக் குறிப்பிடுவதற்காக இவ்வாறு அச்சிடும் வழக்கம் ஏற்பட்டது.
ஸஜ்தா செய்ய வேண்டிய வசனங்கள்
எண் ஸூராக்களின் பெயர்கள் வசன எண்
1 ஸூரத்துல் அஃராஃப் (சிகரங்கள்) 7:206
2 ஸூரத்துத் ரஃது (இடி) 13:15
3 ஸூரத்துந் நஹ்ல் (தேனி) 16:50
4 பனீ இஸ்ராயீல்(இஸ்ராயீலின் சந்ததிகள்) 17:109
5 ஸூரத்து மர்யம் 19:58
6 ஸூரத்துல் ஹஜ் 22:18
7 ஸூரத்துல் ஹஜ் 22:77
8 ஸூரத்துல் ஃபுர்ஃகான் (பிரித்தறிவித்தல்) 25:60
9 ஸூரத்துந் றம்லி (எறும்புகள்) 27:25
10 ஸூரத்துஸ் ஸஜ்தா 32:15
11 ஸூரத்து ஸாத் 38:24
12 ஸூரத்து ஹாமீம் ஸஜ்தா 41:38
13 ஸூரத்துந் நஜ்ம் (நட்சத்திரம்) 53:62
14 ஸூரத்துல் இன்ஷிகாக் (பிளந்து போதல்) 84:21
15 ஸூரத்துல் அலஃக் (இரத்தக்கட்டி) 96:19
இப்படி 15 இடங்களின் ஓரத்தில் ஸஜ்தா என்று அச்சிட்டாலும் நமது நாட்டில் உள்ள ஷாஃபி, ஹனஃபி மத்ஹபினர் 14 இடங்களில் மட்டும் தான் ஸஜ்தாச் செய்ய வேண்டும் என்று கூறுகின்றனர்.

22 ஆம் அத்தியாயத்தில் இரண்டு இடங்களில் ஸஜ்தா எனக் குறிப்பிட்டிருப்பார்கள். இதில் இரண்டாவது இடமாகிய 77வது வசனம்:
يٰۤاَيُّهَا الَّذِيْنَ اٰمَنُوْا ارْكَعُوْا وَاسْجُدُوْا وَ اعْبُدُوْا رَبَّكُمْ وَافْعَلُوْا الْخَيْرَ لَعَلَّكُمْ تُفْلِحُوْنَ۩
ஈமான் கொண்டவர்களே! நீங்கள் ருகூஃ செய்யுங்கள்; இன்னும் ஸஜ்தாவும் செய்யுங்கள்; இன்னும் உங்கள் இறைவனை வணங்குங்கள்; மேலும்: நீங்கள் வெற்றி பெறும் பொருட்டு, நன்மையே செய்யுங்கள். (குர்ஆன் : 22:77)
"இது ஷாஃபி இமாம் கருத்துப்படி ஸஜ்தாச் செய்யும் இடம்'' என்று அச்சிட்டுள்ளனர். அந்த வசனத்தை ஓதும்போது ஹனஃபி மத்ஹபினர் ஸஜ்தாச் செய்ய மாட்டார்கள். அவர்களுக்கான ஸஜ்தா வசனங்கள் 14 தான்.
அதுபோல் 38:24 வசனத்தை ஓதும்போது ஷாஃபி மத்ஹபினர் ஸஜ்தாச் செய்வதில்லை.
قَالَ لَقَدْ ظَلَمَكَ بِسُؤَالِ نَعْجَتِكَ اِلٰى نِعَاجِهٖ وَاِنَّ كَثِيْرًا مِّنَ الْخُلَطَآءِ لَيَبْغِىْ بَعْضُهُمْ عَلٰى بَعْضٍ اِلَّا الَّذِيْنَ اٰمَنُوْا وَعَمِلُوا الصّٰلِحٰتِ وَقَلِيْلٌ مَّا هُمْ وَظَنَّ دَاوٗدُ اَنَّمَا فَتَنّٰهُ فَاسْتَغْفَرَ رَبَّهٗ وَخَرَّ رَاكِعًا وَّاَنَابَ ۩
(அதற்கு தாவூது:) "உம்முடைய ஆட்டை அவர் தம்முடைய ஆடுகளுடன் சேர்த்து விடும்படிக் கேட்டது கொண்டு நிச்சயமாக அவர் உம்மீது அநியாயம் செய்து விட்டார்; நிச்சயமாகக் கூட்டாளிகளில் பெரும்பாலோர் - அவர்களில் சிலர் சிலரை மோசம் செய்து விடுகின்றனர்; ஈமான் கொண்டு (ஸாலிஹான) நல்லமல்கள் செய்பவர்களைத் தவிர; இத்தகையவர் சிலரே" என்று கூறினார்;
இதற்குள் "நிச்சயமாக நாமே அவரைச் சோதித்து விட்டோம்" என்று தாவூது எண்ணித் தம்முடைய இறைவனிடம் மன்னிப்பு கோரிக் குனிந்து விழுந்தவராக இறைவனை நோக்கினார். (குர்ஆன் : 38:24)
திருக்குர்ஆன் ஓரத்தில் ஸஜ்தா என்று அச்சிடப்பட்டாலும் அந்த வசனத்தை ஓதும்போது ஷாஃபி மத்ஹபினர் ஸஜ்தாச் செய்வதில்லை. எனவே இவர்களுக்கும் 14 ஸஜ்தா வசனங்கள் தாம்.

## சிரம் பணிதல் (ஸுஜூது என்னும் ஸஜ்தா) 10

( "இறைவனின் திருப்பெயரால் " என்ற வாசகம் வந்த வரலாறு )

وَاِذَا قِيْلَ لَهُمُ اسْجُدُوْا لِلرَّحْمٰنِ قَالُوْا وَمَا الرَّحْمٰنُ اَنَسْجُدُ لِمَا تَاْمُرُنَا وَزَادَهُمْ نُفُوْرًا ۩
"இன்னும் அந்த ரஹ்மானுக்கு நீங்கள் சிரம் பணிந்து ஸுஜூது செய்)யுங்கள் என அவர்களுக்குக் கூறப்பட்டால், 'அர்ரஹ்மான் என்றால் என்ன? நீர் கட்டளையிடக் கூடியதற்கெல்லாம் நாம் சிரம் பணி(ந்து ஸுஜூது செய்)ய வேண்டுமா?' எனக் கூறுகின்றனர். அது அவர்களுக்கு வெறுப்பையே அதிகரிக்கின்றது. ( குர்ஆன் 25:60)

"அல்லாஹ்'' எனும் பதத்தைத் தவிர அல்லாஹ்வுக்கு இலக்கணங்களாகவும். வருணனைகளாகவும் கூறப்படும் எந்தப் பதத்தையும் அவர்கள் ஏற்பதில்லை.
ஆகவே அவர்களை நோக்கி "நீங்கள் ரஹ்மானுக்கு ஸுஜூது செய்யுங்கள்" என ஒரு சமயம் கூறப்பட்டது. அதற்கு மக்கத்துக் காஃபிர்கள். 'ரஹ்மான்' என்றால் 'யமாமா' எனும் ஊரில் இருக்கிற ரஹ்மானைத் தவிர வேறு யாரையும் நாங்கள் அறியோம் எனக் கூறினர்.
தன்னையும் ஒரு நபி எனப் பொய்யாக வாதித்துக் கொண்டிருந்த 'முஸைலமா' என்பவன் 'யமாமா" வாசியாவான். அவனை இவர்கள் 'யமாமா ரஹ்மான்' எனக் கூறிக் கொண்டிருந்தார்கள். அதனால் தான் "ரஹ்மான் என்றால் என்ன?" எனக் கூறினர்.
இவ்வாறே இவர்களுக்கும் பெருமானார் (ஸல்) அவர்களுக்கும் ஹுதைபிய்யா எனுமிடத்தில் வைத்து ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது.அதனை எழுதி இரு சாராரும் கையெழுத்திடுவதற்காக எழுத்தரை நோக்கி,
"பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்" என்பதை முதலில் எழுதுமாறு பெருமானார் (ஸல்) அவர்கள் சொன்னார்கள். உடனே எதிரிகள், நீங்கள் சொல்லும் 'ரஹ்மானையும், ரஹீமையும் எங்களுக்குத் தெரியாது; " இறைவனின் திருப்பெயரால் " என்றே எழுதுங்கள் " எனக் கூறி விட்டார்கள்.
"அல்லாஹ் என்பது வேறு; ரஹ்மான் என்பது வேறு என்றே எண்ணிக் கொண்டிருந்தனர்.
("இறைவனின் திருப்பெயரால் " - என்று போர்டில், நோட்டிஸில், வால்போஸ்டரில் எழுதும் நவீனத்துவ கொள்கை வாதிகள் சற்று இதனை கவனிக்கவும்)
இதனாலேயே நீர் ஏவக் கூடியதற்கெல்லாம் நாங்கள் ஸுஜூது செய்ய வேண்டுமா? எனக்கேட்டனர்.
அல்லாஹ்விற்குரிய வர்ணனைதான் ரஹ்மான் என அவர்கள் உணரவில்லை.
இரண்டும் வெவ்வேறானவை என்ற அவர்களுடைய எண்ணமானது விசுவாசங் கொள்ளுதல், இறைவனுக்கு ஸுஜூது செய்தல் ஆகியவற்றின் மீது அவர்களுக்கு வெறுப்பை அதிகரித்துவிட்டது.
قُلِ ادْعُوا اللّٰهَ اَوِ ادْعُوا الرَّحْمٰنَ اَيًّا مَّا تَدْعُوْا فَلَهُ الْاَسْمَآءُ الْحُسْنٰى وَلَا تَجْهَرْ بِصَلَاتِكَ وَلَا تُخَافِتْ بِهَا وَابْتَغِ بَيْنَ ذٰ لِكَ سَبِيْلًا
"நீங்கள் (அவனை) அல்லாஹ் என்று அழையுங்கள்; அல்லது அர்ரஹ்மான் என்றழையுங்கள்; எப்பெயரைக் கொண்டு அவனை நீங்கள் அழைத்தாலும், அவனுக்கு(ப் பல) அழகிய திருநாமங்கள் இருக்கின்றன" என்று (நபியே!) கூறுவீராக ! (குர்ஆன் : 17:110)
அதாவது நீங்கள் ஏற்றாலும், ஏற்காவிட்டாலும் அவனே அல்லாஹ் ; அவனே அர்ரஹ்மான்.
எனவே இறை நம்பிக்கையாளர்களோ, அளவில்லா அருளாளன் நிகரில்லா அன்புடையோனான அல்லாஹ்வை வழிபடுகிறார்கள். அவனை மட்டுமே ஏக இறைவன் என நம்பி அவனுக்கு சிரம் பணிக்கிறார்கள்.
இந்த குர்ஆன் ( 25 : 60) -வது வசனத்தை ஓதியவரும். ஓதுவதைக் கேட்டவரும் ஒரு ஸுஜுது செய்தல் கடமையாகும்.

**சிரம் பணிதல் (ஸுஜூது என்னும் ஸஜ்தா) 11**
( சூரியனுக்கு சிரம் பணிதல்)



குர்ஆன் 27: 24. அவளும் அவள் சமூகத்தாரும் அல்லாஹ்வை விடுத்துச் சூரியனுக்குச் சிரம்பணிவோராக இருக்கக் கண்டேன். அவர்களின் செயல்களை அவர்களுக்கு ஷைத்தான் அழகானவையாகக் காட்டி, (நல்)வழியிலிருந்து அவர்களை அவன் தடுத்துவிட்டான். எனவே, அவர்கள் நல்வழி பெறமாட்டார்கள்.
குர்ஆன் 27: 25. அவர்கள் அல்லாஹ்வுக்குச் சிரம்பணி(யத் தெரி)யாதவர் களாக உள்ளனர். அவன்தான் வானங்கள் மற்றும் பூமியில் மறைந்திருப்பவற்றை வெளிக்கொணர்கின்றான்; நீங்கள் மறைப்பதையும் வெளிப்படுத்துவதையும் அறிகின்றான்.
குர்ஆன் 27: 26. (அவன்தான்) அல்லாஹ்: அவனைத் தவிர வேறு இறைவ னில்லை; அவன் மகத்தான அரியணையின் அதிபதி ஆவாள் (என்றும் கூறியது).

சற்று தாமதமாக வந்த கொண்டைலாத்திப் பறவை ஹூத் ஹூத் (Hoopee ), முக்கியமான தகவல் ஒன்றை அரசர் சுலைமான் (அலை) அவர்களிடம் கொண்டுவந்தது. அன்றைய "ஸபா' (யமன்) நாட்டில் எல்லா வளங்களும் செல்வங்களும் உள்ள பில்கீஸ் என்ற அரசி ஆட்சி செய்கிறார் அவரும் அவருடைய குடிமக்களும் சூரிய வழிபாடு செய்துவருகின்றனர் என்பதே அத் தகவல்லாகும்.)
நான் அந்த நாட்டவர்களை ஆட்சி செய்யும் ஒரு பெண்ணைக் கண்டேன்" என ஹுத்ஹுத் கூறியது
அந்த அரசி (யமன் நாட்டின் தலைநகர் ) 'ஸன்ஆ' விலிருந்து மூன்று மைல் தொலைவிலுள்ள மஃரிப்' எனும் இடத்தில் இருந்தார். அவரது அரண்மனையில் முன்னூற்றுப் பன்னிரண்டு ஆலோசகர்கள் இருந்தனர். அவர்களில் ஒவ்வொருவருக்குக் கீழும் உண்மையான பத்தாயிரம்பேர் இருந்தனர்
அரேபிய தீபகற்பத்தின் தென்மேற்கில் உள்ள நாடே ' யமன் ( ஏமன்) ஆகும். இதுவே முற்காலத்தில் ஸபா (சேபா) என அழைக்கப்பட்டுவந்தது. அதன் மேற்கே செங்கடலும் வடக்கே சவூதியும் உள்ளன. ஸபா, மயீன், கத்பான், ஹளரமவ்த் ஆகிய நான்கு குறுநிலங்களை உள்ளடக்கியதாக முன்பு இருந்தது.
கி.மு 900வாக்கில் அங்கு பண்டைய சபேபியன் (ஸபா) அரசு இருந்தது. அப்போது பில்கீஸ் அல்லது பல்கீஸ் அரசி 9 ஆண்டுகள் ஆட்சி புரிந்தார் என்று கூறப்படுகிறது. தலைநகர் 'ஸன்ஆ அருகில் உள்ள மஃரிப்தான் அன்றைய தலைநகராக விளங்கியது. பிற்காலத்தில் அங்கு பிரபலமான அணை கட்டப்பட்டது.
சூரியனை வழிபட்டுவந்த ஸபா மக்கள் போராரும் நபியுமான சுலைமான் (அலை) அவர்களால் ஓரிறைக் கொள்கைக்கு மாறினார். சுலைமான் (அலை) பேரரசையும் அரண்மனையையும் நேரில் காணவந்த அரசி பில்கீஸ் ஈமான் கொண்டதோடு சுலைமான் (அலை) அவர்களை மணந்தும்கொண்டார் என்று சொல்லப்படுகிறது.
அடுத்த தொடர், "அவள் அனைத்து (வகை)ப் பொருட்களும் அதாவது செல்வாக்குமிக்க ஓர் அரசருக்கு வேண்டிய உலகச் சாதனங்கள் அனைத்தும்- வழங்கப்பெற்றிருக்கிறாள்; அவளுக்கு மாபெரும் அரியணையும் உள்ளது" என அப்பறவை கூறியது.

அதாவது அரசி அமர்வதற்காகப் பிரமாண்டமான, பிரமிப்பூட்டும் வகையில் அமைந்த அரியாசனம் உள்ளது. அது பொன்னாலும் வகை வகையான வைரங்களாலும் முத்துகளாலும் அலங்கரிக்கப்பட்டுள்ளது.
வரலாற்றறிஞர்கள் கூறுகிறார்கள். இந்த அரியணை, மாபெரும் மாளிகை ஒன்றில் இருந்தது. அம்மாளிகை உயரமாகவும் வலுவாகவும் கட்டப்பட்டிருந்தது. மாளிகையின் கிழக்கே முன்னூற்று அறுபது மாடங்களும் அவ்வாறே மேற்கே முன்னூற்று
அறுபது மாடங்களும் இருந்தன.
360 மாடங்களின் எண்ணிக்கை என்பது அக்காலத்தில் ஒரு வருடத்திற்கு 360 நாட்களும் மீதி 5 நாட்கள் ஓய்வு நாட்களாகவும் கருதப்பட்டது.
(உ-ம்) இந்தியா :

"ரிக்வேதம் பன்னிரண்டு மாதங்கள் மற்றும் 360 நாட்கள் கொண்ட ஒரு நாட்காட்டியை விவரிக்கிறது.
மீசோ அமெரிக்கா:
மாயன் லாங் கவுண்ட் நாட்காட்டியில் , ஆண்டின் சமமான 360 நாட்களாகும்.
எகிப்து :
பண்டைய எகிப்தியர்களும் 360 நாள் காலண்டரைப் பயன்படுத்தினர் . கூடுதல் 5 நாட்கள் எவ்வாறு சேர்க்கப்பட்டன என்பதை ஒரு புராணம் சொல்கிறது."
சூரியஒளி உதயமாகும் ஒவ்வொரு நாளும் ஒரு மாடத்தின் வழியாக நுழைந்து, அதற்கு நேர் எதிரிலுள்ள மாடம் வழியாக சூரியன் மறையும் ஒளி மாடத்தில் புகும் விதத்தில் மாளிகையின் கட்டட அமைப்பு உருவாக்கப்பட்டிருந்தது. இதனால் அங்குள்ளவர்கள் அம்மாடத்தை சூரியக்கோயிலாக பாவித்து, காலையிலும் மாலையிலும் அங்கு சூரியனை வணங்கி சிரம் பணிந்துவந்தனர்.
இதையே அடுத்த வசனம் (24), அவளும் அவள் சமூகத்தாரும் அல்லாஹ்வை விடுத்துச் சூரியனுக்குச் சிரம்பணிவோராக இருக்கக் கண்டேன். அவர்களின் செயல்களை அவர்களுக்கு ஷைத்தான் அழகானவையாகக் காட்டி (நல்வழியிலிருந்து -அதாவது உண்மை வழியிலிருந்து- அவர்களை அவன் தடுத்துவிட்டான். எனவே, அவர்கள் நல்வழி பெறமாட்டார்கள்" என்று ஹுத்ஹுத் கூறியது

அடுத்த வசனம் (25), அவர்கள் அல்லாஹ்வுக்குச் சிரம் பணியாதவர்களாக உள்ளனர்" என அப்பறவை சொன்னதாகத் தெரிவிக்கின்றது.
அதாவது அவர்கள் உண்மை வழியை அறியாதவர்களாக உள்ளனர். அல்லாஹ்வால் படைக்கப்பட்ட சூரியன் , நட்சத்திரங்கள் போன்றவற்றைப் புறக்கூறுக் கணித்து, ஏகன் அல்லாஹ்வை மட்டுமே வழிபட்டுச் சிரம்பணிவதுதான் உண்மை வழியாகும்.

மற்றொரு வசனத்தில் அல்லாஹ் கூறுகின்றான்.
وَمِنْ اٰيٰتِهِ الَّيْلُ وَالنَّهَارُ وَالشَّمْسُ وَالْقَمَرُ‌ؕ لَا تَسْجُدُوْا لِلشَّمْسِ وَلَا لِلْقَمَرِ وَاسْجُدُوْا لِلّٰهِ الَّذِىْ خَلَقَهُنَّ اِنْ كُنْتُمْ اِيَّاهُ تَعْبُدُوْنَ
இரவும், பகலும்; சூரியனும், சந்திரனும் அவனுடைய அத்தாட்சிகளில் உள்ளவைதாம். ஆகவே, நீங்கள் அல்லாஹ்வையே வணங்குகிறவர்களாக இருந்தால், சூரியனுக்கும், சந்திரனுக்கும் ஸுஜூது செய்யாதீர்கள் - இவற்றைப் படைத்தவனாகிய அல்லாஹ்வுக்கே ஸுஜூது செய்யுங்கள். (குர்ஆன் : 41:37)
எனவே குர்ஆன் 27: 24, 25, 26 ஆகிய வசனங்களை ஓதினாலும் , ஓதுவதைக் கேட்டாலும் ஸுஜூது செய்யுங்கள்

## சிரம் பணிதல் (ஸுஜூது என்னும் ஸஜ்தா) 12



اِنَّمَا يُؤْمِنُ بِاٰيٰتِنَا الَّذِيْنَ اِذَا ذُكِّرُوْا بِهَا خَرُّوْا سُجَّدًا وَّسَبَّحُوْا بِحَمْدِ رَبِّهِمْ وَهُمْ لَا يَسْتَكْبِرُوْنَ۩
நம் வசனங்களின் மேல் நம்பிக்கை கொண்டோர் யாரென்றால் அவர்கள், அவற்றின் மூலம் நினைவூட்டப்பட்டால், அவர்கள் விழுந்து ஸுஜூது செய்தவர்களாய்த் தம் இறைவனைப் புகழ்ந்து, துதிப்பார்கள்; அவர்கள் பெருமை அடிக்கவும் மாட்டார்கள்.
(குர்ஆன் : 32:15)
இந்த வசனத்தை ஓதினாலும் பிறர் ஓதுவதை செவியேற்றாலும் ஸுஜூது செய்ய வேண்டும் என எல்லா இமாம்களும் ஏக மனதாக கூறி இருக்கிறார்கள். இமாமுல் அஃளம் ரஹ்மத்துல்லாஹி அவர்களது சொற்படி இது ஒன்பதாவது ஸஜ்தா . இமாம் ஷாஃபிஈ ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களது சொற்படி இது பத்தாவது ஸஜ்தா ஷெய்குல் அக்பர் குத்திஸ ஸிர்ருஹூ அவர்கள் இந்த ஸஜ்தாவுக்கு ஸஜ்தயே ததக்குர் என்று பெயர் கூறியிருக்கிறார்கள் என்பதாக தஃப்ஸீருல் காஷிஃபியில் கூறப்பட்டிருக்கிறது
ஸுஜூது செய்பவர் தன்னுடைய ஸஜ்தாவில் அந்தந்த ஆயத்துக்குத் தக்கவாறாக துஆச் செய்ய வேண்டும்.

இந்த ஆயத்தை ஓதி ஸஜ்தாச் செய்பவர் "அல்லாஹும் மஜ்அல்னீ மினஸ் ஸாஜிதீன லி வஜ்ஹிக்க அல்முஸப்பிஹீன பி ஹம்திக்க வ அஊதுபிக்க மின் அன் அகூன மினல் முஸ்தக்பிரீன அன் அம்ரிக்க " நாயனே! உனக்காக ஸஜ்தாச் செய்பவர்களிலும், உனது புகழைக் கொண்டு ஸ்தோத்திரம் செய்தவர்களிலும் என்னை ஆக்குவாயாக. இன்னும் உனது கட்டளையை விட்டுப் பெருமை கொண்டவர்களில் நான் ஆகி இருப்பதை விட்டு, உன்னைக் கொண்டு நான் காவல் தேடுகிறேன்) என்று பிரார்த்திக்க வேண்டும்.
ஃபஜ்ருத் தொழுகையில் மெதுவாகவோ, சப்தமிட்டோ ஸஜ்தாவுடைய ஆயத்தை ஓதுவதை இமாம் மாலிக் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் மக்ரூஹு என்று கூறியுள்ளார்கள்.

ஒருவர் ஃபஜ்ரு தொழுகையில் இதை ஓதி விட்டால் உடனே அவர் ஸஜ்தாச் செய்ய வேண்டுமா அல்லவா என்பதில் அந்த மதுஹபில் இருவித கருத்து இருப்பதாக ஃபத்ஹூர் ரஹ்மானில் கூறப்பட்டிருக்கிறது.
ஒருவர் தொழுகையில் ஸஜ்தாவுடைய ஆயத்தை ஓதி, அந்த ஆயத்து சூரத்தின் கடைசியிலோ அல்லது கடைசிக்குப் பக்கத்திலோ அதாவது அந்த ஆயத்துக்குப் பிறகு ஒன்று அல்லது இரண்டு ஆயத்துகள் மட்டும் இருந்தால், அத்தொழுகையாளி விரும்பினால் உடனே ஸஜ்தா திலாவத்தைச் செய்து அப்புறம் திரும்ப நிலைக்கு வந்து, மறுபடியும் ருக்கூஉ சுஜூது செய்து தொழுகையை பூர்த்தி செய்யலாம்.
அல்லது திலாவத்தை நிய்யத்துச் செய்து ருக்குஉச் செய்து வழக்கம் போல் தொழுகையை நிறைவேற்றலாம். உடனே திலாவத்துக்காக ஸஜ்தாச் செய்யாமல் அந்த சூரத்தை இறுதி வரை ஓதி வழக்கம் போல் தொழுகையின் ருக்கூஉ, சுஜூதைச் செய்து, தொழுகையை நிறைவேற்றினால் அவர் மீதுள்ள ஸஜ்தா திலாவத்தின் கடமை தானாக நீங்கி விடுகிறது" என்பதாக குலாஸத்துல் ஃபத்தாவா என்னுங் கிரந்தத்தில் கூறப்பட்டிருக்கிறது.
நபிகள் பெருமானார் (ஸல்) அவர்கள் ஸஜ்தா எனும் பெயர் கொண்ட (இந்த) அத்தியாயத்தை ஓதினால் (இந்த 15வது வானம் முடித்ததும்) ஒரு ஸுஜுது செய்வார்கள்" என உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள் ( புகாரி, முஸ்லிம் )

## சிரம் பணிதல் (ஸுஜூது என்னும் ஸஜ்தா) 13



قَالَ لَقَدْ ظَلَمَكَ بِسُؤَالِ نَعْجَتِكَ اِلٰى نِعَاجِهٖ وَاِنَّ كَثِيْرًا مِّنَ الْخُلَـطَآءِ لَيَبْغِىْ بَعْضُهُمْ عَلٰى بَعْضٍ اِلَّا الَّذِيْنَ اٰمَنُوْا وَعَمِلُوا الصّٰلِحٰتِ وَقَلِيْلٌ مَّا هُمْ وَظَنَّ دَاوٗدُ اَنَّمَا فَتَنّٰهُ فَاسْتَغْفَرَ رَبَّهٗ وَخَرَّ رَاكِعًا وَّاَنَابَ ۩
தன்னுடைய பெண் ஆடுகளுடன் உனது பெண் ஆட்டைக் கேட்பதின் மூலம் உனக்குத் திட்டமாக அநியாயம் செய்து விட்டார். இன்னும் நிச்சயமாக கூட்டாளிகளில் பெரும்பாலானவர்கள் -அவர்களில் சிலர் சிலர் மீது அட்டூழியம் செய்கின்றனர். (ஆனால்) விசுவாசங் கொண்டு நற்செயல்களைச் செய்தார்களே அவர்களைத் தவிர, இன்னும் அவர்கள் மிகக் குறைவானவர்களே. ஆனால், நிச்சயமாக அவரை நாம் சோதித்து விட்டோம் என்று தாவூது உணர்ந்து, தன்னுடைய றப்பிடத்தில் பிழை பொறுக்கத்தேடி, ருக்கூஉ செய்தவராக வீழ்ந்து மீண்டார். (குர்ஆன் : 38:24 தஃப்ஸீருல் ஹமீத்)

வாதி வழக்குக் கூறிய பிறகு, பிரதிவாதியிடமும் வாக்கு மூலம் வாங்கிய பிறகு, இவ்வாயத்திற் கண்டவாறு ஹளரத் தாவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் தீர்ப்புச் செய்ததுடன், தம்முடைய நிலைமையையும் உணர்ந்து இறைவனிடம் பாவ மன்னிப்புக் கேட்டார்கள் என்பது இவ்வாயத்திற் கூறப்பட்டுள்ள விபரம்.
அல்ஹதீஸ்:- உம்மிடத்தில் இரண்டு வாதி பிரதிவாதிகள் வந்தால் மற்றவரிடமிருந்தும் செவியேற்பதற்கு முன்னதாக அவ்விருவரில் ஒருவருக்குத் தீர்ப்புச் செய்யலாகாது.
அறிந்துகொள்:- இந்த ஆயத்து திருக்குர்ஆனிலுள்ள ஸஜ்தா திலாவத்துள்ள ஆயத்துகளில் ஒன்று. ஆனால், இதில் ஸுஜுது செய்வதைக் குறித்த பதம் தெளிவாகக் கூறப்படாமல் ருக்கூஉ செய்வதைக் குறித்த பதம் மட்டுமே கூறப்பட்டிருப்பதால், இந்த ஆயத்தை ஓதியவுடன் ஸஜ்தாச் செய்யும் விஷயத்தில் இமாம்களிடத்தில் கருத்து வேறுபாடு இருக்கிறது.
'நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் சூரா (ஸாத்) ஸ்வாதில் ஸஜ்தாச் செய்து, இதில் தாவூத் தவ்பாவுக்காக ஸஜ்தாச் செய்தார். நாம் நன்றி செலுத்துவதற்காக ஸஜ்தாச் செய்கிறோம்'' என்று கூறினார்கள் என்பதாக இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு தஆலா அன்ஹுமா அவர்கள் கூறியிருக்கிறார்கள்.

இமாம் அபூஹனீஃபா ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களும் அவர்களது தோழர்களும் இந்த ஆயத்தை ஓதியவுடன் ஸஜ்தாச் செய்வது வாஜிபு என்றும், இது அஜீமத் என்றும் கூறி இருக்கிறார்கள். இமாம் மாலிக் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடத்திலும் இது வாஜிபுதான்.
இமாம் ஷாஃபிஈ ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடத்திலும், இமாம் அஹ்மதுப்னு ஹன்பல் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களிடத்திலும், தொழுகையல்லாத வேளையில் இந்த ஆயத்தை ஓதினால் ஸஜ்தாச் செய்வது முஸ்தஹப்பு.

இந்த ஆயத்தைத் தொழுகையில் ஓதி ஸஜ்தாச் செய்தால் தொழுகை முறிந்து விடும் என்பது இமாம் ஷாஃபிஈ ரஹ்மத்துல்லாஹி அலைஹி இமாம் அஹ்மதுப்னு ஹன்பல் ரஹ்மத்துல்லாஹி அலைஹி ஆகியவர்களது கருத்து. இது இமாம் அபூ ஹனீஃபா ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களது கருத்துப்படி திருக்குர்ஆனிலுள்ள ஸஜ்தாவுடைய ஆயத்துகளில் பத்தாவது ஆயத்தாகும்.
இந்த ஸஜ்தாவுக்கு 'ஸஜ்தயே இனாபதி' என்று ஃபுத்தூஹாத்துல் மக்கிய்யாவில் கூறப்பட்டிருக்கிறது.
فَغَفَرْنَا لَهٗ ذٰ لِكَ وَاِنَّ لَهٗ عِنْدَنَا لَزُلْفٰى وَحُسْنَ مَاٰبٍ
ஆகவே, நாம் அவருக்கு அ(க் குற்றத்)தை மன்னித்தோம்; அன்றியும், நிச்சயமாக அவருக்கு நம்மிடத்தில் நெருங்கிய (அந்தஸ்)தும், அழகிய இருப்பிடமும் உண்டு. (குர்ஆன் : 38:25)
ஹிக்காயத்து: அறூபா இப்னு ஹனானா என்பவரின் மனைவியை, ஹளரத் தாவூத் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் விரும்பினார்கள் . ஆதலின், அறூபாவை அழைத்து, அவரது மனைவியை விவாகரத்துச் செய்யுமாறு கூறி, அவர் விவாகரத்துச் செய்த பிறகு அந்தப் பெண்ணை நபியவர்கள் திருமணம் செய்து கொண்டார்கள்.
அந்தப் பெண் ஷாபா.ஃ. என்பவரது புதல்வி: பின் ஷாவாஃ என்று பெயர். பின் ஷாவீஃ என்றும் கூறுவர். இவர் தாம் ஹளரத் சுலைமான் அலைஹிஸ்ஸலாம் அவர்களது தாயார். ஒரு பெண்ணை விரும்பினால் அந்தப் பெண்ணின் கணவனை விவாகரத்துச் செய்யச் சொல்லி, திருமணம் செய்வது அக்கால ஷரீஅத்தில் அனுமதிக்கப்பட்டிருந்தது. அக்காலத்திலுள்ள உம்மத்துகள் இவ்வாறு திருமணம் செய்து கொள்வது வழக்கம். என்றாலும் ஹளரத் தாவுது அலைஹிஸ்ஸலாம் அவர்கள், முர்ஸலான நபியாக இருந்ததால், அவர்களது உயர்தரமான அந்தஸ்துக்கு இம்முறையில் திருமணம் செய்வது நல்லதல்ல வென்பதை உணர்த்தவே, இவ்விரு வழக்காளிகளும் வந்தனர். இவ்வாதி பிரதிவாதிகள் உண்மையில் மலக்குகள். மனித வடிவத்தில் தோன்றி, ஹளரத் தாவூது அலைஹிஸ்ஸலாம் அவர்களது நிலையை உருவகமாகக் கூறி உணர்த்தினர். அவர் அரசராகவும் இருந்ததால் வழக்குக்கு தீர்ப்புச் செய்தவுடன், தமது நிலையையும் உணர்ந்து, இவ்வழக்கிலுள்ள அகமியத்தைத் தெரிந்து கொண்டு, தம்முடைய உயர்ந்த அந்தஸ்துக்குத் தகுதியில்லாத இச்செய்கைக்காக வருந்தி, இறைவனிடம் பாவமன்னிப்புக் கேட்டு, அவரிடம் மீண்டார்.

இறைவனும் அவரது தவ்பாவை அங்கீகரித்து, மன்னித்ததுடன். தம்மிடத்தில் அவருக்கு மேலும் அதிகமான நெருக்கத்தைக் கொடுத்து, நல்ல ஒதுங்குமிடத்தையும் அருளினான்.
இக்கதை சம்பந்தமாக, வரலாற்றறிஞர்கள் கூட்டியும் குறைத்தும் எழுதி இருக்கின்றனர். திருக்குர்ஆன் விரிவுரையாளர்களில் சிலரும் விஷய விளக்கத்துக்காக இக்கதையை தங்கள் கிரந்தங்களில் எடுத்தெழுதி இருக்கின்றனர். நபிமார்களது அந்தஸ்துக்கு பங்கம் வரத் தக்கவாறு கதைகளைக் கூறுவதும், அதற்கு தவறான விரிவுரைகள் கூறுவதும் கூடாத காரியங்களாகும்.
"ஹளரத் தாவூது அலைஹிஸ்ஸலாம் அவர்கள் அறூபாவிடம் அவரது மனைவியை விவாகரத்துச் செய்யச் சொல்லி, தமக்களிக்குமாறு கூறியதைத் தவிர வேறு ஒன்றும் செய்யவில்லை. இதனை அல்லாஹுதஆலா கண்டித்து உணர்த்தியுள்ளான்" என்று இப்னு அப்பாஸ் ரலியல்லாஹு தஆலா அன்ஹுமா, இப்னு மஸ்ஊத் ரலியல்லாஹு தஆலா அன்ஹு ஆகிய இருவரும் கூறியதாக ரிவாயத்துச் செய்யப்பட்டிருக்கிறது.
தவிர, ஹளரத் தாவூது அலைஹிஸ்ஸலாம் அவர்களது நோக்கத்தை அவர் தெரிந்து கொண்ட பிறகு அந்தப் பெண்ணை தமது திருமண பந்தத்தில் வைத்திருக்க அறூபா வெட்கமடைந்து மனப்பூர்வமாக விவாகரத்துச் சொல்லி விட்டார். இதுதான் உண்மையான செய்தி.

இதற்கு மாறாக பைபிள் முதலிய கிரந்தங்களில் கூறப்பட்டுள்ள விபரங்கள் நபித்துவ அந்தஸ்துக்குத் தகாதவைகளாகும். அவற்றை பேச்சாளர்கள் தங்களது மேடைப் பேச்சுக்களில் விபரித்துக் கூறுவதுங்கூட தகாது. எனவேதான் கதை சொல்பவர்கள் கூறியுள்ளபடி தாவூது அலைஹிஸ்ஸலாம் அவர்களது செய்தியை ஒருவர் கூறுவாராயின், அவருக்கு நூற்று அறுபது சவுக்கடி கொடுக்க வேண்டும் என ஹளரத் அலீ கர்ம மல்லாஹு வஜ்ஹஹு அவர்கள் கூறியுள்ளார்கள்.
சுருங்கக் கூறுமிடத்து, கவாஸ் என்னும் விசேஷமானவர்கள் செய்யும் பாவமான காரியங்கள் மற்றவர்கள் செய்யும் பாவங்களைப் போலல்ல. சாமான்யர்கள் தங்களது இயற்கை இச்சையினாலேயே பாவத்தில் ஈடுபடுவர். விசேஷமானவர்கள் தவறான அர்த்தம் செய்து கொண்டதினாலேயே பாவத்தில் ஈடுபடுவர். ஆனால், தங்களது கருத்து தவறு என்று வெளியானவுடன், தாங்கள் தவறிழைத்ததாக தாங்களே முடிவு செய்து அதனை விட்டு விலகி தவ்பாவும் செய்வர்.
ரிவாயத்து: ஹளரத் தாவூது அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஸஜ்தாவில் பணிந்து நாற்பது நாட்கள் தலையை உயர்த்தாமல் இருந்தார்களாம். ஆனால், தொழுகைக்கும் இன்றியமையாத இதர காரியங்களுக்கு மட்டும்தான் தலையை உயர்த்துவார்களாம்.

அவரது கண்ணீர் நிற்காமல் ஓடிக் கொண்டிருந்ததன் காரணமாக, அவர் தலையைச் சுற்றிலும் புற் பூண்டுகளும் கூட முளைத்ததாம். அவர் தண்ணீர் அருந்தினால் தண்ணீரில் மூன்றிலொரு பாகம் கண்ணீராக இருக்குமாம். இதனால் அவரது அரசாங்க அலுவல்களையும் கூட மறந்து இறைவன் பால் முழு மனதுடன் திரும்பினார். இதனைப் பார்த்து அவரது புதல்வர்களில் ஒருவரான அய்வா என்பவர், அவரது அரசுக்கு விரோதமாகக் கிளர்ச்சி செய்து, பனூ இஸ்ராயீல்களிலுள்ள ராஜ துரோகிகளைத் தன்னுடன் சேர்த்துக் கொண்டு கலகம் செய்தாராம். நாற்பது நாட்களுக்குப் பிறகு தவ்பாவை இறைவன் அங்கீகரித்த பிறகு தமது புதல்வரை எதிர்த்துப் போரிட்டு தோற்கடித்தார்கள்.

## சிரம் பணிதல் (ஸுஜூது என்னும் ஸஜ்தா) 14



فَاِنِ اسْتَكْبَرُوْا فَالَّذِيْنَ عِنْدَ رَبِّكَ يُسَبِّحُوْنَ لَهٗ بِالَّيْلِ وَالنَّهَارِ وَهُمْ لَا يَسْـَٔـمُوْنَ۩

ஆனால் (அல்லாஹ்வை வணங்காது எவரேனும்) பெருமையடித்தவர்களாக இருப்பின் (அவனுக்கு நஷ்டமில்லை), உம் இறைவனிடம் இருப்பவர்கள் (மலக்குமார்கள்) இரவிலும் பகலிலும் அவனை தஸ்பீஹு செய்து (துதித்துக்) கொண்டேயிருக்கிறார்கள்; அவர்கள் (அதில்) சோர்வடைவதுமில்லை. (குர்ஆன் : 41:38)
இந்த ஆயத்தை ஓதி முடிந்தவுடன் ஸஜ்தா செய்ய வேண்டும் .இது குர்ஆனில் 11-வது ஸஜ்தா .
வானவர்கள்(الْمَلَائِكَةُ) என்றால் யார் ?
மலக்குகள் (الْمَلَائِكَةُ) வானவர்கள் ‘மலக்’ என்றால் வானவர் என்பது பொருளாகும்.. இதன் பன்மை ‘ மலாயிக், மலாயிகா என்பதாகும்.’ மலக்’ என்ற சொல் குர்ஆனில் பதிமூன்று இடங்களிலும் ‘மலகைன்’ இருமை யாக இருதடவைகளும், ‘மலாயிகா’ என்று பன்மையில் 73 தடவைகளும் பயன் படுத்தப் பட்டுள்ளன.

1.வானவர்கள் என்றால் யார் ?
மலக்குகள் ஒளியினால் படைக்கப்பட்டவர்கள். அவர்கள் ஆண்களுமல்ல பெண்களுமல்ல. அவர்கள் எப்போதும் அல்லாஹ்வின் கட்டளைப்படியே நடப்பவர்கள். ஒருபோதும் அவனை மீறி நடக்கவோ மாறு செய்யவோ மாட்டார்கள். அவர்களுக்கு இடப்பட்ட கட்டளைகளை தவறாது செய்து முடிப்பார்கள்
வானவர்கள் ஒளியினாலும், ஜின்கள் நெருப்பினாலும், ஆதம் (என்னும் முதல் மனிதர்) உங்களுக்குக்கு விளக்கியவாறு (மண்ணினாலும்) படைக்கப்பட்டவர்கள்’ என அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர். அறிவிப்பவர்: ஆயிஷா(ரலி) முஸ்லிம், அஹ்மத்:2996)
மலக்குமார்கள் ஆண்களுமல்ல! பெண்களுமல்ல! இவர்களுக்கு ஊண், உறக்கம் எதுவும் கிடையாது. இவர்கள் அல்லாஹ்வைத் துதித்துக் கொண்டும், வணங்கிக் கொண்டும் இருப்பார்கள்
ஒருபோதும் அவனை மீறி நடக்கவோ மாறு செய்யவோ மாட்டார்கள். எப்போதும் அவன் கட்டளைப்படியே நடப்பவர்கள். (66:6) இவர்கள் இறைவனுக்கும் மனிதர்களுக்கு மிடையே தொடர்பு கொள்ளும் தூதர்களாவர்.
2.வானவர்கள் எப்போது படைக்கப்பட்டார்கள்?
என்பது இறைவனைத்தவிர எவருக்கும் தெரியாது. குர்ஆனிலோ நபிமொழிகளிலோ இது பற்றிய எந்த தகவலும் இல்லை.
இருப்பினும் அவர்கள் ‘மனிதன் படைக்கப்படுமுன் படைக்கப்பட்டவர்கள்’ என்பதை ‘பூமியில் என் பிரதிநிதியைப் படைக்கப்போகிறேன் என வானவர்களிடம் இறைவன் கூறிய போது’ என வரும் 2: 30-வது வசனத்தை ஆதாரமாகக் கொண்டு உறுதியாகக் கூறமுடியும்.
3.வானவர்களின்-எண்ணிக்கை.
அவர்களின் எண்ணிக்கையை அல்லாஹ்வைத் தவிர எவரும் அறியமாட்டார்கள். ‘மேலும் உம்முடைய இறைவனின் (வானவர்கள் என்னும்) படைகளை அவனைத் தவிர எவரும்
அறியமாட்டார்கள்’ (அல்குர்ஆன் 74:30) நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள்.
‘மிஃராஜின் போது ‘பைத்துல் மஃமூர்’ (வானவர்கள் தொழுமிடம்) உயர்த்தப்பட்டபோது (இது எந்த இடம்?) என ஜிப்ரீலிடம் கேட்டேன்.இது ‘பைத்துல் மஃமூர்’ என்ற இடமாகும். இங்கு ஒவ்வொரு நாளும் 70,000 வானவர்கள்

உள்ளே செல்வார்கள். சென்றவர்கள் மிண்டும் திரும்பி வருவதில்லை. (அறிவிப்பவர்: மாலிக் இப்னு ஸஃஸஆ, புகாரி 3207, முஸ்லிம் 162.)
மறுமை நாளில் நரகில் 70,000 கடிவாளங்கள் கட்டப்பட்டிருக்கும். அவற்றின் ஒவ்வொரு கடிவாளத்தையும் 70,000 வானவர்கள் இழுத்து வருவார்கள். (அறிவிப்பவர்: அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது (ரலி),
முஸ்லிம் 2842-29, திர்மிதி : 2573)
இவர்களை நம்புவது ஒவ்வொரு முஸ்லிமின் மீதும் கடமையாகும்.. இதற்கு ஆதாரமாக 'அல்லாஹ்வையும், வானவர்களையும், நம்பிக்கை கொண்டோரும்'என வரும் அல்குர்ஆனின் 2:285 வசனமேயாகும்..
4.வானவர்களை மனிதர்கள் பார்க்க முடியுமா?
நபிமார்கள் வானவர்களை நேரிலே பார்த்தும் பேசியுமுள்ளனர். நாயகத்தோழர்களும் 'திஹிய்யத்துப்னு கலீஃபத்துல் கல்பி' எனும் ஸஹாபியின் தோற்றத்தில் பார்த்துள்ளனர். இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். ஜிப்ரீல் (அலை) அவர்கள் திஹிய்யத்துல் கல்பி அவர்களின் உருவத்தில் வருவார்கள் (அதாரம்: அஹ்மத்)
மனித உருவத்தில் மலக்குமார்களை முன் வாழ்ந்த நபிமார்கள் பார்த்துள்ளனர் என்பதை குர்ஆன் தெளிவுப்படுத்துகிறது. இப்ராஹீம் (அலை) அவர்களிடம் வானவர்கள் மனித உருவத்தில் விருந்தினராக வந்த போது லூத் நபியின் மக்களும் பார்த்தனர் என்ற செய்தியை 11.69 வசனம் கூறுகிறது.
நபிகள் நாயகத்தின் காலத்திற்குப் பிறகு எவரும் வானவர்களைப் பார்த்ததில்லை. இனி எவரும் பார்க்கவும் முடியாது. ஆயினும் மறுமையில் நிச்சயம் அவர்களைப் பார்க்க முடியும்.
5. நபி(ஸல்) அவர்கள் ஜிப்ரீலை நேரில் கண்டார்களா?
முதல் தடவையாக நபி(ஸல்) அவர்கள் ஜிப்ரீலை (அலை) ஹிரா மலைக்குகையில் இயற்கையான தோற்றத்தில் கண்டார்கள்.
(அறிவிப்பவர்: ஆயிஷா(ரலி) புகாரி:)
இரண்டாவது தடவையும் அவரது இயற்கைத் தோற்றத்தில் வானிற்கும் பூமிக்கும் இடையே ஒர் ஆசனத்தில் அமர்ந்திருக்கக் கண்டேன் என நபிகளார்(ஸல்) கூறியதாக ஜாபிர் (ரலி) தெரிவிக்கிறார்கள். (நூல்:புகாரி:4)
மூன்றாவது தடவையாக மிஃராஜின் போது கண்டார்கள் ஸித்ரத்துல் முன்தஹாவுக்கு அருகில் மற்றொரு தடவையும் அவரை இறங்கக்கண்டார். (53:13,13) அங்கே தான் சொர்க்கமெனும் தங்குமிடம் உள்ளது. (53:15)
அந்த இலந்தை மரத்தை மூடவேண்டியது மூடியபோது அவரது பார்வை திசைமாறவில்லை. தாண்டவுமில்லை. (53:16,17) தமது இறைவனின் பெரும் சான்றுகளைக் கண்டார்.(53:18)
தூய்மையான வெண்ணிற ஆடையில் ஒரு மனிதர் வந்தார் என அறிவிக்கும் நபி மொழி, 'நபி(ஸல்) அவர்களும்,நாயத்தோழர் களும் மனித உருவத்தில் கண்டதற்கான ஆதாரமாகும்.' (முஸ்லிம் 1-8)
(நபி (ஸல்) அவர்கள் ஜப்ரீலை அசல் தோற்றத்தில் இரு தடவைகள் தான் பார்த்துள்ளதாகவும் முதலாவது தடவை பார்த்தது மனித உருவத்தில் என்றும் கூறுகின்றனர். இறைவனே அறிந்தவன்)
6. மனிதர்கள் வானவர்களாக முடியுமா ?
மனிதர்கள் ஒருபோதும் வானவர்களாக முடியாது. ஆனால் வானவர்கள் விரும்பிய தோற்றத்தில் வரமுடியும்.
7. வானவர்கள் இறைவனின் பிள்ளைகளா ?
சில மதத்தவர் வானவர்களை இறைவனின் பிள்ளைகள் எனக் கூறுவதையும் இறைமறை மறுக்கிறது.
' உங்கள் இறைவன் உங்களுக்கு ஆண்மக்களை வழங்கிவிட்டு தனக்கு வானவர்களை பெண்மக்களாக ஆக்கிக் கொண்டானா? (17:40) என்ற வசனமும், அவன் பெறவுமில்லை. பெறப்படவுமில்லை என்ற 112:1-4 வசனமும் இதற்கு ஆதாரமாகும்.
8. வானவர்கள் பெண்களா ?
வானவர்களை சிலர் தேவைதைகளாகவும் பெண்களாகவும்; சித்தரித்துக்கூறும் பொய்ச் செய்திகளையும் மறுத்து அவர்கள் பெண்களல்ல என இறைவனின் வசனங்கள் 43:19,37:150,53:27 தெளிவுபடுத்துகின்றன.
9. வானவர்களின் உருவத் தோற்றம்.
நான் வானவர் ஜிப்ரீலை அவரின் அசல் உருவத்தில் பார்த்தேன். அவருக்கு 600 இறக்கைகள் இருந்தன என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பவர்:அப்துல்லாஹ் இப்னு மஸ்வூது புகாரி,தப்ரானி).
(அவன்) வானவர்களை இரண்டிரண்டு, மும்மூன்று, நன்னான்கு இறக்கைகள்; கொண்ட தூதர்களாக அனுப்புவான் (குர்ஆன் 35:1)
'அதன் மேல் (நரகின் மீது) கடுமையும்,கொடுமையும் கொண்ட வானவர்கள் உள்ளனர்.
அழகிய தோற்றமுடைய வலிமை மிக்கவர் (ஜிப்ரீல்) அதைக்கற்றுக் கொடுக்கிறார். (53:5,6).
'அழகிய தோற்றமுடையவர்' என 12:31 என்ற வசனமும் தெளிவு படுத்துகிறது.
ذُو مِرَّةٍ 'தூ மிர்ரத்தின்' என்பதற்கு 'அழகிய தோற்றமுடையவர்,பெரும் வலிமை மிக்கவர்' என இப்னு அப்பாஸ் (ரலி) விளக்கமளிக்கிறார்கள்.
10. வானவர்களின் உணவு, பானம்
நபி இப்ராஹீம் (அலை) அவர்களிடம் கண்ணியமிக்க விருந்தினர் வந்தபோது அவர்களுக்கு காளைக் கன்றை பொரித்து வைத்ததும் உண்ணாததைக் கண்ட நபியவர்கள் பயந்துவிட்டார்கள். பயப்படாதீர்கள்.
நாங்கள் உங்களுக்கு நற்செய்தி கூறிவிட்டுச் செல்ல வந்த வானவர்கள்' என்ற செய்தி 51:26,27 வசனங்கள் எடுத்துரைக்கின்றன. இதிலிருந்து மனிதர்களின் உணவை உண்ணவோ, அருந்தவோ மாட்டார்கள் எனத் தெரியவருகிறது.

11. வானவர்கள்-வெட்கப்படுவார்கள்.
ஒருமுறை அபூபக்கர் (ரலி) ,உமர் (ரலி) நபிகளாரிடம் வந்தபோது, நபி(ஸல்) தமது ஆடைகளைச் சரி செய்யாத போது, உதுமான் (ரலி) வந்ததும் தமது ஆடையைச் சரிசெய்தார்கள். காரணம் வினவியபோது நபி (ஸல்) கூறினார்கள். 'வானவர்கள் எவர் விசயத்தில் வெட்கப்படுகிறார்களோ அவர் விசயத்தில் நானும் வெட்கப்படுகிறேன்' என்றார்கள். (அறிவிப்பவர்: ஆயிஷா (ரலி)
முஸ்லிம்:2401)
12. வானவர்கள்-வேதனை-அடைகிறார்கள்
இறைவனின் நேசத்திற்குரியவரே மலக்குகளின் நேசத்திற்கும் உரியவர். நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். 'வெங்காயம், பூண்டு (போன்றவற்றை) உண்டுவிட்டு நமது பள்ளிவாசல் பக்கம் வரவேண்டாம். நிச்சயமாக ஆதமின் மக்கள் வேதனை அடையும் (துர்வாடை வீசும்) பொருட்களிலிருந்து வானவர்களும் வேதனை அடைகிறார்கள்.' (அறிவிப்பவர்:ஜாபிர்இப்னுஅப்துல்லாஹ்,
முஸ்லிம்-1655) –
13. இறைவனின் விருப்பமே வானவர் விருப்பம்
இறைவன் நேசிப்பவர்களை வானவர்களும் அவரவர் அமலுக்கேற்பவும், தகுதிக்கேற்பவும் நேசிப்பார்கள். 'உயர்வும், மாண்பும் மிக்க அல்லாஹ், ஒரு அடியாரை நேசிக்கும் போது வானவர் ஜிப்ரீலை அழைத்து 'நான் இன்னாரை நேசிக்கிறேன். நீங்களும் அவரை நேசியுங்கள் எனக் கூறுவான்.அவ்வாறே ஜிப்ரீலும் அவரை நேசிப்பார்.
பின்னர் 'வானுலகில் அல்லாஹ் இன்னாரை நேசிக்கிறான். நீங்களும் அவரை நேசியுங்கள' என அவரும் அழைத்துக் கூறுவார். அவ்வாறே விண்ணகத்தாரும் அவரை நேசிப்பார்கள். (அதன்படி மண்ணகத்தாருக்கு மத்தியில் அவருக்கு அங்கீகாரம் வழங்கப்படும்.
(அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி), புகாரி: 7485)
14. வானவர்கள் இறைவனை மிகவும் அஞ்சுவர்.
தமக்கு மேலேயிருக்கும் தமது இறைவனை மிகவும் அஞ்வார்கள். கட்டளையிடப்பட்டதைச் செய்வார்கள் ( 16:50)
15. முற்றிலும் அவனுக்கு வழிப்படுவர்.
அவர்கள் (வானவர்கள்) மரியாதைக்குரிய அடியார்கள். அவர்கள் அவனை முந்திப்பேச மாட்டார்கள். அவனது கட்டளைப்படியே செயல்படுவார்கள் (21:26,27)
தமது இறைவனை போற்றிப்புகழ்ந்த வண்ணமிருப்பார்கள் (39:75)
16. இறையில்லம், இறைமறை ஓதுமிடங்களில் வானவர்கள்.
உங்களில் ஒருவர் தொழுகையில் ஆமீன் கூறும்போது வானவர்களும்; ஆமீன் கூறுகின்றனர். எவரது ஆமீன் வானவர்களின் ஆமீனுக்கேற்ப உள்ளதோ அவரது முன் பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன.
(அறிவிப்பவர்:அபூஹுரைரா (ரலி)
இப்னு மாஜா-851).
நாயகத் தோழர் உஸைத் இப்னு குளைர் குர்ஆன் ஓதும் போது ஒளி உருவில் வானவர்கள் வந்து கேட்டுக் கொண்டிருந்தனர். (புகாரி 5018-ஹதீஸின் சுருக்கம்)
17. நல்லவர்களுக்காகப் பாவமன்னிப்புத் தேடுவர்.
(வானவர்கள்) நல்லவர்களுக்காகப் பாவமன்னிப்புத் தேடுவார்கள் குர்ஆன் (42:5)
18. தீயவர்களை சபிப்பர் (லஃனத்துல்லாஹி வல்மலாயிக்கத்தி)
வானவர்கள் இறைவனுக்கு மாறுசெய்பவர்களுக்கு எதிராக சாபமிடுவார்கள். ' ஏக இறைவனை மறுத்து, அதே நிலையில் இறந்தோர் மீது இறைவனின் சாபமும், வானவர்கள் நல்லோர்கள் அனைவரின் சாபமும் உள்ளது (2:161)
19. உருவமுள்ள வீட்டில் நுழையார்.
நாயும், உருவப்படமும் இருக்கும் வீட்டில் வானவர்கள் நுழையமாட்டார்கள். (புகாரி-3225,முஸ்லிம்-2112,திர்மிதி-2804, நஸய5347, இப்னுமாஜா 3649,
20. வானவர்களின் பணிகள்
தூதுவச்செய்தியை அறிவிப்பது, மழைபொழிவிப்பது, காற்றை வீசச்செய்வது, கண்காணிப்பது, காப்பாற்றுவது, நன்மை தீமைகளை பதிவு செய்வது, உயிரைக்கைப்பற்றுவது, மண்ணறையில் விசாரணை செய்வது, நல்லவர்களுக்குப் பரிந்துரைப்பது,
ஸூர் ஊதுவது, சுவர்க்கம் நரகத்தை காவல் புரிவது, அர்ஷை சுமப்பது போன்ற சில பொறுப்புகள் இறைவனால் அவர்களிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளன. அத்தனையும் அல்லாஹ்வால் தான் செய்யப்படுகின்றன.
ஆயினும் நிர்வாக சீரமைப்புக்காகவும், உலகின் ஒழுங்கு முறைக்காகவும், கட்டுப்பாடான இயக்கத்திற்காகவும், மனிதன் பாடம் பெறுவதற்காகவும் வானவர்களிடம் இவ்வாறு பொறுப்புகள் ஒப்படைக்கப்பட்டுள்ளன.
21. யார் யாரிடம் என்னென்ன பொறுப்புகள் ?
இறைவன் வானவர்களுக்கு பல பொறுப்புகளை வழங்கியுள்ளான்.
1. வஹி -இறை தூதின்- பொறுப்பு.
இப்பொறுப்பு வானவர் தலைவர் ஜிப்ரீல் (அலை) அர்களிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. இறைதூதர்களுக்கு (நுபுவ்வத் என்னும்) தூதுவச் செய்திகளை கொண்டு வருவதே இவர்களின் பணியாகும்.
(ஜிப்ரீலின் பெயர் குர்ஆனில் 2:97,2:98,66;4 ஆகிய மூன்று இடங்களில் வருகின்றன.)

இவர்களுக்கு சில சிறப்புப் பெயர்களும் உள்ளன.
1.ரூஹுல் குத்ஸ். (16:102)
2. ரஸூலுன் கரீம் ( 81:19 )
3.தூ குவ்வத்( 81:20)
4. ரூஹுல் அமீன்(26:193)
5. ஷதீதுல் குவா (52:5)
2. மழை, காற்றின் பொறுப்பு.
இதன் பொறுப்பாளர் வானவர் மீக்காயீல். இவர் மழை, காற்று, மரம் செடி கொடிகள் முதலானவற்றுக்குப் பொறுப்பாளர் ஆவார். இப்னு அப்பாஸ் (ரலி) அறிவிக்கிறார்கள். நபி(ஸல்) அவர்கள் ஜிப்ரீலிடம் மீக்காயீல் எதன் பொறுப்பாளர் எனக் கேட்டபோது,' மரம் செடி கொடிகளுக்கும், மழைக்கும் என்றார்கள்.
3. சூர் ஊதுவதின் பொறுப்பு.
' சூர் ஊதப்படும். அல்லாஹ் நாடியோரைத் தவிர வானங்களிலும் பூமியிலும் உள்ளளோர் மடிந்து விடுவர். (39:68) ஒரே ஒரு தடவை சூர் ஊதப்படுபோது (69:14), பூமியும்; மலைகளும் தூக்கி ஒரே அடியில் அவை நொறுங்கித் தூள்தூளாக ஆக்கப்படும் போது (69: 13,14) இரண்டாவது தடவை சூர் ஊதப்படும் போது மரணித்தவர் யாவரும் உயிர்ப் பிக்கப்படுவர்.
' (இரண்டாவது தடவை) சூர்ஊதப்படும். உடனே அவர்கள் சமாதிகளிலிருந்து இறைவனை நோக்கி விரைவார்கள். (36:51) பின்னர் மீண்டும் ஒருமுறை ஊதப்படும். அவர்கள் எழுந்து பார்ப்பார்கள் ( 39:68)
4. உயிரைக் கைப்பற்றும் வானவர்.
(மலக்குல் மவ்த்) உயிரைக் கைப்பற்றும் வானவருக்கு மலக்குல் மவ்த் எனக் குர்ஆன் கூறுகிறது. இவரை சிலர் 'இஸ்ராயீல்' என்பர். இந்தப் பெயருக்கு நபி மொழிகளில் ஆதாரம் கிடையாது.
5. உயிரைக் கைப்பற்ற தனித்தனி வானவர்கள்.
நாம் நினைப்பது போல உயிரை கைப்பற்றுவதற்கு ஒரே ஒரு வானவர் கிடையாது. இது தவறான கருத்தாகும். ஒவ்வொருவரின் உயிரையும் கைப்பற்றுவதற்கு தனித்தனி வானவர் உள்ளனர் என குர்ஆன் மிகத் தெளிவாகக் கூறுகிறது. 'உங்களுக்கென நியமிக்கப்பட்ட மரணத்திற்குரியவானவர் உயிர்களை கைப்பற்றுவார்.பிறகு உங்கள் இறைவனிடம் திரும்பக் கொண்டுவரப்படுவீர்கள் (32:11)
உங்களுக்குப் பாதுகாவலர்களை அவன் அனுப்புகிறான். உங்களில் ஒருவருக்கு மரணம் ஏற்படும் போது நமது தூதர்கள் அவரைக் கைப்பற்றுகிறார்கள்.அவர்கள் (அதில்) குறை வைக்கமாட்டார்கள்.
(6: 61) இதில் ஹஃபளத்தன்-பாதுகாவலர்கள், ருஸுலுனா-நமது தூதர்கள் என்பது வானவர்களைக் குறிக்கம்.
6. நல்லோரின் உயிரைக்கைப்பற்ற தனி வானவர்.
இறந்த அடியார் நல்லவராக இருந்தால் உயிரைப் கைப்பற்ற வரும் வானவர் நல்ல அழகிய தோற்றத்தில் வந்து நற் செய்தி கூறும் முகமாக 'ஸலாமுன் அலைக்கும், உங்கள் மீது சாந்தி உண்டாவதாக! நீங்கள் செய்த (நல்ல) வற்றின் காரணமாக சொக்க்கம் செல்லுங்கள்' எனக் கூறுவார்கள். (16: 32)
7. தீயோர் உயிரைக்கைப்பற்ற தனி வானவர்.
இறந்த அடியார் தீயோராக-பாவியாக- இருப்பின் அவரிடம் வரும்வானவர் காணச்சகிக்காத விகாரமாகன பயங்கரத் தோற்றத்தில் வந்து தொண்டைக் குழியை நெருங்கும் அவனது உயிரை கருணை காட்டாது கடுமையாகப் பறித்துச் செல்வர்.
'ஒருவனது உயிர் தொண்டைக்குழியை அடையும் போது அந்நேரத்தில் நீங்கள் (எதுவும் செய்ய முடியாது) பார்த்துக் கொண்டிருப்பீர்கள். உங்களை விட நாமே அவனுக்கு மிகவும் அருகிலிருக்கிறோம். எனினும் நீங்கள் பார்க்கமாட்டீர்கள்.
குர்ஆன் (56:83, 84,85)
அவர் இறைவனுக்கு நெருக்கமான ஒருவராக இருந்தால் அவருக்கு உயர்வும், நறுமணமும், சுகந்தரும் சுவர்க்கச் சோலையும் உளளன. அவர் வலப் புறத்தைச் சார்ந்தவராக (சுவர்க்க வாசியாக) இருந்தால் வலது சாராரிடமிருந்து (சுவர்க்க வாசிகளிடமிருந்து) உமக்கு ஸலாம் உண்டாவதாக. (இறையாணைகளை) பொய்படுத்திய வழிகெட்டவராக இருந்தால் கொதி நீரும், நரகில் வெந்துருகுவதும் விருந்தாகும். இது உறுதியான உண்மையாகும். எனவே மகத்தான உமது இறைவனைகப் (பணிந்து ) துதி செய்வீராக!
8. மனிதனை சதாவும் பாதுகாக்கும் வானவர்.
மனிதனது விழிப்பிலும், தூக்கத்திலும், ஓய்விலும், இயக்கத்திலும், பயணத்திலும் எல்லா நிலையிலும் வானவர்கள் காவல் காத்துக் கொண்டிருப்பர்.
'மனிதனுக்கு முன்னரும், பின்னரும் தொடர்ந்து வருவோர்(வானவர்) உள்ளனர். அல்லாஹ்வின் கட்டளைப்படி அவனை (இடி, மின்னல், விபத்துகள் போன்ற சகல ஆபத்துகளிலிருந்து இறைவனின் விதி வருவது வரை) காப்பாற்றுகின்றனர். (13:11)
9. மனிதனைக் கருவிலும் காக்கும் வானவர்
நபி(ஸல்) அவர்கள் கூறுகிறார்கள்.
"அல்லாஹ் கர்ப்பப் பையில் ஒரு மலக்கை நியமனம் செய்கிறான். கருவில் விந்து செலுத்தப்பட்ட பின் அதன் ஒவ்வொரு நிலை மாற்றத்தின் போதும், இறைவா! இப்போது விந்தாக இருக்கிறது. இறைவா! அடுத்து 'அலக்' (கருப்பை யின் சுவரில் ஒட்டிக் கொள்ளும் நிலை) ஆக இருக்கிறது. இறைவா! இப்போது சதைத்துண்டாக இருக்கிறது என்று கூறுவார்.

அல்லாஹ் அதை உருவாக்க நாடினால் அது (1) ஆணா? பெண்ணா? (2) நல்லவனா? கெட்டவனா? (3) அவனுக்கு வழங்கப்போகும் உணவு எவ்வளவு? (4) அவனது வாழ்நாள் எவ்வளவு? என்பதை (முதலிலேயே தீர்மானித்துச்) சொல்லி விடுகிறான். மனிதன் தன் தாயின் வயிற்றிலிருக்கும் போதே இவை எழுதப்பட்டு விடுகின்றன.
(அறிவிப்பாளர்: அனஸ்(ரலி) நூல் புகாரி : 318)
10. மனிதனின் நன்மை தீமைகளை பதிவு செய்யும் வானவர்கள்
மனிதன் செய்யும் நன்மை தீமை யாவற்றையும் பதிவு செய்வதற்காக கண்ணியத்திற்குரிய வானவர்களை அல்லாஹ் நியமனம் செய்துள்ளான்.
'வலப்புறமும் இடப்புறமும் இருவர் அமர்ந்து எடுத்தெழுதும் போது, அவன் எந்தச் சொல்லைப் பேசினாலும் அவனிடம் கண்காணிக்கும் எழுத்தாளர் இல்லாமல் இருப்பதில்லை. (50: 17,18) வலது பக்கம் இருப்பவர் நன்மைகளைப் பதிவு செய்வார். இடது பக்கம் இருப்பவர் தீமைகளைப் பதிவு செய்வார்.
இவர்களின் பெயர்களை ரகீப், அத்தீத் என்று சொல்வார்கள். இது அவர்களின் பெயர்களல்ல. அவர்களின் பண்புப் பெயர்களாகும்.. வலது பக்கமும் இடது பக்கமும் இருக்கும் ஒவ்வொருவருக்கும் 'ரகீபுன் அத்தீத்' கண்காணிக்கும் எழுத்தாளர் என்று சொல்லலாம். இவர்களை 'கிராமன் காத்திபீன்' கண்ணியத்திற்குரிய எழுத்தாளர்கள் என்று அல்லாஹ்வே சிறப்பிக்கிறான்.(82;:12)
11. இரவும் பகலும் சுற்றிவரும் வானவர்கள். (பாதுகாப்புப்பணியினர்)
வானவர்களில் சிலரை 'தனது நல்லடியார்களை கண்காணிக்கவும் பாதுகாத்து வரவும் கட்டளையிட்டுள்ளான். அபூஹுரைரா (ரலி) அறிவிக்கிறார்கள்.
இரவிலும் பகலிலும் பாதுகாப்புப் பணியில் அமர்த்தப்பட்டவர்கள் தொடர்ந்து உங்களிடம் ஒருவர் பின் ஒருவராக வந்து கொண்டிருப்பார்கள். அதிகாலை (ஃபஜ்ரு)த் தொழுகையிலும், மாலை (அஸ்ரு)த் தொழுகையிலும் இருசாராரும் சந்திக்கின்றனர். பின்னர் இரவுப் பணியிலுள்ளவர்கள் மேலேறிச் சென்றுவிடுவர்.
இறைவன் அறிந்து கொண்டே அவர்களிடம் என் அடியார்களை எவ்வாறு விட்டு வந்தீர்கள்? என விசாரிப்பான். (அதற்கவர்கள்) அவர்கள் தொழுது கொண்டிருக்கும் நிலையில் அவர்களை (அங்கே) விட்டு வருகிறோம். அவர்கள் தொழுது கொண்டிருக்கும் போது அவர்களிடம் போய் சேருகிறோம் என விடையளிப்பர்.
(நூல்: புகாரி :555)
12. லைலத்துல் கத்ர் இரவில் இறங்கும் வானவர்கள்.
லைலத்துல் கத்ர் என்னும் (மாண்பார்) இரவு ஆயிரம் மாதங்களை விட மாண்புடையது. வானவர்களும் (அவர்களின் தலைவர்) ரூஹும் (ஜிப்ரீலும்) தமது இறைவனின் கட்டளைப் படி ஒவ்வொரு காரியத்துடனும் இறங்குகின்றனர். (97:3,4)
13. கப்ரில் (மண்ணறையில்) வருகை தரும் வானவர்கள்.
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
'ஒரு அடியான் கப்ரில் வைக்கப்பட்டு அவனது தோழர்கள் அங்கிருந்து நகரும் போது, அவன் அவர்களின் காலணிகளின் ஓசையை செவியுறுவான். அப்போது அவனிடம் இரு வானவர்கள் வந்து அமர்ந்து கொண்டு (பல கேள்விகளைக் கேட்டபின்னர், நபி (ஸல்) அவர்களைப் பற்றியும் கேட்பார்கள்) இந்த மனிதரைப்பற்றி என்ன சொல்கிறாய்? என்று கேட்பார்கள்.
(ஒரு முஃமின்)- நம்பிக்கை கொண்டவனாயின், 'அவன் அல்லாஹ்வின் அடியாரும் அவனது திருத்தூதருமாவார்'என்று சாட்சி சொல்கிறேன் என்று கூறுவான். அப்போது அவனை நோக்கி, (இதோ, உனக்குத் தரப்படவிருந்த இடத்தைப் பார்! அதற்குப் பதிலாக உனக்கு சுவர்க்கத்தில் ஓரிடம் தரப்படவிருக்கிறது என்று அவனிடம் கூறப்படும். (அப்போது சுவர்க்கம், நரகம் ஆகிய) இரு இடங்களையும் அவன் பார்ப்பான்.
அறிவிப்பவர்:அனஸ் இப்னு மாலிக் (ரலி),நூல்: முஸ்லிம்: 2870).
நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
'நம்பிக்கை கொண்டோரை உறுதியான கொள்கையின் மூலம் இவ்வுலக வாழ்விலும், மறுமையிலும் நிலைப்படுத்துகிறான். (14:27) என்ற இறைவசனம் கப்ருடைய வேதனை சம்மந்தமாக அருளப்பட்டது. (கப்ரில் அடக்கமாயிருக்கும்) அவனிடம், (மன் ரப்புக்க) உன் இரட்சகன் யார்? அதற்கவன் 'அல்லாஹ் தான்'என்று பதிலளிப்பான்.( உனது நபி யார்? ) எனது நபி முஹம்மத்(ஸல்) அவர்களாவார் என்று பதில் கூறுவான். இதைத்தான் அல்லாஹ் (14:27-ல்) கூறுகிறான். (அறிவிப்பவர்:ஃபரா இப்னு ஆஸிஃப்(ரலி), நூல் : முஸ்லிம் :2871)
இவர்களின் பெயர்கள் முன்கர், நக்கீர் என ஹதீஸ் நூல்களில் வருகின்றன.
14) பரிந்துரைக்கும் வானவர்கள் :-
அல்லாஹ் அனுமதியளித்தவர்களுக்காக வானவர்கள் பரிந்துரைப்பர்.
இறைமறை கூறுகிறது. 'வானங்களில் எத்தனையோ வானவர்கள் உள்ளனர். தான் நாடியோருக்கு அல்லாஹ் அனுமதியளித்து பொருந்திக் கொண்டோரைத்தவிர (மற்றவர்களுக்காக) அவர்களின் பரிந்துரை பயன் தராது. (53:26)
15) மரணவேளையிலும், இறுதிநாளிலும் வாழ்த்தும் வானவர்கள்.
'எங்கள் இறைவன் அல்லாஹ்வே என்று கூறி பின்னர் உறுதியாகவும் இருந்தோரிடம் வானவர்கள் இறங்கி, 'அஞ்சாதீர்கள்!கவலைப்படாதீர்கள்! உங்களுக்கு வாக்களிக்கப்பட்ட சுவர்க்கம் பற்றிய நற்செய்தியைப் பெற்றுக் கொள்ளுங்கள்' எனக்கூறுவார்கள்.
இவ்வுலக வாழ்க்கையிலும், மறுமையிலும் உங்கள் உதவியாளர்கள். நிகரற்ற அன்புடைய மன்னிப்பவனின் விருந்தாக நீங்கள் ஆசைப்படுபவை உங்களுக்குக் கிடைக்கும். நீங்கள் கேட்பதும் கிடைக்கும் என்றும் கூறுவர். (41:30,31)

16. சுவர்க்கத்தின் காவலர்கள்
(خزنة الجنة )
காஸின் என்பதன் பன்மைச் சொல்லே கஸனத் என்பதாகும். கஸனத்துல் ஜன்னா- சுவர்க்கத்தின் காவலர்கள்)
'தமது இறைவனை அஞ்சியோர் சுவர்க்கத்திற்கு கூட்டம் கூட்டமாக கொண்டுவரப்படுவார்கள். அதன் வாசல்கள் திறக்கப்பட்டு அவர்கள் அங்கே வந்ததும் 'உங்களுக்கு ஸலாம் உண்டாகட்டும!(இனி)நீங்கள் மகிழ்ச்சியடைவீர்கள். நிரந்தரமாக தங்குவதற்காக இதில் நுழையுங்கள். (39:73.)
17. நரகின் காவலர்கள்
(خزنة جهنم)
இவர்கள் ஸபானியாக்கள் என்றும் கூறப்படும்.(96:18). நரகிற்கு 19 அதிகாரிகள் நியமிக்கப்பட்டுள்ளனர். 'அதன் மேல் பத்தொன்பது வானவர்கள் உள்ளனர்'. 74:30 என குர்ஆன் கூறுகிறது.
அதன் தலைவர் மாலிக் (அலை)ஆவார் என ஹதீஸ் நூல்களும் அறிவிக்கின்றன.இதை திருமறையும் உறுதிப்படுத்துகிறது.
' யாமாலிக்! (நரகக்காவலரான) மாலிக்கே! உமது இறைவன் எங்கள் பிரச்சனையை விரைவில் முடிக்கட்டும் என்று (நரக வாசிகள்) அழைப்பார்கள்.' நீங்கள் இங்கேயே கிடப்பீர்கள் என்று அவர் கூறுவார்.(43:77).
(ஏக இறைவனை) மறுத்தோர் கூட்டம் கூட்டமாக நரகிற்கு இழுத்து வரப்படுவார்கள். அவர்கள் அங்கே வந்ததும் அதன் வாசல்கள் திறக்கப்படும். உங்கள் இறைவனின் வசனங்களை உங்களுக்குக் கூறும் இறைதூதர்கள் உங்களிலிருந்தே உங்களிடம் வரவில்லையா? இந்த நாளை சந்திக்க வேண்டியது வரும் என்பதை உங்களுக்கு அவர்கள் எச்சரிக்கவில்லையா? என்று அதன் காவலர்கள் கேட்பார்கள். அதற்கு அவர்கள் 'ஆம்' என்பார்கள். எனினும் (ஏக இறைவனை மறுப்போருக்கு வேதனை என்னும் (கடும்) உத்தரவு உறுதியாகிவிட்டது. (39:71)
18. அர்ஷை சுமக்கும் வானவர்கள்.
அர்ஷை சுமப்போரும், அதைச் சுற்றியுள்ளோரும் தமது இறைவனைப் போற்றிப் புகழ்கின்றனர். அவனை நம்புகின்றனர்.' ஒவ்வொரு பொருளையும் (உன்) அருளாலும், அறிவாலும் சூழ்ந்திருக்கிறாய். எனவே (உன்னிடம்) மன்னிப்புக்கேட்டு உனது பாதையை பின்பற்றியோரை மன்னிப்பாயாக! அவர்களை நரகைவிட்டும் காப்பாயாக! என்று நம்பிக்கை கொண்டோருக்காக (அந்த வானவர்கள்) பாவ மன்னிப்புத் தேடுகின்றனர்.(40:7);
அர்ஷை சுமப்பவர்களை 'கரூபிய்யூன்-ஈச்சமரத்தின் அடிப்பாகம் கனத்திருப்பதைப் போன்ற பலமிக்க அகன்ற கால்களை உடையவர்கள்' என பொருள் விரிக்கப்படுகிறது.
19. மலைகளைக் காக்கும் வானவர்கள் (முவக்கலுன் பில் ஜிபால்)
தாயிப் நகருக்கு இஸ்லாமியப் பிரச்சாரம் சென்றபோது பனூ அப்து யாலைல் சென்று திரும்புகையில் நீங்கள் இந்த மக்களிடையே பிரச்சாரம் செய்ததையும் அவர்கள் கூறிய பதில்களையும் இறைவன் செவியுற்றான். 'நீங்கள் விரும்பினால் இந்த மலைகளுக்கிடையே இவர்களை அழித்து விடுகிறோம்.' அங்கே வானவர் ஜிப்ரீலும், மலைகளைக் காக்கும் அமரர்களும் வந்து கேட்டனர் என்ற நபி மொழி இதற்கு ஆதாரமாகும்.
20. பைத்துல் மஃமூரை வலம் வரும் வானவர்கள்
'பைத்துல் மஃமூர்' என்பது கஃபாவுக்கு மேலே வானிலுள்ள வானவர்கள் தொழுமிடமாகும்.. அங்கே நாள் தோறும் 70,000 வானவர்கள் உள்ளே செல்கிறார்கள். உள்ளே சென்றவர்கள் வெளியே வருவதில்லை. (ஆதாரம்: புகாரி)
21. அணிவகுத்து நிற்கும் வானவர்கள்
'நின்ற நிலையிலே சதாவும் நின்று வணக்கம் புரிபவர்கள்! நிமிராமல் ருகூவிலே குனிந்து வணங்குபவர்கள்! எழாமல் சுஜீதிலே சிரம் பணிந்து வணக்கம் புரிபவர்கள்!' என அணிஅணியாக இறைவனை வணங்கிக் கொண்டே இருக்கும் இலட்சக்கணக்கான வானவர் படையும் உள்ளனர் என்பதையும் குர்ஆன், சுன்னா ஒளியில் நாம் ஈமான் (நமபிக்கை) கொள்ளவேண்டும். நம்ப மறுப்போர் நிராகரிக்கப்படுபவர்கள் என்றே கருதப்படும்.
அல்லாஹுதஆலாவிடத்தில் ஒரு மலக்கு இருக்கிறார். அவருக்கு ஹுகபாயில் என்று பெயர். அவருக்கு பதினெட்டாயிரம் இறக்கைகள் இருக்கின்றன. ஒரு இறக்கைக்கும் மற்றொரு இறக்கைக்கும் மத்தியில், ஐனூறு வருடத்து தூரமிருக்கிறது. '
அர்ஸுக்கு மேல் ஏதேனும் வேறு பொருள் இருக்கிறதா? என்ற எண்ணம் அவருக்கு உண்டாயிற்று. அப்பொழுது அல்லாஹுதஆலா அவருக்கு பதினெட்டாயிரம் இறக்கைகளை ஏற்படுத்தினான். முப்பத்தாறாயிரம் இறக்கைகளாயின.
பின்னர் அவரை பறந்து செல்லுமாறு, இறைவன் கட்டளையிட்டான். அவர் இருபதாயிரம் வருட காலம் பறந்தார். அவ்வளவு காலம் அவர் பறந்தும் அர்ஷுடைய தூண்களில் ஒரு தூணின் உச்சியைக் கூட அவர் அடைய முடியவில்லை.
பின்னர் அவருக்கிருந்த இறக்கைகளை மீண்டும் இரட்டிப்பாக்கினான். இரு மடங்கு பலத்தையும் அருளி மீண்டும் பறக்குமாறு அவருக்குக் கட்டளையிட்டான்.
அவர் மீண்டும் முப்பதாயிரம் வருடம் பறந்தார். அப்பொழுதும் அவர் அதன் நுனியை அடைய முடியவில்லை. பின்னர் இறைவன் "எக்காளம் ஊதும் வரை உம்முடைய இறக்கைகளுடனும் சக்திகளுடனும் நீர் பறந்தாலும் எனது அர்ஷின் காலை நீர் அடைந்து விடமுடியாது' என்று அந்த மலக்குக்கு இறைவன் அறிவித்தான்.
அப்பொழுதவர் சுப்ஹான றப்பியல் அஃலா மிகவும் உயர்வான எனது றப்பு தூயவன்) என்று கூறினார்.

சிரம் பணிதல் (ஸுஜூது என்னும் ஸஜ்தா) 15
اَزِفَتِ الْاٰزِفَةُ
நெருங்கி வர வேண்டியது (அடுத்து) நெருங்கி விட்டது. (குர்ஆன் : 53:57)
لَيْسَ لَهَا مِنْ دُوْنِ اللّٰهِ كَاشِفَةٌ
(அதற்குரிய நேரத்தில்) அல்லாஹ்வைத் தவிர அதை வெளியாக்குபவர் எவரும் இல்லை. (குர்ஆன் : 53:58)
اَفَمِنْ هٰذَا الْحَدِيْثِ تَعْجَبُوْنَ
இச் செய்தியிலிருந்து நீங்கள் ஆச்சரியப்படுகிறீர்களா?(குர்ஆன் : 53:59)
وَتَضْحَكُوْنَ وَلَا تَبْكُوْنَ
(இதனைப் பற்றி) நீங்கள் சிரிக்கின்றீர்களா? நீங்கள் அழாமலும் இருக்கின்றீர்களா? (குர்ஆன் : 53:60)
وَاَنْتُمْ سٰمِدُوْنَ
அலட்சியமாகவும் நீங்கள் இருக்கின்றீர்கள்.(குர்ஆன் : 53:61)
فَاسْجُدُوْا لِلّٰهِ وَاعْبُدُوْا ۩
ஆகவே நீங்கள் அல்லாஹ்வுக்கு ஸுஜூது செய்யுங்கள், அவனையே வணங்குங்கள். (குர்ஆன் : 53:62)

---

அல்லாஹ் தனது படைப்புகளில் ஒவ்வொன்றிற்கும் குறிப்பிட்ட வயதை ஏற்படுத்தியிருக்கின்றான். அது முடியும் தருவாயில் இருந்து கொண்டிருக்கிறது. அதைக்குறித்துத்தான் நெருங்கக்கூடியது நெருங்கிவிட்டது என வர்ணிக்கின்றான்.
இறுதிநாள் எப்பொழுது தோன்றும்? இறைவனையன்றி வேறு எவரும் இதுபற்றி அறியார். ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம்.
அதாவது: உலக மக்கள் தங்கள் ஈடுபாடுகளில் ஈடுபட்டுக் கொண்டிருக்கும் நிலையிலேயே இறுதிநாள் திடீரெனத் தோன்றிவிடும்.
இதுபற்றி பெருமானார் (ஸல்) அவர்கள் அறிவித்ததாவது; கடைக்காரர் துணியை விரித்து விற்பனைக்காக வாடிக்கைக்காரருக்கு காட்டிக் கொண்டிருப்பார். அதனை இன்னும் மடித்திருக்க மாட்டார்; இந்நிலையில் இறுதிநாள் தோன்றி
உலகம் அல்லோலகல்லோலமடைந்து அழிந்துவிடும்"- ஹஜ்ரத் உக்பா பின் ஆமீர் (ரலி). நூல்: தப்ரானீ )
இந்நாள் எப்பொழுது ஏற்படும் என்று எவரும் வெளியாகவோ விவரிக்கவோ முடியாது அல்லாஹ் ஒருவனே அதனை அறிந்தவன் "அதன் நேரத்தில் அவனேயல்லாது வேறொருவரும் அதனை வெளியாக்க முடியாது (குர்ஆன் 7:187)
எதிரிகள் திருக் குர்ஆனைச் செவியேற்கும் போதெல்லாம். ஆச்சரியம் அடைந்து மறுப்பதும், ஏளனமாகச் சிரிப்பதும், விளையாடுவதும் என அலட்சியமாக இருந்தனர். இதில் கூறப்படும் எச்சரிக்கைகளைக் கண்டு பயந்து அழாமல் இருப்பது பற்றி இவ்வசனங்கள் கண்டிக்கின்றன.
இவ்வசனங்களைச் செவியுற்ற பெருமானாரின் பிரிய தோழர்களான அஹ்லுஸ் ஸுஃப்பாக்கள் என்னும் தாழ்வாரவாசிகள் அழ ஆரம்பித்துவிட்டனர். கண்ணீர் அவர்களது கன்னங்களில் தாரைதாரையாக ஓடியது. அவர்களது அழுகையைக் கண்ணுற்ற பெருமானாரும் அவர்களுடன் சேர்ந்து அழ ஆரம்பித்தார்கள். இறுதியில் பெருமானார் (ஸல்)அவர்கள் சொன்னதாவது:
"அல்லாஹ்வைப் பயந்து அழுவோன் நரகில் நுழையமாட்டான். பாவத்தின் மீது நிலையாக இருப்போன் சுவர்க்கம் புகமாட்டான். நீங்கள் பாவம் செய்யாவிடினும் அல்லாஹ் ஒரு கூட்டத்தினரைத் தோற்றுவிப்பான். அவர்கள் பாவம் செய்து பின்னர் மன்னிப்புக் கோருவர். அவர்கள் மன்னிக்கப்படுவார்கள். அறிவிப்பவர்: அபூஹுரைரா (ரலி). நூல் பைஹகீ }
நபிகள் பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களிடம் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் வந்தார்கள். அவரிடத்தில் அழுகிற ஒரு மனிதர் இருந்தார்.
அப்பொழுது நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "இவர் யார்?" என்று வினவினார்கள்.
அதற்கவர் இன்னார் என்று கூறி விட்டு, "நாங்கள் ஆதமுடைய மக்களின் அமல்கள் யாவற்றையும் நிறுக்கிறோம்: ஆனால், அழுகையைத் தவிர, நிச்சயமாக அல்லாஹ் கண்ணீரைக் கொண்டு நரகின் நெருப்புக் கனல்களை அணைக்கிறான்" என்று கூறினார்.
இறுதியில் இறைவன் தனது நேசர்களான விசுவாசிகளை நோக்கி, "உங்களின் எதிரிகள் அல்லாஹ்வின் விஷயத்தில் எப்படி நடத்து கொண்ட போதிலும் நீங்கள் அவனுக்கு ஸுஜூது செய்து அவனை வணங்குங்கள்" என்று கூறுகின்றான்.
இவ்வசனம் அருளப்பெற்றதும் பெருமானார் (ஸல்) அவர்களும் அவர்களுடன் இருந்தவர்களில் ஒரு மனிதனை மட்டும் தவிர பாக்கியுள்ளோர் அனைவரும் ஸுஜூது செய்தனர். (புகாரீ, முஸ்லிம்)
ஆகவே இவ்வசனத்தை ஓதி முடித்ததும் ஒரு ஸுஜூது செய்வது (வாஜிப் என்னும்) கடமையாகும்.
இறைவாக்கைச் செவியேற்று அதற்கிணங்க நடந்த இறை நேசச்செல்வர்களுடன் நம்மையும் அல்லாஹ் ஹக் ஹுப்ஹானஹுதஆலா சேர்த்தருள்வானாக! ஆமீன்!

## சிரம் பணிதல் (ஸுஜூது என்னும் ஸஜ்தா) 16

لَتَرْكَبُنَّ طَبَقًا عَنْ طَبَقٍ
நீங்கள் ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்கு நிச்சயமாக ஏறிப்போவீர்கள். (குர்ஆன் : 84:19)
فَمَا لَهُمْ لَا يُؤْمِنُوْنَ
எனவே, அவர்களுக்கு என்ன (நேர்ந்தது?) அவர்கள் ஈமான் கொள்ளவதில்லை. (குர்ஆன் : 84:20)
وَاِذَا قُرِئَ عَلَيْهِمُ الْقُرْاٰنُ لَا يَسْجُدُوْنَ ۩
மேலும், அவர்களிடத்தில் குர்ஆன் ஓதிக் காண்பிக்கப்பட்டால், அவர்கள் ஸுஜூது செய்வதில்லை. (குர்ஆன் : 84:21)
மானிடனே! உலகில் நிரந்தரமாக நாம் இருப்போமென்றும், நமது இறைவனிடம் நாம் செல்வ வேண்டியதில்லையென்றும், மரித்து மண்ணாய் விட்டாலும் புனர் ஜென்மத்தின் மூலம் வேறு உருவில் திரும்பவும் இவ்வுலகத்திற்கே வந்து எல்லாவற்றையும், அனுபவிக்கலாமென்றும் நினைத்து ஏமாந்து விடாதே.
ஒருநாள் நீ உனது இரட்சகனிடம் சென்று கணக்குக் கொடுப்பதற்காகவே இவ்வுலகில் வாழ்ந்து வருகிறாய். பல பிரயத்தனங்களைச் செய்து கொண்டு வருகிறாய்.
இரவும் பகலும் உனது மறுமைப் பிரயாண வாகனத்திற்கு இரு சக்கரங்களைப் போன்றிருக்கின்றன. அல்லது இரு பாதங்களைப் போன்றிருக்கின்றன. ஒருநாள் நீ விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் இவ்வுலகை விட்டுப் பிரயாணித்தே தீர வேண்டும்.
நீயோ ஒரு சமயம் தாயின் கர்ப்பத்தினுள்ளிருந்து இவ்வுலகில் தோன்றினாய்.
பின்னர் சிறுவனாக இருந்தாய்; வாலிபனானாய்; வயோதிகனாக ஆகி மரிக்கிறாய்.
கர்ப்ப நிலையும் குழந்தைப் பருவமும் இளமையும் வயோதிகமும் சென்றடையப்போகும் மறுமைப் பிரயாணத்தின் வழிகளிலுள்ள படிப்படியான தங்குமிடங்களாகவே இருக்கின்றன.
இத்தங்குமிடங்களிலேயே நீ நிலையாக இருந்து விட முடியாது. சிறிது நேரம் தங்கி அப்பால் பிரயாணத்தைத் துவக்க வேண்டியவனே, முடிவில் ஒருநாள் நம்முன் வந்து சேருவாய். அப்பொழுது உனது நல்ல, தீய செயல்கள் அனைத்தும் எடைபோடப்பட்டு அவற்றுக்குத் தக்கவாறு பலாபலன்களை நீ அனுபவிக்க வேண்டும்.
ஸஜ்தயே திலாவத் :- இவ்வத்தியாயத்தின் 21-வது வசனத்தை ஓதி முடித்ததும், ஓதியவரும் அதைக் கேட்டுக் கொண்டிருப்பவரும் ஒரு ஸுஜூது செய்வது கடமை (வாஜிப்) ஆகும். அவ்வாறு ஸுஜூது செய்யாதவர்கள் குற்றம் புரிந்தவர்களாவர்.
''ஒரு நாள் இஷாத் தொழுகையில் பெருமானார் (ஸல்) அவர்கள் இந்த ஸூரத்தை ஓதினார்கள். பின்னர் இந்த ஸுஜூதையும் (தொழுகையிலேயே) செய்தார்கள். ” (நூல்கள்: புகாரி, முஸ்லிம்)

## சிரம் பணிதல் (ஸுஜூது என்னும் ஸஜ்தா) 17

اَرَءَيْتَ اِنْ كَذَّبَ وَتَوَلّٰى
அவரை அவன் பொய்யாக்கி, முகத்தைத் திருப்பிக் கொண்டான் என்பதை நீர் பார்த்தீரா? (குர்ஆன் : 96:13)
தொழ வேண்டாமென விலக்கியவன் அபூஜஹ்ல். விலக்கப்பட்டவர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் எனவே. விலக்கப்பட்டவர் நேர்வழியின் மீதும் தக்வாவைக் கொண்டும் . ஏவுபவராகவும் இருந்திருந்து, விலக்குபவர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களைப் பொய்ப்பித்து சன்மார்க்கத்தை தழுவுவதை விட்டுப் பின் வாங்குபவராகவும் இருந்திருந்தால் - என்பது இவ்வாயத்துகளின் கருத்து.

اَلَمْ يَعْلَمْ بِاَنَّ اللّٰهَ يَرٰى
நிச்சயமாக அல்லாஹ் (அவனைப்) பார்க்கிறான் என்பதை அவன் அறியவில்லையா? (குர்ஆன் : 96:14)
தொழுகையை விலக்குபவனை அல்லாஹுதஆலா பார்த்துக் கொண்டுதான் இருக்கிறான். அதற்கான தண்டனையை அளிப்பான் என்பதை அறிந்தே இருக்கிறான்.
அறிந்துகொள்:- இவ்வாயத்து மனித வர்க்கத்தார் யாவருக்கும்.உபதேசமாகவும், நன்மையான காரியங்களையும் வழிபாடுகளையும் விட்டு விலக்குபவர்களுக்கு எச்சரிக்கையாகவும் உள்ளது என்று அபுல்லைத் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் கூறியுள்ளார்கள்.
இந்த ஆயத்து அபூஜஹ்ல் சம்பந்தமாக அருளப்பட்டதாயினும், வழிபாட்டை விட்டு விலக்குகிற யாவரும் அபூஜஹ்ல் சம்பந்தமான இவ்வெச்சரிக்கைக்குக் கட்டுப்பட்டவர்களேயாவார்கள் என்று இப்னுஷ் ஷெய்கு ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்கள் தமது குறிப்புகளில் கூறியுள்ளார்கள்.

كَلَّا لَئِنْ لَّمْ يَنْتَهِ ۙ لَنَسْفَعًا بِالنَّاصِيَةِۙ
அப்படியல்ல: அவன் விலகிக் கொள்ளவில்லையானால், நிச்சயமாக நாம் (அவனுடைய) முன்னெற்றி ரோமத்தைப் பிடித்து அவனை இழுப்போம். (குர்ஆன் : 96:15)
நெற்றி ரோமத்தைப்பிடித்து இழுப்பதை அரபியர் மிக இழிவாகக் கருதுவர். தொழுகை முதலான வழிபாடுகளை விட்டு விலக்குபவர்களை கியாமத்து நாளில் இறைவன் நெற்றி ரோமத்தைப் பிடித்து இழுத்து நரகத்திற்கு இட்டுச்

செல்லுமாறு வானவர்களுக்கு கட்டளையிடுவான், அவனது கட்டளைப்படி வானவர்கள் அந்தகையோரைப் பிடித்து இழுத்துச் செல்வர் என்பது கருத்து.
தவிர நெற்றி ரோமத்தைப் பிடித்து இழுத்தல் என்பது அடக்குமுறை செய்து ஒடுக்குவதையும் குறிக்கிறது என்று ஐனுல் மஆனி என்னும் கிரந்தத்தில் கூறப்பட்டிருக்கிறது.

ரிவாயத்து:- சூரத்துர் ரஹ்மான் அருளப்பட்ட போது "இதனை
குறைஷித் தலைவர்களுக்கு ஓதிக் காண்பிப்பவர் யார்?" என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் வினவினார்கள். அனைவரும் மௌனமாக இருந்தனர்.
இப்னு மஸ்ஊத் ( ரலி) அவர்கள் "நான்" என முன் வந்தார். அப்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவரை உட்கார வைத்து விட்டார்கள்.
பின்னர் மீண்டும் இரண்டாம் முறையாக" இதனை ஓதுவது யார்?" என்று விசாரித்தார்கள். இப்னு மஸ்ஊதைத் தவிர வேறு யாரும் முன் வரவில்லை.
மீண்டும் மூன்றாவதாகவும் வினவினார்கள். இறுதியாக இப்னு மஸ்ஊது ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்களுக்குத்தான் அனுமதி கொடுக்கப்பட்டது.
இப்னு மஸ்ஊது ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் சிறுவயது , ஒல்லியானவர்: தசைப் பிடிப்பில்லாதவர். எனவே, நபி ஸல்லல்லாயர் அலைஹி வஸல்லம் அவர்கள் அவருக்கு அனுமதி கொடுத்தாலும் அவர் என்ன செய்கிறார் என்பதை கவனித்துக் கொண்டிருந்தார்கள்.
அவர் காஃபிர்களிடம் சென்றார் அவர்கள் கஃபாவைச் சுற்றிலும் அமர்ந்திருந்தனர். அவர்களிடம் சென்று சூரத்துர் ரஹ்மானை ஓத ஆரம்பித்தார். உடனே, அபூஜஹ்ல் அவரது கன்னத்தில் பலமாக அறைந்தான். அவரது காது கிழிந்து அதிலிருந்து இரத்தமும் வடிந்தது. அவர் கண்ணீர் வடித்தவராகத் திரும்பினார்.
நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் அவரை இக்கோலத்தில் பார்த்து இரக்கமுற்று கவலையடைந்தவர்களாக தலையைக் கவிழ்ந்தார்கள்.
அப்போது ஜிப்ரயில் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் சிரித்துக் கொண்டு வந்தார்கள். அதற்கு நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் 'ஜீப்ரயிலே நீர் சிரிக்கிறீர்? இப்னு மஸ்ஊத் அழுகிறாரே" என்றார்கள். அதற்கு ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் "விரைவில் தெரிந்து கொள்வீர்" என்றார்.
பின்னர், முஸ்லிம்கள் பத்ருப் போரில் வெற்றி பெற்ற போது, ஜிஹாதில் தமக்கும் பங்கு இருக்க வேண்டும் என இப்னு மஸ்ஊத் ரலியல்லாஹுதஆலா அன்ஹு அவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களை வேண்டிக் கொண்டார்.

அப்போது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் "உமது அம்பை எடுத்துக் கொண்டு காயம்பட்டவர்களைப் புரட்டிப் பார். எவர் குற்றுயிராகக் கிடக்கின்றாரோ அவரை நீர் கொன்று விடுவீராயின் முஜாஹிதுகளுடைய நன்மைப் பயனை நீர் அடைவீர்" என்றார்கள்.
உத்தரவுப்படி அவர் காயம்பட்டுக் கிடப்பவர்களை புரட்டிப் பார்த்துக் கொண்டே வந்தார். அபூஜஹ்ல் குற்றுயிராக இருப்பதைப் பார்த்து முதலில் பயந்தார்; தம்மை அடித்துத் துன்புறுத்துவானோ என்று தூரத்தில் நின்று கொண்டு அவன் மீது அம்பெய்தார். அதனைத் தடுக்க அவனுக்குச் சக்தி இல்லை என்பதை உணர்ந்து, அவனருகில் வந்து மார்பின் மீது ஏறி உட்கார்ந்து கொண்டார்.
அவரைப் பார்த்து அபூஜஹ்ல் "இடையனின் புதல்வனே. என் மீது நீ ஏறி விட்டாயா?'' என்றான்.
அதற்கவர் "இஸ்லாம் உயரும், தாழ்வடையாது" என்றார்.
அப்போது அவன் "எனது மரண வேளையில் உனது தோழரைப் பார்க்கினும் அதிகக் கோபமானவர் எனக்கு வேறு யாரும் இல்லை என்று அவருக்குத் தகவல் கொடுத்து விடு" என்று கூறினான்.
இச்செய்தியை நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் செவியுற்றபோது,
எனது ஃபிர்அவ்ன் மூஸாவின் ஃபிர்அவ்னைப் பார்க்கினும் கடினமானவன். ஏனெனில் அவனோ நான் விசுவாசங் கொண்டேன் என்று மரணத் தருவாயில் கூறினான். இவனோ அக்கிரமத்தை மேலும் அதிகப்படுத்தினான்" என்று கூறி,
இப்னு மஸ்ஊதே! என்னுடைய இவ்வாளைக் கொண்டு அவனை
வெட்டு. இது மிகக் கூர்மையானது" என்று கூறி தமது வாளைக் கொடுத்து அனுப்பினார்கள்.
அவனது தலையை அவர் வெட்டி எடுத்த போது, அத்தலையை தூக்கிக் கொண்டு வர அவரால் இயலவில்லை. எனவே, அவனது காதைப் பிளந்து, அதில் கயிற்றைக் கட்டி இழுத்துக் கொண்டு சென்றார்.
அச்சமயம் ஹளரத் ஜிப்ரயீல் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் முன்னிலையில் சிரித்து 'முஹம்மதே காதுக்குப் பதில் காது என்று கூறினார்.

كَلَّا لَا تُطِعْهُ وَاسْجُدْ وَاقْتَرِبْ۩
(அவன் கூறுவது போலல்ல;) அவனுக்கு நீர் வழிபடாதீர்; (உம் இறைவனுக்கு) ஸுஜூது செய்து (வணங்கி அவனை) நெருங்குவீராக. (குர்ஆன் : 96:19)
அல்ஹதீஸ்: அடியான் தன் றப்புடன் மிக நெருங்கி இருப்பது அவன் ஸஜ்தாச் செய்யும் போதுதான். எனவே, ஸஜ்தாவில் பிரார்த்தனை செய்வதை அதிகப்படுத்துங்கள்.
لا كبرَ مَعَ السُّجُوْد
அல்ஹதீஸ் : - ஸஜ்தாவில் தற்பெருமை கிடையாது.

இது திருக்குர்ஆனிலுள்ள ஸஜ்தா திலாவத்தில் கடைசியாகும். இமாம் மாலிக் ரஹ்மத்துல்லாஹி அலைஹி அவர்களைத் தவிர மற்றைய இமாம்கள் இந்த ஆயத்தை ஓதினாலும் ஓதக் கேட்டாலும் ஸஜ்தாச் செய்ய வேண்டுமெனக் கூறியிருக்கிறார்கள்.
ஹிக்காயத்து: ஹளரத் இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் ஒரு நாள் இரு மஜூஸியருக்கு விருந்தளித்தார்கள். விருந்து உண்ட பிறகு அவர்கள் "இப்ராஹீமே! ஏதேனும் கட்டளையிடுவதாக இருந்தால் கட்டளையிடலாம்'' என்று நபியவர்களைக் கேட்டுக் கொண்டார்கள்.
அதற்கவர் எனக்கு ஒரே ஒரு தேவைதான் உங்களிடமிருக்கிறது. அதாவது எனது றப்புக்கு நீங்கள் ஒரே ஒரு ஸஜ்தா மட்டும் செய்ய வேண்டும்" என்றார்.
அவர்கள் தங்களுக்குள் கலந்து ஆலோசனை செய்து, இறுதியாக ஒரு ஸஜ்தாச் செய்ய சம்மதித்து ஸஜ்தாச் செய்தார்கள்.
அப்போது நபியவர்கள் "நாயனே! நான் முயற்சி எடுத்து அவர்களை இந்நிலைக்கு வரும்படி செய்தேன். இதன் பின்னர் எனக்கு சக்தி இல்லை. நேர்வழியிற் சேர்ப்பதும் நல்லுதவி செய்வதும் உன் கையில்தான் இருக்கிறது" என்று பிரார்த்தித்தார்.
அவர்கள் ஸஜ்தாச் செய்து விட்டு எழுந்த பிறகு யாவரும் சன்மார்க்கத்தைத் தழுவி விட்டனர். இப்ராஹீம் அலைஹிஸ்ஸலாம் அவர்களுடைய பிரார்த்தனையை இறைவன் அங்கீகரித்தான்.
சிரம் பணிதல் (ஸுஜூது என்னும் ஸஜ்தா) என்ற இந்த தொடர்பதிவு இத்துடன் நிறைவு பெறுகிறது

## இஸ்லாம் ஓர் ஈர்க்கும் மார்க்கம் 1



இறைவன் ஒருவனே. அவனே ஏகன். உருவ வழிபாடு கூடாது. யாருக்கும் துரோகம் இழைக்கக்கூடாது. நாம் சம்பாதிப்பதன் ஒரு பகுதியை ஏழை, எளியவர்களுடன் பகிர்ந்துகொள்ள வேண்டும். இப்படி, இஸ்லாம் முன்வைக்கும் பல கருத்துகள் எளிமையானவை, மனித வாழ்க்கைக்கு மிகவும் அத்தியாவசியமானவை.
இறைவனின் ஆணையை ஏற்று, இஸ்லாத்தின் கொள்கைகளை உலகெங்கும் பரப்பியவர்கள் முஹம்மது நபி ஸல்லல்லாஹ் அலா முஹம்மது ஸல்லல்லாஹ் அலைஹி வஸல்லம் அவர்கள். இவர்கள் ஓர் இறைத்தூதர் மட்டுமல்ல. நற்குணத்தின் தாயகம் ,மக்கள் தலைவர், அரசியல் வடிவமைப்பாளர், ஆக மிகச் சீர்திருத்தவாதி.
ஆரம்பிக்கப்பட்டபோது, இஸ்லாத்தில் இணைந்தவர்கள் வெறும் நாற்பது பேர் மட்டுமே. பல்வேறு போராட்டங்களைச் சந்தித்து பல கோடிக் கணக்கான மக்களை இன்றும் சென்றடைந்து கொண்டே இருக்கிறது இஸ்லாம்.
இறைவனின் மார்க்கமான இஸ்லாமின் வாழ்க்கை நெறி, பின்பற்றுவதற்கு இலகுவானது; சாத்தியமானது; எவ்வித குறைகளோ, குற்றங்களோ இல்லாதது;
இயற்கைக்கு உகந்த முறையில், அறிவார்ந்த சீர்திருத்தங்களுக்கு எல்லாம் முன்னோடியாக, எல்லாக் காலத்திற்கும் பொருத்தமானதாக என்றென்றும் பின்பற்ற தக்கதாக இஸ்லாம் இருக்கிறது. இதனால் இஸ்லாம் ஓர் இயற்கை மதமே! இயற்கை மார்க்கமே !
அது என்ன இஸ்லாம் ஓர் இயற்கை மார்க்கம்? என்று கேட்கலாம்.
இதைத் தான் வல்ல நாயனும் தனது திருமறையில் கூறுகின்றான்.

فَاَقِمْ وَجْهَكَ لِلدِّيْنِ حَنِيْفًا ؕ فِطْرَتَ اللّٰهِ الَّتِىْ فَطَرَ النَّاسَ عَلَيْهَا ؕ لَا تَبْدِيْلَ لِخَـلْقِ اللّٰهِ ؕ ذٰ لِكَ الدِّيْنُ الْقَيِّمُ ۙ وَلٰـكِنَّ اَكْثَرَ النَّاسِ لَا يَعْلَمُوْنَ ۙ
உண்மை வழியில் நின்று உமது முகத்தை இம்மார்க்கத்தை நோக்கி நிலைப்படுத்துவீராக! இது அல்லாஹ்வின் இயற்கையான மார்க்கம். இதன் மீதே மனிதர்களை அல்லாஹ் அமைத்துள்ளான். அல்லாஹ்வின் படைப்பில் எந்த மாற்றுதலும் இல்லை. இதுவே நேரான மார்க்கம். எனினும் மனிதர்களில் அதிகமானோர் அறிய மாட்டார்கள். ( குர்ஆன் 30:30 )

இன்று நாம் சுவாசிக்கின்ற காற்றில் கலந்திருக்கும் நைட்ரஜன், ஆக்ஸிஜன் போன்ற வாயுக்கள் அனைத்தையும் சரியான விகிதாச்சாரத்தில் அல்லாஹ் அமைத்திருக்கின்றான்.
அது போன்று நமது உடல் சீராக இயங்குவதற்கு உடலில் இவ்வளவு கொழுப்புச் சத்து இருக்க வேண்டும், இவ்வளவு உப்புச்சத்து இருக்க வேண்டும், இவ்வளவு இனிப்புச் சத்து இருக்க வேண்டும் என எல்லாமே ஒரு சரியான விகிதாச்சாரக் கணக்கின் அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளது.
இந்த விகிதாச்சாரத்தைத் தாண்டினால் உடல் கடுமையான நோய்களுக்கு இலக்காகின்றது. போக்குவரத்து விதிகளை கடைபிடிக்கும் டிராபிக் சிக்னலை மீறும்போது ஏற்படும் விபத்து மாதிரி.... உணவுக்கும் உடலுக்கும் உள்ள தொடர்புகளை வகுத்ததைத்தான் இயற்கை வகுத்த விதி என்கிறார்கள். இஸ்லாத்தின் அடிப்படையில் இது இறைவன் வகுத்த விதியாகும்.

இப்படியொரு இயற்கை விதியை வகுத்த அந்த நாயன், அதற்கேற்ப மனித சமுதாயம் வாழ்வதற்காக அளித்த விதிகள் தான் திருக்குர்ஆன்.
மார்க்கச் சட்டங்கள், மார்க்க விதிகள் என்பவை, ஏற்கனவே இந்த மனித சமுதாயம் இயங்குவதற்காக அல்லாஹ் வகுத்திருக்கின்ற இயற்கை விதிகள். இந்த விதிகளின்படி மனிதன் வாழ முடியும் என்பதற்காக தன் தூதர் முஹம்மது நபி ஸல்லல்லாஹ் அலா முஹம்மது ஸல்லல்லாஹ் அலைஹி வஸல்லம் அவர்கள் முன்மாதிரியாக வாழ்ந்து காட்டச் சொன்னவன் இறைவன்
உலகில் உள்ள அறிவியல் அறிஞர்கள் மட்டுமல்லாது நாத்திகர்கள் கூட ஒப்புக் கொள்ளும் விஷயம் அந்த இயற்கை விதிகள் தான். இயற்கை விதிகளை அனைவரும் நம்புகின்றார்கள்.
இவர்கள் நம்பும் அந்த இயற்கை விதிகளை வகுத்த அதே இறைவன் தான் இஸ்லாம் எனும் இந்த விதிகளையும் வகுத்திருக்கிறான். இதன்படி வாழும்போது உலக மானிட இதயங்களை தன்பால் ஈர்க்கும் மார்க்கமாக இஸ்லாம் எப்போதுமே இருந்து கொண்டேயிருக்கிறது !
அவ்வாறு இஸ்லாம் ஈர்த்த இதயங்கள் முன்மொழிந்து கூறிய வரலாற்றை ஒரு தொகுப்பாக ஒரு தொடராக எடுத்துச் சொல்ல வருகிறேன்.

"இஸ்லாம் ஓர் ஈர்க்கும் மார்க்கம்" என்று .

## இஸ்லாம் ஓர் ஈர்க்கும் மார்க்கம் 2


( இஸ்லாம் ஓர் ஈர்க்கும் மார்க்கம் என்று உமர் (ரலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்ற விதம் ! )

நபித்துவத்தின் 6ஆம் ஆண்டு துல்ஹஜ் மாதம் ஹம்ஜா (ரழி) அவர்கள் இஸ்லாமைத் தழுவி மூன்று நாட்கள் கழித்து உமர் இஸ்லாமைத் தழுவினார். நபி (ஸல்) அவர்கள் உமர் இஸ்லாமை தழுவ வேண்டுமென இறைவனிடம் வேண்டியிருந்தார்கள்.
அல்லாஹ்வே! உமர் இப்னு கத்தாப் அல்லது அபூஜஹ்ல் இப்னு ஹிஷாம் ஆகிய இருவரில் உனக்கு விருப்பமானவரைக் கொண்டு இஸ்லாமை வலிமைப்படுத்துவாயாக!' என்று நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்விடம் வேண்டினார்கள்.
அவர்களில் அல்லாஹ்விற்கு மிக விருப்பமானவர் உமராக இருந்தார் என்று அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத், அனஸ், இப்னு உமர் (ரழி) ஆகியோர் அறிவிக்கிறார்கள். உமர் இஸ்லாமைத் தழுவிய நிகழ்ச்சியை விவரிக்கும் அறிவிப்புகளை நாம் ஆய்வு செய்து பார்க்கும்போது உமரின் உள்ளத்தில் இஸ்லாம் படிப்படியாகத்தான் வேரூன்றியது என்பதை தெரிந்து கொள்ளலாம்.
அந்த அறிவிப்புகளைச் சுருக்கமாக நாம் பார்ப்பதற்கு முன் உமரிடம் இருந்த உணர்வுகளையும், உணர்ச்சிகளையும் முதலில் பார்ப்போம்.
உமர் நல்ல வலிமையும் கம்பீரமான இயல்பும் உடையவர். ஆரம்பத்தில் அவரால் முஸ்லிம்கள் பல வகையான தொந்தரவுகளை, எண்ணற்ற இன்னல்களை நீண்ட காலமாக அனுபவித்து வந்தனர். எனினும், அவரது உள்ளத்தில்

பல மாறுபட்ட உணர்ச்சிகளின் போராட்டம் ஏற்பட்டுக் கொண்டே இருந்தது. ஒருபுறம் தங்களது மூதாதையர்கள் கடைபிடித்து வந்த சடங்குகளைப் பின்பற்றி அவற்றுக்காக வீறுகொண்டு எழுந்தார்.
மற்றொருபுறம், கொள்கையில் முஸ்லிம்களுக்கு இருந்த உறுதியையும் அதற்காக சோதனைகள் அனைத்தையும் அவர்கள் தாங்கிக் கொள்வதையும் பார்த்து ஆச்சரியமடைந்தார். மேலும், ஒரு நல்ல பகுத்தறிவுவாதிக்கு வரும் சந்தேகங்கள் அவருடைய உள்ளத்திலும் அவ்வப்போது தோன்றி மறைந்தன.
ஒரு வேளை இஸ்லாமிய போதனை மற்றவைகளைவிட தூய்மையானதாக, சரியானதாக இருக்கலாமோ என யோசிப்பார். அதனால்தான் அவருக்கு இஸ்லாமின்மீது கோபம் பொங்கி எழும்போதெல்லாம் உடனடியாக அடங்கியும் விட்டது.

உமர் இஸ்லாமைத் தழுவிய நிகழ்ச்சியை விவரிக்கும் அறிவிப்புகளை முறையாக இங்கு நாம் பார்ப்போம்.
ஓர் இரவில் தனது வீட்டுக்கு வெளியில் தூங்க வேண்டிய நிலை அவருக்கு ஏற்பட்டது. நேராக ஹரமுக்கு வந்து கஅபாவின் திரைக்குள் நுழைந்து கொண்டார். அப்போது நபி (ஸல்) அவர்கள் அங்கு தொழுது கொண்டிருந்தார்கள். தொழுகையில் நபி (ஸல்) அவர்கள் அத்தியாயம் அல்ஹாக்கா ஓத, அதன் வசன அமைப்புகளை ரசித்து உமர் ஓதுதலைச் செவிமடுத்தார்.
இதைத் தொடர்ந்து உமர் கூறுகிறார்:
"நபி (ஸல்) அவர்கள் ஓதுவதை கேட்டுக் கொண்டிருந்த நான் எனது எண்ணத்தில், 'அல்லாஹ்வின் மீது சத்தியமாக! இவர் கவிஞராக இருப்பாரோ! என்று என் உள்ளத்தில் கூற,
"இது, நிச்சயமாக (நம்மால் அறிவிக்கப்பட்டபடி) மிக்க சங்கை பொருந்திய ஒரு தூதரால் கூறப்பட்டதாகும். இது, ஒரு கவிஞனுடைய சொல்லல்ல. எனினும், (இதனை) நீங்கள் வெகு சொற்பமாகவே நம்பிக்கை கொள்கின்றீர்கள்"
(குர்ஆன் 69:40, 41)

என்ற வசனங்களை நபி (ஸல்) அவர்கள் ஓதினார்கள். அடுத்து இவர் 'ஜோசியக்காரராக இருப்பாரோ!' என்று என் உள்ளத்தில் நான் கூற,
"(இது) ஒரு ஜோசியக்காரனுடைய சொல்லுமல்ல. (எனினும், இதனைக் கொண்டு) வெகு சொற்பமாகவே நீங்கள் நல்லுபதேசம் அடைகின்றீர்கள். உலகத்தார்களின் இறைவனால் (இது) இறக்கப்பட்டுள்ளது" (அல்குர்ஆன் 69:42, 43) என்ற வசனங்களை நபி (ஸல்) அவர்கள் ஓதினார்கள்,
அது சமயம் எனது உள்ளத்தில் இஸ்லாமை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. இது உமர் இதயத்தில் விழுந்த இஸ்லாமின் முதல் விதையாகும்.
எனினும், அறியாமைக் கால எண்ணங்களும் மூட பழக்க வழக்கங்களின் பிடிவாதமும், மூதாதையர்களின் மார்க்கத்தை உயர்வாக கருதி வந்ததும், அவரது உள்ளம் ஒத்துக் கொண்டிருந்த மகத்தான உண்மையை மறைத்திருந்தது. தனது உள்ளத்தில் பொதிந்து கிடந்த உணர்வைப் பொருட்படுத்தாமல் இஸ்லாமுக்கு எதிராக செயல்படுவதிலேயே தீவிரம் காட்டி வந்தார்.

நபி (ஸல்) அவர்களின் மீது அவருக்கிருந்த, அளவுமீறிய கோபத்தினால் வாளை ஏந்தி நபி (ஸல்) அவர்களின் கதையை முடித்துவிட வெளியேறினார். அப்போது நுஅய்ம் இப்னு அப்துல்லாஹ் (ரழி) அவர்கள் வழியில் அவரை சந்தித்து.
'உமரே நீ எங்கு செல்கிறாய்?' என்று கேட்க. 'நான் முஹம்மதை கொல்லச் செல்கிறேன் என்றார்.
அதற்கு நுஅய்ம் 'நீ முஹம்மதை கொலை செய்துவிட்டு ஹாஷிம், ஜுஹ்ரஹ் இவ்விரு கிளையார்களிலிருந்து பயமின்றி தப்பித்து வாழ்வது எங்ஙனம்? என்று அச்சுறுத்தினார்.
அவரை நோக்கி 'நீ உனது மார்க்கத்தை விட்டுவிட்டு அவரது மார்க்கத்திற்கு சென்று விட்டதாகவே எனக்குத் தோன்றுகிறது' என்று உமர் கூறினார்.
அதற்கு நுஅய்ம் ''உமரே! ஆச்சரியமான ஒன்றை நான் உமக்கு சொல்லட்டுமா?. உனது சகோதரியும் (அவரது கணவர்) உனது மச்சானும் உனது மார்க்கத்தை விட்டுவிட்டு முஹம்மதின் மார்க்கத்துக்குச் சென்று விட்டனர் என்று கூறியதுதான் தாமதம். அவ்விருவரையும் தண்டிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் அவர்களை நோக்கி உமர் விரைந்தார்.

அப்போது அங்கு கப்பாப் (ரழி) அவர்கள் உமரின் சகோதரிக்கும் அவரது கணவருக்கும் தனது ஏட்டிலுள்ள 'தாஹா எனத் தொடங்கும் அத்தியாயம் தாஹாவின் வசனங்களை கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தார்கள்.
உமர் வருவதை அறிந்த கப்பாப் (ரழி) வீட்டினுள் மறைந்து கொண்டார். உமரின் சகோதரியும் அந்த ஏட்டை மறைத்து விட்டார்கள். எனினும், உமர் வீட்டிற்கு அருகே வந்தபோது கப்பாப் (ரழி) கற்றுக் கொடுத்த சப்தத்தை கேட்டு விட்டார்.
வீட்டினுள் நுழைந்த உமர், 'உங்களிடம் நான் செவிமடுத்த இந்த மெல்லிய சப்தம் என்ன?' என்று கேட்டதற்கு நாங்கள் பேசிக் கொண்டிருந்ததை தவிர வேறு எதுவும் இல்லை' என்று அவ்விருவரும் கூறினார்கள்.
அப்போது உமர் 'நீங்கள் மதம் மாறிவிட்டீர்களா?" என்று கேட்டார்.
அதற்கு அவரது மச்சான் 'உமரே! சத்தியம். உன்னுடைய மார்க்கத்தை தவிர வேறொன்றில் இருந்தால் உன் கருத்து என்ன?' என்று கேட்க.

உமர் கடுஞ்சினம் கொண்டு தனது மச்சானின் மீது பாய்ந்து அவரை பலமாகத் தாக்கி மிதிக்கவும் செய்தார். அவரது சகோதரி தனது கணவரை விட்டும் உமரை விலக்கினார். உமர் கடுமையாக தன் சகோதரியின் கன்னத்தில் அறைந்து அவரது முகத்தை ரத்தம் பீறிடக் காயப்படுத்தினார்.
கோபம் கொண்ட உமரின் சகோதரி,
" உமது மார்க்கமல்லாத வேறொன்றில் உண்மை இருந்தாலுமா? (அதை ஏற்றுக் கொள்ளக்கூடாது.) அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய இறைவன் வேறு யாரும் இல்லை, முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் என்று நான் சாட்சி கூறுகிறேன்' என்று உரக்கக் கூறினார்.
இது தன் சகோதரியின் ஆவேசமான கூப்பாடாக தெரியவில்லை ; ஆனால் அது ஆக்ரோஷமான உண்மையின் வெளிப்பாடாக உமருக்குப்பட்டது.

தனது கோபம் பலனற்றுப் போனதைக் கண்டு உமர் நிராசை அடைந்தார். தனது சகோதரிக்கு ஏற்பட்ட ரத்தக் காயத்தைப் பார்த்து அவருக்கு கைசேதமும், வெட்கமும் ஏற்பட்டது.
" உங்களிடமுள்ள இப்புத்தகத்தை எனக்குக் கொடுங்கள். நான் அதை படிக்க வேண்டும் என்று அவர் கூறினார். அதற்கு அவரது சகோதரி ',நீ அசுத்தமானவர். நீர் எழுந்து குளித்து வாரும்' என்று கூறி அதைத் தர மறுத்துவிட்டார். பிறகு குளித்து வந்தவுடன் திருமறையை கையிலேந்தி 'பிஸ்மில்லார்ரஹ்மானிர்ரஹீம்' (அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்) என்று ஓதியவுடன்...
'ஆஹா! என்ன தூய்மையான பெயர்கள்' என்று கூறி, தொடர்ந்து 'தாஹா| என்று தொடங்கி பதினான்காவது வசனம் வரை ஓதி முடித்துவிட்டு 'இது எவ்வளவு அழகான சொற்கள்! எவ்வளவு இனிமையான வசனங்கள்! எனக்கு முஹம்மதைக் காட்டுங்கள்!' என்று கேட்டுக் கொண்டார்.
உமரின் பேச்சைக் கேட்ட கப்பாப் (ரழி) வெளியேறி வந்து,
'உமரே! நற்செய்தி பெற்றுக் கொள்ளுங்கள். வியாழன் இரவு, 'அல்லாஹ்வே! உமர் அல்லது அபூஜஹ்ல் மூலமாக இஸ்லாமுக்கு உயர்வைக் கொடு!' என்று நபி (ஸல்) அவர்கள் பிரார்த்தனை செய்திருந்தார்கள். நபி (ஸல்) அவர்கள் செய்த பிரார்த்தனை உங்கள் விஷயத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டது என்று நான் உண்மையில் நம்புகிறேன்' என்றுரைத்தார்.

நபி (ஸல்) அவர்கள் ஸஃபா மலையில் உள்ள இல்லத்தில் இருந்தார்கள். உமர் தனது வாளை அணிந்து கொண்டு நபி (ஸல்) அவர்களின் வீட்டை நோக்கி வந்தார்.
உமர் கதவைத் தட்டியபோது ஒருவர் கதவின் இடுக்கின் வழியாக உமரை வாள் அணிந்த நிலையில் பார்த்து நபி (ஸல்) அவர்களுக்கு அச்செய்தியைக் கூறினார். அங்கிருந்தவர்கள் எல்லாம் ஒன்று கூடிவிட்டார்கள். மக்கள் 'உமர் வந்திருக்கிறார்' என்று கூறினார்கள்,
'ஓ! உமரா! (வந்திருக்கிறார்?) அவருக்கு கதவை திறந்து விடுங்கள்! அவர் நன்மையை நாடி வந்திருந்தால் அந்த நன்மையை நாம் அவருக்குக் கொடுப்போம்! அவர் தீமையை நாடி வந்திருந்தால் அவரது வாளாலேயே அவரை நாம் கொலை செய்து விடுவோம்!' என்று ஹம்ஜா (ரழி) கூறினார்கள்.
அப்போது நபி (ஸல்) அவர்கள் வீட்டின் உள்பகுதியில் வஹி (இறைச்செய்தி) வந்த நிலையில் இருந்தார்கள். சிறிது நேரத்துக்குப் பிறகு உமரை சந்தித்த நபி (ஸல்) அவர்கள் உமரின் சட்டையையும் வாளையும் பிடித்து அவரைக் குலுக்கி 'உமரே! நீ வழிகேட்டிலிருந்து விலக மாட்டாயா? வலீதுக்கு ஏற்பட்டதைப் போன்ற கேவலத்தையும், தண்டனையும் அல்லாஹ் உனக்கு இறக்க வேண்டுமா? அல்லாஹ்வே! இதோ உமர் இப்னு கத்தாப்

வந்திருக்கிறார்.அல்லாஹ்வே! உமரால் இஸ்லாமிற்கு உயர்வைக்கொடு!' என்று கூறினார்கள்.
உமர் (ரழி) அவர்கள் "அஷ்ஹது அல்(ன்)லாயிலாஹ இல்லல்லாஹ் அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ் அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூலுல்லாஹ்'' என்று கூறி இஸ்லாமைத் தழுவினார். (வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை, அல்லாஹ்வின் தூதர் நீங்கள் என்றும் சாட்சி கூறுகிறேன் என்பதே இதன் பொருளாகும்.)
இதனைப் பார்த்த வீட்டில் உள்ளவர்கள் தக்பீர் (அல்லாஹு அக்பர் - அல்லாஹ் மிகப் பெயரிவன் என்று) விண்ணை முட்டுமளவு முழங்கினர். அந்த சப்தத்தைப் பள்ளியில் உள்ளவர்களும் கேட்டார்கள்.
' இஸ்லாம் ஓர் ஈர்க்கும் மார்க்கம் ' என்பதை உமர் (ரழி) அவர்கள் உணர்ந்து கொண்டார்கள்.

## இஸ்லாம் ஓர் ஈர்க்கும் மார்க்கம் 3

தோலில் உள்ள வலி உள்வாங்கிகள் குறித்து நீண்ட நெடுங்காலம் ஆய்வு செய்த பேராசிரியர் தகாடட் தெஜாஸன் அது குர்ஆனில் சொல்லப்பட்டிருப்பதைக் கண்டு இஸ்லாத்தை ஏற்றார் .

தோல் உள்வாங்கிகள்( Pain Receptors ) தோலின் அடிப்பகுதியில் அமைந்துள்ளது என்பதை அறிந்தோம்

உடலில் ஏற்படும் வலியை உணரும் தன்மை மனித மூளையில்தான் உள்ளது என்று விஞ்ஞானிகள் ஆரம்பத்தில் நம்பினர் ஆனால் அண்மைகால கண்டுபிடிப்புகள் வலி உள்வாங்கிகள் தோலில் அமைந்திருப்பதால்தான் ஒரு மனிதன் வலியை உணர்கிறான் என்று நிரூபித்துள்ளன இந்த வலி வாங்கிகள் இல்லையெனில் உடலில் ஏற்படும் வலியை உணர்ந்திட இயலாது

தீக்காயங்களால் துன்பறும் ஒரு நோயாளியைப் பரிசோதனை செய்யும் மருத்துவர் அந்நோயாளின் தீக்காயத்தின் அளவை கண்டறிய ஒரு குண்டூசியால் குத்திப் பார்க்கிறார்.நோயாளி வலியை உணரும் பட்சத்தில் தீக்காயங்கள் மேலோட்டமானவைதான் .

ஆனால் வலி உள்வாங்கிகள் பழுதுபட்டு வலி உணராமல் இருக்கும் பட்சத்தில் அந்தத் தீக்காயம் ஆழமாக ஏற்பட்டுள்ளது என்றும் வலி உள்வாங்கிகள் முற்றிலும் அழிக்கப்பட்டுள்ளன என்பதையும் சுட்டிக் காட்டிவிடுகின்றன

திருக்குர்ஆன் மனிதனின் தோலில்தான் வலி உள்வாங்கிகள் அமைக்கப்பட்டிருப்பதைச் சுட்டிக்காட்டுகிறது

اِنَّ الَّذِيْنَ كَفَرُوْا بِاٰيٰتِنَا سَوْفَ نُصْلِيْهِمْ نَارًا كُلَّمَا نَضِجَتْ جُلُوْدُهُمْ بَدَّلْنٰهُمْ جُلُوْدًا غَيْرَهَا لِيَذُوْقُوا الْعَذَابَ اِنَّ اللّٰهَ كَانَ عَزِيْزًا حَكِيْمًا

" எவர் நம்முடைய இவ்வேத வசனங்களை நிராகரிக்கிறார்களோ அவர்களை நிச்சயமாக நாம் மறுமையில் நரகத்தில் சேர்த்துவிடுவோம் அவர்கள் வேதனையைச் சதா அனுபவிப்பதற்காக அவர்களுடைய தோல் கருகி விடும்போதெல்லாம் மற்றொரு புதிய தோலை மாற்றிக் கொண்டே இருப்போம் நிச்சயமாக அல்லாஹ் மிகைத்தோனும் ஞானமுடையோனுமாக இருக்கிறான் ( குர்ஆன் 4 :56 )

தாய்லாந்தில் உள்ள சியாங்மாய் பல்கலைக்கழகத்தில் (**#Chieng_Mai_University**) உடற்கூறு துறையின் (Dept.of Anatomy) தலைவராக இருப்பவர் பேராசிரியர் தகாடட் தெஜாஸன் (Prof. **#Tagatat** **#Tejasen**) என்பவர். இவர் தோலில் உள்ள வலி உள்வாங்கிகள் குறித்து நீண்ட நெடுங்காலம் ஆய்வு மேற்கொண்டவர்.

1400 ஆண்டுகளுக்கு முன் இந்த அறிவியல் உண்மை திருக்குர்ஆனில் இடம் பெற்றுள்ளதை அவரால் நம்பவே முடியவில்லை. குறிப்பிட்ட இந்தத் திருக்குர்ஆன் வசனத்தின் மொழிபெயர்ப்பை உண்மையைக் கண்டறியும் நோக்கோடு அவர் சரிபார்த்தார்.

மிகத் துல்லியமான இந்த அறிவியல் பேருண்மை திருக்குர்ஆன் எனும் கருத்துப் பெட்டகத்தில் உட்பொதிந்துக் கிடப்பதைக் கண்ட பேராசிரியர் தெஜாஸன் ஆச்சரியப்பட்டார். இந்த இறைவசனம் அவருடைய உள்ளத்தில் தன் தாக்கத்தை பதிவு செய்துவிட்டது.

சவூதியின் தலைநகர் ரியாதில் திருக்குர்ஆன் மற்றும் சுன்னாஹ்வின் அறிவியல் அத்தாட்சிகள்

(Scientific Signs of Quran and Sunnah) எனும் தலைப்பில் நடைபெற்ற எட்டாவது சவூதி மருத்துவ மாநாட்டில் கலந்து கொண்ட பேராசிரியர் தெஜாஸன் இஸ்லாத்தின் ஏகத்துவக் கோட்பாட்டை ஏற்று,

அனைவருக்கும் முன் பகிரங்கமாக முழங்கினார்

لا إله إلا الله محمد رسول الله .

வணக்கத்திற்குரிய அல்லாஹ் ஒருவனைத் தவிர யாரும் இல்லை. முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதராவார்" என்று.

**இஸ்லாம் ஓர் ஈர்க்கும் மார்க்கம் 4**
(பிரேத பரிசோதனை மூலம் இஸ்லாத்தை ஏற்ற மாரிஸ் புகைல்)



1981-ல் ஃபிரான்ஸிஸ் மித்ரான் ஃபிரான்ஸ் நாட்டின் அதிபரானபோது, உலகின் மிகக்கொடிய கொடுங்கோல் அரசன் என்று கூறப்பட்ட 'பாரோஹ்' என்ற ஃபிர்அவ்னின் சடலத்தை பகுப்பாய்வு செய்வதற்காக தம்மிடம் ஒப்படைக்குமாறு எகிப்திய அரசாங்கத்திடம் வேண்டிக்கொண்டார்.
இவ்வேண்டுகோளுக்கிணங்க ஃபிர்அவ்னின் உடல் விமானம் மூலமாக ஃப்ரான்ஸின் ஆய்வுக்கூடத்திற்கு அனுப்பி வைக்கப்பட்டபோது, அவ்விமானத்தை வரவேற்பதற்காக ஃபிரான்ஸின் அதிபர் மற்றும் அமைச்சர்கள், அதிகாரிகள் அனைவரும் விமான நிலையத்தில் காத்திருந்து, அரச வரவேற்பளித்த பின்னர் ஃபிர்அவ்னின் உடல் ஆய்வகம் நோக்கிக் கொண்டு செல்லப்பட்டது.
அதன் பின் அந்த மம்மி ஆய்வுக்கூடத்தின் ஒரு பிரத்தியேக பகுதிக்கு கொண்டு செல்லப்பட்டு விஞ்ஞானி மாரிஸ் புகைல் (Dr. Maurice Bucaille) தலைமையில் பல்வேறு தொல்லியல் மற்றும் உடற்கூறியல் ஆய்வுகளுக்கு உட்படுத்தப்பட்டது.

தொல்பொருள் ஆய்வாளர்கள், சரித்திர ஆய்வாளர்கள், சிகிச்சை நிபுணர்கள் என ஆரய்ச்சிக்குத் தேவையானவர்கள் அனைவரும் ஆய்வகத்திலே குழுமி, ஃபிர்அவ்ன் எப்படி மரணமடைந்தான் என்பது பற்றிய தகவல்களை கண்டுபிடிப்பதற்காக ஆய்வாளர்கள் பெரும் முயற்சியில் ஈடுபட்டிருந்தனர்.
இறுதியாக அன்றிரவு விஞ்ஞானி மாரிஸ் புகைல், ஃபிர்அவ்னின் உடல் கடலுக்குள்ளிருந்து வெளியெடுக்கப்பட்டது தொடர்பாகவும் அவ்வுடல் கடலுக்கடியிலே பாதுகாக்கப்படடிருந்தது தொடர்பாகவும் தனது ஆய்வின் இறுதி ஆய்வு அறிக்கையினைத் தயாரித்தார்.

அப்போது வெளியிடப்பட்ட விஞ்ஞானிகளின் அறிக்கையில்
‘உடலில் உப்பு படிந்திருப்பதானது, ஃபிர்அவ்ன் கடலில் மூழ்கி மரணமடைந்துள்ளமைக்கான சிறந்த சான்றாகும் என்றும்
‘பாரோஹ்(ஃபிர்அவ்ன்) உயிர் பிரிந்தவுடன் உடல் மட்டும் ஏதோ ஒரு புதிய முறையில் பதப்படுத்தப்பட்டு பாதுகாக்கப்பட்டிருக்க வேண்டும்’ என்றும் வெளியிட்டனர்.
கடலுக்கடியிலிருந்து வெளியெடுக்கப்பட்டிருந்தாலும் அதே போன்று கடலிலிருந்து கண்டெடுக்கப்பட்ட மற்ற உடல்களைவிட இந்த உடல் மட்டும் பழுதடையாமலும், எந்த பாதிப்புக்களுக்குள்ளாகாமலும் எவ்வித சிதைவுமில்லாமலும் இத்தனை காலம் எப்படி இருந்தது என்று டாக்டர். மாரிஸ் புகைலுக்கு பெரும் ஆச்சரியமாக இருந்தது !
அப்போது அங்கிருந்த சக விஞ்ஞானி ஒருவர் 'முஸ்லிம்கள் இந்த மம்மியின் மரணம் பற்றி தங்கள் வேதப் புத்தகத்தில் ( புனித அல்-குர்ஆனில்) கூறப்பட்டுள்ளது என்று ஏதோ கூறுகிறார்கள்' என்று கூறினார்.
மாரிஸ் புகைல் அவர்கள் அந்த நபர் சொன்ன இத்தகவலை ஏற்கவில்லை. 'இன்றைய விஞ்ஞான வளர்ச்சியும், உயர் தொழில்நுட்ப ஆய்வுக்கூடம் மற்றும் கம்ப்யூட்டர்கள் துணையும், நாம் கையாண்ட யுக்திகளும் இல்லாமல் இதை யாரும் உறுதி படுத்திக் கூறமுடியாது' என்றார்.

ஆனால் இன்னொரு சக விஞ்ஞானியோ, 'ஃபிர்அவ்ன் மூழ்கடிக்கப்பட்டதாகவும், மூழ்கடிக்கப்பட்ட பின் அவனின் உடல் பாதுகாக்கப்படுமெனவும் முஸ்லிம்களின் அல்குர்ஆனில் கூறப்படுகின்றதே' என்று கூறினார்.
இச்செய்தியைக் கேள்வியுற்ற மாரிஸ் புகைல் வியப்பில் ஆழ்ந்தார்.
'இது எப்படி சாத்தியமாகும்? 200 ஆண்டுகளுக்கு முன் (1898-ல் தான்) கண்டெடுக்கப்பட்ட ஒரு உடலைப்பற்றி, 1400 ஆண்டுகளுக்கு முன்னரே முஸ்லிம்களிடம் இருக்கின்ற அல்குர்ஆன் எவ்வாறு விவரிக்க முடியும்?
எகிப்தியப் பழங்குடி மக்கள் தமது மன்னர்கள் இறந்தப் பின் அவர்களின் சடலங்கள் கெட்டுவிடாமல் இருப்பதற்காக ஒரு வகை மருத்துவ முறையினைப் பயன்படுத்தியுள்ளார்கள் என்ற செய்தி சில பத்தாண்டுகளுக்கு முன்னர்தான் அரேபியர் உட்பட அனைவருக்கும் அறிய வந்தது.

அப்படியிருக்க, 1400 ஆண்டுகளுக்கு முன்னர் முஸ்லிம்களுக்கு இந்த மம்மி பற்றிய தகவல் தெரிவதற்கு வாய்ப்பில்லாதபோது இது எப்படி அவர்களுக்கு சாத்தியமாயிற்று?' என்று அங்கு கூடி இருந்தவர்களிடம் வினவ ஆரம்பித்தார்.

பின்னர் உடலைப் பாதுகாப்பாக வைப்பதற்கான ஏற்பாடுகள் செய்யப்பட்டன.
விஞ்ஞானி மாரிஸ் புகைல் அன்றைய இரவு ஃபிர்அவ்னின் உடலுக்கு முன்னாலிருந்து அதை ஆழமாக அவதானிக்கத் தொடங்கினார்.
முஸ்லிம்களின் அல்குர்ஆன் இந்த மம்மியைப் பற்றிப் பேசுகின்றது என்று அந்த நபர் சொன்ன தகவலை சிந்தித்து, 'இதோ என் முன் வைக்கப்பட்டிருப்பதுதான் மோஸசை (மூஸாவை) விரட்டிச் சென்றவனின் உடலா..? இது இவ்வாறு பாதுகாக்கப்படும் என்பதை முஸ்லிம்களின் முஹம்மத் 1400 ஆண்டுகளுக்கு முன்னரே அறிந்திருப்பாரோ?' போன்ற வினாக்களை அவருள் ஏற்படுத்தியது.
மாரிஸ் தன் தூக்கத்தை தொலைத்தார். பைபிளைக் கொண்டுவரச் சொல்லி அதன் பக்கங்களை புரட்டினார். "பாரோஹ்வும் அவன் சேனைகளும் கடலில் மூழ்கி மாண்டனர். அவர்களில் எவரும் உயிர் பிழைத்தாரில்லை" என்று மட்டுமே அதில் இருந்ததையும் பாரோஹ்வின் உடல் அழியாமல் பாதுகாக்கப்பட்ட விபரம் அதில் இல்லாதிருப்பதையும் கண்டு, மாரிஸ் அதிர்ச்சிக்குள்ளானார். பரிசோதனை முடிந்ததும் ஃபிர்அவ்னின் உடல் எகிப்திய அரசிடம் திருப்பி ஒப்படைக்கப்பட்டது.

ஆனால் மாரிஸ் புகைல் மட்டும் ஓயவில்லை. இந்த மம்மி பாதுகாக்கப்படும் என்ற விபரங்களை முஸ்லிம்கள் ஏற்கனவே அறிவார்கள் என்ற உண்மை அவரை ஓய விடவில்லை! இதுபற்றி அறிவதற்காக முஸ்லிம் அறிஞர்களைச் சந்தித்துக் கலந்துரையாட இஸ்லாமிய நாடுகளுக்குப் பயணமாகத் தொடங்கினார்.
எகிப்தின் உடற்கூறுயியல் முஸ்லிம் விஞ்ஞானிகளுடன் ஒரு சந்திப்பை ஏற்படுத்தி, பாரோஹ்வின் உடல் இறப்புக்குப் பின் புதிய முறையில் பாதுகாக்கப்பட்டிருக்கிறது என்ற தமது கண்டுபிடிப்பைப் பற்றி விவாதித்தார்.
அப்போது சபையிலிருந்த ஒரு முஸ்லிம் விஞ்ஞானி அமைதியாய் எழுந்து அல்குர்ஆனில் சூரா யூனுஸில் இடம் பெற்றிருக்கும் பக்கத்தைப் புரட்டி, ஒரு வசனத்தை ஓதிக் காண்பித்தார்.
அந்த வசனத்தைப் படித்த மாரிஸ் புகைல் உறைந்து போய் எழுந்து நின்றார்.தமது வேதமான பைபிள் கூறியதை குர்ஆனின் கூற்றோடு கவனமாக ஒப்பிட்டு, 'பாரோஹ்' கடலில் மூழ்கடிக்கப்பட்டதைப் பற்றி மட்டுமே பைபிள் கூறுவதையும், குர்ஆன் அவனுடைய மரணத்தையும், மரணத்திற்கு பின் அவன் உடல் பாதுகாக்கப்படுமென்று கூறுவதையும் அறிந்து பிரமித்தார்.

அந்த குர்ஆன் வசனம் மாரிஸ் புகைல் அவர்களின் உள்ளத்தையே உலுக்கியது. உடனே எழுந்து எல்லோருக்கும் முன்னால் சத்தத்தை உயர்த்தியவராக,
"நான் அல்குர்ஆனை நம்பிவிட்டேன், இந்த குர்ஆன் கூறும் இஸ்லாத்தையும் ஏற்றுக்கொண்டேன்" என்று கூறி அவர் இஸ்லாத்தைத் தழுவினார்.
அந்த விஞ்ஞானியின் வாழ்வை புரட்டிப் போட்ட அந்த வசனம்..

فَالْيَوْمَ نُنَجِّيكَ بِبَدَنِكَ لِتَكُونَ لِمَنْ خَلْفَكَ آيَةً ۚ وَإِنَّ كَثِيرًا مِّنَ النَّاسِ عَنْ آيَاتِنَا لَغَافِلُونَ
எனினும் உனக்குப் பின்னுள்ளவர்களுக்கு ஓர் அத்தாட்சியாக இன்றைய தினம் நாம் உம் உடலைப் பாதுகாப்போம்; நிச்சயமாக மக்களில் பெரும்பாலோர் நம் அத்தாட்சிகளைப்பற்றி அலட்சியமாக இருக்கின்றார்கள்” (என்று அவனிடம் கூறப்பட்டது). (குர்ஆன்: 10:92)
"உனக்குப் பின் வருவோருக்கு நீ சான்றாக இருப்பதற்காக உன் உடலை இன்று பாதுகாப்போம் (என்று கூறினோம்). மனிதர்களில் அதிகமானோர் நமது சான்றுகளை அலட்சியம் செய்வோராகவே உள்ளனர்." (குர்ஆன் 10:92)
அல்லாஹ்வை மறுப்பவர்கள் " அல்குர்ஆனை" சிந்திக்கட்டும் ! சிந்திக்க சொல்லும் ஒரே வேதம் அல்குர்ஆன் தான்..!

## இஸ்லாம் ஓர் ஈர்க்கும் மார்க்கம் 5

‘எனக்கு இஸ்லாத்தின் மீது அதிகம் ஈர்ப்பு ஏற்பட்டதற்கு அல்லாஹ்வே காரணம்’ – சுப்பிரமணி சாமியின் மகள் சுகாசினி
பாரம்பரிய பிராமண குடும்பத்தில் பிறந்த நீங்கள் எப்படி இஸ்லாத்தையும், இஸ்லாமியர்களையும் ஆதரிக்கிறீர்கள் என நெறியாளர் கேட்டதற்கு அவர் கொடுத்த பதில்கள் :
" என் தந்தை உட்பட வீட்டில் உள்ளவர்களுக்கு பூஜை புணஸ்காரங்களில் அதிகம் ஈடுபாடு உண்டு. இருந்தாலும், எனக்கு இஸ்லாத்தின் மீது அதிகம் ஈர்ப்பு ஏற்பட்டதற்கு அல்லாஹ்வே காரணம். (தான் நாடியவரை நேர்வழி செலுத்துவேன் தான் நாடியவரை வழிதவற செய்வேன் என்பது போல- ( குர்ஆன் 6:125 )
" நான் டி.வியில் ஒரு ஹதீஸ் கேட்டேன். உருவத்தாலோ, உயர் குலத்தாலோ, யாரும் உயர்ந்தவர் இல்லை யாருடைய உள்ளம் விசாலமாகி இருக்கின்றதோ அவரே உயர்ந்தவர் என்ற ஹதீஸை என்னுடன் ஒப்பிட்டு பார்த்தேன்.

எனக்கு உருது மொழி மீது அதிகம் ஈடுபாடு உண்டு. அந்த அடிப்படையில் நான் அடிக்கடி முஷராக்களுக்கு (கவிதை அரங்கம்) செல்வேன். அங்கு பல முஸ்லீம்கள் வருவார்கள் அவர்களிடம் பழகும் போது அன்பு, பாசம், கனிவு, கலந்த பேச்சுகள் என்னை கவர்ந்தது. இவர்களையா தீவிரவாதிகள், பயங்கரவாதிகள், இவர்களுடன் பேசக் கூடாது, பழகக் கூடாது என நம்மை தடுக்கின்றார்கள் என கவலை என்னை ஆட்கொண்டது.
குர்-ஆன் வசனத்தை கவிதையாக முஷராக்களில் பாடினார் ஒரு பெண் (ஹுதா) யாரை காப்பாற்ற நினைத்தாலும் சிலந்தி வலையை கேடயமாக கொண்டு காப்பாற்றுவான், யாரை உயர்த்த நினைக்கின்றானோ அவரை கடலையே பிளந்து வழி கொடுப்பான், யாருடைய உயிரை எடுக்க நினைக்கின்றானோ கொசுவை கொண்டே உயிரை பறிப்பான்.
இஸ்லாத்தின் மீது தவறான கருத்துகள் திணிக்கப்படுகிறது, உலகம் முழுவதும் தவறான நம்பிக்கையை விதைத்து இருக்கிறார்கள். நான் அதை மாற்ற துடிக்கிறேன், உலகம் முழுவதும் மாற்ற முடியாது என்றாலும் என் வீதியில் இருந்து, என் சுற்றுப்புறத்திலிருந்து மாற்ற போராடுகிறேன்.
ஆரம்பத்தில் இஸ்லாமியர்களுடன் பழக வேண்டாம் என பல உறவினர்களும், தோழிகளும் கூறினார்கள், அவர்கள் கெட்டவர்கள், தீவிரவாதிகள் என கூறி பயந்தார்கள், அவர்கள் பயத்தை மாற்றினேன். தற்போது அவர்களே இஸ்லாத்தை விரும்பி படிக்கிறார்கள், புத்தகங்களை கேட்கிறார்கள், ஆலோசனை கேட்கிறார்கள். அவர்களுக்கும் இஸ்லாத்தின் மீது நம்பிக்கை பிறந்தது.
இஸ்லாம் மிக அமைதியான மார்க்கம், அன்பான மார்க்கம், அழகான மார்க்கம், தூய்மையான மார்க்கம் இதை படிக்க ஆரம்பித்தால் அதை படிப்பவர்கள் அதில் ஒன்றிப்போய், இஸ்லாம் இல்லாமல் இருக்க மாட்டார்கள் என்றார் சுஹாசினி.
சுப்பிரமணிசாமியின் மகள் சுஹாசினியின் கணவர் நதீம் ஹைதர் ஒரு முஸ்லிம்

## இஸ்லாம் ஓர் ஈர்க்கும் மார்க்கம் 6

( பெரியார்தாசன் அப்துல்லாஹ் வாக இஸ்லாத்தை தழுவினார்)

பெரியார்தாசன் சென்னை பச்சையப்பன் கல்லூரியில் தத்துவவியல் பேராசிரியராகப் பணியாற்றி ஒய்வு பெற்றவர். திராவிடர் கழகத்தின் கொள்கையால் ஈர்க்கப்பட்டு நாத்திகராக வாழ்ந்த இவர் தனது இயற்பெயரான சேஷாசலத்தை பெரியார்தாசன் என்று மாற்றிக் கொண்டார்.

கலிபோர்னியாவிலுள்ள லாஸ் ஏஞ்சல்ஸ் பல்கலைக்கழகத்தின் பகுதி-நேரப் பேராசிரியரான பெரியார்தாசன், கருத்தம்மா உள்ளிட்ட சமூக விழிப்புணர்வை ஏற்படுத்திய ஒருசில திரைப்படங்களில் நடித்துள்ளார். பெண்சிசுக்கொலை குறித்த இப்படம் தேசிய விருது பெற்றது.

பிரபல பேச்சாளரும், நாத்தீக கொள்கைவாதியும் பெரியாரிய வாதியுமான பேராசிரியர் பெரியார்தாசன் வெள்ளிக்கிழமையன்று இசுலாம் மதத்தில் தன்னை இணைத்துக் கொண்டார் என சவுதி அரேபியாவிலிருந்து வெளியாகும் "அரப் நியூஸ்" செய்தியாளர் அறிவித்துள்ளார்.

பேராசிரியர் பெரியார்தாசன் தன் பெயரை அப்துல்லாஹ் என்று மாற்றிக்கொண்டதாகவும் அச்செய்திக்குறிப்பு தெரிவிக்கிறது.

வெள்ளியன்று ரியாதில் நடைபெற்ற செய்தியாளர் சந்திப்பில் பெரியார்தாசன் தான் இசுலாத்தைத் தழுவியதை பகிரங்கமாக அறிவித்தார்.

அரப் நியூஸ் செய்தியாளருக்கு அவர் அளித்த நேர்காணலில், "உலகிலுள்ள மதக் கொள்கைகளில் கடவுளின் வழிகாட்டல்களை நேரடியாகப்பின்பற்றும் மதம் இசுலாம் மட்டுமே என்றார். பிறசமய வேதங்களையும் ஆய்வு செய்தவகையில் குரான் தவிர ஏனையவை கடவுளின் வார்த்தைகளல்ல. இதுமட்டுமே பெருமகனார் முகமது நபிக்கு அருளப்பட்டது போன்றே இன்றும் உள்ளது", என்றார்.

"பெரியாரின் கருத்துக்களால் ஈர்க்கப்பட்டு மத எதிர்ப்புப் பிரச்சாரம் செய்து வந்த நான், மதங்கள் மட்டுமே இவ்வுலகிலிருந்து மறு உலகம் செல்வதற்கான வழி என்பதை பிற்காலத்தில் உணர்ந்தேன்", என்றார்.

முஸ்லிம் மதத்தில் இணைந்துள்ள பேரா.பெரியார்தாசன் புனித நகரமான மக்காவுக்கு உம்ரா எனும் புனிதப்பயணம் மேற்கொண்டார்

ரஹ்மத் ராஜகுமாரன் 944344 6903 வாட்ஸ் அப் 948690 9903

---

பெரியார்தாசன் அப்துல்லாஹ்வாக இஸ்லாத்தை தழுவினார்

**https://www.facebook.com/reel/572460411471833?s=yWDuG2...**

"நான் ஏன் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டேன் ? " - பெரியார்தாசன் என்கிற அப்துல்லாஹ்

**https://youtu.be/rJehxTw8Bms**

**இஸ்லாம் ஓர் ஈர்க்கும் மார்க்கம் 7**
(தொழுகையின் அழைப்புக்கான பாங்கொலியால் இஸ்லாத்தை தழுவியவர் )

ஆஸ்திரேலியா. அங்கு பள்ளிவாசலிலிருந்து அன்றாடம் வெளி வந்த பாங்கோசையைக் கேட்டு, அதனைப் பெரும் தொந்தரவாக நினைத்துக் கொண்டு, நித்தம் நித்தம் மனம் குமைந்து, இறுதியில் ஒரு நாள் ஒரு கை பார்த்துவிடுவது என்கிற ஆத்திரத்துடனும் ஆவேசத்துடனும் சண்டை போடுகின்ற ஒரே எண்ணத்துடன் பள்ளிவாசலுக்குச் சென்றிருக்கின்றார் ஒரு ஆஸ்திரேலியர்.
அவரை அங்கு முஸ்லிம்கள் வரவேற்றிருக்கின்றார்கள். கண்ணியமாக உபசரித்திருக்கின்றார்கள். மென்மையாக இஸ்லாத்தின் அடிப்படைகளை எளிமையான மொழியில் விளக்கியிருக்கின்றார்கள்.
தொழுகைக்காக மக்களுக்கு அழைப்பு விடுக்கின்ற போது - பாங்கு சொல்லும் போது - சொல்லப்படுகின்ற வாசகங்களின் பொருளைச் சொல்லி விளக்கியிருக்கின்றார்கள்.
ஆத்திரத்துடன் வந்தவர் அமைதியடைந்து விட்டார். வன்மத்துடன் சண்டை போட வந்தவரின் மனம் இளகிவிட்டது. சத்தியத்தை நேரடியாகப் பார்த்து உணர்ந்ததும் இதயம் கனிந்து விட்டது. குர்ஆனிய வசனங்களைக் கேட்டதும் உள்ளம் உருகிவிட்டது. தொழுகையின் அழைப்புக்கான சொற்களே மனதுக்குள் வெளிச்சமாய்ப் பாய்ந்தன.

ஏக இறைவனுக்கு அடிபணிந்து வாழ்வதாக உரத்துச் சொன்னார். முஹம்மத் (ஸல்) அவர்களை வாழ்வின் வழிகாட்டியாக ஏற்றுக் கொள்வதாக பிரகடனம் செய்தார். முஸ்லிமாக மாறிவிட்டார்.
ஆம்! கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். அந்த ஆஸ்திரேலியருக்கு எத்துணை எளிதாக இறைவனின் வழிகாட்டுதல் கிடைத்து விட்டது! எத்துணை வேகமாக அவர் சத்தியம் தனக்கு முன்னால் வந்ததும் அதனை ஆர்வதோடு அரவணைத்துக் கொண்டார். தொலைந்து போன சொந்தக் குழந்தையைப் பாய்ந்து சென்று கைகளில் ஏந்திக் கொள்வதைப் போன்று இஸ்லாத்தை ஓரிரு மணி நேரங்களில் தனக்குரியதாய் அடையாளம் கொண்டு ஏற்றுக்கொண்டார்.
உலகம் முழுவதும் இலட்சக்கணக்கான பள்ளிவாசல்களில் பாங்கு சொல்லப்படுகின்றது. நாள்தோறும் இலட்சக்கணக்கான முறை பாங்கோசை உலகெங்கும் எதிரொலித்துக் கொண்டே இருக்கின்றது. ஆனால் எல்லோருக்குமே அந்த ஆஸ்திரேலியரைப் போன்று நேர்வழி கிடைத்துவிடுவதில்லை.
உண்மை யாதெனில் நேர்வழி கிடைப்பது இறைவனின் கையில்தான் இருக்கின்றது. அவன் யாரை நாடுகின்றானோ அவருக்குத்தான் சத்தியம் புலப்படுகின்றது.
நேற்று இறந்து தாரிக் ஃபத்தாஹ்வையே எடுத்துக் கொள்ளுங்கள். கனடாவில் இருந்தவாறு இந்திய முஸ்லிம்களுக்கும் இஸ்லாத்துக்கும் எதிராக தொடர்ந்து விஷம் கக்கி வந்தவர்தான் தாரிக் ஃபத்தாஹ். இத்தனைக்கும் அவர் முஸ்லிம் குடும்பத்தில்தான் பிறந்தார். பிறந்ததும் அவர் கேட்ட முதல் ஓசையே பாங்கோசைதான். வாழ்நாள் முழுவதும் குர்ஆனைக் கேட்டிருக்கின்றார். ஆனால் சத்தியமும் நேர்வழியும் அவருக்குக் கிடைக்காமலே போயிற்று.
இது எதனை உணர்த்துகின்றது?
ஒருவருக்கு நேர்வழி கிடைப்பதற்கு இறைவனின் நாட்டமும் விருப்பமும் இருந்தால்தான் முடியும். இஸ்லாத்தைப் பற்றி எத்தனை எத்தனை நூல்களை வாசித்து இருந்தாலும் இறைவன் நாடினால்தான் மனத்துக்குள் வெளிச்சம் பாயும்.
அருண் ஷோரியைப் போன்று இஸ்லாத்தை வாசித்த சாமான்ய முஸ்லிம்களின் எண்ணிக்கையும் குறைவாகத்தான் இருக்கும். தி வர்ல்ட் ஆஃப் ஃபத்வாஸ் என்கிற கனமான நூலை எழுதியவர் அவர். இருந்தும் என்ன பயன்?
இறைவனின் நாட்டம் இருந்தால்தான் சத்தியம் புலப்படும். இதனை இறைவனே இறைமறையில் பல்வேறு இடங்களில் சுட்டிக்காட்டி இருக்கின்றான்.
கிழக்கு, மேற்கு அனைத்தும் அல்லாஹ்வுக்கே உரியனவாகும். தான் நாடுகின்றவர்களை அவன் நேரான வழியில் செலுத்துகின்றான்.
(அத்தியாயம் 2 அல்பகறா 142)

" மேலும் தான் நாடியோரை அல்லாஹ் நேரான வழியில் செலுத்துகின்றான் " (அத்தியாயம் 2 அல்பகறா 213)
"ஆயினும் எவர்கள் நம்முடைய சான்றுகளைப் பொய் என வாதிடுகின்றார்களோ அவர்கள் செவிடர்களாயும், ஊமையர்களாயும் இருள்களில் உழன்று கொண்டுமிருக்கின்றார்கள். தான் நாடுகின்றவர்களை அல்லாஹ் வழிகேட்டில் சிக்கவைக்கின்றான். மேலும் தான் நாடுகின்றவர்களை நேர்வழியில் செலுத்துகின்றான்" (அத்தியாயம் 6 அல்அன்ஆம் 39)

" (இந்த நிலையற்ற வாழ்வின் மோகத்தில் நீங்கள் மயங்கிக் கிடக்கின்றீர்கள்) அல்லாஹ் உங்களை அமைதி இல்லத்திற்கு அழைத்துக் கொண்டிருக்கின்றான். (நேர்வழி காட்டும் ஆற்றல் அவனிடமே உள்ளது). தான் நாடுவோர்க்கு அவன் நேர்வழி அளிக்கின்றான்."(அத்தியாயம் 10 யூனுஸ் 25)
உண்மையை மிகத் தெளிவாகக் காண்பிக்கும் வசனங்களை நாம் இறக்கியருளியிருக்கின்றோம். மேலும், அல்லாஹ் தான் நாடுகின்றவர்களுக்கு நேர்வழியின் பக்கம் வழிகாட்டுகின்றான்.
(அத்தியாயம் 24 அந்நூர் 46)

ஆக, நாம் எல்லோருமே எந்நேரமும் இறைவனின் கருணையைச் சார்ந்தவர்களாக இருக்கின்றோம். இப்போது ஈமான் கொண்டவர்களாக இருந்தாலும் வாழ்வின் இறுதி மூச்சு வரையில் நேர்வழியில் நிலைத்திருக்க வேண்டுமென்றாலும் அல்லாஹ்வின் அருளும் நாட்டமும் தாம் தேவை.
இதனால்தான் நாள்தோறும் ஐவேளை தொழுகைகளிலும் குறைந்தபட்சம் பதினேழு முறை" இஹ்தினஸ் சிராதுல் முஸ்தகீம் - நேர்வழியைக் காண்பிப்பாயாக ! " என்று பிரார்த்திக்கின்றோம்.
மரணிக்கும் போதும் முஸ்லிம்களாகவே மரணிக்கச் செய்வாயாக. உத்தமர்களுடன் எழுப்புவாயாக என்பதுதான் நம்முடைய முன்னோர்களின் முக்கியமான பிரார்த்தனையாக இருந்து வந்துள்ளது. அதனையே நாள்தோறும் நாமும் பிரார்த்திக்கின்றோம்.
அல்லாஹ் கிருபை செய்வானாக. ஆமீன்.

இஸ்லாம் ஓர் ஈர்க்கும் மார்க்கம் 8
(மிகப்பெரிய கேள்விகளுக்கான விடைகள் அவருக்கு குர்ஆனில் கிடைத்திருக்கின்றன )

ISLAM CHOSE ME:
YUVAN SHANKAR RAJA

Yuvan, who does 'namaz' five times a day like a devout Muslim talks to *DC* about his decision to convert

ANUPAMA SUBRAMANIAN
*Deccan Chronicle*

Yuvan Shankar Raja, ace music composer and son of maestro Ilaiyaraaja, has embraced Islam. He gave *DC* an exclusive interview. "I have done something that has given me inner peace and there's no need for me to hide it," says Yuvan, who does 'namaz' five times a day like a devout Muslim.

**WHY THIS SUDDEN DECISION OF CONVERTING TO ISLAM?**

I won't say that it was a sudden decision. I have been reading books and acquiring knowledge about Islam for nearly a year and a half. Initially, I was getting infrequent dreams, and later, started getting them more frequently. I couldn't interpret them and was curious about what I was undergoing. I realised that it was a spiritual experience and I couldn't pinpoint what exactly it was. Then I started reading the holy Quran, which slowly gave answers to all my dreams, doubts and misgivings about life. It was a sort of self-introspection for me. I feel that it was Islam that chose me.

DC EXCLUSIVE

**THERE IS A RUMOUR THAT DIRECTOR AMEER WAS INSTRUMENTAL IN YOUR TAKING THIS STEP AND THAT HE TOOK YOU TO PUDUCHERRY WHERE THE CONVERSION TOOK PLACE.**

(Laughs) As you said, these are merely rumours. No one influenced me to convert to Islam. It is something to do with your soul. When the connection between inner soul and spiritualism happens, you tend to lean on that side. That's precisely what occurred to me.

**YOUR DAD ILAIYARAAJA IS A STAUNCH HINDU SPIRITUALIST. HOW DID HE REACT TO YOUR DECISION?**

As a son, it was my duty to tell him first. Yes, it was a shock for him initially. But later, he reconciled and accepted it. At the end of the day, he wants to see his son happy! In fact, I told Bhava and Karthik also about it. They also understood me in the right spirit.

I also want to clarify that unlike few reports that suggested that there's a big rift between my father and me, all is well at my household and there's no misunderstanding between us.

**SOME WROTE THAT YOU FOLLOW A.R.RAHMAN.**

Why should I? It's just my experiences that have drawn me towards the religion.

**YOU ARE ALSO SAID TO HAVE MARRIED FOR THE THIRD TIME, AND REPORTEDLY, TO A MUSLIM GIRL.**

I also read the news and want to make things clear. It started when I went recently to Kovai to attend my close friend and actor Krishna's wedding. Krishna, I, one of my friends and his wife had a picture taken of ourselves at the wedding. Immediately, someone posted the picture and wrote that I had married for the third time, when the lady in the picture was my friend's wife! I just want to put all rumours to rest that I have not married for the third time.

**SO, DO WE SOON SEE A CHANGE TO THE BRAND NAME THAT IS 'YUVAN SHANKAR RAJA'?**

I will let you know about it soon.

As a son, it was my duty to tell my dad first. Yes, it was a shock for him initially. But later, he reconciled and accepted it. At the end of the day, he wants to see his son happy!

யுவன் சங்கர் ராஜா (Yuvan Shankar Raja; பிறப்பு: ஆகஸ்ட் 31, 1979) புகழ்பெற்ற இசையமைப்பாளர் இளையராஜாவின் இளைய மகனான இவர் தமிழ்த் திரைப்பட இசைக்கலைஞர், பின்னணி பாடகர், பாடல் ஆசிரியர் ஆவார். பெரும்பான்மையாக தமிழ் படங்களிள் பணியாற்றுகிறார்.

பல்துறை இசையமைப்பாளராகக் கருதப்படும் இவர், குறிப்பாக மேற்கத்திய இசையைப் பயன்படுத்தியதற்காக அறியப்படுபவர் , மேலும் தமிழ் திரைப்படம் மற்றும் இசைத் துறையில் ஹிப் ஹாப் இசையை அறிமுகப்படுத்தியவர் . தமிழ் நாட்டில் "ரீமிக்ஸ்" கலாச்சாரத்தை தொடங்கி அதனை பிரபலபடுத்தியவர்.
15 வருட காலத்திற்குள், யுவன் சங்கர் ராஜா 100 க்கும் மேற்பட்ட படங்களில் பணியாற்றியுள்ளார். 1996 ஆம் ஆண்டில், தனது 16 வயதில், அரவிந்தன் என்ற திரைப்படத்திற்காக இசையமைத்து , தனது இசை வாழ்க்கையைத் தொடங்கினார்.
அவரை ஏன் முஸ்லிமாக_மாற்றினீர்கள் ? நெட்டிசன்களின் கேள்விக்கு யுவன்சங்கர் ராஜாவின் மனைவி பதிலடி..
இசைஞானியின் மகனாக இருந்தாலும் தனது தனித்திறமையின் மூலம் தனக்கென ரசிகர் பட்டாளத்தை உருவாக்கி முன்னணி இசையமைப்பாளராக வலம் வருபவர் யுவன்சங்கர் ராஜா. தனது தாயார் மறைவிற்குப் பிறகு கடந்த 2014-ஆம் ஆண்டு முஸ்லிமாக மாறிய யுவன்சங்கர் ராஜா தனது பெயரை அப்துல்_காலிக் என்று மாற்றிக் கொண்டார்.

இதையடுத்து 2015-ம் ஆண்டு ஷாஃப்ரூன் நிஷார் என்பவரை திருமணம் செய்துகொண்டார். இத்தம்பதிக்கு 2016-ம் ஆண்டு பெண் குழந்தை பிறந்தது.
ஆடை வடிவமைப்பாளராக பணிபுரியும் ஷாஃப்ரூன் நிஷார் தனது இன்ஸ்டாகிராம் பக்கத்தில் நெட்டிசன்களின் பல கேள்விகளுக்கு நேற்று பதிலளித்தார். அதில் யுவன்சங்கர் ராஜாவின் மதம் மாற்றம் குறித்தும் கேள்வி எழுப்பப்பட்டுள்ளது.
அதற்கு பதிலளித்த ஷாஃப்ரூன், யுவன்சங்கர் ராஜா இஸ்லாமைத் தேர்ந்தெடுத்ததில் எனக்கு எந்த தொடர்பும் இல்லை. மூன்று ஆண்டுகளுக்கும் மேலாக அவர் இஸ்லாமைப் பின்பற்றத் தொடங்கிய பின்னர் தான் எனக்கு அவரைத் தெரியும்.
அவர் மற்ற மதங்களை விடுத்து இஸ்லாமைத் தேர்ந்தெடுத்தது அது அவருக்கு பிடித்திருந்தது. மிகப்பெரிய கேள்விகளுக்கான விடைகள் அவருக்கு குர்ஆனில் கிடைத்திருக்கின்றன. எங்களது திருமணம் இரு குடும்பத்தாராலும் ஏற்பாடு செய்யப்பட்டது தான்.
நாங்கள் எண்ணங்களால் இணைந்திருக்கிறோம். கடந்த காலத்தில் எதிர்கொண்டவை, வாழ்க்கையில் தினம் சில அற்ப வார்த்தை சண்டைகளை விடவும் பெரிய விஷயங்களைப் பற்றிய எங்களுடைய உரையாடல் மூலம் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டுள்ளோம். இஸ்லாத்தை விட முக்கியமான ஒன்றை தேர்ந்தெடுப்பேன் என்றால் நான் அதை விவரிக்கிறேன்." என்று கூறியுள்ளார்.
தொடர்ந்து யுவன் இஸ்லாமிய உடையில் இருக்கும் போட்டோக்களைப் பகிர்ந்து இப்படி மாற்றி விட்டீர்களே என்று கேட்க, "வெறுப்பவர்கள் வெறுக்கட்டும். அதைப்பற்றி எனக்கு கவலை இல்லை" என்றார் யுவனின் மனைவி ஷாஃப்ரூன்
இளையராஜா எவ்வளவு இந்து கடவுள் நம்பிக்கை உள்ளவர் அவர் மகனை இப்படி மாற்றிவிட்டீர்களே? என்ற மற்றொரு நெட்டிசனின் கேள்விக்கு பதிலளித்த யுவன்சங்கர் ராஜாவின் மனைவி,
"மறுபடியும் உங்கள் முட்டாள்தனத்தைக் காட்டுகிறது. உங்களுக்கு நான் விளக்கம் கொடுக்கவேண்டிய அவசியம் இல்லை. மக்கள் எப்படி இவ்வளவு முட்டாள்தனமாக இருக்க முடியும் என்று அதிர்ச்சியாக இருக்கிறது" என்றார் ஷாஃப்ரூன்
யுவனின் மனதில் விஷத்தைக் கலப்பதில் வெற்றி பெற்றுவிட்டீர்கள் என்று யுவன் மனைவிக்கு ஒருவர் பதிலளிக்க, யுவனின் மனைவியோ, "மனதில் விஷம் கலப்பது என்றால் என்ன என்று என்னிடம் சொல்லுங்கள். அவர் முஸ்லிமாக மாறிய பின்னர்தான், நான் அவரைச் சந்தித்தேன். அவர் கடந்த 4 ஆண்டுகளாக முஸ்லிமாக இருக்கிறார் என்றார்.
தொடர்ந்து இதேபோல் கேள்விகள் எழுப்பப்படவே இறுதியாக பதிலளித்த ஷாஃப்ரூன் நிஷார், நான் யுவனின் நம்பிக்கை பற்றியும் அவர் ஏன் இஸ்லாமைத் தேர்ந்தெடுத்தார் என்பது பற்றியும் நேரலையில் பேட்டி எடுக்கட்டுமா, அது உங்களுக்கு போதுமா என்று கூறியுள்ளார்.
Karikalan R அவர்களின் பதிவிலிருந்து ...
யுவன்சங்கர் ராஜாவின் புகைப்படமொன்று. இஹ்ராம் உடுப்பில் இருந்தார்.சினிமா துறையில் இருப்பவர். பளபளப்பான ஆடைகளில் அவரை பார்த்திருக்கிறேன்.
இந்த ஆடை வித்தியாசமாக இருந்தது. Faqir போன்ற தோற்றம். 'The root of suffering is attachment! ' என்றார் புத்தர். ஒரு இளம் துறவியைப் போல் இருக்கிறார்.
துறவு எப்போதும் வாழ்க்கையை மறுப்பது ஆகாது. அது இன்பத்தை மறுப்பதும் அல்ல. துறவு , உண்மையில் இன்பத்தை ஒழுக்கங்களாக மாற்றுவதற்கே மேற்கொள்ளப்பட்டுகிறது.
யுவன் உம்ரா பயணம் மேற்கொள்கிறார்.உம்ரா இசுலாமியர்கள் மேற்கொள்ளும் புனித யாத்திரை.
இசுலாமியர்களின் கடவுள் வணக்கம் மூன்று நிலைகளில் செயல்படுகிறது. 1. உடல் சார்ந்து. 2. பொருள் சார்ந்து. 3. உடல் பொருள் இரண்டும் சார்ந்து.
பொருள் சார்ந்த வணக்கத்தை ஸதகா, ஸகாத் என்கிறார்கள்.
இவை ஏழைகளுக்காக ஒதுக்கப்படும் நிதிகள். இறைவன், கல்வி, மருத்துவம் என இந்நிதி வணக்கம் விரிந்த தன்மை கொண்டது.
உடலும் பொருளும் சார்ந்த இறைவணக்க யாத்திரைகளே உம்ராவும், ஹஜ்ஜூம். உம்ரா - தரிசிப்பது என பொருள்.
தைக்கப்படாத மேலாடை , கீழாடை உடுத்திய யுவனின் தோற்றம்தான் என்னை வசீகரித்தது.
இதைதான், 'உண்பது நாழி, உடுப்பவை இரண்டே' என்கிறது தமிழ்.
இஸ்லாம் குறித்து தப்பெண்ணங்கள் பரப்பப்பட்டு வரும் நிலையில், யுவன்சங்கர் ராஜாவின் இந்த யாத்திரை, இசுலாத்தின் மாபெரும் அமைதி விருப்பத்தை , எளிமையை, தவத்தை வெளிப்படுத்துவதாக இருக்கிறது. யுவன் யாத்திரைப் பாதையை, அல்லாஹ்வின் ஒளி தழுவட்டும்.

## இஸ்லாம் ஓர் ஈர்க்கும் மார்க்கம் 9

( மாமறையால் மன மாற்றம்)

திருக்குர்ஆன் ஓதுவதைக்கேட்டு அதன் போதனையை உணர்ந்து சரணடைந்து நிரந்தர நிம்மதியைப் பெற்று நிறைவாழ்வு வாழ்ந்தவர்கள் வாழ்கிறவர்கள் நிறைய உள்ளனர்.

ஒரு சிலரை இக்கட்டுரையில் காண்போம்.
தணிவாய் கனிவாய் இனிய குரலில் ஓதும் குர்ஆன் வசனங்களைக் கேட்டோர் ஈர்க்கப்பட்ட நிகழ்ச்சிகளும் நிறைய உள்ளன.

புழைள் இப்னு இயாள் இறை கட்டளைகளுக்கு மாறு செய்பவராக மன இச்சைக்குக் கட்டுண்டு சுய நலத்திற்காக, பிறர் உரிமைகளைப் புறக்கணித்து, அடுத்தவரின் அல்லலில் எல்லையில்லா ஆனந்தம் கொண்டு நிதானம் இன்றி, விதானத்தின் கீழ் இருப்பதெல்லாம் தனக்கென்று திமராக திரிந்தார்.
ஒருமுறை ஒருவர் குர்ஆனின் 57-16 ஆவது வசனத்தை ஓதுவதைத் செவிசாய்த்து கேட்டார். ""நம்பிக்கை உடையோரின் உள்ளங்கள் அல்லாஹ்வை நினைத்தும் அவன் இறக்கி வைத்த சத்தியத்தைக் கவனித்தும் பயப்படும் நேரம் வரவில்லையா?"

உடனே யா அல்லாஹ்! (என் இறைவனே!) இதோ நேரம் வந்து விட்டது என்று கூறியவாறு அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு கேட்டு மீட்சி பெற்றார்கள். அவர்களின் வாழ்வில் பெரும் மாற்றம் நிகழ்ந்தது. கல்வி ஞானத்திலும் வணக்க வழிபாடுகளிலும் நற்குணங்களிலும் நற்பண்புகளிலும் மற்றவர்களுக்கு முன்னோடியாக திகழ்ந்தார். அவர் வாழ்ந்த காலத்து மக்கள் அவரை நேசித்தார்கள். மார்க்க அறிஞர்களும் புகழ்ந்தனர். புழைள் இப்னு இயாள் (ரஹ்) என்ற இறைநேசர் இப்பூமியில் சிறப்பு வாய்ந்த மனிதராக என் காலத்தில் வாழ்ந்தார் என்று உரைக்கிறார் இமாம் அப்துல்லாஹ் இப்னு முபாரக்.

காலித் இப்னு அக்பர் முதல் முறையாக குர்ஆன் ஓதுவதைக் கேட்டார். "அல்லாஹ்வின் மீது சத்தியமாக குர்ஆனில் ஓர் இனிமை இருக்கிறது. புதுமையான சரள நடை திரள வைக்கிறது. உட்பொருளின் செழுமையை உணர முடிகிறது. ஓதும் பொழுது கனியின் சுவையை சுகிக்க முடிகிறது. தகிக்க முடியாத தாபம் தணிகிறது. பாவ எண்ணங்கள் விரண்டோடுகின்றன. இக்குர்ஆனை நிச்சயமாக மனிதனால் இயற்ற முடியாது".
குர்ஆனின் சொல் நயம், நடையழகு, பொருள் பொலிவைப் பூரணமாக உணர்ந்து ஆரணமாக ஏக இறை கொள்கையை ஏற்று இஸ்லாத்தைத் தழுவினார். நந்நபி (ஸல்) அவர்களின் நற்றோழர் ஆனார்.
வலீதுப்னு முஙய்றா இஸ்லாத்தை எதிர்த்தும் ஏற்றவர்களை ஏளனப்படுத்தியும் கேலியும் கிண்டலுமாக இழிவுபடுத்தியும் இல்ஸாமிய எதிரியாகவே வாழ்ந்து மடிந்தார்.
அவரின் மகன் காலித் இப்னு வலித் வாரிசு உரிமையை ஒப்புக் கொண்டு இஸ்லாத்தின் பரம வைரியாக தந்தையினும் வேகமாக விவேகம் இன்றி இஸ்லாமியர்களை வதைத்தார். அவர் பிறவி வீரர்.
அவர் திருக்குர்ஆன் ஓதுவதைக் கேட்டு இக்குர்ஆனின் நூதன சுவையும் மதுரவாக்கும் என் மனதை மாற்றுகிறது என்று கூறி இஸ்லாத்தை ஏற்றார். ஏந்தல் நபி (ஸல்) அவர்களின் காலத்தில் இஸ்லாமிய தற்காப்பு போர்களில் தளபதியாக பொறுப்பேற்று வெற்றிகளைக் குவித்தார்.
துல்பிஜாதைனி ஒட்டகம் மேய்த்தவர். இஸ்லாமிய வழிப்போக்கர்கள் ஓதும் குர்ஆன் வசனங்களைக் கேட்டு மனனம் செய்து சிந்தித்தார். மனமாற்றம் ஏற்பட்டது.
இஸ்லாத்தை ஏற்க அவரின் சிறிய தந்தையிடம் அனுமதி கேட்டார். சிறிய தந்தை மறுத்ததோடு, பரம்பரை சொத்துகளையும் திருப்பி கேட்டார்.

தாயிடம் ஒரு கம்பளித் துணியைப் பெற்று இரண்டாக கிழித்து ஒன்றை இடுப்பில் கட்டிக்கொண்டு மற்றொன்றை மேலே போர்த்திக் கொண்டு கட்டியிருந்த ஆடை உட்பட அனைத்தையும் சிற்றப்பாவிடம் திருப்பி கொடுத்து விட்டு மதீனா சென்று மாநபி (ஸல்) அவர்களின் முன் நின்று இஸ்லாத்தை ஏற்றார். மூத்தா என்ற ஊரில் சண்டைக்குச் சென்றபொழுது நோயுற்று இறந்தார்.

மதீனாவில் வாழ்ந்த சொந்தபந்தங்கள் இஸ்லாத்தை ஏற்றால் மதீனாவிலிருந்து வெளியேற்றி விரட்ட வீராவேசத்துடன் பூரண ஆயுதங்களோடு குதிரையில் சுற்றி வந்தார் அஸ்அதுப்னு ஜர்ரார்.
மக்காவிலிருந்து வந்து இஸ்லாமிய பிரசாரம் செய்யும் முஸ் அபுப்னு உமைர் (ரலி) அவர்களை அதட்டினார். அவரோ அமைதியாக குதிரையிலிருந்து இறங்கி அவர் அருகில் அமர்ந்து உரையாட வேண்டினார். அவரின் அடக்கமான அமைதியான வேண்டுகோளால் ஆத்திரம் தணிந்து ஆவேசம் அடங்கி வேண்டுகோளை ஏற்று அவரின் பக்கத்தில் அமர்ந்தார் அஸ் அதுப்னு ஜர்ரார்.

முஸ் அபுப்னு உமைர் (ரலி) குர்ஆனின் சில வசனங்களை ஓதினார். அதனைக் கேட்ட அஸ்துப்னு ஜர்ரார் இஸ்லாத்தை ஏற்றார். அன்று மாலைக்குள் அவரின் கோத்திரத்தார் அனைவரையும் இஸ்லாத்தில் இணைத்தார்.
இஸ்லாமியர்கள் பொருள் உணர்ந்து இறைமறையை முறையோடு ஓதி மறைவழியில் மாநபி (ஸல்) அவர்கள் நடந்து காட்டிய நந்நெறியில் பணிவு, இறையச்சம், சகோதர பாச நேசத்துடன் நன்மை பயக்கும் நற்செயல்களை நாளும் செய்தால் ஆள்வோர் முதல் ஆளப்படுவோர் வரை அனைவரும் அருமறை குர்ஆனின் ஈர்ப்பில் திளைத்து நல்ல தீர்ப்பைப் பெறுவர்.

இஸ்லாம் ஓர் ஈர்க்கும் மார்க்கம் 10

( இன்பத் தேன்வந்து பாயுது காதினிலே )



அரேபியாவில் சந்தைகள் பல நிறைந்திருந்தன. உக்காள், மஜன்னா, துல்மஜாஸ் என்ற பெரிய சந்தைகளும் இருந்தன. உக்காள், மக்கா-தாயிஃப் ஆகிய இரு நகரங்களுக்கு இடையே அமைந்திருந்தது. மஜன்னா, துல்மஜாஸ் இரண்டும் அரஃபாவுக்கு அருகே அமைந்திருந்தன. இவற்றில் உக்காள் மட்டும் மிகவும் பிரசித்தம்.
ஆண்டுதோறும் திருவிழா, சந்தை என்று நம் ஊர்ப்புறங்களில் கூடும்போது ஏதாவது போட்டி நடத்துகிறார்கள் இல்லையா, அதைப்போல் அந்தக் காலத்தில் அந்தச் சந்தையில் கவிதைப் போட்டி நடைபெறும்.
இஸ்லாம் மீளெழுச்சி பெறுவதற்குமுன் அரேபிய மக்களின் வாழ்க்கையில் கவிதை பெரும்பங்கு வகித்துக் கொண்டிருந்தது. கதை சொல்ல; வரலாறு விவரிக்க; காதல், வீரம், மூதாதையர் பெருமை, பெருந்தன்மை சொல்ல; மகிழ, தூற்ற, இகழ என்று எதெற்கெடுத்தாலும் கவிதை. அதுவும் அதன் வார்த்தைகளும் அமைப்புகளும் ஏனோதானோ என்றெல்லாம் கிடையாது. சிறந்து விளங்கக்கூடியவை. இந்தச் சந்தையில் கவிதை போட்டா போட்டி நடைபெற்றுக் கொண்டிருந்தது.

பொதுமக்கள் மத்தியில் கவிஞர்கள் தங்களது கவிதைகளை வாசித்துக் காட்ட, அதில் வெற்றிபெறும் கவிதைக்குப் பெரும் அந்தஸ்து கிடைக்கும். என்ன அது? அந்தக் கவிதையை எழுதி கஅபாவின் சுவரில் கட்டித் தொங்கவிடுவார்கள். கோடி ரூபாய் பரிசு என்பதைவிட உயர்ந்த பெருமிதம், அங்கீகாரம் அது அவர்களுக்கு. இத்தகு கவிதைகளுக்கு அல்முஅல்லகாத் – “தொங்கும் கவிதைகள்” என்று பெயர்.
ஆண்டுதோறும் உக்காள் சந்தைகளுக்கு ஆயிரக்கணக்கில் வந்து குழுமும் மக்களை அணுகித் தம் பிரச்சாரத்தைத் தொடர ஆரம்பித்திருந்தார்கள் முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்.
நபியவர்களின் பிரச்சாரத்திற்கு முக்கிய எதிரி ஒருவன் இருந்தான்; அபூலஹப்! இவன் வேறு யாருமல்லன்; நபியவர்களின் சொந்த பெரியப்பா. நபியவர்கள் ஒரு கூட்டத்திடம் தம் பேச்சு வார்த்தைகளை முடித்துக் கொண்டு நகரும்வரை பின்னாலேயே சற்று தூரத்தில் காத்திருப்பான்.

பின்னர் கூட்டத்தினரிடம் வந்து, “அந்த மனிதர் உங்களது முக்கிய தெய்வங்களான அல்-லாத், அல்-உஸ்ஸாவை நிராகரிக்கச் சொல்கிறார்; அவருடைய முட்டாள்தனமான செயல்களைப் பின்பற்ற உங்களை அழைக்கிறார்; அவர் பேச்சைக் கேட்காதீர்கள்”.
இதையெல்லாம் பார்த்துக்கொண்டு குரைஷிகள் அமைதியாக இருந்துவிடுவார்களா என்ன? தங்களது பங்கிற்குத் தங்கள் ஆட்களுடன் அதே சந்தையில் அதே மக்களிடம் எதிர் பிரச்சாரம் புரிய ஆரம்பித்தனர் அவர்கள்.
“பொய் சொல்கிறார்; ஜோசியம் சொல்கிறார்; மந்திரவாதி; அவர் உரைப்பதெல்லாம் இறைவசனங்கள் அல்ல கவிதை” - இப்படிப் பலதரப்பட்ட அவதூறுகள்.
துஃபைல் இப்னு அம்ர் தவ்ஸி: இவர் தவ்ஸ் கூட்டத் தலைவர். சிறந்த பண்புள்ளவராகவும், நுண்ணறிவாளராகவும், மிகச் சிறந்த கவிஞராகவும் இருந்தார். இவரது கவிதைகள் தொங்கும் கவிதைகளாக இருந்துள்ளன. இவருடைய கோத்திரம் யமன் நாட்டில் வசித்து வந்தது. இவர்களுக்கென தனி ஆட்சி அதிகாரம் இருந்தது.
இவர் நபித்துவத்தின் 11 வது ஆண்டு மக்கா வந்தபோது மக்காவாசிகள் இவரை மிகுந்த உற்சாகம் பொங்க மகிழ்ச்சி ஆரவாரத்துடன் வரவேற்றனர்.

“துஃபைலே! எங்கள் ஊருக்கு வருகை தந்திருக்கிறீர்கள். மிக்க மகிழ்ச்சி. இங்கு ஒருவர் தம்மை நபி என்று அறிவித்துக்கொண்டு எங்களின் அதிகாரத்தை அழித்து, எங்கள் சமூகத்தை உடைத்து ஒற்றுமையைச் சிதைத்து

விட்டார். அதைப்போலவே உங்கள் மக்கள்மீது நீங்கள் வைத்திருக்கும் அதிகாரத்திற்கு அவர் வேட்டு வைத்துவிடுவாரோ என்று அஞ்சுகிறோம்.
தயவுசெய்து அவரிடம் பேசவே பேசாதீர்கள். என்ன ஆனாலும் சரி, அவர் சொல்வது எதையும் காதால் கேட்டுவிடாதீர்கள். உம் கவிதைகளை விட பயங்கரமான வார்த்தை ஜாலம் அவருக்கு. மந்திரவாதிபோல் கட்டிப்போட்டு விடுகிறார். இவரது பேச்சு சூனியம் போன்றது . இவர் பேச்சைக் கேட்டு, தகப்பனுக்கும் மகனுக்கும் சண்டை; உடன் பிறந்த சகோதரர்களுக்கு இடையில் பகை; கணவன் மனைவிக்கு இடையில் பிரிவினை ...”
மேலும் மேலும் கதைகளாய் ஆள் மாற்றி ஆள் அவரிடம் சொல்லிக் கொண்டே போக, அந்த மனிதருக்கு மிகவும் பயம் ஏற்பட்டுவிட்டது. இறுதியில் அவரது மனதில் தீர்மானமான முடிவு.

துஃபைல் கூறுகிறார்: ”அல்லாஹ்வின் மீது ஆணையாக! தொடர்ந்து இவ்வாறே மக்காவாசிகள் எனக்கு அறிவுரை சொல்லிக் கொண்டிருந்ததால் நபி (ஸல்) அவர்களின் எந்தப் பேச்சையும் கேட்கக் கூடாது அவரிடம் அறவே பேசவும் கூடாது என்று முடிவு செய்து கொண்டேன். நபி (ஸல்) அவர்களின் பேச்சைக் கேட்டுவிடுவோமோ என்ற பயத்தில் பள்ளிக்குச் செல்லும்போது எனது காதில் துணியை வைத்து அடைத்துக் கொள்வேன்.
ஒப்புக்காக என்றில்லாமல் கடுமையான தீர்மானம். ‘நபி என்று சொல்லிக் கொள்ளும் அவரை நான் நெருங்கவே போவதில்லை; பேசப் போவதில்லை; அவர் பேச்சைக் கேட்கப்போவதில்லை’
மறுநாள் காலை கஅபா ஆலயத்திற்கு வழிபாடு செய்யக் கிளம்ப வேண்டும். அதற்குமுன் கொத்தாகக் கொஞ்சம் பஞ்சு எடுத்து நன்றாகத் தம் இரு காதுகளையும் அடைத்துக் கொண்டார்.
‘தப்பித்தவறி முஹம்மது பேசுவது காதில் விழுந்துவிட்டால்?’
அதையெல்லாம் பார்த்த குரைஷிகளுக்கு நிம்மதிப் பெருமூச்சு. ‘அப்பாடா! இனிப் பிரச்சினை இல்லை. இவரிடம் முஹம்மதின் பிரச்சாரம் எடுபடப் போவதில்லை’.
பஞ்சும் காதுமாய் கஅபா வளாகத்திற்குள் அந்த மனிதர் நுழைந்ததுமே முதலில் அவர் கண்ணில்பட்ட காட்சி அங்கு கஅபா அருகே முஹம்மது நபி நின்று தொழுது கொண்டிருந்ததுதான். ‘இவர்தான் குரைஷிகள் குறிப்பிட்ட மனிதர் போலும்’.
அந்தத் தொழுகையும் அதன் அசைவுகளும் வழிபாடும் மிகவும் வித்தியாசமாய், அவர் இதுவரை அறியாத ஒன்றாய் இருந்தது அவருக்கு. என்ன செய்கிறார் இந்த மனிதர்? என்று நபியவர்களைக் கூர்ந்து கவனிக்க ஆரம்பித்தார்.
கவனிக்க கவனிக்க நபியவர்களின் தொழுகை காந்தமாய் கவர்ந்து இழுக்க ஆரம்பித்தது.
தம்மையறியாமலேயே முன்நோக்கி நகர ஆரம்பித்தார் அந்த மனிதர். யாரைக் கண்டால் ஓடிவிட வேண்டும் என்று நினைத்தாரோ அந்த இறைத் தூதரை நோக்கி நகர ஆரம்பித்தார்.
அருகே நெருங்க நெருங்க வித்தியாசமான ஒலியாய் வார்த்தைகள் கேட்க ஆரம்பித்தன. என்னதான் காதை பஞ்சு கொண்டு அடைத்துக் கொண்டாலும் காது முழுதும் செவிடாகிவிடுமா என்ன? ஓசை நிசப்தம் ஆகிவிடுமா? அவரது மனதிற்குள் கேள்விகள் எழுந்தன.
‘என்ன இது சிறுபிள்ளைத்தனமான பயம்? எப்பேர்ப்பட்ட மஹா கவிஞன் நீ? சிறந்த கவிதைக்கும் வார்த்தை ஜால வித்தைகளுக்கும் உன்னால் வித்தியாசம் கண்டுபிடிக்க முடியாதா என்ன? இவர் உச்சரித்துக் கொண்டிருப்பதைக் கேட்க உனக்கு என்ன தடை? அவர் ஓதிக் கொண்டிருப்பதைக் நன்றாக கேள். நல்லது என்றால் எடுத்துக் கொள்; இல்லையா, நீதான் மிகப்பெரிய கவிஞனாயிற்றே அதெல்லாம் வெற்று வார்த்தைகள் என்று உனக்கு தோன்றுகிறதா விட்டுவிடு. தீர்ந்தது விஷயம்’.

நபியவர்களைக் கவனித்துக் கொண்டே காத்திருந்தார். தம் தொழுகை முடிந்தவுடன் வீட்டிற்குக் கிளம்பியவர்களைப் பின்தொடர்ந்தார் அவர். எதெல்லாம் நடக்கக்கூடாது என்று குரைஷிகள் விரும்பினார்களோ, அவையெல்லாம் முஹம்மது நபி ஒரு வார்த்தைகூட அந்த மனிதரிடம் பேசாத நிலையில் தாமாகவே நிகழ்ந்து கொண்டிருந்தன. நபியவர்களின் பின்னாலேயே அந்த மனிதரும் அவர்களது வீட்டிற்குள் நுழைந்தார்.
சுற்றி வளைக்கவில்லை; அது அந்த மக்களது இயல்பும் இல்லை. நேரடியாக விஷயத்திற்கு வந்தார்.
”ஓ முஹம்மது! உம்மைப் பற்றி உம் மக்கள் என்னிடம் சில விஷயங்கள் கூறினார்கள். அல்லாஹ்வின் மீது ஆணையாகச் சொல்கிறேன். உங்களைப் பற்றி அவர்கள் கூறக் கூற அது எந்தளவு எனக்குள் பயத்தைத் தோற்றுவித்தது என்றால், இதோ பாருங்கள் பஞ்சு, நான் நன்றாக
என் காதை அடைத்துக் கொண்டேன். இருந்தாலும் இறைவனின் நாட்டம், நீங்கள் ஓதியவை என் காதில் விழுந்தன. கவனத்தைக் கவரும் சுவாரஸ்யம் அவற்றில் உள்ளன. சொல்லுங்கள், என்னதான் உமது செய்தி?”
முஹம்மது பேசினால் கேட்கக் கூடாது என்று குரைஷிகள் எச்சரித்து இருக்க, இந்த மனிதரும் அப்படியே நினைத்திருக்க, இப்பொழுது தாமே வலியச் சென்று, அதுவும் அந்த நபியவர்கள் வீடு தேடிச்சென்று, ‘சொல்லுங்கள் கேட்கிறேன்’ என்று காதில் அடைத்திருந்த பஞ்சை எடுத்து கையில் சுருட்டி வைத்துக்கொண்டு, அமர்ந்திருந்தார்.

என்னதான் இவர் விஷயத்தில் பிரச்சாரம் நடந்தது? தொழுகை! அல்லாஹ்வை அவன் சொன்னபடி குனிந்து நிமிர்ந்து தொழுத தொழுகை. இறைவழிபாடு என்பதைத் தாண்டிய உன்னதம் அது!
சூரா இஃக்லாஸ், சூரா ஃபலக் ஆகிய, குர்ஆனின் இறுதி அத்தியாயத்திற்கு முந்தைய இரண்டு அத்தியாயங்களை மட்டும் ஓதினார்கள் நபியவர்கள். அப்படியே ஸ்தம்பித்துவிட்டார் அந்த அரபு மஹா கவி. சத்தியமாக இவை கவிதை அல்ல. இத்தகு சிறப்பான சொல்லாட்சி மனிதனால் வடிக்க இயலாத ஒன்று.

“இறைவன் மீது ஆணையாகக் கூறுகிறேன்! இத்தகைய அற்புதமான வாசகங்களை இதற்குமுன் நான் கேட்டதே இல்லையே” என்று திகைத்துப் பேசினார். அடுத்து ஏகத்துவத்தை விவரித்தார்கள் நபியவர்கள்.
‘இவ்வளவுதானா? இவ்வளவு எளிமையான உயர்ந்த உன்னதமா இஸ்லாம்? இதற்குமேல் இதை நிராகரிக்க நான் என்ன புத்தியில்லாதவனா?’
பஞ்சு, காற்றில் பஞ்சாய்ப் பறந்தது. தமிழில் ஒரு சொற்றொடர் "இன்பத் தேன் வந்து பாய்ந்தது காதினிலே" என்பார்களே அது போல இறைவசனங்கள் தேனருவியாக அவர் காதில் கொட்டியது
தம் கையை நீட்டி நபியவர்களின் கைமீது வைத்து கலிமா உரைத்தார்; சத்தியமார்க்கத்தில் நுழைந்தார் அவர் – துஃபைல் பின் அம்ரு, ரலியல்லாஹு அன்ஹு! வாக மாறினார்

## இஸ்லாம் ஓர் ஈர்க்கும் மார்க்கம் 13

பிரபல உலக கால் பந்து நட்சத்திரம் இமானுவேல் இஸ்லாத்தில் இணைந்தார்
உலகின் மிக சிறந்த கால் பந்து நட்ச்சத்திங்களில் ஒருவர் இமானுவேல் இவர் நைஜிரியாவை சார்ந்தவர் 2008 ஆம் ஆப்ரிக்க கண்டத்தின் மிக சிறந்த கால் பந்து நட்சத்திரமாக தேர்வு
செய்யப்பட்டவர்
அவர் 2000 மாவது ஆண்டில் இருந்தே சர்வதேச கால் பந்து போட்டிகளில் விளையாடி வருகிறார் 63 சர்வதேச போட்டிகளில் கலந்து 29 கோல்கள் அடித்தும் சாதனை படைத்துள்ளார்
அண்மை காலங்களில் அவரது சிந்தனை இஸ்லாத்தை நோக்கி திரும்பியது. இஸ்லாத்தை பற்றி ஆய்வு செய்த அவர் சில தினங்களுக்கு தன்னை அதிகார பூர்வமாக இஸ்லாத்தில் இணைத்துக் கொண்டார்
இஸ்லாத்தில் அவர் இணைந்த பிறகு வழங்கிய முதல் பேட்டியில்,
"எனது வாழ்வில் என்னைப் படைத்த இறைவனைத் தவிர்த்து வேறு யாருக்கும் நாம் முக்கியத்துவம் தர விரும்பவில்லை என்னை படைத்த இறைவனின் சொற்களே இனி என்னை வழிநடத்தும் இறைவனின் சொற்களுக்கு முழுமையாக கட்டுப்பட்ட ஒரு இறைவிசுவாசியாக வாழ விரும்புவதாகவும் தெரிவித்துள்ளார்.

## இஸ்லாம் ஓர் ஈர்க்கும் மார்க்கம் 14

குர்ஆனை ஒரு வருடமாக ஆராய்ந்து படித்த பிறகு இஸ்லாத்தில் இணையும் முடிவை எடுத்திருக்கிறார் அமெரிக்காவின் பிரபல நடிகையும் பாடகியுமான லின்ட்சே லோஹான்.
அவர் 2015 ஆம் ஆண்டிலிருந்து குர்ஆனை படிக்க தொடங்கியுள்ளார்.
குர்ஆனை படிக்க படிக்க குர்ஆன் அவரை முழுமையாக ஈர்த்துள்ளது.
தற்போது அவர் திருக்குர்ஆனை படித்து முடித்து விட்டதாகவும், அவர் முழுமையாக இஸ்லாத்தின் பால் கவரப்பட்டுவிட்டதாகவும் இன்னும் சில தினங்களில் அவர் இஸ்லாத்தில் இணைவது அதிகாரப்பூர்வமாக அறிவிக்கப்படும் என்றும் தகவல் கூறுகிறது.
பிரபல நடிகையான இவர் இஸ்லாத்தை ஏற்பது அமெரிக்க மக்களிடையே விவாத பொருளாக மாறியுள்ளது. இவர் மட்டுமில்லாமல் கேட் ஸ்டீவன்ஸ், கேசியஸ் கிளே, மைக்கேல் ஜாக்சன் போன்ற அமெரிக்காவில் இஸ்லாத்தை ஏற்ற பல்வேறு பிரபலங்களின் வரிசையில் லின்ட்சே லோஹானின் பெயரும் இடம் பெறுகிறது.
இறைவன் இவருக்கு பரிபூரண ஹிதாயத் வழங்க பிரார்த்தனை செய்வோமாக...

## இஸ்லாம் ஓர் ஈர்க்கும் மார்க்கம் 16

இஸ்லாம் மதத்திற்கு மாறிய இளம் தமிழ் ஹீரோ! டிசம்பர் 23, 2019
ஹீரோ தமிழ் நடிகர் ஜெய் நினைவிருக்கிறதா? 'பயணம்', 'ராஜா ராணி' படங்களில் பயமுறுத்தும் காதலனாக நடித்தவர் நடிகர். ஜெய்க்கு அந்த பாத்திரங்கள் மூலம் நல்ல அங்கீகாரம் கிடைத்தது ஆனால் அவர் விரும்பிய நட்சத்திர அந்தஸ்து கிடைக்கவில்லை. சமீபத்தில் அவர் தனது தனிப்பட்ட வாழ்க்கை குறித்த சில சுவாரஸ்யமான தகவல்களை வெளியிட்டார்.
அவரது வரவிருக்கும் படத்தின் விளம்பரங்களின் போது, ஜெய் சமீபத்தில் தான் கடந்த ஏழு வருடங்களாக இஸ்லாத்தை பின்பற்றி வருவதாகவும், தனது முடிவை வரவேற்ற தனது குடும்ப உறுப்பினர்களிடம் கூட அதைப் பற்றித் தெரிவித்தார். கடவுள் நம்பிக்கை முக்கியம் ஆனால் எது முக்கியமில்லை என்று கூறினார். வரும் நாட்களில் அவர் தனது பெயரை அஜீஸ் ஜெய் என மாற்றிக் கொள்வார் என்று வட்டாரங்கள் தெரிவிக்கின்றன.

## இஸ்லாம் ஓர் ஈர்க்கும் மார்க்கம் 17

நபித்துவத்தை உறுதிப்படுத்திய யூத தலைவர் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி)

அப்துல்லாஹ் இப்னு ஸலாம் என்பவர் மதீனாவில் வாழ்ந்த பிரசித்திப் பெற்ற யூத குடும்பத்தைச் சார்ந்தவர். அறிவு ஆற்றல் மிக்கவர். எதனையும் பகுப்பாய்வு செய்து சிறந்த முடிவுகளை எடுக்கும் திறன்மிக்கவர். மக்களின் நன்மதிப்பை வென்றவர்.

இஸ்லாமிய தூது மதீனாவில் பரவிய போது அது பற்றிய சரியான தெளிவை பெற துடித்தவர். சத்தியத்திற்காக ஏங்கி தவித்தவர். நபி (ஸல்) அவர்கள் மக்காவிலிருந்து மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்து வந்து விட்டார்கள் என்ற செய்தி அப்துல்லாஹ் இப்னு ஸலாமுக்கு எட்டியது.
உடனே நபி (ஸல்) அவர்களை கண்டு, தனது சந்தேகங்களை போக்கி உரிய தீர்வுகளை காண வேண்டும் என்று ஓடோடி வருகிறார்.

பரந்த மனதுடன், தெளிந்த சிந்தனையுடன் கேள்விகளை கேட்க ஆயத்தமாகிறார். முஹம்மது நபியை, அவர் கொண்டு வந்த தூதை பரீட்சித்துப் பார்க்க களம் இறங்குகிறார். நபி (ஸல்) அவர்களைப் பார்த்து,
" நான் உங்களிடம் மூன்று கேள்விகளை கேட்கப்போகிறேன். அதற்கான பதில்களை ஒரு நபியை தவிர வேறெவரும் அறிய மாட்டார்.
முதலாவது கேள்வி:- இறுதிநாளின் அடையாளங்களில் முதலாவது அடையாளம் எது?
இரண்டாவது கேள்வி:- சுவர்க்கவாசிகள் முதலில் உண்ணும் உணவு எது?
மூன்றாவது கேள்வி:- குழந்தை தன் தந்தையின் சாயலில் ஒத்திருப்பது எதனால் அது சாயலில் தன்தாயின் சகோதரர்களை ஒத்திருப்பது எதனால்?
இம்மூன்று கேள்விகளும் சாதாரண கேள்விகளல்ல! நபி (ஸல்) அவர்களை இறைதூதராக அடையாளப்படுத்திக் கொள்வதற்கு அவசியமான கேள்விகள். சாதாரண மனிதனால் இக்கேள்விகளுக்கு பதிலளிக்க முடியாது! ஒரு இறைத்தூதரால் மட்டுமே பதில்களை வழங்கமுடியும்.
நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வினால் அனுப்பப்பட்ட தூதர் என்றால், கட்டாயம் பதிலளிக்க வேண்டும் என்பது அப்துல்லாஹ் இப்னு ஸலாமின் நிலைப்பாடு. நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வினால் அனுப்பப்பட் இறுதி தூதரல்லவா? இதோ இப்படி பதிலளித்தார்கள்-
சற்று முன்னர்தான் ஜிப்ரீல் (அலை) இது குறித்து விளக்கம் அளித்தார் என்று நபியவர்கள் கூறியபோது, உடனே இடை மறித்த அப்துல்லாஹ் இப்னு ஸலாம் அவர்கள், வானவர்களிலேயே ஜிப்ரீல் (அலை) யூதர்களுக்குப் பகைவராயிற்றே என்று கூறினார்.

யூத மக்களுக்கு அனுப்பப்பட்ட நபிமார்களுக்கு ஜிப்ரீல் (அலை) அவர்கள் இறை செய்தியை (வஹீயை) கொண்டு வந்தது போலவே, அம்மக்கள் இறைவனுக்கு மாற்றமாக நடந்த போது இறைத்தண்டனை செய்தியையும் கொண்டுவந்தவர். அதனாலேயே யூதர்கள் ஜிப்ரீல் (அலை) அவர்களை பகைவராக நினைத்தனர்.
நபி (ஸல்) அவர்கள்
1) முதலாவது கேள்விக்கு பதிலளிக்கும் போது, இறுதி நாளின் அடையாளங்களில் முதலாவது அடையாளம் ஒரு நெருப்பாகும். அது மக்களை கிழக்கிலிருந்து (துரத்திக் கொண்டு வந்து) மேற்கு திசையில் ஒன்று திரட்டும்.
2) இரண்டாவதாக, சுவர்க்கவாசிகள் முதலில் உண்ணும் உணவு பெரிய மீனின் ஈரல் பகுதியில் உள்ள அதிகப்பகுதியான சதையாகும்.
3) மூன்றாவதாக, குழந்தையிடம் காணப்படும் (தாய் அல்லது தந்தையின்) சாயலுக்குக் காரணம், கணவன் மனைவியுடன் உடலுறவு கொள்ளும் போது அவனது நீர் (உயிரணு) முந்தி விட்டால் அக்குழந்தை தகப்பனின் சாயலில் பிறக்கின்றது.
பெண்ணின் நீர் (சினை முட்டை) முந்திவிட்டால் அக்குழந்தை தாயின் சாயலில் பிறக்கின்றது. என்று பதிலளித்தார்கள்.
அமைதியாக கேட்டுக் கொண்டிருந்த அப்துல்லாஹ் இப்னு ஸலாம் அவர்கள், நபி (ஸல்) அவர்களை பார்த்து, நிச்சயமாக நீங்கள் அல்லாஹ்வுடைய தூதர் என்று நான் சாட்சி சொல்கிறேன் என்று கூறி இஸ்லாத்தை தழுவினார்கள்.

சத்தியத்திற்கு முன்னால் அசத்தியம் அடங்கிவிடும், உண்மைக்கு முன்னால் பொய் அழிந்துவிடும் என்பதை அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரஹ்) அவர்கள் கண்டு கொண்டார்கள். சத்தியத்தியத்திற்கு முன் சரணடைந்தார்கள். இறை தூதை உறுதிப்படுத்தினார்கள்.
இந்த தூய செய்தி யூத மக்களிடமும் சென்றடைய வேண்டும் என்ற ஆவலில் நபி (ஸல்) அவர்களை பார்த்து, "அல்லாஹ்வின் தூதரே! நிச்சயமாக யூதர்கள் பொய்யில் ஊறித்திளைத்த சமுதாயத்தினர்! நீங்கள் அவர்களிடம் பேசுவதற்கு முன்பாக, நான் இஸ்லாத்தை தழுவி விட்டேன் என்பதை அறிந்தால் என்னைப் பற்றி அவர்கள் உங்களிடம் பொய்யுரைப்பார்கள் என கூறிக் கொண்டிருந்த வேளையில் யூதர்கள் அந்த இடத்திற்கு வந்தார்கள் – உடனே அப்துல்லாஹ் இப்னு ஸலாமா (ரலி) அவர்கள் வீட்டுக்குள் நுழைந்து மறைந்து கொண்டார்கள்.
நபி (ஸல்) அவர்கள் யூதர்களைப் பார்த்து, " உங்களில் அப்துல்லாஹ் இப்னு ஸலாம் எப்படிப்பட்டவர்? என்று கேட்டார்கள் அப்போது யூதர்கள் அவர் எங்களை விட அறிவாளி. அறிவாளியின் மகனும் கூட! எங்களைவிட அனுபவமும் விவரமுடையவரின் மகனும் கூட என புகழாரம் சூட்டினார்கள்.
அப்படியானால், அப்துல்லாஹ் இப்னு ஸலாம் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டு விட்டால் நீங்கள் என்ன நினைப்பீர்கள் என நபியவர்கள் கேட்க ,
அதற்கு யூதர்கள், " அல்லாஹ் அவரை அதிலிருந்து காப்பாற்றுவானாக "எனக்கூறினார்கள்.
இவ்வுரையாடலை மறைந்திருந்து கேட்டுக் கொண்டிருந்த அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி) அவர்கள், யூதர்களுக்கு முன்னால் வந்து, வணங்கப்படுவதற்கு தகுதியானவன் அல்லாஹ்வைத் தவிர வேறு கடவுள் இல்லை என்றும், நிச்சயமாக முஹம்மது நபி அல்லாஹ்வின் தூதராவார் என்றும் சாட்சி சொல்கிறேன் என்று கூறினார்கள்.

இதனை கேட்ட யூதர்கள் இவர் எங்களிலே கெட்டவர், கெட்டவருடைய மகனும் கூட எனக்கூறி அவரைப் பற்றி தப்பாக பேச ஆரம்பித்தார்கள். (நூல் :- புகாரி 3329)
யூதர்கள் ஒருபோதும் உண்மையை செவிமடுப்பதுமில்லை. உண்மை சொல்பவரை விட்டு வைப்பதுமில்லை. யூத சமூதாயத்திலே மிகவும் மதிக்கத்தக்க குடும்பத்தையுடையவர் இஸ்லாத்தை தழுவினார் என்பதை சகிக்க முடியாமல் சேற்றை வாரி வீசினார்கள்.
இதற்கு விதிவிலக்காக அப்துல்லாஹ் இப்னு ஸலாம் (ரலி) அவர்கள் இறைதூதை எப்படி அலசிப்பார்க்க வேண்டும் என்பதை எடுத்துக் காட்டி, உலகமக்களுக்கு ஓர் முன்மாதிரியாக திகழ்கிறார்.

**இஸ்லாம் ஓர் ஈர்க்கும் மார்க்கம் 19**
( அல்லாஹ் தன் ஒளியை பூர்த்தியாக்கி வைக்காமல் இருக்க மாட்டான் )

சமீபத்தில் சமர்பிக்கப்பட்ட ஆய்வறிக்கைகள், உலகெங்கும் இஸ்லாம் மிக வேகமாக பரவிக் கொண்டிருப்பதாக சொல்கிறது. இந்த தகவல் அப்படியே நூற்றுக்கு நூறு சதவிகிதம் உண்மைப்படுத்துகின்றது.
அதாவது கடந்த ஒரு சில ஆண்டுகளுக்கு முன்பு (innocent of muslim) என்ற பெயரில் நபி (ஸல்) அவர்களை கேவலப்படுத்தியும், இழிவுபடுத்தியும் அமெரிக்க ஏகாதிபத்திய அயோக்கியர்களால் ஒரு படம் ஒன்றை வெளியிட்டார்கள்.
அந்த படம் வெளிவந்ததும் இதுவரைக்கும் உலகம் சந்தித்திராத அளவுக்கு ஒட்டு மொத்த உலக முஸ்லிம்களிடமிருந்தும் கடுமையான எதிர்ப்பலைகளையும், போராட்டங்களையும், ஆர்ப்பாட்டங்களையும் உலகம் சந்தித்தது.
ஆனால் ஒட்டு மொத்த நாடும் வியக்கின்ற அளவுக்கு அந்த படத்தை உருவாக்கியவர் மனம் திருந்தி சமீபத்தில் இஸ்லாமிய மார்க்கத்தை தன்னுடைய வாழ்க்கை நெறியாக ஏற்றுக் கொண்டார். கடந்த பத்து வருடங்களில் அமெரிக்காவில் வெகு வேகமாகப் பரவும் மார்க்கமாக இஸ்லாம் திகழ்கின்றது.

2000 ஆம் ஆண்டில் ஒரு மில்லியனாக (பத்து இலட்சமாக) இருந்த முஸ்லிம்களின் எண்ணிக்கை 2012 – ஆம் ஆண்டில்2.6 மில்லியனாக (அதாவது, இருபத்தி ஆறு இலட்சமாக) மாறியுள்ளது என புள்ளி விபரங்கள் தெரிவித்துள்ளதாக நியூயோர்க் டெய்லி நியூஸ் குறிப்பிட்டுள்ளது. ((NEWYORK DAILY NEWS – Thursday, May 03, 2012) பத்து வருடங்களுக்குள் 150% வளர்ச்சியைக் கண்டுள்ளதை இது எடுத்துக் காட்டுகின்றது.
திருக்குர்ஆன் மொழியாக்கங்கள் மற்றும் இஸ்லாம் சம்பந்தமான புத்தகங்கள் அளவுக்கதிகமாக அமெரிக்காவில் விற்றுத் தீர்ந்தன. கடந்த 12 ஆண்டுகளில் 1200 புதிய பள்ளிவாசல்கள் அமெரிக்காவில் கட்டப்பட்டிருக்கின்றது. ஒரு வாரத்திற்கு இரண்டு பள்ளிவாசல்கள் வீதம் ஆண்டுக்கு 100 பள்ளிவாசல்கள் அமெரிக்காவில் கட்டப்படுகின்றது என்று பிரபல அமெரிக்க செய்தி ஊடகமான சி.என்.என் (CNN) குறிப்பிடுகின்றது.

2027 இல் பிரான்ஸில் ஐந்தில் ஒருவர் முஸ்லிமாக இருப்பார் என்றும் இன்னும் 39 வருடங்களுக்குள் பிரான்ஸில் முஸ்லிம்களே பெரும்பான்மையாக இருப்பார்கள்' என்றும் கூறுகின்றது.
நெதர்லாந்தில் தற்போது பிறக்கும் குழந்தைகளில் 50% முஸ்லிம்கள் இன்னும் 15 வருடங்களுக்குள் நெதர்லாந்தில் முஸ்லிம்கள் 50% சதவிகிதமாக இருப்பார்கள் என்றும் கூறப்பட்டுள்ளது. அந்த அறிக்கை குறிப்பிட்ட 15 வருடங்களில், சுமார் ஏழு வருடங்கள் கடந்து விட்டன என்பது குறிப்பிடத் தக்கதாகும்.
ரஷ்யாவில் ஐந்து பேரில் ஒருவர் முஸ்லிமாக இருப்பதாகவும், அந்த அறிக்கை கூறுகின்றது.
பெல்ஜியத்தில் 2025ல் பிறக்கும் மூன்று குழந்தைகளில் ஒரு குழந்தை முஸ்லிமாக இருக்கும் என்றும் 2050ல் ஜெர்மன் முஸ்லிம் நாடாக மாறும் என்றும் அந்த அறிக்கை கூறுகின்றது.
அது மட்டுமன்றி தற்போது ஐரோப்பாவில் 52 மில்லியன் முஸ்லிம்கள் இருப்பதாகவும் இன்னும் 20 வருடங்களுக்குள் இது இரு மடங்காக மாறும். (அதாவது, 104 மில்லியனாகும்) எனவும் ஜெர்மன் அரசே அறிவித்துள்ளது.
இதுபோன்ற ஏராளமான புள்ளி விவரங்கள் நமக்கு எடுத்து சொல்கின்ற செய்தி என்னவென்றால், இஸ்லாமிய மார்க்கம் எந்த அளவுக்கு எதிர்க்கப்படுகின்றதோ, அந்த அளவுக்கு வளர்ச்சிப் பாதையை நோக்கி பயணித்துக் கொண்டிருக்கின்றது.

يُرِيْدُوْنَ اَنْ يُّطْفِـــُٔـوْا نُوْرَ اللّٰهِ بِاَ فْوَاهِهِمْ وَيَاْبَى اللّٰهُ اِلَّاۤ اَنْ يُّتِمَّ نُوْرَهٗ وَلَوْ كَرِهَ الْـكٰفِرُوْنَ
தம் வாய்களைக் கொண்டே அல்லாஹ்வின் ஒளியை (ஊதி) அணைத்துவிட அவர்கள் விரும்புகின்றார்கள் - ஆனால் (தன்னை)
மறுப்பபோர் வெறுத்த போதிலும் அல்லாஹ் தன் ஒளியை பூர்த்தியாக்கி வைக்காமல் இருக்க மாட்டான்.
(குர்ஆன் : 9:32)

இஸ்லாம் ஓர் ஈர்க்கும் மார்க்கம் 18
( ஒரு மரணம் - இஸ்லாத்தை அறிமுகப்படுத்தியது ! )

இரண்டு வருடங்களுக்கு முன் சென்னை தாம்பரம் பள்ளிவாசலில் மௌலவி ஒருவரின் சொற்பொழிவை கேட்க முடிந்தது .
அந்த சொற்பொழிவின் சாரம்சம் :
அந்த மௌலவி சென்னையிலிருந்து சூரத் (குஜராத்) செல்வதற்கு நவஜீவன் Exp -ல் பயணம் போயிருக்கிறார்.
அவர் பயணம் செய்யும் ரயில் கோச்சில் 50 வயது மதிக்கத்தக்க இரண்டு நண்பர்கள் ; நண்பர்களில் ஒருவர் முஸ்லிம். மற்றொருவர் இந்து சகோதரர் .இருவருமே சிறு வயது பிராயத்திலேயே நண்பர்கள்.
இரண்டுபேரும் பங்குதாரர்களாக சென்னையில் ஜவுளி ரெடிமேட் வியாபாரம் செய்து வருகின்றனர். ஜவுளி கடைக்கு ரெடிமேட் துணிகள் கொள்முதல் செய்வதற்காக சூரத் செல்கின்றனர்.
நடுநிசி இரவு. முஸ்லிம் நண்பருக்கு திடீரென ஹார்ட் அட்டாக் . இந்து சகோதரர் பதறுகிறார். மொத்த கோச் பயணிகளும் விழித்தெழிந்து உதவி செய்ய முன் வருகின்றனர். நம்ம மௌலவியும் மிக மும்முரமாக கவனம் செலுத்துகிறார் . கொஞ்ச நேரத்தில் முஸ்லிம் நண்பர் இறை அழைப்பை ஏற்கிறார். (இன்னாலில்லாஹி…)
ரயில் நிறுத்தப்படுகிறது . TTR , ரயில்வே போலீஸ் உட்பட அந்த இந்து சகோதரரிடம் கலந்து ஆலோசித்து , பக்கத்தில் ஒரு சின்ன கிராமம் வருகிறது . அந்த கிராமம் முஸ்லிம்கள் பெருவாரியாக வாழுபவர்கள் . அக்கிராமத்தில் உள்ளவர்கள் மேற்கொண்டு நடப்பதைக் கவனித்துக் கொள்வார்கள் . உங்கள் நண்பரின் பிரேதத்தை அந்த சின்ன கிராம ரயில்வே ஸ்டேஷனில் இறக்கி வைக்கிறோம் " என்றனர்.
அந்த இந்து சகோதருடன் நம்ம மௌவியும் இறங்கிக் கொண்டார். ரயில் 'அப்பாடா ' என்று இறக்கிவைத்து விட்டு ஊர்ந்து போனது.

நம்ம மௌலவி பயணத்தை ரத்து செய்து துணைக்கு இறங்கிய இந்த உதவி இந்து சகோதரருக்கு மிக்க ஆறுதலாக இருந்தது.
பொழுது புலர்ந்தது.
சூரத்திற்கு போகிற வழியில் உள்ள அந்த சின்ன கிராம ரயில்வே ஸ்டேஷன் மாஸ்டர், கிராமத்திற்கு போன் செய்ததும், அந்த கிராமவாசிகள் பத்து பேர் பிரேதத்தை கொண்டு செல்ல சந்தூக்குடன் வந்தனர்.
அதற்குள் இந்து சகோதரர் முஸ்லிம் நண்பரின் வீட்டிற்கும், உறவினருக்கும் செய்தியை தெரியப்படுத்திவிட்டு, நண்பரை நல்லடக்கம் செய்வதற்கும் அனுமதியும் பெறுகிறார். இதை அந்த கிராமத்தவர்களிடம் தெரியப்படுத்தினார்.

அந்த கிராமத்தவர்கள் பிரேதத்தை தூக்கி அந்த சந்தூக்கில் வைத்து தங்களது கிராமத்திற்கு கொண்டு சென்று , பிரேதத்தை தொட்டுத் தழுவி தங்கள் உறவினர் போல குளிப்பாட்டி, கபனிட்டு , பள்ளிவாசலில் வைத்து தொழுகையும் நடத்தினர்.
பின்னர் கபருஸ்தானில் ஏற்கனவே கிராமத்தவர்கள் தோண்டி வைத்திருந்த குழியில் முஸ்லிம் நண்பரை அடக்கம் செய்து விட்டு , அந்த பள்ளிவாசல் இமாம் மற்றும் கிராமத் தலைவர்கள் பிரேத அடக்க சான்றிதழ் எழுதி கொடுத்து விட்டு , இறப்புப் பதிவு ரிஜிஸ்டரில் இந்து நண்பரின் கையெப்பத்தையும் ஆதார் அட்டை நகலையும் பெற்றுக் கொண்டனர் .

இந்து நண்பர் அந்த பள்ளிவாசல் இமாம் மற்றும் கிராமத்தவர்களிடம் , " என் நண்பரின் அடக்கச் செலவு எவ்வளவு என்று கேட்டார் ?"
" உங்கள் நண்பரின் சொந்த பணம் உங்களிடம் இருக்கிறதா ? இருந்தால், அவருடைய பணத்தில் கபன் துணிக்குரிய தொகையை மட்டும் தாருங்கள் "
"பிரேதத்தைத் தூக்கி வந்த செலவு , குளிப்பாட்டிய செலவு, கபர் குழிதோண்டியச் செலவு இதற்கெல்லாம் கொடுப்பதற்கு என் முஸ்லிம் நண்பரின் சொந்த பணம் என்னிடம் இருக்கிறது . அதையும் உங்களுக்கு தருகிறேன் " என்றார் அந்த இந்து சகோதரர் .
" நண்பரே , உங்களுடைய முஸ்லிம் நண்பர் எங்களுக்கு சகோதரர் . அவருடைய பிரேத கபன் துணியைத் தவிர மற்ற செலவுகள் அனைத்தும் எங்கள் சகோதருக்கு நாங்கள் செய்துகொள்வோம்" என்றனர்.
இந்து நண்பரின் கண்ணீர் வெள்ளமாக பாய்கிறது. "என் முஸ்லிம் நண்பரை நீங்கள் பார்த்ததும் கிடையாது ; பழகியதும் கிடையாது எப்படி இதெல்லாம் ?
"நாங்கள் மட்டும் அல்ல, இந்த உலகில் எங்கு முஸ்லிம் இறந்தாலும் அவரை அனாதை பிணமாக ஒரு காலும் அடக்கவிடமாட்டார்கள் "
இந்த வார்த்தை இந்து நண்பரின் உள்ளத்தை உலுக்கிவிட்டது.
" நானும் இஸ்லாத்தை தழுவியிருந்தாலுமா ? "
" நிச்சயமாக, நீங்களும் எங்கள் சகோதரர்தான் " என்றனர்
அடுத்த நிமிடம் , இஸ்லாத்தை இப்போதே தழுவுகிறேன் என்றார் அந்த இந்து சகோதார்
பள்ளிவாசல் இமாம் அவர்கள் அவரின் கரத்தை பிடித்து "லாஇலாஹ இல்லல்லாஹ் முஹம்மதுர் ரசூலுல்லாஹ் " என்கிற கலிமாவை சொல்லிக் கொடுத்தார்.
அவரும் இஸ்லாமிய சகோதரரானார்.

**அவயங்களின் அகமியங்கள் 1**
( தலையே பிரதானம் )



தலையானது மாந்தர்கள் முதல் மிகப்பல உயிரினங்களின் உடல்களில் மூளையும், கண், காது, மூக்கு, வாய் போன்ற முக்கிய புலன் உறுப்புகளும் அடங்கிய முதன்மை மிக்க உறுப்பு. உடம்பில் உள்ள நரம்புகள் பலவும் ஒன்று சேரும் இடம் அடங்கிய உறுப்பு.ஆகவேதான் எண்சாண் உடலுக்கு சிரசே (தலையே) பிரதானம் என்பர்
தலைமை, தலைவன், தலைவி, தலைவர், தலைப்பு, தலையாய, தலைசிறந்த,
தலையாட்டி பொம்மை , தலையெழுத்து, தலைமுறை, தலைவலி, தலைமுடி, தலைவிதி, தலைக்கனம், தலைக்கர்வம், தலைப்பிள்ளை, தலைச்சன், தலைச்சன்பிள்ளை, தலைப்பிரசவம்
தலைக்கொள்ளி, தலைச்சீவுதல், தலைவாருதல், தலைவாசல், தலைவாயில், தலைச்சுழி, தலைச்சுற்று, தலைவாங்கல், தலைக் கொய்தல்,தலையங்கம், தலைப்பரட்டை,
தலைச்சுருட்டை, தலைச்சுருளி, தலைச்சூடி, தலைமகன், தலைமகள்,
தலைக் குடிமகன், தலைக் குடிமகள், தலைமைச் செயலர்,
தலைமைச் செயலகம்,தலைமை அலுவலர்,தலைமை அலுவலகம், தலைமையகம்,
தலைச்சுமை,தலைக்கட்டு,தலைநிமிர்தல், தலையெடுத்தல், தலையீடு, தலையிடுதல்,தலைப்பின்னல், தலையாரி, தலையிடி, தலைப்பாகை, தலைவிரிக் கோலம்,
தலைத் தீபாவளி, பெருந்தலை, தலைக்கவசம், தறுதலை, ஒரு தலைக் காதல், தலைகொடு, தலைவாழையிலை, தலைமாடு, தலைமாட்டு. தலைக்கவசம், தலைநகரம், தலைநகர்,
தலை தூக்குதல், தலைகீழ், உச்சந்தலை, அஞ்சல் தலை, தலையணை , அட... பழம்பெரும் கவிஞர் சீத்'தலை' ச்சாத்தனார். ( ஒரே மூச்சில் 'உஸ்... அப்பாடா சொல்லியாச்சி தல )
ஒரு காலத்தில் பருப்பொருளை உணர்த்திய சொற்கள் பிற்காலத்தில் நுண் பொருளை உணர்த்துமானால் அந்நிலை நுண்பொருட்பேறு ஆகும்.
"தலை" என்று ஓர் உறுப்பைத் தெரிவித்த அச்சொல், பிற்காலத்தில் "தலைமை" என்ற பொருளையும் - அதாவது நுண்பொருளையும் உணர்த்தியமை குறிக்கத்தக்கது. (நல்ல தமிழ்ச் சொற்கள் அன்றும் இன்றும், முனைவர் ச.சுப்புரெத்தினம், தமிழ்மணி, 27 பிப் 2
இத்தனை தலைத்தனத்திற்குரிய ஒரு வஸ்து மூளை . இதனை மையமாக வைத்து மேலே உள்ள வார்த்தைகள் உங்களுக்கும் , எனக்கும் பிரபல்யமாயின .
40,000 வருஷங்களாக நமக்கு இதே சைஸ் மூளைதான் இருந்து வந்திருக்கிறது. இதைக் கொண்டுதான் விவசாயம் கண்டுபிடித்தோம். முதல் சக்கரங்கள் செய்தோம். மாட்டைப் பழக்கினோம், காட்டை வெட்டினோம், வியாதிகளை வென்றோம். சந்திரனுக்குச் சென்றோம்.
உடைத்துப் பார்த்தால் ஒரு ஓவர்சைஸ் அக்ரூட் போலிருக்கும் இந்த ஈர, அழுக்கு கலர் கொசகொசப்புக்கு உள்ளேயா இத்தனை சாகசம்?
ஆரம்பத்தில் மனிதன் நம்பவில்லை. அரிஸ்டாட்டில் 'இதயத்தில்தான் இருக்கிறது சூட்சுமம்' என்றார். 'மூளை சும்மா ரத்தத்தைக் குளிரவைக்க மடிமேல் ஏ.ஸி' என்றார்.
இன்னும் மூளையைப் பற்றிய முழு ஞானமும் நமக்கில்லை. ஆனால், நவீன மருத்துவம், கம்ப்யூட்டர் கருவிகள் உதவியுடன் நிறையவே தெரிந்து கொண்டுவிட்டோம்.
அண்மையில் PET என்னும் பாஸிட்ரான் எமிஷன் டோமாகிராஃபி என்கிற கருவியைப் பயன்படுத்தி, நாம் பேசும்போது - பார்க்கும்போது, படிக்கும்போது- நினைக்கும் போது, குறிப்பாக காதலன்/லி யை நினைக்கும்போது... மூளையில் எந்த எந்த இடங்களில் நடவடிக்கை ஜாஸ்தியாகிறது என்று கலர் கலராகக் காட்டியிருக்கிறார்கள்!
உலகிலேயே மிக மிக ஆச்சரியம் - மனித மூளை. அதனுள் பல்லாயிரம் கோடி நுட்பமான உயிரணுக்கள், செல்கள் உள்ளன. ஒவ்வொரு செல்லையும் ஒரு மணற்துகள் அளவுக்குப் பெரிசு பண்ணினால் ஒரு லாரி நிரம்பும்! இந்த

செல்களில் ஆயிரம் கோடி நியூரான்கள். நரம்பு செல்கள் வேறு. இவற்றுக்கிடையே ஓய்வில்லாத மின், இராசயன நடனம்தான் நம் "சிந்தனை "
மனிதன் உயிர் வாழும்வரை இந்த செல்களிடையே மின் துடிப்புகள் திரிகின்றன. இன்றைய கணிப்பொறிகளோடு ஒப்பிட்டால் மூளை ரொம்ப ரொம்ப நிதானம். ஆனால் கணிப்பொறியால் நீச்சல் அடிக்க முடியாது, சைட் அடிக்க முடியாது. டை கட்ட முடியாது, ஓரமாக பேப்பரை கிழித்து சுருட்டி காதை கிளீன் பண்ணிக்கொண்டு, பொண்டாட்டியோட வாக்குவாதம் பண்ண முடியாது.
'சிந்தனை'ன்னு ஒரு வார்த்தை சொன்னேன் பாருங்கள்; அது நல்லதாக இருந்தால், கண்ணியம் . அது தறிக்கெட்டுப்போனால் தறுதலை.

இந்த மூளை தலைமைத்துவ அந்தஸ்துடையது என்பதற்காகத்தான் இறைவன் அதை தலையில் உயரமான இடத்தில் வைத்தான் .அதனை தரையில் வைத்து ஸுஜுது செய்ய அவன் மிக நெருக்கமானான்.
“நிச்சயமாக நான் உங்களைப் படைக்க கருதி, உங்களை அதாவது உங்கள் முதல் தந்தையாகிய ஆதமை உருவமைத்தோம். பின்னர் நாம் வானவர்களை நோக்கி ‘ஆதமிற்கு சிரம் பணியுங்கள்’ என்று கட்டளையிட்டோம். இப்லீஸைத் தவிர மற்ற வானவர்கள் அனைவரும் அவருக்கு பணிந்தார்கள், அவன் பணியவில்லை” (குர்ஆன் 7:11).
மனிதன் மீது கொண்ட அபரிமிதமான அன்பின் காரணத்தால் மற்றைய படைப்பினங்களை மனிதனுக்கு சிரம் பணிந்து வணங்குமாறு அல்லாஹ் கட்டளையிட்டான். அவைகள் அறிவைக் கொண்டு சிந்திக்கவில்லை. ஆனால் இப்லீஸ் அல்லாஹ்வின் கட்டளைக்கு மாறு செய்தான். அதனால் அவன் சபிக்கப்பட்ட சைத்தானாக சொர்க்கத்திலிருந்து வெளியில் வீசி எறியப்பட்டான்.
இதுபற்றி திருக்குர்ஆன் :- “ஆகவே இறைவன் இப்லீஸை நோக்கி, ‘நான் உனக்கு கட்டளையிட்ட சமயத்தில் நீ சிரம் பணியாதிருக்கும் படி உன்னைத் தடைசெய்தது எது?’ என்று கேட்க,
அதற்கு இப்லீஸ், ‘நான் அவரை விட மேலானவன், ஏனென்றால் நீ என்னை நெருப்பால் படைத்தாய், அவரை களிமண்ணால் படைத்திருக்கிறாய். களிமண்ணை விட நெருப்பு உயர்ந்தது’ என்று இறுமாப்புடன் கூறினான்.” (குர்ஆன் 7:12)

இப்லீஸ் அவனுக்கு கொடுக்கப்பட்ட அறிவு கொண்டு தறிக்கெட்டு சிந்தித்தான் தறுதலையானான்.
தலைத்துவத்தை கர்வத்தால் அடையாளப்படுத்த நம்ரூது தங்கத்தால் கிரீடம் செய்து தலையில் மாட்டி "நானே உங்கள் இறைவன் " என்றான்.
அத்துடன் "இப்ராஹீமே , உன்னுடைய இறைவனோடு யுத்தம் செய்ய வரச் சொல்லும் . நானும் 60 லட்சம் வீரர்களோடு காத்திருக்கிறேன் " என்றான் நம்ரூத் .
இறைவன் காஃப் மலையிலுள்ள எல்லா கொசுக்களையும் திறந்தால் உலகமே கொசுக்களுக்கு பற்றாமல் அழிந்துவிடும் என்பதால் எனவே 60 லட்சம் கொசுக்களை மட்டும் திறந்து விட வானவர்களுக்கு உத்திரவு விட , அக்கொசுக்கள் ஒவ்வொருவரின் இரத்தத்தையும் தசையையும் எலும்பையும் தின்று தீர்த்தது .
கொசுக்களின் ராணி நம்ரூத்தின் மூக்கினுள் நுழைந்து மூளையை தின்ன ஆரம்பித்தது .
நம்ரூத் தன்னைச் சேர்ந்தவர்களிடம் கால் மிதியடிகளைக் கொண்டு தன் தலையை அடிக்க அடிக்க தலைவலி குறைவதாகச் சொன்னான். அடிப்பது நிறுத்தினால் தலைவலி கூடுவதால் எந்நேரமும் மிதியடி கொண்டு அடித்து கிரீடம் வைத்த தலையே பிளந்தது .
பிளந்த தலையிலிருந்து ராணி கொசு பிறந்த குஞ்சுகளோடு வெளிவந்தது. நம்ரூதும் அவனது 60 லட்சம் படை வீரர்களும் மாண்டனர்.
உங்கள் சிந்தனைக்கு : "உலகில் முதன்முதலாக காலுக்கு மிதியடி அணிந்தவர்கள் நபி இப்ராஹீம் (அலை) அவர்கள்.உலகில் முதன்முதலாக தலைக்கு கிரீடம் அணிந்தவன் நம்ரூத் .
இந்த நிகழ்வுகள் எல்லாம் தலைமை , தலைக்கனம், தலை மற்றும் அதனுள் இருக்கும் மூளையால் விளைந்த விபரீதங்கள்.

தந்த மூளையால் சற்று சிந்தியுங்கள்.

## அவயங்களின் அகமியங்கள் 2

( முன்நெற்றி உரோமம் )



இறைத்தூதர் முஹம்மது (ஸல்) அவர்களை இறைவன் தன்னுடைய திருத்தூதராக அங்கீகரித்த ஆரம்ப நாட்களில் ஒரு நாள் மக்கா எனும் இறை ஆலயத்தில் இறைத்தூதர் முஹம்மது நபி (ஸல்) அவர்கள் இறைவனைத் தொழுது கொண்டிந்தபொழுது இறைவனைத் தொழுவதிலிருந்து தடுத்த அன்று மக்காவில் வாழ்ந்த இறைநிராகரிப்பாளர்களைப் பற்றி இறைவன் தன் திருமறையில் கூறும்போது:

(முஹம்மது தொழுதால் நான் அவர் கழுத்தின் மீது மிதிப்பேன் என அபூஜஹல் கூறியவாறு) அல்ல! (இத் தீய செயலிலிருந்து) அவன் விலகிக் கொள்ளவில்லையானால் நிச்சயமாக (அவனது) முன் நெற்றி உரோமத்தைப் பிடித்து நாம் இழுப்போம். தவறிழைத்து பொய்யுரைக்கும் முன் நெற்றி உரோமத்தை. (குர்ஆன்: 96:15-16)

மேற்கண்ட வசனத்தில் இறைவன் நபிகள் நாயகம் முஹம்மது (ஸல்) அவர்களுக்கு தீங்கு விளைவிப்போரது முன் நெற்றி உரோமத்தைப் பற்றிப்பிடித்து நாம் இழுப்போம் என்று கூறியுள்ளான்.

நாம் இங்கு கவனிக்க வேண்டியது என்னவென்றால், தீங்கு செய்பவர்களை இழுப்பேன் என இறைவன் பொதுவாகக் கூறாமல், நபிகள் நாயகம் (ஸல்) அவர்களுக்கு, தீங்கு செய்பவர்களின் முன் நெற்றி உரோமத்தைப் பற்றி இழுப்பேன் என ஏன் குறிப்பிட்டுக் கூற வேண்டும்? தீங்கு செய்பவர்களுக்கும் அவர்களது முன் நெற்றிக்கும் என்ன சம்பந்தம்? இதில் ஏதாவது உண்மை இருக்க வேண்டுமல்லவா?

இதற்கு நவீன அறிவியல் என்ன விடையை வைத்திருக்கின்றது ?

மனிதனின் மண்டை ஓட்டின் முன் பகுதியைக் கவனித்தால், நமக்குத் தெரியக் கூடிய முன் பகுதியில் (Prefrontal area) தான் மூளையின் முன்மூளைப் பகுதி (Cerebrum)அமைந்துள்ளது.

இந்த முன்மூளைப் பகுதியைப் பற்றி மருத்துவ நூல்கள் என்ன கூறுகின்றன?

"உடலியல் மற்றும் உடலியங்கியல் பற்றிய அடிப்படைகள்"(Essentials of Anatomy and Physiology) எனும் தலைப்பிட்ட நூலில், ஒரு மனிதனின் நோக்கங்களும், முன்னேற்பாட்டுத் திட்டங்களும், செயல்களின் தொடக்கமும் ஆகிய செயல்கள் யாவும் மூளையின் முன் பகுதி (anterior portion of the frontal lobes (prefrontal lobes))-ல் இருந்து தான் ஆரம்பமாகின்றன என்று கூறப்பட்டுள்ளது.

இப் பகுதி மூளையின் கார்ட்டெக்ஸ் பகுதியுடனும் இணைந்துள்ளது. மேலும், மனிதனின் நோக்கங்களை அடைவதற்கான திட்டமிடுதலில், முன் மூளைக்கும் அது சார்ந்த செயலுக்கும் தொடர்பு இருக்கிறது.

மனிதனின் பல்வேறு நோக்கங்களில் ஒன்றான சண்டையிடுதலுக்கும், பிறரிடம் கோபம் கொள்வதற்கும் இன்னும் அது சார்ந்த திட்டமிடுதலுக்கும் மூளையின் முன் பகுதியான முன்மூளைப் பகுதி (prefrontal lobes) என்று, அந்த நூல் குறிப்பிட்டுள்ளது. Essentials of Anatomy and Physiology, seely and others. p.211. Also see The Human Nervous System, Noback and others, pp.410-411.

Essentials of Anatomy and Physiology, Seeley and others, p.211-ல் மேற்கண்ட அறிவியல் விளக்கங்கள் மூலம், மனிதனின் நோக்கங்களுக்காக திட்டமிடுதல், நல்லவற்றை எடுத்து நடத்தல், தீய காரியங்களை எடுத்து செய்தல் போன்ற காரியங்களுக்காகவும், உண்மை பேசுதல் மற்றும் பொய்யுரைத்தல் இன்னும் இது போன்ற செயல்பாடுகளுக்கும் மனிதனின் முன்மூளைப் பகுதிதான் காரணமாக அமைந்துள்ளது என்பதை நம்மால் உணர்ந்து கொள்ள முடிகின்றது.

மேற்கூறப்பட்ட முன் நெற்றியைக் வலியுறுத்தும் இன்னும் இரண்டு வசனங்கள் இதேக் கருத்தை கூறுவது பற்றி திருமறையில் இறைவன்,

எவனொருவன் தீய செயல்களைப் புரிகின்றானோ அவனது முன் நெற்றியைப் பற்றி இழுப்போம் என்பதைத் தெளிவாகச் சொல்லி, ஒரு மனிதனின் தீய செயல்களுக்கு மூளையின் முன் பகுதி தான் காரணமாக

அமைந்துள்ளது என அறிவியல் ரீதியாகவும் மனித சமூகத்துக்கு தன்னுடைய வசனங்களைத் தெளிவுபடுத்தி உள்ளான்.
اِنِّىْ تَوَكَّلْتُ عَلَى اللّٰهِ رَبِّىْ وَرَبِّكُمْ ‌ؕ مَا مِنْ دَآبَّةٍ اِلَّا هُوَ اٰخِذٌ ۢ بِنَاصِيَتِهَا ‌ؕ اِنَّ رَبِّىْ عَلٰى صِرَاطٍ مُّسْتَقِيْمٍ
நிச்சயமாக நான், எனக்கும் உங்களுக்கும் இறைவனாக இருக்கும் அல்லாஹ்விடமே பொறுப்பை ஒப்படைத்து விட்டேன்; எந்த உயிர்ப் பிராணியாயினும் அதன் முன்நெற்றி உரோமத்தை அவன் பிடித்தவனாகவே இருக்கின்றான்; நிச்சயமாக என் இறைவன் நேரான வழியிலிருக்கின்றான். (குர்ஆன் : 11:56)
يُعْرَفُ الْمُجْرِمُوْنَ بِسِيْمٰهُمْ فَيُؤْخَذُ بِالنَّوَاصِىْ وَ الْاَقْدَامِ
குற்றவாளிகள், அவர்களுடைய (முகக்குறி) அடையாளங்களை கொண்டே அறியப்படுவார்கள் - அப்போது (அவர்களுடைய) முன் நெற்றி உரோமங்களும், கால்களும் கொண்டு பிடிக்கப்படுவார்கள் (குர்ஆன் : 55:41)
உங்கள் சிந்தனைக்கு :-
பிரேதத்தை குளிப்பாட்டி, கபன் செய்து பிரேதத்தின முன்நெற்றில் கஸ்தூரியைக் கொண்டோ, பன்னீர் கொண்டோ , அல்லது அத்தர் கொண்டோ திருக்கலிமாவை கலிமா விரலால் எழுதப்படுகிறது. சிந்திக்கவும் .

**அவயங்களின் அகமியங்கள் 3**
( உமிழ்நீரால் ஒட்டப்பட்ட கண்கள் )

மிகக் கவனமாக அதேநேரத்தில் சிக்கலான வேலையைச் செய்வதில் கண்களுக்கு இணை எதுவும் இல்லை. கண்களுக்குள் லட்சக்கணக்கான மின் தொடர்புகளை (electrical connection) வைத்துள்ளது. ஒரே சமயத்தில் 15 லட்சம் செய்திகளை கண்களால் கையாள முடியும் !

உங்களது அறிவில் 60 சதவீதம் கண்களால் வந்தது. புரியவில்லை ? முதலில் கண்கள் பார்த்து, இது, இன்னது என்ற செய்தியை மூளைக்கு அனுப்பினால்தானே அது குறித்து நீங்கள் தெரிந்துகொள்ள முடியும் !
கண்களுக்கு மிகப் பெரிய அவமானம் , எப்போதும் கண்களை நீங்கள் ஒரு கேமிராவுடன் ஒப்பிடுவதைத்தான். இந்த உலகத்தில் எத்தனை பெரிய தொழில்நுட்பம் எப்போது வந்தாலும் கண்களைப் போல சென்சிடிவான கேமிராவை யாராலும் கண்டுபிடிக்கவே முடியாது.

கண்களின் உருவத்தைப் பற்றி முழுமையாகத் தெரிந்து கொண்டால், தற்போதைய சூழல் ஏன் கண்களுக்குக் கடினமாக உள்ளது என்பதைப் புரிந்து கொள்வீர்கள்.
முதலில் பார்த்தவுடன் வெளிப்புறத்தில் தெரிவது தெளிவான வளைந்த கார்னியா, இதன் வேலை, வெளியிலிருந்து வரும் ஒளி அலைகளை மாற்றி அதன் தன்மை மாறாமல் காட்டுவது.
அடுத்தது கண் பாவை (pupil). வெளியில் இருந்து வரும் ஒளிக்கதிர்களின் நுழைவு வாயில் இதுவே. ஒளிக்கதிர்கள் எப்படி இருந்தாலும் கண்களுடைய கண்பாவை அட்ஜெஸ்ட் செய்துகொள்ளும். நல்ல வெளிச்சத்தில் கண்களுடைய லென்ஸ் சுருங்கிக் கொள்ளும். வெளிச்சம் குறைவான நேரத்தில் இருட்டாக இருக்கும்போது விரிந்து கொள்ளும்.

கண்களின் உண்மையான அதிசயம் லென்சில்தான் ஆரம்பிக்கிறது. சின்ன வைட்டமின் மாத்திரை அளவில் கோழி முட்டை மாதிரி திரவத்துடன் இருக்கும் லென்சைச் சுற்றிலும், உங்களால் நம்பவே முடியாத வளைந்த கடினமான தசைகள் உள்ளன.
சற்று முன் சொன்னதைப்போல கண்கள், உங்களைப் போன்ற நவீன கால நபர்களுக்காக வடிவமைக்கப்பட்டவைகள் இல்லை. ஆதிகற்கால மனிதர்களுக்காக உருவாக்கப்பட்டவைகள். எப்படி ?
கற்கால மனிதனுக்கு தூரத்தில் இருப்பதைப் பார்ப்பது மட்டுமே கண்களின் முக்கிய வேலையாக இருந்தது. அவர்கள் வாழ்ந்த காலத்தில் ஆபத்தான விலங்குகளைத் தவிர்க்க வேண்டும். அதே சமயம் உணவுக்காக வேட்டையாடவும் வேண்டும். இதற்காக வெகு தூரத்தில் இருந்தே பார்த்துத் தயாராகி விட வேண்டிய நிர்ப்பந்தம் இருந்தது.
தூரத்தில் பார்க்கும்போது லென்சைச் சுற்றிலும் உள்ள தசைகள்
ரிலாக்சாசி கருங்கிவிடும். அதேநேரத்தில் பக்கத்தில் இருப்பதைப் பார்த்தால் இந்தத் தசைகள் தடித்து அதிக ஸ்ட்ரெயின் செய்து கொள்ளும்.

உங்களின் தாத்தாவின் தாத்தா எப்போதும் தூரத்தில் இருப்பதையே பார்த்துக் கொண்டிருந்ததால் லென்சைச் சுற்றியுள்ள எப்போதும் ரிலாக்ஸ்டாக இருந்தன. இப்போது நீங்கள் கம்ப்யூட்டர், ஆன்ட்ராய்டு போன், புத்தகம், அலுவலக வேலை என்ற ஒரு குறிப்பிட்ட வளையத்திற்குள்ளேயே இருப்பதால் எல்லா நேரமும் கண்களின் லென்ஸ் தசைகள் ஸ்ட்ரெயின் ஆகிக் கொண்டே இருக்கின்றன. இதனால், எப்போதும் கண்கள் களைப்பாகவே இருக்கிறது.

நீங்கள் பிறக்கும்போது கண்கள், உங்களிடம் பழைய காலத்தைப் போலத்தான் இருந்தது. வெளிச்சம், நிழல் இரண்டை மட்டுமே பார்த்தது. தூரத்தில் இருக்கும் பொருட்களைத்தான் மிக நன்றாக உங்களுக்குக் காட்டியது. முதல் சில மாதங்கள் கண்கள் இரண்டும் ஒரே பிம்பத்தைப் தனித்தனியாக பார்த்தது.
அடுத்து.... சரியாகி ஒரே பிம்பத்தை ஒற்றுமையாக இரு கண்களும் ஒன்றாக பார்க்கப் பழகிக் கொண்டது .
யோசித்துப் பாருங்கள்... ஞாபகம் வருகிறதா? நீங்கள் சிறிய வயதில் இருந்தபோது எப்படிப்பட்ட வெளிச்சத்திலும் குறிப்பாகக் குறைந்த வெளிச்சத்தில் தெளிவாகக் கஷ்டமே இல்லாமல் படித்திருப்பீர்கள்.
லென்சிற்குப் பின்னாள் திரவத்துடன் கூடிய 2 அறைகள் உள்ளன, முன்பக்கம் தண்ணீர் போலவும் பின்பக்கம் முட்டை வெள்ளைக் கரு போலவும் அந்தத் திரவங்கள் இருக்கும். இந்த இரண்டு திரவங்களும் தெளிவாக இருந்தால்தான் வெளியில் இருந்து வரும் ஒளி லென்சில் சரியாக ஊடுருவ முடியும்.
நீங்கள், உங்கள் அம்மாவின் வயிற்றில் கருவாக உருவான நாளிலிருந்து இந்த இரண்டு திரவங்களும் உள்ளன. கடைசி வரை அவை கண்களுடனே இருக்கும். நீங்கள் பார்ப்பதை அப்படியே உருவம் மாறாமல் விழித்திரையில் விழச் செய்வது லென்ஸ்தான். கண்களுடைய ரெட்டினா மெல்லிய தோல்போல இருக்கும்.
கண்கள் பார்க்கும் பிம்பங்கள் எல்லாம் நீங்கள் நினைப்பதுபோல உள்ளன. உள்ளபடி முதலிலேயே அப்படியே தெரியாது. ஒளிக்கற்றைகளாகவே லென்சில் விழும். ஒளிக்கற்றைகளைப் பிரித்துப் பார்ப்பதற்கே கண்களின் லென்சில் 13.7 கோடி செல்கள் உள்ளன. இதில் உருட்டுக் கம்பி போன்று இருக்கும் லென்ஸ் 13 கோடி செல்கள் கறுப்பு வெள்ளைப் பொருட்களையும், மீதம் உள்ள கூம்பு செல்கள் கலர் பொருட்களைப் பார்ப்பதற்கும் உதவுகின்றன.
பார்க்கும் பொருட்களை எல்லாம் அதனதன் தன்மை மாறாமல். காட்டுவதில் இந்த செல்கள் எப்படிச் செயல்படுகின்றன என்பதை உங்களுக்குப் புரிய வைக்க ஒரு சின்ன உதாரணம் சொல்கிறேன்.
இருட்டில் ஓர் இடத்தில் நிற்கிறீர்கள். நீங்கள் எதிர்பார்க்காத சமயத்தில் ஒரு சின்ன மின்மினிப் பூச்சி பறக்கிறது. அதை உடனே பார்த்ததாக நீங்கள் நினைக்கலாம். பறப்பதற்கும் பார்ப்பதற்கும் இடையில் உள்ள 0.002 விநாடிக்கும் குறையான நேரத்தில் கண்கள்
என்ன செய்கிறது என்று சொன்னால், அப்புறம் எதனோடு கண்களை ஒப்பிட மாட்டீர்கள்.
மின்மினிப் பூச்சியைப் பார்த்தவுடன் விழித்திரை முழுவதும் பரவி இருக்கும் செல்கள் ஒரு மின் அதிர்வுடன் கூடிய வேதி மாற்றத்தை ஏற்படுத்துகிறது. தலையின் பின்புறம் மூளைக்கு அருகில் இருக்கும் பார்வை நரம்புகளில் இருந்து மணிக்கு 450 கி.மீ. வேகத்தில் இந்தச் செய்தியை மூலை உணர்ந்துகொள்ள... மின்மினிப் பூச்சியை நீங்கள் பார்க்கிறீர்கள்.

இவ்வாறான பல சிக்கல் அமைப்பைக் கொண்டு கண்களை இறைவன் உருவாக்கியுள்ளான்.அப்பேர்பட்ட கண்கள் யுத்தத்தில் கீழே விழ, நபி (ஸல்) அவர்கள் தங்களின் முபாரக்கான உமிழ்நீரைக் கொண்டு பொருத்திய வரலாறு .....
நபி (ஸல்) அவர்கள் யுத்த பிரகடனம் செய்து யுத்தத்திற்கு ஆள் சேர்ப்பு நடந்து கொண்டிருக்கிறது .
நேற்று கல்யாணமான ஒரு ஸஹாபி (அபு சுபியான் (ரலி) - இவர் ஹிந்தாவின் கணவர் அபு சுபியான் (ரலி) அவர்கள் அல்ல ) . யுத்தத்தில் கலந்து கொள்ள விரும்புகிறார் .
நபி (ஸல்) அவர்கள் அந்த ஸஹாபி புதுமாப்பிள்ளை என்பதால் அவரின் பெயரை நீக்கம் செய்கிறார்கள் .
ரொம்பவும் சிரமப்பட்டு அடம் பிடித்து யுத்தத்தில் பங்கு கொள்கிறார் புது மாப்பிள்ளையான அந்த ஸஹாபி .
யுத்த களத்தில் அந்த ஸஹாபியின் வலது கண் கீழே தனியாக விழுந்து விடுகிறது . அதை எடுத்து கொண்டு நபியவர்களிடம் வர , தங்களின் முபாரக்கான உமிழ்நீரைக் கொண்டு தடவி கண் இருந்த இடத்தில் பொருத்துகிறார்கள். கண்ணும் பொருந்தி விடுகிறது கன கச்சிதமாக !
அந்த நபித்தோழர்களின் வாரிசுகள் இன்றும் மதீனாவில் இருக்கிறார்கள். அவர்கள் அத்தனை பேர்களுக்கும் வலது கண் புருவத்தில் அதிகமான ரோமங்கள் பார்க்க ரொம்ப அழகாக கவர்ச்சியாக இருக்கிறது !
"நானும் நபிதான் "என்று "முஸைலமா " என்ற ஏமன் நாட்டு பொய்யான நபி தோன்றினான் , அவனையும் நம்பி அவனுக்கு பின்னாலும் ஒரு பெரிய கூட்டம் இருந்தது. தற்காலத்தைப் போல.
அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களின் ஆட்சி காலத்தில் ஒரு யுத்தம் வந்தது. பொய்யன் முஸைலமா எதிர்த்து .
யுத்தத்தில் , அவனுடைய போர் வீரனின் வலது கண் கீழே விழுந்தது . நபி (ஸல்) அவர்கள் மீண்டும் கண்ணை பொருத்திய வரலாறு அவர்கள் எல்லோருக்கும் தெரியும் .
எனவே போர் வீரன் தன் கண்ணை எடுத்துக் கொண்டு பொய்யன் முஸைலமாவிடம் ஒடி வர, அவனும் தன் எச்சிலைக் கொண்டு தடவி, வலது கண்ணை பொருத்துகிறான் . ஆச்சரியம் கண் பொருந்தி விடுகிறது !
அவர்களிடைய கொண்டாடம் , கும்மாளம் . சிறிது நேரத்திற்குப் பிறகு பொருத்திய வலது கண் முதலில் கீழே விழுகிறது ! அடுத்த சிறிது நேரத்தில் பாதிக்கப்படாத இடது கண்ணும் கீழே விழுந்து கண்ணற்ற கபோதியாகி விடுகிறான் அந்தப் போர் வீரன் !
அந்த யுத்தத்தில் பொய்யன் முஸைலமா கொல்லப்படுகிறான்

## அவயங்களின் அகமியங்கள் 4

( பீனியல் சுரப்பி- மூன்றாம் கண் - ஆன்மா தங்குமிடம் )




மூன்றாம் கண் எனப்படும் பீனியல் சுரப்பி பலராலும் பரபரப்பாக பேசப்படும் ஒரு மாயம் .இது பார்க்க சிறிய பைன் கூம்பை ஒத்திருப்பதால் பைனியல்/பீனியல் சுரப்பி எனப் பெயர் பெற்றது.இது மூளையின் நடுப்பகுதிக்கு அருகில் அமைந்துள்ளது.

மனித உடல் ஓர் அற்புத படைப்பு. அதில் ஆச்சரியப்படத்தக்க பல அம்சங்கள் பொதிந்து உள்ளன! அதில் ஒன்றுதான் நமது உடலில் நேரத்தை தானாகவே ஒழுங்கு படுத்தும் உயிரியல் நேர முறைமை (Biological Clock System)

கூம்புச் சுரப்பி அல்லது பீனியல் சுரப்பி (pineal gland) முதுகுநாணிகளின் மூளையில் இரு பெரும் பகுதிகளுக்கு இடையேயும் மூளையின் நடுப்பகுதியிலும் காணப்படும் ஓர் அரிசியின் அளவே உள்ள சிறிய சுரப்பி ஆகும். மூன்றாவது கண் எனவும் அழைக்கப்படும் இது ஐந்து முதல் எட்டு மில்லி மீட்டர் அளவே உள்ளது. இது உடல் செயல்பாட்டில் பெரும் பங்கினை வகிக்கிறது. இது செரட்டோனினின் வழிப்பொருளான தூக்கத்தினைத் தூண்டும் மெலட்டோனினைச் சுரக்கிறது.

மெலட்டோனின் தான் நம் உடலில் விழிப்பு - துயில் சுழற்சியைக் கட்டுப்படுத்துகிறது.இதனை வழி நடத்தும் ஒரு சுரப்பி நம் ஒவ்வொருவரின் தலையிலும் உள்ளது

நிலக்கடலை வடிவில் இருக்கும் இந்த PINEAL GLAND பார்வை நரம்புடன் இணைக்கப்பட்டுள்ளது. இது செய்யும் வேலைகளை பட்டியல் இட்டுக் கொண்டே போகலாம்.

ஆனால் முதலில் நாம் அறிய வேண்டியது என்னவென்றால் இந்த பினியல் சுரப்பி ஓர் அரிய பொருளை தினமும் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் சுரக்கிறது என்பது தான். அதுதான் மெலடோனின் (melatonin)

மெலடோனின் சுரக்க வேண்டும் என்றால்; ஒரே ஒரு நிபந்தனை.

இரவின் இருளாக இருக்க வேண்டும்! இரவின் இருளில்தான் பினியல் சுரப்பி மெலடோனினை சுரக்கும்!

மேலும் முடிவுறா மூலக்கூறுகளை (free radicals) எதிர்க்கவும், பெண்களின் மாதவிடாயை முறைப்படுத்தவும் துணை நிற்கிறது. இந்த சுரப்பின் செயல்பாட்டினை நிறுத்தினால் தூக்கம் கெடுவதுடன் பல திடுக்கிடும் உடல்நலக் குறைவுகளும் ஏற்படுகிறது

இப்பொழுது புரிகிறதா? நம் முன்னோர்கள் பலர் ஏன் முன்னே உறங்கி முன்னே எழும் பழக்கம் வைத்திருந்தார்கள் என

அவர்களின் வாழ்க்கைத் தரம், ஆரோக்கியம் என்பதைப் பற்றி சொல்லித் தெரிய வேண்டியதில்லை..

மேலும் அவர்கள் அரிக்கேன் லைட்டை வைத்து வாழ்ந்து இரவு படுக்கும் போது இருளில்தான் தூங்குவார்கள்.

இருளில் தூங்கும் போது பீனியல் சுரப்பியுடன் இணைக்கப்பட்டுள்ள பார்வை நரம்பு மூலமாக அது இரவின் இருளை அறிந்து கொள்ளும்!

ஒவ்வொரு நாளும் இரவு 10 மணிக்குப் பிறகு இரவின் இருளில் சுரக்கும் “மெலடோனின் “, நமது இரத்த நாளங்களில் ஆசுவாசமாக பாய்ந்தோடும். நமது கண்கள் வெளிச்சத்தில் பட்டுக் கொண்டிருந்தால் பினியல் சுரப்பி மெலடோனினை சுரக்காது!
பினியல் சுரப்பி மெலடோனினை சுரக்க ஆரம்பித்து காலை 5 மணிக்கு நிறுத்தி விடும்! இரவு நீண்ட நேரம் கண் விழித்திருந்தால், நாம் புற்று நோயைக் குணப்படுத்தும் மெலடோனின் என்ற இயற்கை மருந்தை இழந்தவர்களாக இருப்போம்!
எனவே இரவு முன்கூட்டியே உறங்கி அதிகாலையில் எழுவது புற்று நோயைத் தடுக்கும் என்றும், மற்றும் பலப்பப் நல்ல செயல்கள் செய்யும் எனவும் இயற்கை மருத்துவ உலக சித்தர்கள் நூல் கூறுகிறது!
இன்று நரம்பியல் விஞ்ஞானிகள், ஒருவரது மனநிலையையும் அனுபவத்தையும் நிர்ணயிப்பது இந்த சுரப்பிதான் என்று நிரூபித்திருக்கிறார்கள். உங்களுக்குள் போதுமான அளவு நிலையாக பினியல் சுரப்பி சுரந்தால் உங்கள் அளவில் ஆனந்தமாக இருக்க எந்த தடையும் இல்லை.
அதே போன்று; அதிகாலையில் காற்று வெளி மண்டலத்தில் ஓஸோன் நிறைந்திருக்கும்.ஒரு மனிதன் அதிகாலையில் எழுந்து நடமாட ஆரம்பித்தால்,இந்த ஓஸோன் காற்றை அவன் சுவாசிப்பான்.
இது நமது உடலிலுள்ள நோய்களைக் குணப்படுத்தி, நம் ஆயுளை அதிகரிக்கும் என்று மருத்துவ விஞ்ஞானிகள் கூறுகின்றனர்!

இரவு முன்கூட்டியே உறங்குவதால்; மெலடோனின் கிடைக்கிறது! அதிகாலையில் எழுந்து அலுவல்களைத் துவங்குவதால்; ஓஸோன் கிடைக்கிறது! நமது உடலின் ஆரோக்கியம் அனைத்தும் இவற்றில் அடங்கியிருக்கிறது.
இரவும் - அதிகாலையின் தொடக்கமான சில மணி நேரங்கள் அந்த நாளின் வெற்றி, தோல்வியைத் தீர்மானிக்கக் கூடியவையாக இருக்கின்றன! இதனால்தான் இந்த நேரத்தை "தஹ்ஜத் "என்கிற இரவு வணக்க வழிப்பாட்டிற்கு உகந்தது.
அதிகாலையில் எழும் போது; நமது மூளையும், இன்னபிற உறுப்புகளும் பூரண ஓய்வு பெற்று வேலை செய்ய தயாராக இருக்கும். அந்த நேரத்தில் செய்யும் பணிகள் அனைத்தும் திறமை மிக்கதாகவும், ஆற்றல் அழுத்தம் மிக்கதாகவும் திகழும்!
எனவே முன் எழுந்து முன் மறையும் அதிசய மெலடோனினைப் பெறவும், அதிகாலைப் பொழுதின் ஓஸோனைப் பெற்று பயனடைவோம்.
இந்த அதிசய அரிய பொருள் மெலடோனின் பலன் மகத்தானது! புற்று நோயைக் குணப்படுத்தும் இயற்கை மருந்து இந்தப் பொருளில் இருக்கிறது.
மட்டுமல்லாது நம்மை நமக்கு புரியவைத்து தன்னம்பிக்கை எனும் தைரியத்தை அளிக்கிறது என்பதுதான் இதன் வற்றாத ஆச்சரியம்
ஒரு சுரப்பி தன்னம்பிக்கை வளர்க்கிறதா ? எப்படி என்ற கோணத்தில் ஆலன் (Halen) போன்ற அறிஞர்கள், இந்த சுரப்பினை ஆய்வு செய்து , இது ஆன்மாவின் இருப்பிடம் என்றும் உங்கள் எண்ணங்கள் உருவாகும் இடம் என்று கூறுகிறார்கள்.
ஆலனின் (Halen ) ஆய்வின்படி பீனியல் சுரப்பியின் செயல்பாடுகள் நம் திருக்குர்ஆன் வசனங்களை ஞாபகப்படுத்துகிறது .

يُوْلِجُ الَّيْلَ فِى النَّهَارِ وَيُوْلِجُ النَّهَارَ فِى الَّيْلِ وَهُوَ عَلِيْمٌ بِذَاتِ الصُّدُوْرِ
அவனே, இரவைப் பகலில் புகுத்துகின்றான்; பகலை இரவில் புகுத்துகின்றான். மனதிலுள்ள எல்லா எண்ணங்களையும் அவன் நன்கறிவான். (குர்ஆன் : 57:6)
பீனியல் சுரப்பி மூளையின் நடுப்பகுதிக்கு அருகில் அமைந்துள்ளது
وَلَقَدْ خَلَقْنَا الْاِنْسَانَ وَنَعْلَمُ مَا تُوَسْوِسُ بِهٖ نَفْسُهٗ وَنَحْنُ اَقْرَبُ اِلَيْهِ مِنْ حَبْلِ الْوَرِيْدِ
நிச்சயமாக நாம்தான் மனிதனை (முதன் முதலாகவும்) படைத்தோம். அவன் மனதில் உதிக்கும் எண்ணத்தையும் நாம் அறிவோம். பிடரியிலுள்ள இரத்த நரம்பைவிட நாம் அவனுக்கு மிக சமீபமாகவே இருக்கின்றோம். (குர்ஆன் : 50:16)

## அவயங்களின் அகமியங்கள் 4

(விண்வெளியில் சுருங்கும் இதயம் )



(In Space, Astronaut Hearts Work Less, Shrink, And Become More Spherical)

அல்லாஹ் எவர்களுக்கு நேர்வழிகாட்ட நாடுகிறானோ அவருடைய நெஞ்சை இஸ்லாத்தை ஏற்றுக்கொள்வதற்காக விசாலமாக்குகின்றான்.யாரை வழிகெடுக்க நாடுகின்றானோ அவருடைய நெஞ்சை, வானத்தில் ஏறுபவனின் நெஞ்சைப்போல் இறுகிச் சுருங்கும்படிச் செய்கிறான். இவ்வாறே நம்பிக்கை கொள்ளாதவர்களுக்கு அல்லாஹ் தண்டனை ஏற்படுத்துகிறான். – குர்ஆன். 6:125.

இஸ்லாத்தை ஏற்றுக்கொள்ளாத மனிதர்களின் உள்ளமானது... எப்படி இருக்கும் என்பதற்கு உதாரணமாக, வானில் ஏறும் மனிதர்களின் உள்ளம் போன்று சுருங்கி இருக்கும் என்ற ஓர் அறிவியல் உண்மையை அல்லாஹ் கூறுகிறான்.

இந்த வசனம் இறங்கிய 1400 ஆண்டு காலகட்டத்தில்...மனிதன் வானில் ஏறுவதை கற்பனையிலும் கூட நினைத்திருக்க முடியாது. அதிக பட்சமாக.... உயரமான ஒரு மலையில் ஏறும் ஒரு மனிதனின் இதயம் ஆக்சிஜன் பற்றாக்குறையால் மூச்சு விட சிரமப்பட்டு இதயம் சுருங்குவதையே இவ்வசனம் குறிப்பதாகவே கருதப்பட்டது.

ஆயினும் இன்றைய நவீன அறிவியல் உலகம் , ஏராளமான மனிதர்களைப் பூமிக்கு வெளியில் விண்வெளிக்கும், நிலவுக்கும் அனுப்பி சாதனை செய்து வருகிறது. இப்படி விண்ணைத் தாண்டி வானில் ஏறிய விண்வெளியாளர்களின் இதயமானது... வெற்றிடம், மற்றும் ஈர்ப்பு விசை அழுத்தமின்மை காரணமாக, நீள் வட்ட அமைப்பிலிருந்து சுருங்கி வட்டவடிவமாகிறது (Heart shrink like a spherical shape) என்ற உண்மை முன்பே வெளி வந்து விட்டது.

**http://www.space.com/25452-zero-gravity-affects...**.

பூமியில் இருக்கும்போது இதயம் நீள் வட்டத்திலும் (பச்சை) விண்வெளியில் இருக்கும்போது சுருங்கி உருண்டை வடிவத்திலும் (சிவப்பு) மாறுகிறது.

இது குறித்து விரிவான ஆய்வு முடிவுகள் தற்போது வெளிவந்துள்ளது. வானில் ஏறி விண்வெளிக்குச் செல்லும் மனிதர்களின் இதயம் மட்டும் சுருங்குவதில்லை.மாறாக, இதயத்தின் தசை செல்களிலும் ஏராளமான மாற்றங்கள் நிகழ்கிறது என்பதை சமிபத்திய (JOURNAL STEM CELL REPORTS) 7-நவம்பர்.2019. “ஜர்னல் ஸ்டெம்செல் ரிப்போர்ட்” ஆய்வு இதழ் விளக்கியுள்ளது.

அமெரிக்கா ஸ்டான்போர்ட் பல்கலைக்கழக ஆய்வாளர்கள்..

எந்த ஒரு இதய நோயும் இல்லாத, ஆரோக்கியமான, மூன்று நபர்களின் இதய ஸ்டெம்செல் ரத்த மாதிரிகளை ஆய்வுக்கு எடுத்தனர்.

அந்த ரத்த மாதிரியின் ஒரு பகுதியை பூமியில் வைத்தும் மறு பாதியை ஸ்பேஸ் எக்ஸ் ராக்கெட் மூலம் விண்வெளிக்கு எடுத்துச் சென்றும் அதாவது பூமிக்கு மேலே மிதந்து வரும் சர்வதேச விண்வெளி ஆய்வு

மையத்தில் ( ISS-International Space Station.) வைத்து சோதித்தனர். புவி ஈர்ப்பு விசை இல்லா வெற்றிட சூழலில் (Microgravity) ஐந்தரை வாரங்கள் வைத்து ஆய்வு செய்தனர்.

இந்தச் சோதனையில் புவி ஈர்ப்பு விசை இல்லா வெற்றிடச் சூழலில் இதய தசை செல்கள் செயல்பாட்டில் பெரிதும் மாறுதல் நிகழ்ந்தன. குறிப்பாக இதய செல்லில் 2635 ஜீன்களின் அமைப்பு மாற்றமடைந்தது.

இந்த ஐந்து வார சோதனை முடிவில் மீண்டும் பூமிக்கு திரும்பக் கொண்டு வரப்பட்ட இதய தசை செல்களின் மாறிய அமைப்பானது… பூமிக்கு வந்த பத்து நாட்களில் மீண்டும் அதன் பழைய அமைப்புக்கு சென்று விட்டது. வானில் செல்லும் விண்வெளி வீரர்களின் இதயமானது சுருங்குகிறது. இதயத்தின் அமைப்பு சுருங்குவதன் காரணம்… அதன் தசை செல்களில் ஏற்படும் மாற்றம் என்பதை இன்றைய ஆய்வாளர்கள் கண்டுபிடித்துள்ளனர்.

இந்த இருபதாம் நூற்றாண்டு அறிவியல் உண்மைகளை ஏழாம் நூற்றாண்டில் எந்த மனிதராலும் சொல்ல முடியாது. அது படைத்த இறைவனுக்கு மட்டுமே அன்று தெரிந்த ரகசியம்.

**https://www.newscientist.com/…/2222698-spaceflight…/**

அவருடைய நெஞ்சை, வானத்தில் ஏறுபவனின் நெஞ்சைப்போல் இறுகிச் சுருங்கும்படிச் செய்கிறான். – அல்குர்ஆன்.6:125

வானில் ஏறி விண்வெளிக்குச் செல்லும் வீரர்களின் இதயத்தின் அமைப்பு சுருங்கியும்,அதன் உள் செயல்பாட்டில் பெறும் மாற்றம் ஏற்படுமென்ற உண்மையை அல்லாஹ் அன்றே அல்குர்ஆன் வசனம் மூலம் முன்னறிவித்து விட்டான். சிந்திக்கக்கூடிய மனிதர்களுக்கு இந்த ஒரு வசனமே போதுமானது… சத்தியத்தை ஏற்றுக்கொள்வதற்கு!

இந்த ஆய்வானது அறிவியல் உலகில் மிக முக்கியமான ஒன்றாகப் பார்க்கப்படுகிறது. இதுவரை வானில் ஏறிச்சென்ற மனிதன் சந்திரன் வரையே சென்றுள்ளான். அடுத்து அவனது பயணத் திட்டம் பல லட்சம் மைல்களை கடந்து செவ்வாய் கிரகத்திற்கு செல்வதாக உள்ளது. விண்ணை கடந்து செல்ல மனிதனுக்கு அறிவாற்றல் கொடுக்கப்பட்டாலும்… அவனது உடலானது அத்தகைய கடின சூழலுக்கு ஒத்துழைக்க வேண்டியது அதிமுக்கியமான ஒன்று.

மனு,ஜின் கூட்டத்தார்களே! வானங்கள்,பூமி ஆகியவற்றின் எல்லைகளைக் கடந்து செல்ல நீங்கள் சக்தி பெருவீர்களாயின் (அவ்வாறே) செல்லுங்கள். ஆனால் (வல்லமையும் நம்) அதிகாரமும் இல்லாமல் நீங்கள் கடக்க முடியாது, – அல் குர்ஆன்,55:33.

வானில் ஏறிச்செல்லும் ஆற்றல் அன்று குர்ஆன் இறக்கப்பட்ட போது மனிதனுக்கு கொடுக்கப்படவில்லை. ஆனால் இன்று அந்த அறிவியல் ஆற்றலை மனிதன் இப்போது பெற்று விட்டான்.

அப்படி ஆற்றலைப் பெற்ற மனிதன் வானில் உயரச் செல்லும்போது, அவனது உடலிலுறுப்புகளுள் இதயம் மாறுதல் அடையும் என்ற உண்மையையும் அல்லாஹ் அன்றே சொல்லி விட்டான்.

பூமியிலிருந்து 350 கி.மீ உயரத்தில் மிதக்கும் சர்வதேச விண்வெளி நிலையத்தில் வைத்து ஆய்வு செய்யும் நிலையில் இதய அமைப்பு மாறி விடுகிறது.

இதையும் தாண்டி சந்திரனில் கால் வைத்த மனிதன்… இனி 55O லட்சம் கி.மீ பயணம் செய்து செய்வாய் கிரகத்தில் இறங்க (2030 ஆம் ஆண்டு) ஆயத்தமாகிவிட்டான். இந்த வெகு தூர ஆறு மாதப் பயண காலத்தில், அவனது இதயம் எந்த நிலையில் இருக்கும் என்று எவருக்கும் தெரியாது.

மனிதன் வானில் உயரச் செல்லச் செல்ல அவனது இதயம் மாறுதல் அடையும். அந்த மாற்றத்திற்கு தகுந்தார்ப் போல் கூடுதல் தயாரிப்பு இன்றி வானத்தைக் கடக்க முடியாது என்பதை குர் ஆனும், ஹதீஸும் கூறுகிறது.

நபி (ஸல்) அவர்கள் மிஹ்ராஜ் இரவில் இஸ்ரா என்ற பூமியின் கிடைமட்டமாக பயணம் செய்து மஸ்ஜித் அக்ஸா வரை சென்று பின் அங்கிருந்து செங்குத்தாக வானில் ஏறி ' மிஹ்ராஜ் என்னும் பயணத்தை தொடர்கிறார்கள் . அல்லாஹ்வின் அழைப்பின்படி ஏழு வானத்தைக் கடந்து சென்றார்கள் நம் கற்பனைக்கும் எட்டாத கோடான கோடி மடங்கு மைல்களை கடந்து சென்றார்கள்.

இந்தப் பயணம் வெறும் கற்பனையிலோ, அல்லது கனவிலோ நடந்ததல்ல. தனது ஸ்தூல, நிஜ உடம்போடுதான் அங்கு சென்றார்கள். ஆயினும் இப்பாரிய தூரத்தை கடப்பதற்கு மனித இதயம் சக்தி பெற மாட்டாது என்பதற்காகவே நபி (ஸல்) அவர்களின் இதயம் மிஹ்ராஜ் எனும் விண்ணுலகப் பயணத்திற்காக விசேஷமாக தயார் செய்யப்பட்டது..

“நான் இறையில்லம் கஅபாவில் இரு மனிதர்களுக்கிடையே (பாதி) தூக்கமாகவும் (பாதி) விழிப்பாகவும் இருந்தபோது நுண்ணறிவாலும் இறை நம்பிக்கையாலும் நிரப்பப்பட்ட தங்கத்தட்டு ஒன்று என்னிடம் கொண்டுவரப்பட்டது. என்னுடைய நெஞ்சம் காறை எலும்பிலிருந்து அடி வயிறு வரை பிளக்கப்பட்டது. பிறகு ஸம் ஸம் நீரினால் என் வயிறு கழுவப்பட்டது. பிறகு, (என் இதயம்) நுண்ணறிவாலும் இறை நம்பிக்கையாலும் நிரப்பப்பட்டது.மேலும் கோவேறு கழுதையை விட சிறியதும் கழுதையை விடப் பெரியதுமான வெள்ளை நிறத்திலமைந்த நீளமான புராக் (மின்னல் வேக) வாகனம் கொண்டு வரப்பட்டது. நான் (அதில் ஏறி) ஜிப்ரீல் (அலை) அவர்களுடன் சென்றேன்.

நாங்கள் முதல் வானத்தை அடைந்தோம். (பிறகு) நாங்கள் ஏழாவது வானத்திற்கு சென்றோம்.... பிறகு (வான எல்லையிலுள்ள) இலந்தை மரமான “ஸித்ரத்துல் முன்தஹா” எனக்குக்காட்டப்பட்டது. ( ஹதீஸ் சுருக்கம்) – புஹாரி.3207 முஸ்லிம். 260.

அல்லாஹ்வின் மார்க்கம் சொல்லும் அத்தனை செய்திகளும் அப்பட்டமான உண்மைகள். அதில் நம் அறிவுக்கு எட்டும் செய்திகளும் இருக்கும், நம் அறிவுக்கு எட்டாத செய்திகளுமிருக்கும் இவை அனைத்தும் அல்லாஹ் ஒருவனிடமிருந்து வந்ததே என்று நம்புவதே ஈமான். என்னும் இறை விசுவாசம். “ஸித்ரதுல் முன்தஹா” என்னும் இலந்தை மரம் இருக்கும் ஏழாம் வானத்தில் நபி (ஸல்) அவர்கள் தம் கண்ணால் கண்டதை அல்லாஹ் உண்மைப்படுத்துகின்றான்.அந்த மரத்தை மூடியிருந்தவை அதனை முற்றிலும் மூடிக்கொண்டன. அதிலிருந்து அவர் பார்வை விலகவும் இல்லை; கடக்கவும் இல்லை. அவர் தன் இறைவனின் மிகப் பெறும் அத்தாட்சிகளை எல்லாம் மெய்யாகவே கண்டார். – அல்குர்ஆன். 53:16-18.

இரத்தம்,தசை,எலும்புகளால் ஆனா மனித உடல் அந்த உடலுக்கு உயிரூட்டும் இதயமானது மாபெரும் தொலை தூர பயணத்தில் சுருங்கி மாற்றமடைய நேரிடும், ஆகவே அந்த பயணத்தை தாங்கக்கூடிய சக்தியை இதயத்திற்கு கொடுப்பதற்காகத்தான் நபி (ஸல்) அவர்களின் இதயம் பிளக்கப்பட்டு அதில் நுண்ணறிவாலும் (High Intelligence Technology) இறை நம்பிக்கையாலும் (Devine Inspirations) நிரப்பப்பட்டு தயார் செய்யப்பட்டது என்பதை மேற்கண்ட ஹதீஸின் மூலம் அறிய முடிகிறது.

விண்வெளியில், இதயத்தில் ஏற்படும் மாற்றத்தை இன்றைய நவீன அறிவியலும் ஒப்புக் கொள்கிறது. அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் விண்வெளிப் பயணமும் அறிவியலின் அடிப்படையில் தான் நடந்தது. இதுவே அல்லாஹ்வின் சுன்னத்! என்றும் மாறாத ஒன்று! அல்ஹம்துலில்லாஹ்!.

உங்களுக்கு உள்ளாகவும் பல அத்தாட்சிகள் இருக்கின்றன. அவைகளை நீங்கள் ஆழ்ந்து கவனித்து பார்க்க வேண்டாமா? – அல் குர்ஆன். 51:21

எச்சரிக்கை! உடலில் ஒரு சதைத் துண்டு இருக்கிறது.அது சீர் பெற்று விட்டால் உடல் முழுவதும் சீர் பெற்று விடும்.அது சீர் குலைந்து விட்டால் முழு உடலும் சீர் குலைந்து விடும். புரிந்து கொள்ளுங்கள். அதுதான் இதயம்! என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அறிவிப்பவர்; நுமான் இப்னு பஷீர் (ரலி) நூல்: புஹாரி. 52

## அவயங்களின் அகமியங்கள் 5

ரொம்பவும் அர்ப்பணிப்பான ஓர் அடிமை கிடைத்தால் யாருக்குத்தான் பிடிக்காது ? உங்கள் உடம்பில் உள்ள அப்படி ஒரு டெடிகேட்டட் வேலைக்காரன்தான் இதயம் .
சராசரியாக 340 கிராம் எடையில் செம்பழுப்பு நிறத்தில் இருக்கும் இதயம் எந்த எதிர்பார்ப்பும் இல்லாமல் தன் வேலையை சரியாக துல்லியமாக செய்து கொண்டிருக்கிறது
நமது மார்புக்கூட்டுக்குள்ளே கொஞ்சம் இடதுபக்கமாக இதயம் அமைந்துள்ளது. தசைநார்கள் உதவியுடன் தொங்கிய நிலையில் இருந்துகொண்டு இதயம் தன் பணியை செய்து கொண்டிருக்கிறது. 15 செ.மீ நீளம், 10 செ.மீ அகலத்தில் கூர்மையான வடிவத்தில் அது இருக்கிறது.
கவிஞர்களும், காதலர்களும் எல்லா ரொமான்டிக் விஷயத்திற்கும் இதயத்தையே துணைக்கு அழைக்கிறார்கள்.

ஆனால் 2 ஆர்க்கிள், 2 வென்ட்ரிக்கிள் என 4 அறைகளைக் கொண்ட கடுமையான உழைப்பாளி இதயம். இரண்டு அறைகள் மூலம் ரத்தத்தை நுரையீரலுக்கும் மற்ற இரண்டின் மூலம் ரத்தத்தை உடம்பின் மற்ற பாங்களுக்கும் பம்ப் செய்வதே இதயத்தின் வேலை இந்த ரொமான்டிக் விஷயம் பற்றி அதற்கு எதுவும் தெரியாது.
இடைவிடாமல் தொடர்ந்து இயங்கி, ரத்தத்தை உடல் முழுவதும் பரவச் செய்கிறது. இவ்வாறு உடல் முழுவதும் பல்வேறு பகுதிகளுக்கும் தேவையான ரத்தத்தை எடுத்துச் செல்லும் பெருங்குழாய்க்கு பெருந் தமனி என்று பெயர்.
ரத்த நாளங்கள் மூலம் தினமும் 9,000 கி.மீ. தூரத்திற்கு பம்ப் செய்கிறது. உங்கள் வாழ்நாள் முழுவதும் ஏறத்தாழ 3 லட்சம் டன் ரத்தத்தை பம்ப் செய்கிறது.
சிம்பிளாகச் சொன்னால், ஓட்டப்பந்தய வீரரின் கால்களை விடவும் பளு தூக்கும் வீரரின் கைகளை விடவும் இரண்டு மடங்கு வலிமையானதாக இதயம் வேலை செய்கிறது.
உடம்பில் எந்தப் பாகத்திலும் இதயத்தைப் போல உறுதியான, கடினமான தசைகள் கிடையாது. பெண்களின் கர்ப்பப்பை மட்டும் இதற்கு விதிவிலக்கு.
ஆனாலும் குழந்தை என்ற ஒரு காரணத்திற்காக மட்டுமே இருக்கும் இந்த கர்ப்பப்பை தொடர்ந்து இதயத்தைப் போல சராசரியாக 55 ஆண்டுகள் இடைவிடாமல் உழைப்பதில்லை என்பதையும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.
இதயத்தின் உழைப்பைப் பற்றி சொன்னது கொஞ்சம் அதிகமாகத் தெரிகிறதா? இது கொஞ்சம் ஓவர்தான் என்று நினைப்பவர்கள் இதயத்திற்கு ஓய்வே இல்லையா என்றால்,இதயமும் ஓய்வு எடுக்கிறது. எப்படி ?
ஒவ்வொரு துடிப்பிற்கு நடுவிலும் இதயத்தின் இடது வென்ட்ரிக்கிள் சுருங்கி சுத்த ரத்தத்தை உடம்புக்குள் செலுத்துவதற்கு 1 விநாடியில் 10ல் 3 பங்கு நேரம் ஆகும். இப்படி ஒவ்வொரு முறை செலுத்துவதற்கு நடுவிலும் இதயத்திற்கு கால் விநாடி ரெஸ்ட். அவ்வளவுதான்.
நீங்கள் தூங்கும்போது கொஞ்சம் கூடுதலாக இதயத்தால் ரிலாக்ஸ்டாக இருந்து கொள்ள முடியும். தூங்கும்போது உங்களுடைய எந்த உறுப்பும் முழு வேகத்தில் செயல்படுவதில்லை. எனவே சாதாரணமாக வினாடிக்கு 72 முறை துடிக்கும் இதயம் இதுபோன்ற சமயங்களில் 55 முறைதான் துடிக்கிறது.
இதயத்தைப் பற்றி நிறைய உண்மைகளை சொன்ன அறிவியல் அதன் அகமியத்தைப் பற்றி ஒன்றுமே சொல்லவில்லை. ஆனால் ஆன்மிகம் தான் இதயத்தின் அகமியத்தை சொல்கிறது.சொல்றேன்.
“மனித உடலில் ஒரு சதைத்துண்டு உண்டு. அது சரியானால் மனிதன் முழுவதுமாக சரியாக இருப்பான் அது சீர்கெட்டுப் போய் விடுமானால் மனிதன் கெட்டுப்போய் விடுவான். அது தான் இதயம்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
மேலும் நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் நவின்றார்கள்: “மனிதன் ஒரு பாவம் புரிந்தால், அவன் இதயத்தில் ஓர் கரும்புள்ளி விழுந்துவிடுகிறது !
பிறகு அவன் அந்தப் பாவத்தை விட்டு விலகிவிட்டால், அந்தப் பாவத்தை உணர்ந்து, வெட்கமும் வேதனையும்பட்டு தவ்பா - பாவமன்னிப்பை நாடினால்,இறைவனின்பால் திரும்பி, ‘பாவங்களிலிருந்து தப்பி வாழ்வேன்’ என உறுதியான வாக்குறுதி அளித்தால், இறைவன் அவன் உள்ளத்தில் ஓர் ஒளியை உருவாக்குகிறான் !
எனது பாவங்களை இறைவன் மன்னிப்பான் என்ற உறுதியான நம்பிக்கையுடன் பாவமன்னிப்பு கோருங்கள். உங்களுடைய பாவங்கள் கடலின் நுரை அளவு இருந்தாலும் இறைவன் அவற்றை மன்னிப்பான்.
இது இதயத்தின் மிகப் பெரிய அகமியமல்லவா ...

## அவயங்களின் அகமியங்கள் 6

( இதயத்தின் பிரத்யேக உளவியல் சிந்தனை )




1) இதயம் விஷயங்களை உணர்ந்து சிந்திக்கின்றது.
இதயம் அஃறிணை அல்ல , உயர்திணை என்றால் உங்கள் பகுத்தறிவு ஒத்துக் கொள்ளாது. தெரியும். இருந்தாலும் இதயமும் பலதையும் உணர்வதோடு, சிந்திக்கவும் செய்கின்றது என்று சொன்னால் நீங்கள் நம்பித்தான் ஆக வேண்டும்.
கலிபோனியாவைச் சேர்ந்த இதயம் தொடர்பான துறைசார் பேராசிரியர் "ரோவ்லின் மெகார்த்தி" பின்வருமாறு குறிப்பிடுகின்றார். "இதயத்திற்கு மூளையையும் ஏனைய உடல் அவயங்களையும், ஹோர்மோன்களையும் கட்டுப்படுத்தக்கூடிய
அபரிமிதமானதும் தனித்துவமானதுமான ஒரு ஆற்றல் அதனிடம் காணப்படுகின்றது.
அதேபோன்று உடலின் பல்வேறு பகுதிகளில் இருந்தும் வருகின்ற தகவல்களை அதே வடிவில் தன்னுள் அது சேமித்து வைக்கும் தொழிலையும் இதயம் செய்கின்றது. உண்மையில் இதயம் அதனுள் ஒரு மூளையைக் கொண்டு திறம்பட செயற்படுகின்றது" என்று அவர் கூறுகின்றார்.
ஆச்சரியம் என்னவென்றால் மருத்துவ விஞ்ஞானம் இன்று, நேற்று கண்டுபிடித்த இந்த அற்புதத்தை அல்குர்ஆன் இற்றைக்கு 1432
வருடங்களுக்கு முன்பே கூறியிருப்பதுதான். பாருங்கள் அல்லாஹ் எவ்வாறு அழகாக இவ்விஷயத்தைக் கூறுகின்றான் என்று.
اَفَلَمْ يَسِيْرُوْا فِى الْاَرْضِ فَتَكُوْنَ لَهُمْ قُلُوْبٌ يَّعْقِلُوْنَ بِهَاۤ اَوْ اٰذَانٌ يَّسْمَعُوْنَ بِهَا فَاِنَّهَا لَا تَعْمَى الْاَبْصَارُ وَلٰـكِنْ تَعْمَى الْقُلُوْبُ الَّتِىْ فِى الصُّدُوْرِ
அவர்கள் பூமியில் பிரயாணம் செய்து (இவற்றைப்) பார்க்கவில்லையா? (அவ்வாறு பார்த்திருந்தால்) அவர்களுக்கு விளங்கிக் கொள்ளக்கூடிய இதயங்களும், (நல்லவற்றைச்) செவியேற்கும் காதுகளும் உண்டாகியிருக்கும், நிச்சயமாக (புறக்) கண்கள் குருடாகவில்லை; எனினும், நெஞ்சுக்குள் இருக்கும் இதயங்கள் (அகக் கண்கள்) தாம் குருடாகின்றன. (குர்ஆன் : 22:46)
2) இதயம் விஷயங்களை சேமித்தும் வைக்கின்றது.
இதயத்தில் இலட்சக்கணக்கான மரபணுக்கள் காணப்படுகின்றன. இம்மரபணுக்களுக்கு பல்வேறு தகவல்களையும் சேமித்து வைக்கும் ஆற்றல் இருப்பதாக மருத்துவ விஞ்ஞானம் விளக்குகின்றது.
இதுதொடர்பாக அரிஸோனா பல்கலைக்கழகத்தின் உளவியற் துறைப் பேராசிரியர் "ஷுவாத்ஸ்" பின்வருமாறு விளக்குகின்றார்.
"ஞாபகிப்பதும், விஷயங்களைச் சேமித்து வைப்பதும் மூளைக்கு மாத்திரம் உரித்தானதொரு விஷயமல்ல. மாறாக இதயம் கட்சிதமாகச் செய்கின்றது."
மேலும் இம்மரபணுக்கள் இதயத்திற்கு வந்துசேரும் தகவல்களைச்
சேமித்து வைத்து பின்புதான் அவற்றை மூளைக்கு அனுப்புகின்றன. அதன் பின்பே மூளை சிந்தித்து செயல்வடிவில் கொண்டுவர மனிதனைத் தூண்டுகின்றது.
இதயம், சேமித்து வைத்த தகவல்கள் அழிந்துவிடுவதில்லை.
இவை மறுமை நாள் நிகழும் வரை அப்படியே இருக்கும். மனிதன் மரணித்தாலும் கூட ஏதோ ஒரு விதத்தில் அவை பாதுகாக்கப்படுகின்றன. திருமறையில் அல்லாஹ் கூறுகின்றான்.

اَفَلَا يَعْلَمُ اِذَا بُعْثِرَ مَا فِى الْقُبُوْرِۙ
அவன் அறிந்து கொள்ளவில்லையா? மண்ணறைகளிலிருந்து, அவற்றிலிருப்பவை எழுப்பப்படும் போது- (குர்ஆன் : 100:9)
وَحُصِّلَ مَا فِى الصُّدُوْرِۙ
மேலும், இதயங்களில் உள்ளவை வெளியாக்கப்படும் போது-

(குர்ஆன் : 100:10) ஆக இதயங்களில் தகவல்களும் சேமித்தும் வைக்கப்படுகிறது

3) இதயம் மனித நடத்தைகளையும் தீர்மானிக்கின்றது.
மனிதனது நடத்தைக் கோலங்களிலும் பண்பாட்டு விழுமியங்களிலும் இதயம் பாரிய தாக்கம் செலுத்துகின்றது. உங்களது இதயத்தை சத்திர சிகிச்சை மூலம் அகற்றிவிட்டு அதற்குப் பதிலாக வேறு ஒருவரது இதயத்தைப் பொறுத்தினால், நிச்சயமாக உங்களது நடத்தையிலும், பண்பாட்டிலும், கண்ணோட்டங்களிலும் மாற்றங்கள் ஏற்படுகின்றன.

மருத்துவர்கள், இதயமாற்று சத்திர சிகிச்சைக்கு உள்ளாக்கப்பட்ட அதிகமானவர்களிடத்தில் ஆய்வு செய்தபோது பல்வேறு மாற்றங்கள் நிகழ்ந்துள்ளமையை கண்டறிந்து உறுதிசெய்கின்றனர்.
பொருத்தப்பட்ட இதயம் யாருடையதாக இருக்கிறதோ அவரது பண்புகள் காலப்போக்கில் இவரிடம் பிரதிபளிப்பதை வெளிப்படையாகவே கவனிக்க முடியும்.
அவர்களது உணர்வுகளிலும் விருப்பு, வெறுப்புகளிலும், அன்றாட
பழக்கவழக்கங்களிலும், நம்பிக்கைகளிலும் முன்பிருந்ததை விட இதய மாற்று சத்திர சிகிச்சை மேற்கொண்டதன் பின்னால் பல மாற்றங்கள் ஏற்பட்டதனை மருத்துவர்களால் கண்டுபிடிக்க முடிந்தது.
இது தொடர்பானதொரு சம்பவத்தை இங்கு குறிப்பிட முடியும்.
அமெரிக்காவைச் சேர்ந்த தொழிலதிபர் ஒருவர் இதய நோய்க்குள்ளானபோது, அதே சமயத்தில் தூக்குத் தண்டனை நிறைவேற்றப்பட்டு மரணித்த ஒரு குற்றவாளியினது இதயம் குறித்த தொழிலதிபருக்குப் பொருத்தப்பட்டது.
சத்திர சிகிச்சை செய்யப்பட்டு சில வருடங்களிலேயே இத்தொழிலதிபரிடம் முன்பைவிட பல வித்தியசாமான நடத்தைகள் வெளிப்பட ஆரம்பித்துள்ளன. சிந்தனா ரீதியாகவும் நடத்தை ரீதியாகவும், பலமோசமான, கடுமையான குணாதிசயங்கள் அவரிடத்தில் காணக்கிடைத்தன.
இறுதியில் அவர் ஒரு குற்றவாளியாகவே மாறியதையும் பலரையும் ஆச்சரியப்படவும் கவலை கொள்ளவும் செய்தது. எனவே மனிதனது இதயம் அவனது முழு உடலிலும் செல்வாக்குச் செலுத்துகின்றது.
இதயம் சீர்கெட்டுவிடும் சந்தர்ப்பத்தில் அவனது நடத்தையிலும்
பழக்கவழக்கங்களிலும், நம்பிக்கைக்களிலும் மாற்றங்கள் தோன்றுகின்ற என்பதற்கு மேற்கூறிய சம்பவம் ஒன்றே போதிய சான்றாகும்.
இவ்வுண்மையை நபி (ஸல்) அவர்களது பின்வரும் பொன்மொழி மிகத் தெளிவாக எடுத்துக் காட்டுகிறது.
நபியவர்கள் கூறினார்கள் "அறிந்துகொள்ளுங்கள் மனிதனது உடலிலே ஒரு சதைக் கட்டி இருக்கின்றது. அது சீரடைந்தால் முழு உடலும் சீர் பெற்றுவிடும். அது சீர் கெட்டுவிட்டால் முழு உடலும் சீர் கெட்டுவிடும். அறிந்துகொள்ளுங்கள் அதுதான் இதயம்" என்றார்கள். (புகாரி,முஸ்லிம்)

4) இதயம் மற்றுமொரு இதயத்துடன் உரையாடுகின்றது.
"Heart Math" என்ற தனது நூலில் டாக்கடர் Pearsall இதயங்களுக்கிடையிலான உரையாடலைப் பின்வருமாறு கூறுகின்றார். இதயம் உணர்கின்றது, ஞாபகிக்கின்றது, அத்தோடு வேறு ஒரு இதயத்தால் விளங்க முடியுமான எண்ண
அலைகளையும் அது வெளியிடுகின்றது.
இது எது போன்றது என்றால், இதயம் ஒவ்வொரு கணப்பொழுதும் உடலின் பல பாகங்களில் இருந்தும் வருகின்ற தகவல்களைப் பெற்று, அவற்றை மூளைக்கும் உடலின் இதர பகுதிகளுக்கும் மின் அலைவடிவில் கடத்துகின்றதோ அதுபோன்றதாகும்." இதனை விஞ்ஞானம் Telepathy என்கின்றது.
ஆய்வாளர்களது கண்டுபடிப்பின்படி மூளையைவிடவும் இதயத்தின் மின் அலைகள் நூறு மடங்கு பலமிக்கவை. அதேபோன்று
இதயத்தின் மின் காந்த சக்தி மூளையைவிடவும் 5000 மடங்கு பலமானதாகும் என்கின்றனர்.
இந்த மின் அலைகள் மற்றும் மின்காந்த சக்தி மூலம் இதயம் சூழவுள்ளவர்களைக் கவர்ந்து ஈர்த்து விடுகின்றது. அல்லது எண்ண அலைகளை அனுப்புகின்றது.
ஒரு மனிதர் மற்றுமொருவருடன் வாய் மூலம் போசாது இதயத்தினூடாகவும் உரையாட முடியும் என விஞ்ஞானிகள் குறிப்பிடுகின்றனர்.
உதாரணமாக சிலபோது நீங்கள் மனதுக்குள் நினைத்த ஒரு பாடலை இன்னுமொருவர் சப்தமிட்டு பாடிக்கொண்டு வருவார்.
நீங்கள் சொல்ல நினைத்த விஷயத்தை உங்கள் நண்பர் அப்படியே சொல்லி முடிப்பார்.
நீங்கள் ஒருவரைப் பார்த்து அவர் உங்களைப் பார்க்கவேண்டுமென நீங்கள் எண்ணினால், அவ் எண்ண அலைகள் அவரைச் சென்றடைந்தால், அவரும் உங்களைத் திரும்பிப் பார்ப்பார்.
இவை யாவும் உள்ளத்தின் எண்ண அலைவடிவிலான உரையாடல்களின் ஒரு வகையாகும் என்பதை நீங்கள் நம்ப வேண்டும்

**அவயங்களின் அகமியங்கள் 7**

உங்களுக்குள் ஓசையின்றி உழைக்கும் ஒரு தொழிற்சாலை – கல்லீரல்




அபூபக்கர் (ரலி) அறிவிப்பதாவது: "ஒருதடவை நபி (ஸல்) அவர்கள் உரை நிகழ்த்த மேடை மீது ஏறினார்கள்; பிறகு அழுதார்கள்; பின்பு, 'இறைவனிடம் மன்னிப்பையும், உடல் ஆரோக்கியத்தையும் வேண்டிக்கொள்ளுங்கள்; ஏனென்றால், இறை நம்பிக்கைக்குப் பிறகு, உடல் ஆரோக்கியத்தை விட சிறந்த செல்வம் எவருக்கும் கொடுக்கப்படவில்லை' என நபி (ஸல்) கூறினார்கள்" (நூல்: திர்மிதி, இப்னுமாஜா)

அப்பாஸ் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள்: "நான் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, 'அல்லாஹ்வின் தூதரே! எனக்கொரு விஷயத்தை கற்றுத் தாருங்கள்; அதைக் கொண்டு நான் இறைவனிடம் பிரார்த்திப்பேன்' என்றேன்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள் 'நீங்கள் இறைவனிடம் உடல் ஆரோக்கியத்தை வேண்டுங்கள்' என்றார்கள்.
சில நாட்கள் கடந்தன. மீண்டும் நான் நபியவர்களிடம் வந்து 'எனக்கு ஏதேனும் ஒரு விஷயத்தை அறிவித்துத் தாருங்கள்; அதை வைத்து நான் எனது இறைவனிடம் கேட்கிறேன்' என்றேன்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள் 'எனது பெரிய தந்தையே, இறைவனிடம் இரு உலகத்திலும் உடல் ஆரோக்கியத்தை கேட்டுக் கொள்ளுங்கள்' என்றார்கள். (நூல் : தப்ரானீ)

இத்தகைய நம் உடலின் ஆரோக்கியத்திற்கு பெரும் பங்காற்றுவது கல்லீரல்.
கண், காது, இதயம், வயிறு என்று உடலின் உள், வெளி உறுப்புக்களை ஏதாவது ஓரிரு சந்தர்ப்பத்திலாவது நீங்கள் நினைத்துப் பார்ப்பீர்கள். ஆனால், உடல் உறுப்புக்களிலேயே அதிக எடை கொண்ட (சுமார் ஒன்றரைக் கிலோ) வயிற்றின் வலதுபுறம் மேல் பகுதியில் விலா எலும்பின் பாதுகாப்போடு இருக்கும் யாரும் நினைத்தே பார்க்காத ஓர் உறுப்பு கல்லீரல். இதுதான் ஆரோக்கியத்திற்கு தலைவாயில்.
ஒரு நாளைக்கு உங்களால் எவ்வளவு வேலை செய்ய முடியும் ? ஆனால், கல்லீரல் சுலபமாகச் செய்யும் வேலையை ஒரு பெரிய கெமிக்கல் தொழிற்சாலை பிரம்மாண்டமான இயந்திரங்களை நிறுவினால்தான் செய்ய முடியும். நீங்கள் சாப்பிடும் உணவிலிருந்து உடலுக்குத் தேவையான வைட்டமின்களை எடுத்துக் கொடுப்பதில் துவங்கி, 36 ஆயிரம் விதமான செயல்களைச் செய்கிறது கல்லீரல் .பட்டியலிட்டால் பக்கம் போதாது. இது அத்தனையும் உங்கள் ஆரோக்கியத்திற்காக இறைவன் செய்யும் அருட்கொடை . ஆனால், கல்லீரல் வேலை செய்யாவிட்டால் உடல் ஆரோக்கியம் முழுவதும் கெட்டு இயக்கம் மொத்தமும் நின்றுவிடும்.
உடலின் வேதி மாற்றத்திற்காக தினமும் ஆயிரம் விதமான என்சைம்களை உற்பத்தி செய்கிறது. வேதி மாற்றம் என்றால் என்ன என்கிறீர்களா?

எதிர்பாராமல் உங்கள் விரலை வெட்டிக் கொள்கிறீர்கள், ரத்தம் கொட்டுகிறது. நீங்களாகவோ அல்லது டாக்டரிடமோ சென்று, முதலுதவி செய்துகொள்ள ஆகும் நேரம் முழுவதும் நிற்காமல் ரத்தம் கொட்டிக் கொண்டே இருந்தால் என்னவாகும்? நினைக்கவே பயமாக இருக்கிறதா?
கவலை வேண்டாம். கல்லீரல் இருக்கும்போது அப்படியே விட்டுவிடுமா? உடனே எதிர்மறை வேதி மாற்றத்தை உற்பத்தி செய்து ரத்தத்தை உறையச் செய்து விடுகிறது.
அதேநேரத்தில் தேவைக்கு அதிகமாக உற்பத்தியாகும் வேதிப் பொருளை யூரியாவாக மாற்றி சிறுநீரகங்கள் வழியே வெளியே அனுப்பிவிடுகிறது கல்லீரல் .
சிறுநீரகங்களின் மேல் உள்ள உங்களின் அட்ரினல் சுரப்பி உப்பு சேமிப்பு ஹார்மோன்களை (salt saving harmone) உற்பத்தி செய்கிறது. இதை இப்படியே விட்டால் கற்பனைக்கு எட்டாத அளவிற்கு உடல் வீங்கி விடும். ஆனால், கல்லீரல் அதிகப்படியான உப்பை அழித்து விடுகிறது . இதயத்திற்கும் மிகவும் பாதுகாப்பாகவே இருக்கிறது கல்லீரல் போல் நச்சுக் கொல்லியைப் பார்க்கவே முடியாது. தினமும் நீங்கள் உடம்பிற்கு கொடுக்கும் நிகோடின், காபீன், மாத்திரை, மருந்துகள் இவற்றில் உள்ள நச்சுப் பொருட்களை 10 நிமிடங்களில் வெளியேற்றி விடுகிறது . சமயங்களில் மிகச் சிறந்த ஹவுஸ் கீப்பர் ஆகவும் செயல்படுகிறது கல்லீரல் , உங்களுக்கு பிடித்தமான ஏதோ ஒரு விளையாட்டு, கிரிக்கெட் என்று வைத்துக் கொள்வோம்,

ஆடிக் கொண்டிருக்கிறீர்கள். அப்போது உங்களுக்கு நிறைய சக்தி தேவைப்படும். அதாவது, தசைகளுக்கு நிறைய குளுக்கோஸ் தேவைப்படும். உடம்பில் உள்ள குளுக்கோஸ் மெதுவாக கரைந்து கொண்டிருக்கும். அதோடு சேர்த்து தேவையில்லாத லேக்டிக் அமிலமும் வெளியேறும். இதுபோன்ற சமயங்களில் கல்லீரல் லேக்டிக் அமிலத்தை குளுக்கோசாக மாற்றி எதிர்காலத் தேவைக்குச் சேர்த்து வைத்துக் கொள்கிறது.

சாக்லேட் சாப்பிட்டால் அதில் உள்ள சர்க்கரை குளுக்கோசாக மாறி ஜீரண மண்டலத்தில் சேர்ந்துகொண்டே இருக்கும். இப்படியே குளுக்கோஸ் சேர்ந்துகொண்டே போனால் என்னவாகும்?
அதிகப்படியான சர்க்கரையை பசைபோன்ற இனைக்கோ ஜென்னாக மாற்றி, கல்லீரல் சேமித்து வைக்கிறது. பசி சமயத்தில் ரத்தத்தில் உள்ள சர்க்கரையின் அளவு குறையும்போது மீண்டும் கிளைக்கோஜென்னை குளுக்கோசாக மாற்றி ரத்த சர்க்கரையை ஈடுகட்டி விடுகிறது.
இன்னொரு விஷயம், உண்மையில் உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். ஒவ்வொரு விநாடியும் 1 கோடி ரத்தச் சிவப்பணுக்கள் அழிந்து கொண்டிருக்கின்றன. கல்லீரல் எதையும் எளிதாகத் தூக்கிப் போடுவதில்லை. புதிய செல்கள் உருவாவதற்கு அந்த பழைய செல்களையே பயன்படுத்திக் கொள்கிறது கல்லீரல் .
இன்னும் சில செல்களை கல்லீரல் தினமும் செரிமானத்திற்குத் தேவையான பச்சை, மஞ்சள் நிறப் பித்த நீர் சுரப்பிகளுக்குப் பயன்படுத்திக் கொள்கிறது .

கல்லீரல் இரண்டுவிதப் பித்தநீரைச் சுரக்கிறது. இந்த இரண்டு விதப் பித்த நீரும் அதிக அளவில் ரத்தத்தில் கலக்கும்போது மஞ்சள் காமாலை ஏற்படுகிறது. ஆனால், இதை நோய் என்று நீங்கள் நினைக்க வேண்டாம். கண்களும் தோலும் மஞ்சள் நிறமாக மாறுவது கல்லீரலில் ஏதோ தவறு இருக்கிறது என்பதை உங்களுக்குச் சொல்லத்தான்.
நேரங்களில் சில வகை மலேரியா, ரத்தசோகை ஏற்படும்பொழுது சிவப்பணுக்களை மொத்தமாக அழித்து இந்த நோய்க் கிருமிகள் அப்படியே தங்கி விடுவது கல்லீரலுக்கு பெரிய பிரச்சினையாக உள்ளது.
இதுதவிர அதிகப்படியான கொழுப்பும் கல்லீரல் வேலையைச் செய்ய விடுவதில்லை. இதுபோன்ற சந்தர்ப்பங்களில் முன்பே குறிப்பிட்டது போல் அழியும் சிவப்பணுக்களை புதிய செல்களாக மாற்ற கல்லீரலால் முடிவதில்லை.

இது எல்லாம் இருக்கட்டும். கல்லீரலின் கடமையுணர்ச்சியைச் சொன்னால் அப்படியே வியந்து போவீர்கள். நோய்க் கிருமிகள் தாக்கி கல்லீரல் செயல்பாட்டை 85 சதவீதம் முடக்கி விட்டாலும் கூட சளைக்காமல் கல்லீரல் கடமையைச் செய்து கொண்டிருக்கும்.
சமயங்களில் புற்றுநோய் தாக்கி 80 சதவீதம் கல்லீரை வெட்டி எறிந்து விடுவார்கள். அப்போதும் கல்லீரல் அசருவதில்லை. இருக்கும் 20 சதவீதத்தில் தன் வேலையைச் செய்விடுகிறது. ஒருசில மாதங்களில் பழைய நிலைக்கே வளர்ந்தும் விடுகிறது.

யாருக்கானாலும் கொழுப்பு அப்படியே தேங்கி விடுவது மோசமான விஷயம்தான். கல்லீரலில் தேங்கும் அதிகப்படியான கொழுப்பு கல்லீரல் நிறத்தை மஞ்சளாக மாற்றி விடுகிறது. கல்லீரலின் உருவத்தையும் மாற்றும் அபாயம் உண்டு. இந்த நிலைக்கு சிரோசிஸ் என்று பெயர்.
இதைப் போன்ற மோசமான செய்தி உலகத்தில் எதுவும் இல்லை. சிரோசிஸ் நிலைக்கு கல்லீரல் எப்படித் தள்ளப்படுகிறது ? பல காரணங்கள் இருந்தாலும் 2 காரணங்கள் பொதுவானவை. ஒன்று சமச்சீரற்ற, சத்து இல்லாத உணவுப் பழக்கம். அடுத்து மது குடிப்பழக்கம். இதைத்தவிர கல்லீரல் மீது கொழுப்பு சேர்வதற்கு புதிதாகக் காரணங்களை நீங்கள் தேட வேண்டாம். அப்புறம் சிரோசிஸ்தான்.
இதுதவிர ஹெபாடைடில் பாதிப்பு இருந்தாலும் உடனடியாக நல்ல டாக்டரைப் பார்த்து சிகிச்சை எடுத்துக் கொள்ளுங்கள். சரியான சிகிச்சை கிடைத்தால் அடுத்த 45 நிமிடத்தில் கல்லீரல்.சரியாகி விடுகிறது. .
நீங்கள் எப்போதும் சந்தோஷமாக இருக்க வேண்டும் என்பதே கல்லீரலும் விரும்புகிறது. அதற்குச் சீரான உடல் எடையைப் பராமரியுங்கள். கொழுப்பு உணவைத் தவிருங்கள். வைட்டமின் பி தவறாமல் சேர்த்துக் கொள்ளுங்கள். மது வகைகளை அறவே குடிக்காவிட்டால் மகிழ்ச்சி.
லேசாக கல்லீரல் மீது அக்கறை காட்டினாலே போதும்... எந்த எதிர்பார்ப்பும் இல்லாமல் உங்களுக்காக உழைக்க தயாராக இருக்கிறது.

இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்'
மனிதர்களில் அதிகமானோர் இரண்டு அருட் செல்வங்களின் விஷயத்தில் (ஏமாற்றப்பட்டு) இழப்புக்குள்ளாகி விடுகின்றனர். 1. ஆரோக்கியம். 2. ஓய்வு என இப்னு அப்பாஸ் (ரலி) அறிவித்தார். ஸஹீஹ் புகாரி : 6412.
கல்லீரல் இறைவனின் அரும்பெரும் அருட்கொடை. இது உங்களின் ஆரோக்கியத்தின் மொத்த அடையாளம்.

**அவயங்களின் அகமியங்கள் 8**
மூளை : "உங்களுக்குள்ளே நீங்கள் அறியாத ஓர் அற்புதம் "




நபி தாவூத் (அலை) அவர்களிடம் இரு மனிதர்கள் வந்தனர் . ஒருவர் விவசாயி. மற்றவர் ஆட்டு மந்தைக்காரர் "இவரின் ஆடுகள் இரவில் என்னுடைய நிலத்தில் புகுந்து விளைந்தவற்றை எல்லாம் மேய்ந்து அதை அழித்துவிட்டது" என்றார் விவசாயி .
அவ்வாறு நடந்தது உண்மைதான் எனத் தெரிந்த தாவூத் நபி ,
"ஆடுகளை அவற்றிற்கு உரியவர் , விவசாயிடம் அப்படியே ஒப்படைத்து விட வேண்டும் " என்று தீர்ப்பு கூறிவிட்டார்கள் .
வாதி , பிரதிவாதி இருவரும் வெளியே வந்தனர். அங்கு நின்று கொண்டிருந்த தாவூத் நபியின் மகனார் 17 வயதான சுலைமான் (அலை) அவர்கள் அவ்விருவரையும் நோக்கி, "என்ன தீர்ப்பு வழங்கப்பட்டது ? " என்று கேட்டார்கள் .

அவர்கள் தீர்ப்பு விவரத்தைச் சொன்னார்கள் .
அதற்கு நபி சுலைமான் (அலை) அவர்கள் :"நான் நீதிபதியாக இருந்தால், இவ்வாறில்லாமல் இரு தரப்பினருக்கும் இலகுவான வகையில் வேறு வகையாகத் தீர்ப்பு வழங்கியிருப்பேன் " என்றார்கள்
இது தகப்பனார் தாவூத் நபிக்கு தெரிந்தது. அவர்கள் மகனையும், வாதி, பிரதிவாதியும் அழைத்து மகனிடம்,"அத்தகைய தீர்ப்பு என்ன ?"
"ஆடுகள் வேளாண்மையை அழித்துவிட்டதால், ஆட்டுக்கு சொந்தக்காரன் , அந்த வேளாண் பூமியில் விவசாயம் செய்து ஆடுகள் மேய்வதற்கு முன்னர் அவ்விவசாயம் எப்படியிருந்ததோ, அந்நிலைக்கு வந்ததும் அப்படியே அதை திருப்பி வேளாண்மைக் காரனிடம் ஒப்படைக்க வேண்டும் .
அதுவரையில் பயிரை அழித்த ஆடுகளை வேளாண்மைக்காரன் வைத்து வளர்த்துக் கொண்டு அவற்றின் பாலையும் , குட்டிகளை ஈன்றால், அவற்றையும் உபயோகித்து கொள்ளலாம்.விவசாய நிலம் திருப்பி பெறப்பட்டதும் ஆடுகளை திரும்ப கொடுத்து விட வேண்டும் .இது என்னுடைய தீர்ப்பாகும் " என்று சுலைமான் நபி கூறினார்கள் .

விவசாயம் பாதித்ததால் , ஆடுகளையே கொடுத்து விட வேண்டும் என்பது தாவூது நபியின் தீர்ப்பு. இதுவும் ஒரு மூளை சிந்தித்ததுதான்.
ஆனால் சுலைமான் நபியின் தீர்ப்பு : ஒரு விவசாயத்தின் பலன்தான் நஷ்டமடைந்திருக்கிறதே தவிர, அந்த பூமியே நஷ்டமடைந்து விடவில்லை. அதனால் ஆடுகளின் பயனைத்தான் விவசாயி அனுபவிக்க வேண்டுமே தவிர, மொத்த ஆடுகளையும் தனக்குச் சொந்தமாக்கிக் கொள்ளக் கூடாது.சரி தானே ? இதுவும் ஒரு மூளைதான் மாற்றி யோசித்தது.
இந்த தீர்ப்பை தாவூத் நபியும், வாதியும் , பிரதிவாதியும் மனதார ஏற்றுக் கொண்டார்கள் .

وَدَاوٗدَ وَسُلَيْمٰنَ اِذْ يَحْكُمٰنِ فِى الْحَـرْثِ اِذْ نَفَشَتْ فِيْهِ غَنَمُ الْقَوْمِ وَكُنَّا لِحُكْمِهِمْ شٰهِدِيْنَ ۙ
தாவூதையும் ஸுலைமானையும் (நபியாக அனுப்பி வைத்தோம்.) ஒருவருடைய ஆடுகள் மற்றொருவரின் பயிரை மேய்ந்துவிட்டது பற்றி (தாவூத், சுலைமான் ஆகிய) இருவரும் தீர்ப்புக் கூற இருந்த சமயத்தில் அவர்களுடைய தீர்ப்பை நாம் (கவனித்துப்) பார்த்துக் கொண்டிருந்தோம். (குர்ஆன் : 21:78)
...இந்த மாதிரியெல்லாம் சிந்தித்து நற்பலனை அத்தருணத்தில் உடனே தருவது மனித மூளை. மூளையைப் பற்றி இதுவரை யாராலும் முழுமையாகத் தெரிந்துகொள்ள முடியவில்லை. கடந்த 40 ஆயிரம் ஆண்டுகளாக இப்படியேதான் மூளை இருக்கிறது.

புரியாத தெரியாத ஒன்று எப்போதும் அதிசயம்தானே? உங்கள் தலைக்குள்ளேயே ஓர் அதிசயத்தை வைத்துக்கொண்டு இந்த பிரபஞ்சத்தில் பல அதிசயங்களை தினந்தினம் பார்த்து ஆச்சரியப்படுகிறீர்கள். அதுவும் இந்த மூளையைக் கொண்டுதான்
பழுப்பு வெள்ளைக் கலரில் ஒண்ணரைக் கிலோ எடையுடன் பெரிய காளான் சைசில் 3 ஆயிரம் கோடி நியூரான்கள் அதைவிட 10 மடங்கு அதிக செல்களால் ஆனதுதான் மூளை.
இது இதயம், இது கல்லீரல், இது கண் என்று சொல்லி உங்கள் உடல் உறுப்புக்களை சொல்லலாம் ஆனால் மூளையை அப்படிச் சொல்ல முடியாது. புரியவில்லையா ? நீங்களும் மூளையும் வேறு வேறு இல்லை. ஒருவர்தான். உங்களின் ஆளுமை திறன், உணர்வுகள், சுவை ஆசை எல்லாமே மூளைதான். அது நீங்கள்தான் .
ஒன்று மட்டும் விஞ்ஞான உலகம் கண்டு உள்ளது.அதுதான் உடலுக்குள் நிகழும் அத்தனை காரியங்களும் மிகத் துல்லியமாக திட்டமிட்டபடி ஒரு கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு மிகத் தெளிவாக செயல்பட்டுக் கொண்டே இருக்கிறது.
"வானத்திலிருந்து பூமி வரையிலுள்ள காரியத்தை அவனே ஒழுங்குப்படுத்துகிறான்." குர்ஆன் ( 32: 05 ) என்ற வசனம் நம் உடலையும் சேர்த்துதான் .
மனிதன் உருவத்தில் சிறியவனாக இருக்கலாம். ஆனால் சிறப்பை வைத்து பார்க்கும்போது, படைப்பில் அணுவுக்கும்,நட்சத்திரத்திற்கும் இடைப்பட்ட நிலையில் அவன் இருப்பதாகவே கருத வேண்டும் .
ஏனெனில் நம்முடைய உடலில் உள்ள செல்களும், திசுக்களும் ஒருங்கிணைந்து வேலை செய்கின்ற விதமும் நாம் நினைவு உணர்வு உடலைத் தாண்டிய காலவெளியில் வைத்துள்ள அதன் தொடர்பும் படைப்பில் உன்னதமான நிலையை நாம் அடைந்திருப்பது தெளிவுபடுத்துகின்றன

ءَاَنْتُمْ اَشَدُّ خَلْقًا اَمِ السَّمَآءُ بَنٰىهَا.
(மனிதர்களே!) நீங்கள் பலமான படைப்பா? அல்லது வானமா? அவன்தான் அவ்வானத்தைப் படைத்தான்.(அல்குர்ஆன் : 79:27)
இன்னொரு முறை யாரைப் பார்த்தும் 'மூளை இருக்கா?' "அறிவு இருக்கா ? என்று கேட்காதீர்கள். அது இல்லாவிட்டால் உயிரினமே இல்லை. உங்கள் முன் நின்று பேசிக்கொண்டிருக்க மாட்டார்கள்.
மூளையைப் பயன்படுத்தும் விதத்தில்தான் நீங்கள் புத்திசாலியாகவும் அவர்கள் மந்தமாகவும் இருக்கிறார்கள். உங்களுக்கும் அவர்களுக்கும் பசிக்கும்போது சாப்பிடச் சொல்வதில் தொடங்கி, உடம்பிற்கு முடியாவிட்டால் டாக்டரைப் பார்க்கச் சொல்வது வரை தேவையான அனைத்தையும் செய்யச்சொல்லி அவர்களுக்கு உத்தரவு விடுவது மூளை. உங்கள் உடம்பில் உள்ள உறுப்புகள் எதுவும் மூளை சொல்லாமல் தானாக எதையும் செய்யாது. அட , நீங்கள் தூங்கும்போது கூட மூளை உங்களைச் சுற்றி என்ன நடக்கிறது என்று கவனமாகப் பார்த்துக் கொண்டே தான் இருக்கிறது. ஆனால், நான் நிம்மதியாக தூங்குகிறேனே எதுவும் எனக்குத் தெரிவதில்லையே என்று நம்பாமல் பார்க்காதீர்கள். எது முக்கியம், எதை உங்களிடம் சொல்ல வேண்டும் என்பது மூளைக்குத் தெரியும். எப்படி இப்படியெல்லாம் மூளை சமாளிக்கிறது என்று ஆச்சரியமாக இருக்கிறதா? மூளையே ஓர் ஆச்சரியம்தானே.

மனிதகுலம் தோன்றிய நாளில் இருந்து இதுவரை மூளை முழுமையாக யாராலும் தெரிந்துகொள்ள முடியவில்லை. உங்கள் பாஷையில் சொல்வதானால் கடற்கரை தெரியும், கடல் தெரியும்... கடலுக்கு உள்ளே என்ன இருக்கிறது என்று முழுமையாகத் தெரியாது. அது போலத்தான் மூளை. இதில் கனவு என்பது மூளையின் மற்றொர் அதிசயம்
மூளை முழுமையாகத் தெரிந்து கொள்ள முடியாத கடல் என்றாலும் உண்மைகளைத் தெரிந்து கொள்ளத் தொடர்ந்து ஆராய்ச்சி நடந்துகொண்டுதான் இருக்கிறது .பல சுவாரஸ்யமான தகவல்களை சொல்லிக்கொண்டே இருக்கிறார்கள்.

அதில் ஒன்று, உங்கள் உடலில் எந்த இடத்தில் வலி வந்தாலும் அதைச் சொல்வது என்னவோ மூளைதான் ஆனால், அதே மூளையைத் துண்டாக வெட்டினால் கூட மூளைக்கு வலியே தெரியாது.
அதுபோல, மூளையின் ஒரு பகுதியில் மின் அதிர்வை ஏற்படுத்தினால் 3-வது வகுப்பில் நீங்கள் படித்து,மறந்துபோன ரைம்ஸ் நினைவுக்கு வரலாம். மூளையின் இன்னொரு பகுதியில் மின் அதிர்வு கொடுத்தால் சட்டென்று ஞாபகத்திற்கு வராத பான்ஸ் பவுடர் டீச்சர் பெயர் ஞாபகத்திற்கு வரலாம்.
மூளை உங்கள் உடலின் மற்ற உறுப்புகளைப் போல் அல்ல ; உங்கள் முழு வாழ்க்கையின் நினைவுகளைத் தேக்கி வைத்திருக்கும் ஒரு புராதன பொக்கிஷ அறை. அந்த அறையில் என்னவெல்லாம். உள்ளன என்று உங்களுக்குத் தெரியாது. ஆனால் பொக்கிஷம் என்று மட்டும் தெரிந்துகொள்ளுங்கள்.
எப்போதும் சந்தோஷமாக இருக்க வேண்டும் என்பதுதானே எல்லோரின் விருப்பம். ஓர் எலியை வைத்து சோதனை நடத்தினார்கள். காதுகளுக்கு மேல்புறம் உள்ள ஹைப்போதலாமஸ்தான் சந்தோஷ மையம், மின் அதிர்வின் மூலம் அந்தப் பகுதி இணைக்கப்பட்டு அடிக்கடி தூண்டப்பட்டது. உடனே எலியின் சந்தோஷத்திற்கு அளவே இல்லை. மின் அதிர்வைத் தூண்டும் இணைப்பை எலியின் ஹைப்போதலாமசில் நிரந்தரமாகப் பொருத்தி விட்டார்கள்.
திரும்பத் திரும்ப அதைத் தூண்டிக்கொண்டே இருந்தார்கள். சாப்பாடு, தூக்கம் என்று அனைத்தையும் மறந்து சந்தோஷமாகவே இருந்து எலி செத்துப் போய்விட்டது !

எப்போதும் மன அழுத்தத்திலேயே நீங்கள் இருந்தால் கூட ஹைப்போதலாமசில் ஒரு சின்ன மின்அதிர்வை ஏற்படுத்தி உங்களை மகிழ்ச்சியாக்கலாம்.
பொதுவாக மூளை எப்படி இருக்கிறது என்று தெரிய, தோட்டத்தில் வேருடன் ஒரு செடியைப் பிடுங்கி அதன் வேர்களை உற்றுப் பாருங்கள். எப்படி இருக்கிறது? உங்கள் கற்பனையை விரிவுபடுத்துங்கள்.
ஒரு செடியில் 3 ஆயிரம் கோடி வேர்கள் ஒரே இடத்தில் இருந்தால் எப்படி இருக்கும் ? அத்தனை ஆயிரம் கோடி வேர்களும் 60 ஆயிரம் முறை ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்து இருப்பதைப்போல இருக்கும் மூளையின் வெளிப்புறத் தோற்றம்.

மூளையினுள்ளே எல்லாப் பகுதியிலும் சிலந்தி வலை பின்னியதுபோல நியூரான்கள் உள்ளன. இந்த நியூரான்கள் மூலமே எல்லா தகவல்களும் பரிமாறப்படுகின்றன. எந்தச் சூழலிலும் ஒரு நியூரான் மற்றதைத் தொந்தரவு செய்யாமல் மணிக்கு 340 கி.மீ. வேகத்தில் தகவலைப் பரிமாறிக் கொள்கிறது.
இத்தனை அதிசயமான மூளை , ஒன்றைச் செய்வதற்கு மட்டும் இதுவரை கற்றுக்கொள்ளவில்லை. ரத்தத்தில் உள்ள செல்கள், கல்லீரல், திசுக்கள், தோல் போன்ற மற்ற உறுப்புகள் தங்களின் செல்கள், திசுக்களில் பாதிப்பு ஏற்பட்டால் புதுப்பித்துக் கொள்ளும் அல்லது புதிதாக உருவாக்கிக் கொள்ளும்.
ஆனால், மூளையில் ஒரு செல் அழித்தால் அழித்ததுதான். வயதாக வயதாக மூளையிடம் உள்ள கோடிக்கணக்கான செல்களில் தினமும் ஆயிரம் செல்கள் வீதம் அழிந்து விடுகின்றன. அதனால், நீங்கள் பயப்பட வேண்டாம் அழிகின்ற செல்கள் குறித்து மற்ற செல்களுக்குத் தெரியாது என்பதோடு வயதான காலத்தில் சில சுவைகள் தெரியாது.

கண் பார்வை மங்கும். காது அவ்வளவாக கேட்காது.டெலிபோன் எண்கள் மறந்துவிடும். சம்பவங்கள் நினைவுக்கு வராது. வயதானால் வரும் பிரச்சினை என்று ஏற்கெனவே மனதளவில் நீங்கள் தயாராகி விட்டால் எந்தப் பாதிப்பும் இல்லை. ஆனால், வாழ்க்கைக்குத் தேவையான அவசியமான விஷயங்களை எல்லாம் கடைசி வரை பொறுப்பாக நினைவில் வைத்திருக்கும்.
மூளை ஒன்றுதான் என்றாலும் அதன் செயல்கள் இரண்டாக இருக்கும். உடம்பின் வலது பக்கச் செயல்பாடுகள் மூளையின் இடதுபக்கமும், உடலின் இடது பக்கச் செயல்பாடுகள் மூளையின் வலது பக்கமும் கட்டுப்படுத்தப்படுகிறது. இடது கைப் பழக்கம் உள்ளவர்களுக்கு மூளை வலது பகுதி கூடுதல் ஆளுமையுடன் இருக்கும்.

மூளையின் இன்னொரு ஆச்சரியம் நினைவுகள். நீங்கள் சின்ன வயதில் காஷ்மீரில் பார்த்த ஆப்பிள் தோட்டமாகட்டும், என்றோ தற்செயலாகக் கேட்ட இசையாகட்டும் ஒவ்வொன்றையும் ஒவ்வொரு இடத்தில் பத்திரமாகப் பதிய வைத்துக் கொள்கிறது. மூளையில் ஏதாவது ஒரு பகுதியில் பிரச்சினை என்றால், அந்தப் பகுதி செய்யும் வேலையை, அதில் பதிந்துள்ள நினைவுகளை வேறு பகுதியை வைத்துச் சமாளித்துக் கொள்கிறது.
மூளைக்கு 3 விஷயங்களைப் பிடிக்காது. முதலாவது மூளையின் ரத்தக் குழாய்களில் ஏற்படும் அடைப்பு, மூளையில் ஏற்படும் கட்டி, அப்புறம் தலையில் அடிபடுவதால் மூளைக்கு ஏற்படும் பாதிப்பு..
கட்டி என்றால் நல்ல டாக்டரைப் பார்த்து அகற்றி விட்டால் உடனே வழக்கம்போல சரியாகிவிடும் .கட்டியின் தன்மை என்ன, எந்த உறுப்பை கட்டுப்படுத்தும் இடத்தில் மூளையின் கட்டி உள்ளது என்பதைப் பொருத்தே ரிசல்ட் இருக்கும்.

அடைப்பு ஏற்பட்டால் ஸ்ட்ரோக் பக்கவாதம் வரும். இதற்கு மறுவாழ்வு ஒன்றுதான் வழி. அதிலும் முழுமையாக ரிலீப் கிடைக்குமா என்று தெரியாது. மூளை ஒரு புரியாத புதிர் என்பதால் முடிந்த அளவு தலையில் அடிபடாமல் பத்திரமாக பார்த்துக்கொள்வதே நல்லது.
உடல் உறுப்புக்கள் எதில் அடிபட்டாலும் உடனே வீங்கி, அடிபட்ட இடத்தில் பாதிப்பு உள்ளது என்று கண்கூடாகத் தெரியும். ஆனால் மூளை தலைக்குள்ளே ஒளிந்து இருப்பதால் மூளையால் முழுமையாக வீக்கத்தைக் காட்டவும் முடியாது. இதனால் திரும்பத் திரும்ப சொல்வது தலையில் அடிபட்டு முழுமையாகப் பாதிப்பு ஏற்பட்டு மூளை செயலிழந்து விட்டால் ஒன்றும் செய்ய முடியாது.
இதனால் தேவைப்படுபவர்களுக்கு அடிபட்டவரின் உடல் உறுப்புக்களைத் தானம் செய்து அமைதியாகி விடுவதைத் தவிர வேறு எதுவும் செய்ய முடியாது.
சாலை விபத்துக்கள் அதிகம் உள்ள நாட்டில் வசிக்கிறோம். இதில், பெரும்பாலானவர்கள் தலையில் அடி படுவதாலேயே உயிரிழக்கிறார்கள். பாதுகாப்புக் கவசம் இல்லாமல் வண்டியில் போகக்கூடாது என்பதை உறுதிமொழியாக எடுத்துக் கொள்ளுங்கள். வல்ல ரஹ்மான் நம்மை பாதுகாக்கட்டும் .

## அவயங்களின் அகமியங்கள் 9

( நுரையீரல் - உங்களுக்குள்ளே காற்றுப் பரிமாற்றத்தால் ரத்தச் சுத்திகரிப்பு )




மனித குலம் முதல் சுவாசத்தை எப்போது சுவாசித்தது ? சொல்றேன்.
முதல் மனிதர் நம் பாவா ஆதம் (அலை) அவர்களை படைக்கும் போது ,இறைவன் மண்ணுருவியின் தலையில் தன் ஆவியை ஊதினான் என்றும் அதன் தொப்பூழில் ஊதினான் என்றும் இரு விதமாகக் கூறப்படுகிறது ."நான் என் ரூஹிலிருந்து அவரில் ஊதினேன்" என்றே இறைவன் கூறுகிறான்.
அது தலையிலே நுழைந்தது. என்ன வியப்பு ! அது உடனே சதையும் எலும்புமாக ஆகிவிட்டது. பின்னர் அது நெற்றி, செவி, நாவு ஆகியவற்றிற்கு வந்து பின்னர் உடலிற்குள் புகுந்து, முதுகு வழியாக இடுப்புக்கு வந்தது. அதற்கு மேல் செல்ல வழியில்லாது மீண்டும் மேலே வந்து கண்களிலே இறங்கியது. அவ்வளவுதான். கண்கள் ஒளி பெற்றன. அதன் பின் மூக்கில் இறங்கியது. ஆதம் (அலை) அவர்கள் தும்மினர்கள். அப்பொழுது இறைவன் ஜிப்ரீலை நோக்கி, "ஜிப்ரீலே ..! அந்தத் தும்மலைப் பிடித்து வைத்துக் கொள்ளும் ! நான் அதைக் கொண்டு என் நல்லடியார் ஈஸாவைப் படைக்க விரும்புகிறேன்" என்று கூறினான்.
ஆதம் (அலை) தும்மும் போது "அல்ஹம்துலில்லாஹ் ! "எல்லாப் புகழும் இறைவனுக்கே " என்று கூறியதும் , "ஆதமே ! உம் மீது என் அருள்பொழியட்டும் ! " இதற்காகவே நாம் உம்மைப் படைத்தோம் " என்று கூறினான்.
ஆதமின் தும்மலிருந்த பிடித்து வைத்த ரூஹைக் கொண்டு ஈஸா (அலை ) அவர்களைப் படைக்கும் போது அவருடைய தாயிடம் ஊதப்பட்டதாக குர் ஆனில் அல்லாஹ் ..

وَالَّتِىۡۤ اَحۡصَنَتۡ فَرۡجَهَا فَنَفَخۡنَا فِيۡهَا مِنۡ رُّوۡحِنَا وَ جَعَلۡنٰهَا وَابۡنَهَاۤ اٰيَةً لِّـلۡعٰلَمِيۡنَ

தன் கற்பைக் காத்துக்கொண்ட (மர்யம் என்ப)வரை(யும் நீங்கள் ஞாபகமூட்டுங்கள். நம்முடைய தூதர்) ஜிப்ரீல் மூலம் அவருடைய கர்ப்பத்தில் நாம் ஊதினோம். அவரையும் அவருடைய மகனையும் உலகத்தாருக்கு ஓர் அத்தாட்சியாகவும் ஆக்கினோம்.
(குர்ஆன் : 21:91)

உயிரின் சுவாசமே ரூஹ்தான். இந்த சுவாசத்திற்கென்று இறைவனின் பிரத்யேக தயாரிப்புதான் நுரையீரல்.
நம் மார்புக்குள் வலது பக்கம் ஒன்றும் இடது பக்கம் ஒன்றுமாக இரண்டு நுரையீரல்கள் இருக்கின்றன. நுரையீரல் கூம்பு வடிவம் கொண்டது; 'புளூரா' எனும் இரட்டைச் சுவரால் மூடப்பட்டுள்ளது. இதன் கூர்முனை மார்பின் மேல் பகுதியில் இருக்கிறது; அகலமான அடிப்பகுதி உதரவிதானத்தில் அமர்ந்திருக்கிறது. தொட்டால் பஞ்சுபோல் மெத்தென்று இருக்கிறது. வெளிர் சிவப்பு நிறத்தில் உள்ளது.

நுரையீரலின் தொடக்கம் காற்றுக்குழாய் (Trachea). இது மார்புக்குள் வந்ததும், வலது மூச்சுக் குழாய், இடது மூச்சுக் குழாய் எனப் பிரிந்து, முறையே வலது, இடது நுரையீரல்களுக்குள் நுழைகிறது.
மரத்தின் பெரிய கிளையிலிருந்து சிறு சிறு கிளைகள் பிரிவதுபோல், மூச்சுக் குழாயிலிருந்து 23 மூச்சுச் சிறுகுழல்கள் (Bronchioles) பிரிந்து நுண்குழல்களாகின்றன.

இவற்றின் முனைகளில் சிறிய காற்றுப் பைகள் (Air sacs) தொங்குகின்றன. இவற்றின் சுவர்கள் மிகவும் மெல்லியவை. எல்லாச் சுவர்களையும் விரித்தால், டென்னிஸ் மைதானத்தில் பாதி அளவு இருக்கும்!
ஒவ்வொரு காற்றுப் பையிலும் 20 வீதம் மொத்தம் 30 கோடி காற்றுக் கிடங்குகள் (Alveoli) உள்ளன. மூச்சுக் காற்றுக் குழாயில் நுழைந்து மூச்சுக் குழாய், மூச்சுச் சிறுகுழல்கள் வழியாகக் காற்றுப் பைகளுக்கு வருகிறது. இங்குதான் நுரையீரல் செய்யும் அற்புதப் பணியான 'காற்றுப் பரிமாற்றம்' நடைபெறுகிறது.
இதயத்தின் வலது வென்ட்ரிகிளிலிருந்து நுரையீரல் தமனி வழியாக நுரையீரலுக்கு ரத்தம் வருகிறது. நுரையீரல் தமனியும் பல கிளைகளாகப் பிரிந்து, காற்றுப் பைகளை அடையும்போது, மிகச் சிறிய தந்துகிக் குழாய்களாக

(Capillaries) மாறிவிடுகிறது. இவற்றின் சுவர்களும் மெல்லியவை. காற்றுப்பைச் சுவரும் தந்துகிச் சுவரும் நெருக்கமாக ஒட்டிக்கொண்டிருப்பதால், 'ஊடுபரவல்' (Diffusion) முறையில் 'காற்றுப் பரிமாற்றம்' நிகழ்கிறது. காற்றுக் கிடங்குகளில் உள்ள காற்றில் ஆக்ஸிஜன் மிகுந்திருக்கும். தந்துகிகளில் இருக்கும் ரத்தம் கார்பன் டை ஆக்ஸைடு மிகுந்த அசுத்த ரத்தமாக இருக்கும். காற்றுப் பையில் அடர்த்தியாக இருக்கும் ஆக்ஸிஜன் தந்துகிக்குப் பாயும். தந்துகியில் அடர்த்தியாக இருக்கும் கார்பன் டை ஆக்ஸைடு காற்றுப் பைக்குப் பாயும். இதுதான் 'காற்றுப் பரிமாற்றம்'. இதன் பலனால், அசுத்த ரத்தம் சுத்தமாகிறது. எனவே, இதை 'ரத்தச் சுத்திகரிப்பு' என்கிறோம்.

இப்படிச் சுத்தமான ரத்தம் நுரையீரல் சிரைகள் வழியாக இதயத்துக்குச் சென்று, அங்கிருந்து மகாதமனி வழியாக உடலின் பல பகுதிகளுக்கும் செல்கிறது. அப்போது, செல்களுக்குத் தேவையான ஆக்ஸிஜனைக் கொடுத்துவிட்டு, பதிலுக்கு அங்குள்ள கழிவுப்பொருளான கார்பன் டை ஆக்ஸைடைப் பெற்றுக் கொள்கிறது. இப்படி அசுத்தமான ரத்தம் சிரைக்குழாய்கள் வழியாக இதயத்துக்கும், அங்கிருந்து நுரையீரல் தமனி வழியாக நுரையீரலுக்கும் வந்து மறுபடியும் சுத்தமாகிறது. இப்படி ரத்தம் சுத்தமாவதற்கும் செல்களின் கழிவுகளை வெளியேற்றுவதற்கும் நுரையீரலில் 'காற்றுப் பரிமாற்றம்' நிகழ வேண்டியது அவசியமாகிறது.
ஒருமுறை காற்றுப் பரிமாற்றம் நிகழ முக்கால் விநாடி ஆகிறது. மூச்சுக் காற்று நுரையீரலுக்குள் நுழைய 'சுவாசம்' எனும் செயல்பாடு நிகழ வேண்டும். பின்மூளையும் முகுளமும் இதைச் செயல்படுத்துகின்றன. சுவாசத்துக்கு மார்புக் கூட்டில் உள்ள விலாத் தசைகளும் உதரவிதானமும் உதவுகின்றன. சுவாசத்தில் உட்சுவாசம், வெளி சுவாசம் என இருவகை உண்டு.

சாதாரணமாக, உதரவிதானம் பலூன் மாதிரி மேலே எழும்பியிருக்கும். மூச்சை உள்ளிழுக்கும்போது, இது சுருங்கித் தட்டையாகிவிடும். அதேவேளையில் விலாத் தசைகளும் சுருங்கும். இவற்றின் பலனால், மார்புக் கூடு விரிந்து மேலெழும்பும். அப்போது நுரையீரலுக்குள் கொள்ளளவு அதிகரித்து, காற்றின் அழுத்தம் குறையும். எனவே, அழுத்தம் அதிகமாக இருக்கிற வளிமண்டலக் காற்று மூக்கு வழியாக நுரையீரலுக்குள் நுழையும். இதுதான் உட்சுவாசம்.

அடுத்த கட்டமாக, விலாத் தசைகள் விரியும். மார்புக் கூடு பழைய நிலைக்குத் திரும்பும். உதரவிதானம் மேலெழும்பும். இதனால் நுரையீரல் அழுத்தம் அதிகமாகும். அப்போது நுரையீரலிலிருந்து கார்பன் டை ஆக்ஸைடு மிகுந்த காற்று வெளியேறும். இதுதான் வெளிசுவாசம். வயதுவந்தவர்களுக்கு நிமிடத்துக்கு 14 முதல் 20 முறையும் சிறுவர்களுக்கு 18 – 30 வரை சுவாசம் நிகழ்கிறது.
ஒரு நுரையீரலுக்குள் 5 - 6 லிட்டர் காற்று கொள்ளும். மிகவும் இழுத்து மூச்சை வெளியில் விட்டால்கூட, ஒரு லிட்டர் காற்று நுரையீரலுக்குள் எப்போதும் இருக்கும். நாம் சாதாரணமாகச் சுவாசிக்கும்போது, அரை லிட்டர் காற்றையே உள்ளிழுக்கிறோம். அதே அளவில்தான் காற்றை வெளிவிடுகிறோம்.
ஒரு நாளைக்கு சராசரியாக 22,000 முறை மூச்சு விடும் நாம், கிட்டதட்ட 255 கன மீட்டர் (9000 கன அடி) காற்றை உள்ளிழுத்து வெளியிடுகிறோம்.

மனிதன் உள்ளிட்ட பாலூட்டிகளின் சுவாசத்துக்கு நுரையீரல்கள் உதவுகின்றன. பூச்சிகளுக்கு நுரையீரல் இல்லை. காற்றுக் குழாய்கள்தாம் உண்டு. பாம்பு போன்ற ஊர்வனவற்றுக்கு உதரவிதானம் இல்லை. மூச்சை உள்ளிழுப்பதற்குத் தங்கள் உடல் தசைகளையே உபயோகிக்கின்றன.
தவளை உட்பட பெரும்பாலான நீரில் வாழும் உயிரினங்கள் வாய்த் தசைகளைப் பயன்படுத்தி மூச்சை உள்ளிழுக்கின்றன. தவளை தண்ணீருக்குள் இருக்கும்போது அதன் தோல் வழியாகவும் சுவாசிக்கும் திறனுள்ளது. பறவைகள் மூச்சுக் காற்றை உள்ளிழுத்து முதலில் காற்றுப் பைகளுக்குள் தள்ளுகின்றன. அதன் பிறகே நுரையீரல்களுக்கு அனுப்புகின்றன. மீன்கள் செவுள்கள் வழியாகச் சுவாசிக்கின்றன. தண்ணீரில் கரைந்திருக்கும் ஆக்ஸிஜனை இவை உறிஞ்சிக் கொள்கின்றன.

சுவாசத்திற்கும் ஆயுளுக்கும் என்ன தொடர்பு?
"ஒரு நிமிடத்திற்கு நாம் எடுக்கும் சுவாசமும் நம் ஆயுளும் நேரடித் தொடர்புடையவை. உதாரணத்திற்கு,
- ஒரு நாய் ஒரு நிமிடத்திற்கு 70 லிருந்து 72 முறை சுவாசம் செய்கிறது, 12-14 வருடங்கள் வாழ்கிறது.
- ஒரு குதிரை 30 முறை சுவாசம் செய்கிறது, 25-30 வருடங்கள் வரை வாழ்கிறது.
- ஒரு யானை 15-18 முறை சுவாசம் செய்கிறது 80-100 வருடங்கள் வரை உயிர் வாழ்கிறது.
- ஒரு மனிதன் 12-15 முறை சுவாசம் செய்கிறான் அதனால் 160 வருடங்கள் வரை உயிர் வாழக் கூடிய திறனுடன் இருக்கிறான்.
- ஒரு சில கடல் ஆமைகள் 5-8 முறை சுவாசம் செய்கின்றன அவை 500 வருடங்கள் வரை உயிர் வாழ்கின்றன.
- வேறு சில கடல் பாம்புகளோ நிமிடத்திற்கு 2, 3 முறை மட்டுமே சுவாசம் செய்கிறது 1000 வருடங்கள் வரைக்கும் கூட அவை உயிர் வாழ்வதை பார்க்க முடியும்.
இதைத்தான் சித்த மருத்துவமும் ஆயுர்வேதமும் 'கடவுள் அத்தனை பேருக்கும் ஒரே அளவில் தான் சுவாசம் கொடுத்துள்ளான், வேக வேகமாக சுவாசிக்கிறது வேகமாக வேகமாக போய் விடுகிறது," என்று அழகாக சொல்கிறது.

## அவயங்களின் அகமியங்கள் 10

( இரத்த ஓட்டம் : "ஓடுவேன், ஓடுவேன், இன்னும் உங்களுக்குள்ளே ஓடிக்கொண்டேதான் இருக்கிறேனே " )




வில்லியம் ஹார்வி ஆங்கில மருத்துவர், 1628 ஆம் ஆண்டில், இவர் இரத்த ஓட்டத்தை கண்டுபிடித்தார் என்று அறிவியல் கூறுகிறது. ஆனால் இரத்தத்தோடு சேர்ந்து சைத்தானும் உங்களுக்குள்ளே ஓடுவதாக இஸ்லாம் மார்க்கம் கூறுகிறது .

ஸஃபிய்யா பின்த்து ஹுயை(ரலி) அறிவித்தார்.
இறைத்தூதர்(ஸல்) அவர்கள் (பள்ளிவாசலில் தங்கி) இஃதிகாஃப் இருந்தார்கள். ஓர் இரவில் அவர்களைச் சந்திப்பதற்காக அவர்களிடம் நான் சென்றேன். நான் அவர்களிடம் (சிறிது நேரம்) பேசிவிட்டு திரும்பிச் செல்ல எழுந்தேன். அப்போது நபி(ஸல்) அவர்களும் என்னைத் திருப்பியனுப்புவதற்காக என்னுடன் வந்தார்கள்.
அப்போது அன்சாரிகளில் இருவர் அந்த வழியாகச் சென்றார்கள். அவர்கள் நபி(ஸல்) அவர்களைக் கண்டவுடன் விரைந்து நடக்கலானார்கள். உடனே, நபி(ஸல்) அவர்கள், 'நிதானமாகச் செல்லுங்கள். இவர் (என் மனைவி) ஸஃபிய்யா பின்த்து ஹுயை தான்' என்றார்கள்.
இதைக் கேட்ட அவ்விருவரும், 'அல்லாஹ் தூயவன் இறைத்தூதர் அவர்களே! (தங்களையா நாங்கள் சந்தேகிப்போம்?)' என்றார்கள்.
நபி(ஸல்) அவர்கள், 'ஷைத்தான் மனிதனின் இரத்த நாளங்களில் (கூட) ஓடுகிறான். உங்கள் உள்ளங்களில் அவன் தீய எண்ணம் எதையேனும் போட்டு விடுவான்.அல்லது உங்கள் உள்ளங்களில் (சந்தேகம்) எதையாவது அவன் போட்டு விடுவான் என்று நான் அஞ்சினேன்' என்றார்கள். ஸஹீஹ் புகாரி : 3281.
நம் இரத்த நாளங்களில் சைத்தான் எப்படி புகுந்தான் ? சொல்றேன்.
ஆதம் (அலை) அவர்கள் வெளியே சென்றிருந்த போது , தனியாக இருந்த ஹவ்வாவிடம் , இப்லீஸ் தன் சின்னஞ்சிறு மகன் ஹன்னாஸை ஒப்படைத்து விட்டு , " நான் முக்கியமான அலுவலின் காரணமாக வெளியே செல்ல வேண்டியதுள்ளது .எனவே நான் திரும்பி வரும் வரை என் மகனை உம்மோடு வைத்திரும் !" என்று கூறிவிட்டு சென்றான்,
(இந்த ஹன்னாஸ் யார் என்றால்,குர்ஆனில் கடைசி சூரா நாஸில்

الَّذِىْ يُوَسْوِسُ فِىْ صُدُوْرِ النَّاسِۙ
மனிதர்களுடைய உள்ளங்களில் (வீணான) சந்தேகங்களை உண்டு பண்ணிவிட்டு, மறைந்துகொள்ளும் (ஹன்னாஸ்) விஷமிகளின் தீங்கை விட்டும் (பாதுகாக்கக் கோருகின்றேன்.) (குர்ஆன் : 114:4-5) அந்த ஹன்னாஸ்தான் இவன் )
வெளியே சென்றிருந்த ஆதம் (அலை) அவர்கள், தம் மனைவி ஹவ்வாயிடம் " யார் இது ?" என்று கேட்க ,"இப்லீஸின் மகன் ஹன்னாஸ் .தான் திரும்பி வந்து கூட்டிச் செல்வதாக கூறினான் " என்றார்கள் ஹவ்வா "ஏன் சம்மதித்தாய் ? " என்று ஆதம் மனைவியை கண்டித்து விட்டு,ஹன்னாஸ் மீது பாய்ந்து, அவனைக் கண்ட துண்டமாக வெட்டி மரக்கிளைகளில் தொங்க விட்டார்கள்

திரும்பி வந்த இப்லீஸ் , ஹவ்வாயிடம் "எங்கே என் மகன் ஹன்னாஸ் ?" நடந்ததை கூறினார்கள். உடனே இப்லீஸ், "ஹன்னாஸ்..! என்று ஒரு சப்தமிட்டான் .
ஆங்காங்கே தொங்கிக் கொண்டிருந்த சதையும் , எலும்பும் ஒன்று சேர்ந்து ஹன்னாஸ் உருப்பெற்றான் .
அதன் பின் இப்லீஸ் ஹவ்வாவிடம், " "மீண்டும் எனக்கு அலுவல் இருப்பதால் , ஹன்னாஸை உம்முடன் சற்று நேரம் வைத்திரும்" என்று சொல்லிவிட்டு ஹவ்வாவின் பதிலை எதிர்ப்பார்க்காமல் மறைந்தான் அந்த மாயவன்.
சற்று நேரத்தில் ஆதம் (அலை) அவர்கள் வந்து விபரம் கேட்க , ஹவ்வா "என் பதிலைக் கூட கேட்காமல், இப்லீஸ் மகனை ஒப்படைத்து மறைந்தான்" என்று கூற .ஹவ்வாவை வன்மையாக கண்டித்தார்கள். பின் ஹன்னாஸை

கொன்று அவனுடைய உடலை எரித்துச் சாம்பலாக்கி பாதியை கடலில் கரைத்தும், மீதியை காற்றிலும் தூவி விட்டார்கள் .
சற்று நேரத்தில் இப்லீஸ் வந்து மகனை கேட்க, ஹவ்வா விபரம் சொல்ல ," ஹன்னாஸ் ..!" என்று கூப்பிட மீண்டும் உருப்பெற்று ஹன்னாஸ் வந்தான் .
அதன் பின் ஹன்னாஸை செம்மறியாட்டின் உருவில் மாற்றி ஹவ்வா அவர்களிடம் பொய் சத்தியங்களெல்லாம் செய்து அவனை அவரிடம் ஒப்படைத்துச் சென்றான்.
இல்லம் மீண்ட ஆதம் (அலை) அவர்கள் செம்மறியாட்டின் உருவில் உள்ள ஹன்னாஸை கண்டம் துண்டமாக வெட்டி , இனிமேல் மீண்டும் அவன் உயிர்ப் பெற்று வந்து விடக் கூடாதென்று கருதி , அச்செம்மறியாட்டின் இறைச்சிக் கறி வைத்து சமைத்து தாம் ஒரு பாதியையும், மற்றொரு பாதியைத் தம் மனைவியுமாக உண்டனர் .
இதனை அறிந்த இப்லீஸ் சந்தோஷப்பட்டான் "நான் விரும்பியது நிகழ்ந்து விட்டது. ஆதம், ஹவ்வா இரத்தத்துடன் கலந்து இதயத்தில் நான் நிலையான இருப்பிடம் பெற்றுவிட்டேன் " என்று மகிழ்ச்சி பொங்க பகர்ந்தான் .
இப்படிதான் ஆதத்தின் தம்பதிகளின் இரத்த அணுக்களோடு அணுக்களாக கலந்து அவர்களின் வம்சவளிகளாக நம் ஒவ்வொருவரின் இரத்த அணுக்களின் புகுந்து ஓட ஆரம்பித்து விட்டான் . ஆதாரம் : திர்மிதீ (ரஹ்) அவர்கள் கூறியுள்ளார்கள் .
ஆதத்தின் மக்களின் இரத்த நாளங்களில் இரத்தத்தோடு இரத்தமாக இப்லீஸ் ஓடிக் கொண்டுள்ளான் என்று கருத்துப் பட அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியிருப்பது இங்குக் கவனிக்கத் தக்கதாகும்.

---

நம் இரத்த ஓட்டம் சர்வதேச விமானத்தை விட அதிகத் தூரம் தினமும் பயணம் செய்கிறது. ஒரு லட்சத்து 20 ஆயிரம் கிலோ மீட்டர்கள் ! வெறுமனே பயணம் மட்டும் செய்வதில்லை. பயணத்தின் நடுவே வேண்டாத குப்பைகளை சுத்தம் செய்து தேவையான விஷயங்களை செல்களுக்கு கொடுத்துக் கொண்டே ஓடுகிறது.
இரத்த ஓட்டம் பரபரப்பாக ஓடிக் கொண்டே இருக்கும் ஆறு என்று வைத்துக் கொள்ளுங்கள். நீங்கள் கண் இமைக்கும் 1 விநாடி நேரத்திற்குள் இரத்தத்திலுள்ள 1 கோடியே 20 வட்சம் சிவப்பணுக்கள் உங்கள் உடம்பு முழுவதும் ஒரு ரவுண்ட் அடித்துவிடும்.
அதே தேரத்தில் அதே எண்ணிக்கை செல்களை எலும்பு மஜ்ஜை புதிதாக உருவாக்கிவிடும். இரத்தத்திலுள்ள சிவப்பணுக்களின் வாழ்நாள் வெறும் 120 நாட்கள்தான். ஆனால், இதற்குள் உங்கள் தலை முதல் பாதம் வரை 75 ஆயிரம் முறை சுற்றி வத்துவிடும்.
எப்படி இரத்தம் இப்படி சளைக்காமல் சுற்ற முடிகிறது ? சொல்றேன்
இதயம்தான் இரத்த ஓட்டத்திற்கு முக்கிய பம்ப். ஒவ்வொரு துடிப்பிற்கு நடுவிலும் இரத்தத்தை பம்ப் செய்யும்போது விரியும் இதயம், பம்ப் செய்தவுடன் சுருங்கி விடும். எனவே, நாளங்களுக்கு வரும் இரத்தம் மீண்டும் உடனே இதயத்திற்கு செல்வதில்லை.
இருந்தாலும் இதயத்தால் மேல் நோக்கி பம்ப் செய்யப்படும் இரத்தம் , வெளிப்புறத்தில் இருக்கும் தசைகளின் உதவியுடன் பாதம் முதல் இதயம் வரை தொடர்ந்து தடையில்லாமல் ஓடுகிறது .
பொதுவாக, இரத்த குழாய்க்குள் இரத்தம் வேகமாக ஓடும்போது பின்னோக்கி தள்ளாமல் இரத்த குழாய்களே பார்த்துக்கொள்ளும்.

இரத்தம் பிரச்சினை இல்லாமல் இலகுவாக உங்களுக்குள் ஓடுவதற்கு, அட்லீஸ்ட் நீங்கள் நடக்கவாது செய்ய வேண்டும்
சிக்கலான குழாய் வழியே எப்போதும் ஓடிக் கொண்டிருக்கும் இரத்தத்தில் என்னவெல்லாம் இருக்கிறது தெரியுமா? வெள்ளை அணுக்கள் (லூகோசைட்ஸ்), கிரானுலோசைட்ஸ், லிம்போசைட்ஸ், மோனோ சைட்ஸ், தட்டணுக்கள் (பிளேட்லெட்ஸ்), இவை தவிர கொழுப்பு, உப்பு, சர்க்கரை, என்சைம்கள் இவை எல்லாம் தடையில்லாமல் என்னுள்ளே ஓடுவதற்குத் தேவையான திரவ பிளாஸ்மா, இத்தனையும் இரத்தத்தில் உண்டு.
இரத்த அழுத்தத்தையும் திடத்தையும் ஒரே சீராக வைப்பதற்கு நிறைய தண்ணீர் இரத்தத்திற்குத் தேவை. அதனாலேயே நீங்கள் குடிக்கும் திரவத்தை உங்களுக்குத் தெரியாமல் அதிகமாக உறிஞ்சி இரத்தம் வைத்துக் கொள்கிறது. இரத்த ஓட்டத்திற்கு தேவைபோக மீதியைத்தான் சிறுநீரகங்கள், வியர்வைச் சுரப்பிகள் கழிவாக வெளியேற்றும்.

அடிப்படையில் இரத்தத்தில் எத்தனை வகைகள் உள்ளன என்பது பொதுவாக உங்கள் அனைவருக்கும் தெரியும்,ஓ, ஏ, பி, ஏ.பி இவற்றில் பாசிடிவ், நெகடிவ் இதுதவிர, எம், என், பி. ஆர். எச் உள்ளிட்ட வகைகளும் உள்ளன.
இரத்த ஓட்டம் உடலில் உள்ள கோடிக்கணக்கான செல்களுக்கு உணவும், ஆக்சிஜனும் ஒரு மாநகராட்சி ஊழியர்போல தொடர்ந்து விநியோகித்துக் கொண்டிருக்கிறது. இதை இரத்தம் செய்யாவிட்டால், எந்த உறுப்பும் இயங்கவே இயங்காது. இரத்தத்திலுள்ள சிவப்பணுக்கள் ஒவ்வொரு செல்லுக்கும் ஆக்சிஜன் தந்துவிட்டு, கழிவான கார்பன்டை ஆக்சைடை எடுத்து வந்துவிடுகிறது.
இது தவிர, உங்கள் உடம்பின் ஒவ்வொரு உறுப்பில் இருக்கும் செல்களுக்கும் அதன் செயல்பாட்டைப் பொருத்து ஒவ்வொருவித உணவு தேவை, ஒன்று, தாதுக்கள் கேட்கும். சில செல்களுக்கு வைட்டமின்கள் வேண்டும். ஹார்மோன், குளுக்கோஸ், அமினோ அமிலம், கொழுப்பு, இல்லாவிட்டால் வெறும் தண்ணீர் என்று அதனதன் தேவைக்கு ஏற்பத் தர வேண்டியது இருக்கிறது.

வல்ல ரஹ்மானின் இரத்தத்திற்கு மாபெரும் ஆற்றலைக் கொடுத்திருக்கிறான். இரத்தம் ஒரு போர் வீரன் போல எந்த நேரத்திலும் ரொம்பவே கவனமாக இருக்கிறது. ஏதாவது சிறிய காயம் அல்லது பெரிய குண்டடிபட்டு இரத்தம் வெளியேற வேண்டியது வந்தால், இரத்தமே அந்த இடத்திற்கு பிளேட்லெட்டுகளை (தட்டணுக்களை) அனுப்பி, வலை போன்ற பாதுகாப்பைத் தந்து, இரத்தத்தை உறையச் செய்து விடுகிறது .
இரண்டாவது கட்டமாக, பாதிக்கப்பட்ட இடத்தில் நிரந்தரப் பாதுகாப்பை ஏற்படுத்த, பைப்ரின் என்ற ஒரு வேதிப்பொருளைப் இரத்தம் பயன்படுத்துகிறது . பைப்ரினை அதே வடிவத்தில் இரத்தம் ஸ்டாக் வைத்துக் கொள்வதில்லை. என்றாலும் இதை உருவாக்கத் தேவையான மூலப் பொருட்களை எப்போதும் இரத்தத்தில் தயாராக வைத்திருக்கிறது.

அடிபட்ட இடத்தில் இரத்தம் வெளியேறும் சில நிமிடத்தில் பைப்ரினைத் தயார் செய்து, அந்த இடத்தில் நிரந்தரப் பாதுகாப்பை ஏற்படுத்தி விடுகிறது. பைப்ரின் தயார் நிலையில் இருந்தால், இரத்த நாளங்களில் அடைப்பு ஏற்பட்டு விடும் அபாயம் உண்டு. இது எவ்வளவு பெரிய கவனத்துடன் கூடிய முன்னேற்பாடு.
தொற்றுக் கிருமிகள்தான் இரத்தத்தின் மிகப் பெரிய சவால். இதைக் கண்டுபிடித்து அழிப்பதற்கென்றே ராணுவப் பாதுகாப்பைப் போல பல வீரர்களை இரத்தம் வைத்துள்ளது . உலகத்தில் எத்தனைவிதத் தொற்றுக் கிருமிகள் இருந்தாலும் ஒவ்வொருவரை அழிப்பதற்கும் தனித்தனியான நோய் எதிர்ப்பு ஆயுதம் இரத்தத்திடம் உண்டு.
இரத்தத்தின் மிகப் பெரிய பலம் அதன் நினைவாற்றல் கேள்விப்பட்டிருப்பீர்களே... வாழ்நாளில் ஒரு முறை வந்த அம்மைநோய், திரும்ப உங்களுக்கு வரவே வராது. எத்தனை முறை ஜலதோஷம் பிடித்தாலும் ஒவ்வொரு முறையும் புது வைரஸால் தான் பாதிப்பு இருக்குமே தவிர, ஏற்கெனவே பாதித்த கிருமியால் மீண்டும் ஜலதோஷம் வராது.

ஒரு முறை கிருமி உடலுக்கு வந்து அதைக் கண்டுபிடித்து இரத்தம் அழித்து விட்டால், மீண்டும் அது உடலுக்கு வரும்போது எத்தனை ஆண்டுகள் ஆனாலும் நினைவு வைத்து, பாதிப்பு ஏற்படுத்தும் முன்பே அதை அழித்து விடுகிறது நம்முடைய இரத்தம்.
ஆனால், தொற்றுக் கிருமிகளுடன் இரத்தம் நடத்தும் இந்தப் பெரிய போராட்டம் உங்களுக்குத் தெரியாது. இந்தப் போரில் கொன்று போட்ட கிருமி, அதனுடன் போராடிய இரத்த சிவப்பணு இரண்டும் இறந்து விடும். அந்த இரண்டையும் என்போகோசைட்ஸ் என்ற வெள்ளை அணுக்கள் சாப்பிட்டு சுத்தம் செய்துவிடும். இப்படி ஒரு பாதுகாப்பு இல்லை என்றால், சிறிய தொற்று வந்தால்கூட உங்களால் வாழ முடியாது.
இரத்தத்திற்கும் பல பிரச்சினைகள் உண்டு. கால்சியம் அதிகப்படியாக இரத்த நாளங்களில் தங்கிவிட்டால், அவை கடினமாகி களி மண்போல ஆகிவிடும். கொழுப்பினால் அடைப்பு இருந்தாலும் இரத்தத்தை சுதந்திரமாக ஓட விடாது.

கொழுப்பினால்தான் காங்கிரினோஸ் என்ற பிரச்சினையில் ஆரம்பித்து ஸ்ட்ரோக் என்கிற பக்கவாதம் , மாரடைப்பு என்று எல்லாம் வரும்.
சர்க்கரை அதிகமானால் டயாபடிக், குறைந்தால் ஹைப்போகிளைசிமியா, இதனால் அதிக வேர்வை, மயக்கம், பலவீனம் வத்துவிடும்.
சிவப்பணுக்கள் பழுதடைவதால் ரத்த சோகை வரும். போதுமான அளவு இரும்புச் சத்து இரத்தத்தில் இருந்தால், இந்தப் பழுதை வராமல் செய்யலாம்.
ஒரு கியூபிக் மில்லி மீட்டர் ரத்தத்தில் 6 ஆயிரம் முதல் 8 ஆயிரம் வெள்ளை அணுக்கள் இருக்க வேண்டும். இது குறைந்தாலும் பாதிப்புதான். உடனடியாகக் கண்டுபிடித்து சரி செய்ய வேண்டும். வெள்ளை அணுக்கள் 1 லட்சத்திற்கு மேலே போனால், லுகீமியா (இரத்தப் புற்று நோய்) வரும்.
ரத்தம் உறைவது தடைபட்டால், ஹீமோபிளியா என்ற பிரச்சினை ஆரம்பத்தில் இரத்தத்தைப் பரிசோதித்து பிரச்சினையை சரி செய்துவிட்டால், சீக்கிரமே குணப்படுத்தி விடலாம்.

சரி, சீரான இரத்த ஓட்டத்திற்கு நீங்கள் என்ன செய்ய வேண்டும் ?
அதிக அழுத்தத்தில் இரத்த ஓட்டம் இருந்தால், கண்டிப்பாகக் கவனித்து தேவையான மருந்தை எடுத்துக் கொள்ளுங்கள். அழுத்தம் அதிகம் இருந்தால், இரத்தத்தால் முடியாது தொடர்ந்து பல உறுப்புக்களும் பாதிக்கப்படும். தினமும் முறையாகச் செய்யும் உடற்பயிற்சி இரத்த ஓட்டத்தை சீராக வைவக்க உதவும், கொழுப்பு உணவை அதிகமாகச் சாப்பிடாமல் இருந்தால் நல்லது. ஆர்டர் பண்ணி சாப்பிடும் ஃபாஸ்ட் புட்டில் கண்டிப்பாக அஜனமொட்டா கலந்து செயற்கை சுவை கூட்டி தருவார்கள். அந்த சுவையுடன் கேன்சரும் சேர்ந்தே வரும். தேவையா ? இரத்த ஓட்டம் நன்றாக இருந்தால்தான் எல்லா உறுப்பும் முறையாகச் செயல்பட முடியும் என்பது உங்களுக்கும் எனக்கும் தெரியும் .
வல்ல ரஹ்மான் நம்மை காக்கட்டும்.

**அவயங்களின் அகமியங்கள் 11**
( சிறுநீரகம் )



ஒரு முறை ஹள்ரத் ஸல்மான் (ரலி) அவர்களிடம் முஷ்ரிகீன்கள் கேலி செய்த வண்ணம் ‘என்ன? உங்கள் நபி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் உங்களுக்கு மலம், ஜலம் கழிக்கும் முறைகளை கூட கற்றுத் தருகிறாராமே!’ என்று கேட்டதற்கு,
ஸல்மான் (ரலி) அவர்கள் ‘ஆம்’ என்று கூறி அதன் சில முறைகளையும் கூறினார்கள். (நூல் : முஸ்லிம்)
அன்று முஷ்ரிகீன்கள் கேலியாக கேட்ட இந்த நபிகளாரின் வழிமுறை இன்று அந்த வழிமுறையில் ஏற்படும் மருத்துவ பலன்களையும் உடல் ஆரோக்கியத்தையும் கண்டு விஞ்ஞானமே ஆச்சரியப்பட்டு நிற்கிறது.
உட்காருந்து சிறுநீர் கழிப்பது :- “ஒரு முறை நான் நின்று கொண்டு சிறுநீர் கழிப்பதைக் கண்ட நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ‘உமரே! நின்று கொண்டு சிறுநீர் கழிக்காதீர்” என்று தடுத்தார்கள்: அதன் பிறகி லிருந்து நான் நின்ற நிலையில் சிறுநீர் கழித்ததேயில்லை. (ஹள்ரத் உமர் (ரலி), நூல் : திர்மிதி)
“நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நின்று கொண்டு சிறுநீர் கழித்ததாக யாரேனும் கூறினால் அதை
உண்மைப்படுத்தாதீர்கள்: ஏனெனில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் நின்ற நிலையில் சிறுநீர் கழிப்பதில்லை” (அன்னை ஆயிஷா (ரலி), நூல் : திர்மிதி)

குறிப்பு : ஒரு ஹதீஸில் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் ஒரு முறை நின்று சிறுநீர் கழித்ததாக வருகிறது. ஆனால் அந்நேரத்தில் சில தவிர்க்க முடியாத காரணத்தால் அவ்வாறு செய்தார்களே தவிர அவர்களின் நிரந்தர வழி முறை உட்கார்ந்து சிறுநீர் கழிப்பதாகத்தான் இருந்துள்ளது.
மருத்துவம்:- நின்று கொண்டு சிறுநீர் கழிப்பதால் (Prostatitis) சுக்கிலப்பை அழற்சி ஏற்பட்டு வீக்கம் ஏற்படுகிறது. போகப்போக சிறுநீர் அடைப்பு, சொட்டு சொட்டாக சிறுநீர் வந்து கொண்டேயிருப்பது,கிட்னியில் கல், குடலிறக்கம் போன்ற நோய்கள் உருவாக ஆரம்பிக்கின்றன.
நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் மலம், ஜலம் கழிக்க (செல்ல) விரும்பினால் தன்னை யாரும் பார்க்காதவாறு தொலைவிற்கு சென்றிடுவார்கள் என்று ஜாபிர் பின் அப்துல்லாஹ் (ரளி)
அறிவிக்கிறார்கள்.

மருத்துவம் :-
BIO-CHEMISTRY கலை நிபுணர் ஒருவர் கூறுகிறார் : மலம் கழிப்பதற்காக தூரமான இடத்திற்கு செல்லுங்கள். இன்று கிராமங்களெல்லாம் நகரங்களாக மாறி தன் அறையிலேயே கழிவறை இருப்பதால் மனிதன் மலம் கழிக்கும் முன் சிறிது நேரம் நடக்க வாய்ப்பு ஏற்படுவதில்லை. எனவே தான் மலச் சிக்கல், வாயுப் பிரச்சனை போன்ற கோளாறுகள் உண்டாகிறது. சிறிது நேரம் நடப்பதால் குடல் இயக்கங்கள் சீராகி மலம் முழுவதுமாக இலகுவாக வெளியேறுவதால் மனிதன் ஆரோக்கியமடைகிறான்.
PHYSIOLOGY யில் முதிர்ச்சி பெற்ற வல்லுநர் ஒருவர் எழுதுகிறார். என்னிடம் ஒரு மாற்றுமத விஞ்ஞானி நீங்கள் (முஸ்லிம்கள்) உங்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் ஒரு நடை முறையை பேணி வந்தால் உங்களுக்கு நோயே வராது!
உங்களிள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மலம், ஜலம் கழிப்பதற்கு கற்று கொடுத்துள்ள முறையில் நாமும் மல ஜலம் கழித்தால் (APPERTICITIS) குடல்வாழ் சுழற்சி, மூலம், நீங்காத மலச்சிக்கல், கழுத்து சம்பந்தமான நோய்கள் வராது என்று கூறினார்.
சிறுநீர் கழித்தபின்பு இடது கையால் சுத்தம் செய்ய வேண்டும். இயற்கையாகவே மனிதனின் வலது கையில் ஆரோக்கியமளிக்கும் திரவமும் இடது கையில் நோயின் திரவமும் உள்ளுக்குள் ஊறிக் கொண்டிருக்கும். வலது கையைக் கொண்டு அசுத்தத்தை நீக்கினால் திரவ அமைப்பு மாறி அதன் தாக்கம் மூளையிலும் நரம்பு திசுக்களால் உருவாக்கப்பட்ட தண்டுவடத்திலும் ஏற்படுகிறது.
____________________________________________

சிறுநீரகங்கள் மனிதனுக்கு இரண்டு உண்டு. வயிற்றின் உறுப்புகளுக்குப் பின்புறம் மேற்பகுதியில் தண்டுவடத்திற்கு இருபுறமும் ஒன்று வீதம் உள்ளது. அது அவரை விதை வடிவத்தில் காணப்படும்.
இரத்தத்தில் சோடியம் குளோரைடு (உப்பு), பொட்டாஷியம் பலதாதுப் பொருட்கள்' இருக்கின்றன. சரியான அளவில் இருக்க வேண்டும். அதிகமானால் பிரச்சினை குறைந்தாலும் தொல்லைதான்.
உடனே நீங்கள் கவலைப்படாதீர்கள். சிறுநீரகம் தொடர்ந்து இதை கண்காணித்துக்கொண்டே இருக்கிறது.
இது தவிர, உடலில் உள்ள நீரின் அளவையும் சிறுநீரகம்தான் கவனிக்க வேண்டும். நீர் அளவு குறைந்தால், உடல் செல்கள் வறட்சியாகிவிடும். அதிகமானால், செல்கள் நீரில் மிதக்கும். தாதுக்கள், நீர் அளவு இவற்றைக் கவனிக்கும் அதே நேரத்தில் இரத்தத்தில் அமிலம், காரம் (ஆல்கலின்) சரியாக இருக்கிறதா என்பதையும் சிறுநீரகம்தான் கவனிக்கிறது

இன்னொரு முக்கியப் பிரச்சினை, பழங்களிலும் இறைச்சியிலும் இருக்கும் பொட்டாஷியம். பழங்கள் சாப்பிட்டால் நல்லது என்ற எண்ணம் வந்தாலும் வந்தது, சிலர் வாழ்க்கை முழுவதும் பழமாகவே சாப்பிடுகிறார்கள்.
எவ்வளவு பொட்டாஷியம் சாப்பிடுவீர்களோ என்று நான் மிகக் கவனமாக இருந்து, அதிகப்படியான பொட்டாஷியத்தை வெளியேற்ற வேண்டியுள்ளது.
பொட்டாஷியம் குறைந்தால் தசைகள், குறிப்பாக சுவாசப் பகுதியில் இருக்கும் தசைகள் செயலிழந்துவிடும்.
அதிகமானால், இதயத்தின் செயல்பாடுகளைப் பாதிக்கும். உங்கள் உணவில் தேவையான அளவு பொட்டாஷியம் இல்லை என்றாலும் அதையும் சிறுநீரகம்தான் பார்க்க வேண்டும்.

பயிற்சி பெற்ற விஜிலென்ஸ் அதிகாரிபோல இந்தக் கண்காணிப்பு வேலைக்கே சிறுநீரகத்தின் பாதி நேரம் போய்விடுகிறது. உலகத்தில் இதுவரை எந்தக் கைதேர்ந்த சிறுநீரகவியல் நிபுணரும் சிறுநீரகத்தின் வேலை இதுதான் என்று அட்டவணைப்படுத்த முடிந்ததில்லை.
சிறுநீரகத்தின் எடை வெறும் 140 கிராம்தான். இருந்தும் அதற்குள்ளே நெஃப்ரான்கள் எனப்படும் கழிவுகளை வடிகட்டும் யூனிட்டுகள் சுமார் 10 லட்சம் உள்ளன. சக்தி வாய்ந்த நுண்ணோக்கியில் சிறுநீரகத்தின் நெஃப்ரான்களைப் (சிறுநீர் முடிச்சுகள் ) பார்த்தால் பெரிய தலையுடைய புழு, வாலை சுருட்டிக் கொண்டிருப்பதுபோல குழாய் மாதிரி இருக்கும்.

வால் பகுதியை இழுந்தால் சொன்னால் ஷாக் ஆகிவிடுவீர்கள் 105 கி.மீ. நீளும். 12 செ.மீ நீளச் சிறுநீரகத்திற்குள் 105 கிலோ மீட்டர் குழாயை சுருட்டி வைத்த இறை படைப்பின் அற்புதத்தை என்னவென்று சொல்ல !
ஒரு நாளில் ஒவ்வொரு மணிநேரமும் சிறுநீரகம் உடம்பின் மொத்த இரத்தத்தையும் 2 முறை சுத்திகரிப்பு செய்கிறது
சிறுநீரகத்தின் செயல்பாடுகளைப் பற்றி முழுதான அட்டவணை இல்லாவிட்டாலும் தற்போது உள்ள நவீன மருத்துவத்தில் நிறைய எளிமையான பரிசோதனைகள் உள்ளன..இவை, ஆரம்ப நிலையிலேயே சிறுநீரகத்தின் ஆரோக்கியத்தை உங்களுக்கு தெளிவாகச் சொல்லி விடும்.
சீரான உடல் எடையுடன் இருங்கள் ரத்த அழுத்தம் சரியாக உள்ளதா என்று கவனித்துக் கொள்ளுங்கள். இந்த இரண்டும் சிறுநீரகத்திற்கு ரொம்பவே அவசியம்.

ரொம்ப எளிமையான உடற்பயிற்சி போதும். எடையைக் குறைக்கிறேன் என்று வன்முறையில் எல்லாம் இறங்க வேண்டாம். உங்களுடைய தசைகளுக்கு அதிக வேலை தரும்போது அவை சிறுநீரகத்திற்கு மற்றும் பிடிக்காத லேக்டிக் அமிலத்தை அதிகமாக உற்பத்தி செய்யும்.
அதனால் வாக்கிங், ஜாகிங், நீச்சல் போன்ற பயிற்சிகள் போதும். தண்ணீர் குடிப்பதற்கே நிறையப் பேர் பயப்படுகிறார்கள். போதுமான அளவு நீர் குடிப்பது முக்கியம்.
சிறுநீர் போவதில் வழக்கத்திற்கு மாறாக என்ன மாற்றம் இருந்தாலும் குறிப்பாக கலர் வித்தியாசம் இருந்தால் தயவுசெய்து உடனே டாக்டரைப் பாருங்கள்

**அவயங்களின் அகமியங்கள் 12**

( தோல் என்னும் கவசம்




நம் உடலை கவசம் போல் பாதுகாப்பது மட்டுமே, தோலின் முக்கிய பணி என்று நினைக்கிறோம். நாம் அறியாத பல உன்னத பணிகளை, தோல் செய்கிறது.

தோல், நம் உடலின் மிக மெல்லிய, மிக மிருதுவான உறுப்பு மட்டும் அல்ல; நம் உடலின் உறுதியான உறுப்பும், தோல் தான். கருவறைக்குள் வைத்து, கருவைப் போற்றி வளர்க்கும் அன்னை போல், சிறுகச் சிறுகச் சேமித்த செல்வங்களைப் பாதுகாக்கும் இரும்பு பெட்டகம் போல், தோல் நம் உடலின் அனைத்து உறுப்புகளையும் பாதுகாக்கிறது.

தோலுக்கு இந்த உறுதியையும், வலிமையையும் அளிப்பது, 'கொலாஜன்' என்ற புரதம். வலிமையான நம் தோல், வளைந்து கொடுக்கும் தன்மையும் உடையது. 'எலாஸ்டின்' என்ற புரதம், இந்த இசைவுத் தன்மையை அளிக்கிறது.

நம் ஒவ்வொரு அசைவுக்கும் ஏற்றவாறு, பொறுமையுடன் இசைந்து கொடுக்கும் நம் தோலே, நம் உடல் உறுப்புகளின் தாய் என்பதில், எந்த மாற்றுக் கருத்தும் இல்லை.

கொலாஜன், எலாஸ்டின் ஆகியவற்றின் திறன் சற்று குறைவதால், முதுமையில் தோல் சுருங்கத் துவங்குகிறது.ஆனால், இந்த இரண்டு புரதங்களும், இந்தியர்களின் தோலில் வலுவிழக்காமல் இருக்கின்றன. அதனால் தான், ஐரோப்பியர்களை ஒப்பிடும் போது, நம்முடைய தோலில் எவ்வளவு முதுமையிலும், அவ்வளவாக சுருக்கங்கள் தோன்றுவதில்லை.

மேற்தோல் அடுக்கின் மேல், இயற்கையாக அமைந்த மிக மெல்லிய எண்ணெய் படலம், பயணங்களில் நம் பெட்டிகளைக் காக்கும் பாதுகாப்பு உறை போல், மற்றுமொரு கூடுதல் கவசமாக அமைகிறது.

நம் உடலுக்கு மிகவும் அத்தியாவசியமான நீர் மற்றும் தாதுக்கள், நம் உடலை விட்டு வெளியேறாமல் காக்கும் பெருந்தடுப்புச் சுவராகவும் அமைந்துள்ளது.

ஒரு மிகப் பெரிய அரண்மனையின் தலைமைக் காவலாளி போல், நம் உடலென்னும் அரண்மனையை காக்கும் தோல், நம் உடலுக்கு தேவையான, காற்றிலுள்ள ஈரம், தோலின் மிருதுத் தன்மையை தக்கவைக்கும் எண்ணெய் மற்றும் தோலில் தடவும் களிம்புகள் போன்றவற்றை மட்டும் பரிசோதித்து, தோலின் உட்செல்ல அனுமதிக்கும் சோதனைச் சாவடிப் பணியையும் செய்கிறது.

தோலின் இந்த பெரும் தடுப்புச் சுவர் பணியால்தான், தீங்கு விளைவிக்கும் எந்த ஒரு பொருளும், நம் உடலுக்குள் புகாமல் இருக்கிறது. அதே சமயம், நன்மை செய்யும் பொருட்கள் முறையாக பரிசோதிக்கப்பட்ட பின், உட்செல்ல முடிகிறது.

ஒரு தேசத்தின் அமைச்சகங்களில், பாதுகாப்பு அமைச்சகத்துக்கே, முதன்மை முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. ஆனால், நம் உடலின் பாதுகாப்பு அமைச்சகமான தோலை, நாம் எவ்வளவு அலட்சியப்படுத்த முடியுமோ, அவ்வளவு அலட்சியப்படுத்துகிறோம்.

தோல் என்ற எல்லை பாதுகாப்பு படை, பாதுகாப்பதோடு மட்டும் அல்லாமல், எதிரிகளை போராடி வீழ்த்தவும் செய்கிறது. நோய்க் கிருமிகள், விலங்குகள், மற்ற மனிதர்களின் தாக்குதல், தட்ப வெப்ப நிலை மாற்றங்கள் போன்ற எல்லா எதிரிகளையும் பற்றிய முதல் தகவல் அறிக்கையை, நம் உடலுக்கு சமர்ப்பிப்பது தோல்தான்.

தோலெங்கும் பரவியுள்ள, 'லேங்கர்ஹான்ஸ்' செல்கள், சிறு சிறு காவல் நிலையங்கள் போல் செயல்பட்டு, குற்றவாளிகளை இனங்கண்டு, நம் உடலின் எதிர்ப்பு சக்தி மண்டலத்துக்கு உடனுக்குடன் சொல்வதோடு, அவற்றை நினைவில் கொண்டு, மீண்டும் அவை நம்மை நெருங்காதவாறு, நம் உடலை கட்டிக் காக்கின்றன.

தோலின் இந்த அரும்பெரும் இடையறாத, நோய் எதிர்ப்பு முதல் தகவல் பணியால் தான், நம் உடலில், 99 சதவீதம் நோய்கள், முன் கூட்டியே தவிர்க்கப்படுகின்றன.

அதி வெப்பமான ஆப்பிரிக்க கண்டமாக இருந்தாலும், பனி நிறைந்த அண்டார்டிக்காவாக இருந்தாலும், அங்கு வாழும் மனிதர்களின் உடல் வெப்பம், ஒரே சீராக, 98.4 டிகிரி பாரன்ஹீட்டிலேயே இருப்பதற்கான ரகசியம் என்ன தெரியுமா ? சொல்றேன்

நம் தோல் தான்.புறச் சூழலில், வெப்பம் மிகுதியாக இருந்தாலும், பனி மிகுதியாக இருந்தாலும், தோல் ஒரு குளிர் பதனக் கருவி போலச் செயல்பட்டு, நம் உடலின் வெப்பத்தை ஒரே சீராக வைத்துக் கொள்வதால் தான், நம் உடலின் முக்கிய உறுப்புகள் அனைத்தும், அதிக வெப்பத்தில் வெந்து போகாமலும், அதிகப் பனியில் உறைந்து போகாமலும் பாதுகாக்கப்படுகின்றன.

தோல் தானாகவே புறச் சூழலில் வெப்பம் மிகுதியாகும் போது, தோலின் ரத்த நாளங்கள் சுருங்கி, அகச் சூட்டைத் தணிக்கின்றன. அதே போல், புறச் சூழலில் பனி மிகுதியாகும் போது, தோலின் ரத்த நாளங்கள் விரிவடைந்து, உடல் வெப்பத்தை அதிகரிக்கின்றன.இது மனிதர்களுக்கு இறைவன் செய்திருக்கும் மாபெரும் கிருபை.

அடுத்துள்ள ஆச்சரியம், நம் தோலெங்கும் பரவியுள்ள வியர்வை சுரப்பிகள் ஓய்வில்லாமலும், மின்சாரக் கட்டணம் இல்லாமலும், அனு தினமும் உழைக்கும் நுண்ணிய குளிர்ச்சாதனக் கருவிகள் என்று அறியும் போது, நாம் வியப்பின் உச்சத்திற்கே சென்று விடுவோம்.

கோடைக் காலங்களிலும், அதிக வெப்பமும், காற்றில் ஈரப்பதம் நிறைந்த கடலோரப் பகுதிகளிலும்,நம் தோலின் சுரப்பிகள் மிக அதிகமாக வியர்வையைச் சுரப்பதால், வியர்வை தோல் முழுதும் பரவி, நம் உடல் ஈரமாகி விடுகிறது. அதன் மேல் காற்று பட்டவுடன், நம் உடல் குளிர்ந்து விடுகிறது.புறச் சூழலில், எவ்வளவு வெப்பம் அதிகமாக இருந்தாலும், இந்த வியர்வை சுரப்பிகள் எனும், தோலின் அமுதசுரபிகளால், உடல் உறுப்புகள் வெந்தழிந்து போகாமல், பாதுகாக்கப்படுகின்றன.

அதே போல், புறச்சுழலில் பனி அதிகமாக இருக்கும் போது, வியர்வைச் சுரப்பி வெகுவாகக் குறைந்து, உடல் வெப்பம் அதிகரிக்கிறது.

இதனால், உடல் உறுப்புகள் உறைந்து போய், செயலிழந்து விடாமல் பாதுகாக்கப் படுகின்றன.இந்த அறிவியல் உண்மைகள் புரியாமல், நாம் கோடைக் காலங்களில் கூட, மேலை நாட்டு மனிதர்கள் போல், மிக இறுக்கமான, மிக கனமான, காற்றே புகாத உடையணிந்து கொள்கிறோம்.உடல் வெப்பத்தை நாமே அதிகரித்து விட்டு, உடல் சூடாகி விட்டது என்று, சூட்டை தணிக்க செயற்கையான குளிர்சாதனக் கருவிகளைப் பயன்படுத்தி, நம் உடலையும் கெடுத்து, சுற்றுச் சூழலுக்கும் என்றும் நீங்காத கேட்டை விளைவிக்கிறோம்.

இன்றைய சூழலில், மனிதனுக்கு சுத்தமான காற்றை, இலவசமாக வாரி வழங்கும் அற்புத வரமான மரங்களையும், நாம் இழந்து வருகிறோம்.

நம் நாட்டு தட்ப வெப்பத்துக்கும், நம் சூழலுக்கும் ஏற்றவாறு, தளர்வான, மெல்லிய, காற்று எளிதில் புகக்கூடிய பருத்தி ஆடைகளை அணிவதன் மூலமும், நம்மால் இயன்ற வரை மரங்களை வளர்த்து, காற்று மிகுதியாகச் செய்வதன் மூலமும், நம் உடல் வெப்பத்தைத் தணிக்க உதவும் தோலுக்கு, நாம் உறுதுணையாக இருப்போம்.

தோலின் உணர்வூட்டும் பணி :-

நரகத்தின் தண்டனைகளும் நமது அறிவுக்குப் பொருத்தமாகவே விளக்கப்படுகிறது. குறிப்பாக நரக நெருப்பை அல்லாஹ் உலக நெருப்போடு ஒப்பிட்டுக் கூறுகிறான். ஆனால் நரக நெருப்பானது உலக நெருப்பைவிட எழுபது மடங்கு அதிக வெப்பமுடையது.

நபி (ஸல்) அவர்கள், “உங்கள் (உலக) நெருப்பு, நரக நெருப்பின் எழுபது பாகங்களிலிருந்து ஒரு பாகமேயாகும்” என்று கூறினார்கள்.

உடனே, ” இறைத்தூதர் அவர்களே! இந்த உலக நெருப்பு (பாவம் செய்தவர்களை எரித்து) வேதனைப் படுத்த போதுமானதாயிற்றே!” என்று கேட்கப்பட்டது.

அதற்கு நபி (ஸல்) அவர்கள், “(அப்படியல்ல) உலக நெருப்பை விட நரக நெருப்பு அறுபத்தொன்பது பாகங்கள் அதிகப்படுத்தப் பட்டுள்ளது இவற்றில் ஒவ்வொரு பாகமும் உலக நெருப்பின் வெப்பத்திற்கு சமமானதாகும்” என்றார்கள்.

அபூ ஹுரைரா (ரலி), புஹாரி: 3265.

அல்லாஹ்வின் தூதர் அவர்களிடம் நபித்தோழர்கள் கேட்டபடி, இவ்வுலகில் உள்ள நெருப்பே மனிதனை சுட்டுப்பொசுக்க போதுமானதாகும், இப்படி இருக்க அறுபத்தொன்பது மடங்கு அதிகமுள்ள கொடும் நெருப்பின் தேவை என்ன?

உலகில் வாழும் மனிதர்களின் சராசரி உயரம் 5 அடி, எடை 80 கிலோ இருக்கிறார்கள். இந்தளவுள்ள மனிதர்களை நெருப்பில் இட்டு வேதனை செய்ய உலக நெருப்பு போதும். ஆனால் மறுமையில் எழுப்பப்பட்டு இறுதித் தீர்ப்புக்குப் பின் நரகம் செல்லும் நரகவாசிகளின் உடம்பு, பூமியில் இருந்தது போல் சராசரி ஐந்தடி உயரம் எண்பது கிலோ எடையில் இருக்காது !

அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்: (நரகத்தில்)இறை மறுப்பாளனின் “கடவாய்ப்பல்’ அல்லது “கோரைப்பல்’ உஹுத் மலையைப் போன்றிருக்கும். அவனது தோலின் பருமன் மூன்று நாள் நடைப் பயணத் தொலைவுடையதாக இருக்கும். அபூஹுரைரா (ரலி) முஸ்லிம். 5479.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நரகத்தில் இறை மறுப்பாளனின் இரு தோள்களுக்கிடையே உள்ள தூரம், துரிதமாக வாகனத்தில் பயணிப்பவர் மூன்று நாட்கள் கடக்கும் தூரமாகும். அபூஹுரைரரா (ரலி) முஸ்லிம். 5480.

நரகவாசிகளின் உடல், கொடும் வெப்ப வேதனையை நன்கு ருசிப்பதற்க்காக அல்லாஹ்வால் பிரமாண்ட மாமிச மலையாக மாற்றப்பட்டே நரகில் தள்ளப்படுவார்கள். நரகில் உள்ள மாமிசமலை மனிதர்களுக்கு பூமியில் உள்ள வெப்பம் போதுமானதாக இருக்க முடியாது.

காரணம் இவர்களின் தோலின் கனமே மூன்று நாள் பயண தொலைவு இருப்பதால் பூமியில் இருக்கும் நெருப்பை விட எழுபது மடங்கு கடும் சூடு கொண்ட நெருப்பு தேவையாக உள்ளது.

மேலும் சொர்க்க, நரகவாசிகளுக்கு மீண்டும் ஒரு மரணம் இல்லை. ஆகவே நரகவாசிகள் கொடும் நெருப்பால் சுடப்பட்டு பஸ்பமாக ஆகிவிடக் கூடாது என்பதற்காகவே மிக கனமான தோல் போர்த்தப்பட்டு, இறப்பில்லா நீடித்த வேதனை அனுபவித்துக் கொண்டே இருப்பார்கள்.

அவர்களின் தோல்கள் கருகி வலியுணர்ச்சி குறையும்போது மீண்டும் புதுத் தோல் மாற்றப்பட்டு வலி வேதனையை தொடர்ந்து உணர்ந்து கதறுவார்கள். மனிதன் தோலில்தான் வலி உணர்வு நரம்புகள் அமைந்துள்ளது. தோலில் உள்ள இந்த நரம்புகள் எரிந்து விட்டாலோ அல்லது அழுகி விட்டாலோ நம்மால் வலியை உணர முடியாது

இந்த உணர் நரம்புகளே வலியை மூளைக்கு எடுத்துச் சென்று நமக்கு வேதனையை உணர்த்துகிறது. உதாரணமாக, தொழு நோயாளிகள் கையில் உள்ள உணர் நரம்புகள் அழுகி சேதம் அடைந்துவிடுவதால் அவர்களால் சூட்டை உணரமுடியாது. ஆனாலும் சூடு பட்ட இடம் கொப்புளமாகிவிடும்.

இதுபோன்றே நரகவாசிகள் தோல் பொசுங்கி உணர்வு நரம்பு சேதமடையும்போது அல்லாஹ் புது தோலை அங்கு உண்டாக்கி. வேதனையை மீண்டும் தொடரச் செய்கின்றான். இதை அல்லாஹ் குர் ஆனில் கூறுகின்றான்.

எவர்கள் நம் சான்றுகளை மறுக்கின்றார்களோ அவர்களை நிச்சயம் நாம் நரகில் வீசி எறிவோம்! அவர்களுடைய உடலின் தோல்கள் கருகிவிடும் போதெல்லாம் வேறு தோல்களை அவர்களுக்கு மாற்றிக்கொண்டே இருப்போம்; வேதனையை அவர்கள் நன்கு சுவைத்துக்கொண்டேயிருப்பதற்காக! திண்ணமாக அல்லாஹ் மிகையான ஆற்றல் உள்ளவனாகவும் நன்கு அறிந்தவனுமாகவும் இருக்கின்றான்.( குர்ஆன்:4:56.)

தோலில் உள்ள உணர் நரம்புகள் முற்றிலுமாக நெருப்பில் வெந்துவிட்டால் இதை மூன்றாம் நிலை தீக்காயம் என்று மருத்துவ உலகம் கூறுகிறது. இந்நிலையில் வலி உணர்ச்சி முற்றிலும் இருக்காது.

Third-degree burns (full thickness burns) go through the dermis and affect deeper tissues. They result in white or blackened, charred skin that may be numb. The degree of pain is not related to the severity of the burn, as the most serious burns can be painless.

**http://www.webmd.com/pain.../guide/pain-caused-by-burns**

நரக நெருப்பின் உக்கிரம் எந்தளவு இருக்கும் என்பதை அல்லாஹ் இவ்வசனத்தில் கூறுகிறான்.

நரக நெருப்புஅவர்களுடைய முகங்களைக் கரிக்கும்; இன்னும் அதில் அவர்கள் உதடு சுருண்டு (முகம் விகாரமானவர்களாக) இருப்பார்கள். – (குர்ஆன்.23:104.)

இவ்வுலக நெருப்பால் பாதிக்கப்பட்டவருடைய உதடு சுருண்டு முகம் இவ்வளவு விகாரமாக இருக்குமென்றால் மறுமை நெருப்பின் கொடுரம்!. . . . அல்லாஹ் நம்மை காப்பாற்றவேண்டும்!

## அவயங்களின் அகமியங்கள் 13

( உஸ்… சப்தம் போடாதே காது கேட்கும் )



"ஒட்டு மொத்தமாக மனித உடலில் காணப்படும் எல்லா உறுப்புக்களும் மனிதனுக்கு முக்கியமானவைதான். எனினும், அல்லாஹ் மனித உடலில் இடம் பெற்றிருக்கிற மூன்று உறுப்புக்களைக் குறித்து அல்குர்ஆனில் அதிகம் பேசுகிறான், விமர்சிக்கிறான்.

கண், காது, இதயம் ஆகியவை தான் இம்முன்று உறுப்புக்கள். சில இடங்களில் மூன்று உறுப்புக்களையும் சேர்த்து பேசுகின்றான்.

பல இடங்களில் பார்வையையும், செவிப்புலனையும் இணைத்தே பேசுகின்றான். இன்னும் தெளிவாக சொல்வதாக இருந்தால் கண் – பார்வையைப் பற்றி 148 இடத்திலும், காது – செவிப்புலன் பற்றி 185 இடங்களிலும் பேசுகின்றான்.

அவ்வகையில் பார்க்கும் போது கண்ணும், காதும் மனித உறுப்பில் பிரதானமானவைகளாக இடம் பெறுகின்றன. அதிலும் குறிப்பாக காது – செவிப்புலன் என்பது மனித குலத்திற்கு அல்லாஹ் வழங்கியிருக்கிற மகத்தான அருட்கொடையாகும்.

ஏனெனில், பெரும்பாலான இடங்களில் இதயத்தை விட, கண்ணை விட அல்லாஹ் காதைத்தான் முற்படுத்தி முதன்மையாக கூறுகின்றான்.

அறிவியல் பார்வையில்....

நமது காது சாதாரணமாக 20 ஹெர்ட்சில் இருந்து 20 கிலோ ஹெர்ட்ஸ் வரை கேட்கும் திறன் பெற்றது. ஒரு கிலோ ஹெர்ட்ஸ் = 1000 ஹெர்ட்ஸ்.

செவி அல்லது காது (ear) என்பது ஒலியை உணரக்கூடிய ஒரு புலன் உறுப்பு ஆகும். மீன் தொடக்கம் மனிதர் வரை முதுகெலும்பிகளின் செவிகள் பொதுவான உயிரியல் தன்மையைக் கொண்டுள்ளன. எனினும் ஒழுங்கு மற்றும் சிற்றினங்களைப் பொறுத்து அமைப்பில் வேறுபாடுகள் உள்ளன.

செவி ஒலி அலைகளைப் பெற்று உணர்வது மட்டுமன்றி, உடல் சமநிலை உணர்வு தொடர்பிலும் முக்கிய பங்கு வகிக்கின்றது. உடலின் ஐம்புலன்களில் செவி கேட்க உதவும் ஒரு கருவியாவும் அமைந்துள்ளது.

செவி என்பது சரியானபடி முழுமையான உறுப்பைக் குறிப்பதற்கோ அல்லது வெளியில் தெரியும் செவிப் பகுதியை மட்டும் குறிப்பதற்கோ பயன்படக்கூடும்.

இது புறச்செவி அல்லது செவிமடல் எனவும் அழைக்கப்படும். புறச்செவி மட்டுமே வெளியில் தெரியும் செவியாக இருப்பினும், இது கேட்டல் என்னும் செயற்பாட்டின் பல படிகளில் முதல் படியோடு மட்டுமே தொடர்புபட்டது. இது உடற் சமநிலை உணர்வு தொடர்பில் எவ்விதப் பங்கும் வகிப்பதில்லை.

இறந்த பின் காது கேட்குமா ? கேட்கும்

இறந்து மூன்று நாளைக்குப் பிறகும் மரணித்தவர்கள் செவியேற்கிறார்கள் என்பதற்கு ஆதாரமாக பத்ரு யுத்தத்தில் ஒரு நிகழ்வு

பத்ருப் போர் (நடந்து முடிந்த) நாளன்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், குறைஷித் தலைவர்களில் இருபத்தி நான்கு பேர்(களின் சடலங்)களை பத்ருடைய கிணறுகளில் அசுத்தமானதும், அசுத்தப்படுத்தக் கூடியதுமான கிணறு ஒன்றில் தூக்கிப் போடுமாறு உத்தரவிட்டார்கள்.

(எதிரிக்) கூட்டத்தினர் எவரிடமாவது நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் போரிட்டு வெற்றி கண்டால், (போரிட்ட இடத்திலுள்ள) திறந்த வெளியில் மூன்று நாட்கள் தங்கிச் செல்வது அவர்களது வழக்கமாக இருந்தது.

பத்ர் முடிந்த **#மூன்றாம்நாள்** தம்முடைய வாகன(மான ஒட்டக)த்தின் மீது அதன் சிவிகையை (ஏற்றிக்) கட்டுமாறு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள். அதன் மீது அதன் சிவிகை கட்டப்பட்டது. பிறகு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் (புறப்பட்டுச்) சென்றார்கள். அவர்களுடைய தோழர்களும் அவர்களைப் பின்தொடர்ந்தனர்.

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் ஏதோ தமது தேவை ஒன்றிற்காகவே செல்கிறார்கள் என்றே நாங்கள் நினைத்தோம். இறுதியில், அந்தக் (குறைஷித் தலைவர்கள் போடப்பட்டிருந்த) கிணற்றருகில் நபியவர்கள் நின்றார்கள்.

(கிணற்றோரம் நின்றிருந்த) நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், அவர்களுடைய பெயர்களையும், அவர்களுடைய தந்தையரின் பெயர்களையும் குறிப்பிட்டு, “இன்னாரின் மகன் இன்னாரே! இன்னாரின் மகன் இன்னாரே! அல்லாஹ்வுக்கும், அவனுடைய தூதருக்கும் நீங்கள் கீழ்ப்படிந்து நடந்திருந்தால் (இப்போது அது) உங்களுக்கு மகிழ்ச்சியளிக்கும் தானே!

ஏனெனில், எங்களுடைய இரட்சகன் எங்களுக்கு வாக்களித்ததை நாங்கள் அடைந்து கொண்டோம். உங்களுக்கு உங்களுடைய இரட்சகன் வாக்களித்ததை நீங்கள் அடைந்து கொண்டீர்களா?” என்று கூறினார்கள்.

உடனே (அருகிலிருந்த) உமர் (ரலி) அவர்கள், “அல்லாஹ்வின் தூதரே! உயிரற்ற சடலங்களிடமா பேசுகிறீர்கள்?” என்று கேட்டார்கள்.

அதற்கு நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள், “என்னுடைய உயிர் எவன் கையிலுள்ளதோ அவன் மீதாணையாக! நான் கூறுவதை இவர்களை விட நீங்கள் நன்கு செவியேற்பவர்களாக இல்லை” என்று கூறினார்கள். நூல் : புகாரி 3976

உங்களது காதில் 127 அக்குபுள்ளிகள் உள்ளன.அவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு உடல் உறுப்புகளுடன் தொடர்புடையது , இதனால்தான் உங்கள் உடலிலுள்ள அனைத்து சக்தி நாளங்களும் காதில் முடிவடைகின்றன. என்று பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சீனாவில் கண்டுள்ளனர் .

திருக்குர்ஆனிலும் காதுகளை தட்டிக் கொடுத்து குகைவாசிகளை 300 வருடங்கள் தூங்க வைத்ததாக ,

"ஆகவே அக் குகையில் எத்தனையோ வருடங்கள் நித்திரை செய்யும்படி அவர்களுடைய காதுகளைத் தட்டிக் கொடுத்தோம் (குர்ஆன் : 18 : 11)

அக்குபஞ்சர் மருத்துவத்தில் தூக்கத்தை உண்டு பண்ணும் முக்கியசுக்குப் புள்ளிகள் காதில் அமைந்துள்ளன. அப் புள்ளியில் அக்கு ஊசியை செருகினால் தூக்கம் தூக்கமாக வரும் தூங்கி விடுகிறார்கள் .மூளை தூக்க நிலையில் வைத்து விடுகிறது.

உங்களது காதில் டிரையாங்குலர் போஸ்ஸா என்னும் பகுதியில் உள்ள ஷன்மேன் (Shenmen) அக்குபஞ்சுர் புள்ளி தூக்கத்தை வரவழைப்பதற்கும், தூக்கத்தில் விழிக்கும் தொந்திரவு இல்லாமல் தூங்குவதற்கும் அக்குபஞ்சர் சிகிச்சை அளிக்கப்படுகிறது.

காதில் ஆன்ட்டிராகஸ் (Anti tragus). என்னுமிடத்தில் உள்ள சப் கார்டெக்ஸ் (Sub-Cortex) என்னும் பகுதியில் அமைந்துள்ள அக்கு பஞ்சர் புள்ளி மனதை மயக்கத்தில் ஆழ்த்தி தூக்க நிலைக்கு கொண்டு செல்லும் சக்தி வாய்ந்த அக்குபுள்ளிகள் என்று தற்காலத்தில்தான் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

3270. அப்துல்லாஹ் இப்னு மஸ்வூத்(ரலி) அறிவித்தார்.

நபி(ஸல்) அவர்களிடம் காலை விடியும் வரை (தொழுகைக்கும் எழுந்திருக்காமல்) இரவில் தூங்கிய ஒரு மனிதரைப் பற்றிக் கூறப்பட்டது. அதற்கு அவர்கள், ‘அந்த மனிதரின் இரண்டு காதுகளிலும் – அல்லது அவரின் காதில் – ஷைத்தான் சிறுநீர் கழித்துவிட்டான்” என்று பதிலளித்தார்கள்.

ஷைத்தான் சிறுநீர் கழிக்கும் இடம் காதில் உள்ள ஆன்ட்டிராகஸ் (Anti tragus). என்னுமிடத்தில் உள்ள சப் கார்டெக்ஸ் (Sub-Cortex) என்னும் பகுதியாக இருக்கலாம்

காதின் வெளித்தோற்றமும் .கருவில் இருக்கும் குழந்தையின் அமைப்பும் நமது உள் உறுப்புகளின் தொடர்புடையதாக ஒன்றுக்கொன்று சார்ந்து இருப்பது இறைவனின் அதிசயம். சற்று நேரம் படத்தை உற்று நோக்கவும் .

1. ரப்புக்கு நன்றி செலுத்த வேண்டியதன் அவசியத்தை உணர்த்தும் உறுப்பு காது

وَجَعَلَ لَكُمُ السَّمْعَ وَالْأَبْصَارَ وَالْأَفْئِدَةَ قَلِيلًا مَا تَشْكُرُونَ

“அல்லாஹ்வே உங்களுக்கு செவிப்புலனையும், பார்வைகளையும், இதயங்களையும் படைத்தான். மிக குறைவாகவே அவனுக்கு நன்றி செலுத்துகிறீரகள் " ( அல்குர்ஆன்: 32: 9 )

2. இறைவனால் நியமிக்கப்பட்ட வேவு பார்க்கும் ஒற்றர்கள் காது..

حَتَّى إِذَا مَا جَاءُوهَا شَهِدَ عَلَيْهِمْ سَمْعُهُمْ وَأَبْصَارُهُمْ وَجُلُودُهُمْ بِمَا كَانُوا يَعْمَلُونَ

”அச்சமயம் பாவம் செய்த அவர்களுக்கு விரோதமாக அவர் களின் செவிகளும், கண்களும், அவர்களுடைய தோல்களும் அவர்கள் அவற்றின் மூலம் செய்தவற்றைப்பற்றி சாட்சி கூறும்”

(குர்ஆன்: 41: 20 )

3. மனிதனை பரிசோதிப்பதற்காக படைக்கப்பட்ட உறுப்பு காது ....

نَبْتَلِيهِ فَجَعَلْنَاهُ سَمِيعًا بَصِيرًا

"மனிதனை நாம் சோதிப்பதற்காகவே செவியுடையவனாகவும், பார்வையுடையவனாகவும் அவனை ஆக்கினோம்". (குர்ஆன்: 76: 2 )

4. மஹ்ஷர் பெருவெளியின் கேள்வி மன்றத்தில் இடம்பெறும் உறுப்பு காது ....

إِنَّ السَّمْعَ وَالْبَصَرَ وَالْفُؤَادَ كُلُّ أُولَٰئِكَ كَانَ عَنْهُ مَسْئُولًا

"நிச்சயமாக! செவி, பார்வை, இதயம் இவை ஒவ்வொன்றும் அது பற்றி (மறுமையில்) விசாரிக்கப்படக் கூடியதாய் இருக்கின்றது". ( குர்ஆன்: 17: 36 )

5. மனித படைப்பின் நோக்கத்தைக் கூறும் உறுப்பு காது...

وَاللَّهُ أَخْرَجَكُمْ مِنْ بُطُونِ أُمَّهَاتِكُمْ لَا تَعْلَمُونَ شَيْئًا وَجَعَلَ لَكُمُ السَّمْعَ وَالْأَبْصَارَ وَالْأَفْئِدَةَ لَعَلَّكُمْ تَشْكُرُونَ

"அல்லாஹ் உங்களை – உங்களுடைய அன்னையர்களின் வயிறுகளிலிருந்து நீங்கள் எதனையும் அறியாத நிலையில் வெளியாக்கினான்; மேலும், உங்களுக்குச் செவிப்புலனையும், பார்வைகளையும், இதயங்களையும் அமைத்தான்! நீங்கள் நன்றி செலுத்துவதற்காக!". ( அல்குர்ஆன்: 16: 78 )

6. சுவனத்து இன்பங்களை முதலில் அனுபவிக்கும் உறுப்பு காது....

"சாந்தி நிலவட்டும்! சாந்தி நிலவட்டும்! எனும் சொல்லைத்தவிர, வேறு வீணாண, பாவமான எந்தப் பேச்சுக்களையும் அவர்கள் செவியுற மாட்டார்கள் " (குர்ஆன்: 56: 25, 26 )

செவி – காது என்பது.. அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் பார்வையில்...

அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் தங்களின் துஆக்களில் "யாஅல்லாஹ்! என் செவிகளுக்கும், என் பார்வைகளுக்கும் உயிர் வாழும் காலம் வரையிலும் சுகத்தையும், இயங்கும் ஆற்றலையும் வழங்குவாயாக! என்று கேட்பார்கள்.

**அவயங்களின் அகமியங்கள் 14**
(மூக்கு)



மனித முகத்தை அழகாக்கி, முழுமைப்படுத்திக் காட்டுவது மூக்கு. முகத்திற்கு நடு நாயகமாக அமைந்து, எல்லோரையும் ஈர்க்கும் உறுப்பாக அது இருப்பதால்தான் பெண்கள் அதன் அழகுக்கு முத்திரை பதிப்பதுபோல் மூக்குத்தி அணிந்துகொள்கிறார்கள்.
மூக்கைப் பார்த்து அவர் எந்த நாட்டை சேர்ந்தவர், எந்த மாநிலத்தை சேர்ந்தவர், ஆணா- பெண்ணா என்று கூட அடையாளம் காண முடியும்.

மேலோட்டமாக பார்த்தால் அழகுக்கு முக்கியத்துவம் கொண்டதாக தோன்றும் மூக்கு, உடற்கூறுபடி பார்த்தால் ஆரோக்கியத்திற்கும் மிகவும் அடிப்படையானது. மூக்கின் வடிவம் பெரும்பாலும் தாத்தா, அப்பா, அம்மாவைப் போன்று பாரம்பரிய அடையாளமாக காணப்படும். கருவிலே வளரத் தொடங்கிவிடும் மூக்கு, பிறந்த பின்பும் கிட்டத்தட்ட 18 வயது வரை வளரும்தன்மை கொண்டது.
மனிதன் உயிர் வாழ அடிப்படையான சுவாச உறுப்பாக மூக்கு இருப்பதால், அது நுட்பமாகவும், பாதுகாப்பாகவும், நேர்த்தியாகவும் இயற்கையாகவே உருவாகிறது.

நடுச்சுவர் எலும்பு மூக்கை இரு பாகமாக பிரிக்கிறது. மேல் பாகத்தில் `நேசல் போன்' என்ற எலும்பு உள்ளது. உள்பக்க குழாய் போன்ற அமைப்பின் இரு பக்கமும் தசை இடம்பெற்றிருக்கிறது. இந்த தசை `ஏ.சி' மெஷின்போல் செயல்படும். அதாவது சுவாசிக்கப்படும் காற்றின் தட்பவெப்ப நிலையை சீராக்கி, நுரையீரலுக்கு அனுப்பும். இந்த தசை கோடை காலத்தில் சிறிதாகி, குளிர்காலத்தில் பெரிதாகும்.
மூக்கின் வழியாக காற்று சுவாசிக்கும்போது, காற்று மூக்கின் நுனியில் நுழைந்து நாசி குழிக்குள் செல்கிறது. காற்று பின்னர் தொண்டை வழியாக நுரையீரலுக்கு செல்லுகிறது . நுரையீரல்களிலிருந்து சுவாசித்த பழைய காற்றை மீண்டும் மூக்கின் வழியாக வெளியேற்றுகிறது.

மூக்கு உள்ளே இழுத்தல் மற்றும் வெளியேற்றும் இரு வேலைகளை செய்கிறது. நுரையீரலுக்கு செல்லும் முன், மூக்கு வெப்பமாகவும், ஈரமாகவும், காற்றை வடிகட்டவும் செய்கிறது. ஒரு நாளைக்கு மனிதன் சராசரியாக ஒரு நிமிடங்களில்16முதல் 18 முறை வரை மூச்சு விடுகிறான்.
வாசனை அல்லது மோப்பம் என்பது ஒரு வகையான இரசாயன உணர்வு ஆகும். சுவை போலல்லாமல் நூற்றுக்கணக்கான மோப்ப ஏற்பிகள் ஒவ்வொரு குறிப்பிட்ட மூலக்கூறு அம்சத்துடன் பிணைக்கப்பட்டுள்ளன. வாசனை மூலக்கூறுகள் பலவிதமான அம்சங்களைத் தனித்துவமாகக் கொண்டிருக்கின்றன, இவை குறிப்பிட்ட ஏற்பிகளை அதிகமாகவோ அல்லது குறைவாகவோ பாதிக்கின்றன.
வெவ்வேறு ஏற்பிகளிலிருந்து பெறும் குறிப்புகளின் கலவையை நாம் மூலக்கூறின் வாசனையாகக் கருதுகிறோம். பெரமோன் ஓர் உயிரினம் தன் இனத்தைச் சேர்ந்த மற்ற உயிரிகளுடன் தொடர்பு கொள்ளும் பொருட்டு அதன் சுற்றுப்புறத்தில் சுரக்கும் மணமுடைய வேதிப்பொருள் பெரமோன் எனப்படும். இத்தகைய பெரமோன்களை உணரக்கூடிய நியூரான்கள் மூக்கில் காணப்படுவதாகக் கூறப்படுகிறது
ஜலதோஷம் ஏற்படும்போது தொற்றுக்கிருமிகளின் தாக்குதலால் தசை வீங்கி விடும். காற்று செல்லும் வழியை அடைத்து மூச்சுவிட சிரமமாகும். அதைத்தான் நாம் மூக்கடைப்பு என்கிறோம்.
“உங்களில் ஒருவர் உறங்கி எழுந்ததும் (தமது மூக்கிற்குள் நீர் செலுத்தி) மூன்று முறை மூக்கு சிந்தட்டும். ஏனெனில் ஷைத்தான் அவர் உள்மூக்கில் தங்குகின்றான்.”அபூ ஹுரைரா(ரழி), முஸ்லிம்: 238.
தற்போது உலகத்தை பயமுறுத்திக் கொண்டிருக்கும் கொள்ளை நோய் வைரஸ் தொற்று அதிகமாக வாய், நாசி வழியாக பரவுவதாக மருத்துவர்கள் கூறுகிறார்கள்.

ஒருவர் வாய் மற்றும் நாசியை தொடர்ந்து சுத்தமாக வைத்திருந்தால் இந்த பயங்கர நோயிலிருந்து விடுதலை பெறலாம். ஒருவர் ஐவேளைத் தொழுபவராக இருந்து உளூச் செய்யும்போது வாய் மற்றும் நாசியை தூய்மை செய்து வந்தால் இந்த தொற்று நோயிலிருந்து பாதுகாப்பு பெறலாம்.
மனிதனைத் துல்லியமாக வேறுபடுத்தி அறிந்திட கைரேகையைத் தான் நிபுணர்கள் பயன்படுத்தி வருகின்றனர். ஒருவரது கைரேகையைப் போல் இன்னொருவரின் கைரேகை இருப்பதில்லை என்பது தான் இதற்குக் காரணம். இதற்காகவே முக்கியமான ஆவணங்களில் கைரேகையும் பதிக்கப்படுகிறது .
ஆனால் மனிதனை தனித்துவ அடையாளம் காண்பது பற்றி
திருக்குர்ஆன் பேசும் போது மனிதனின் மூக்கில் அடையாளம் இடுவோம் என்று கூறுகிறது.
நம் வசனங்கள் அவனிடம் ஓதப்பட்டால், “இவை முன்னோர்களின் கட்டுக்கதைகள்” என்று அவன் கூறுகின்றான். விரைவிலேயே அவனுடைய மூக்கின் மீது அடையாளமிடுவோம்
(குர்ஆன் : 68:15,16)
கைரேகைகள் நம் கண்களுக்குத் தெரிகிறது. இதை வெளிப்படையாக நாம் பார்த்து அறிந்து கொள்கிறோம். ஆனால் மனிதனின் மூக்கில் ஏதாவது அடையாளம் இடப்பட்டிருப்பது நமக்குத் தெரிகிறதா என்றால் நிச்சயமாக இல்லை எனலாம்.
மூக்கில் எந்த அடையாளமும் போடப்பட்டது நமக்குத் தெரியாவிட்டாலும் இப்போது மூக்கில் அடையாளம் போடப்பட்டுள்ளதை நிபுணர்கள் கண்டு பிடித்துள்ளனர்
இது குறித்து தினகரன் கோவை பதிப்பில் ( 7-3-2010) வெளிவந்த செய்தி இதை உறுதிப்படுத்துகிறது
தீவிரவாதிகள், கிமினல்களைக் கண்டுபிடிக்க அவர்களது மூக்கு உதவும் என்று லண்டன் பாத் பல்கலைக் கழக நிபுணர்கள் தெரிவித்துள்ளனர். அதற்கான புதிய தொழில் நுட்பத்தை அவர்கள் கண்டு பிடித்துள்ளனர். மனிதர்களின் பலவிதமான மூக்கு அளவுகளைக் கொண்டு அவர்களைப் பற்றி துல்லியமான விவரங்களைக் கண்டறியலாம் என்கின்றனர். அவர்கள் அதன்படி போட்டேபேஸ் என்ற உயர் தொழில் நுட்ப ஸ்கேனர் மூலம் மூக்கைப் பல கோணங்களில் படம் எடுக்க வேண்டும்
பிறகு ரோமன் கிரீக். நுபியான். ஹாக், ஸ்னப் மற்றும் டர்ன் அப் என்ற ஆறு வடிவங்களில் மூக்கை ஆய்வு செய்ய வேண்டும். பிறகு மூக்கின் விவரங்கள் முனை மற்றும் துளைகள் ஆகியவற்றை கம்ப்யூட்டர் சாஃப்ட்வேர் மூலம் துல்லியமாக சோதனை செய்யப்படும்.

இது பற்றி டாக்டர் அட்ரியன் ஈவன்ஸ் கூறுகையில், "கைரேகை ஸ்கேனை விட மூக்கு ஸ்கேன் மூலம் ஒருவரை எளிதாக அடையாளம் கண்டு பிடிக்கலாம். அதன் மூலம் குற்றவாளியின் தாயகம் இனம் ஆகியவற்றுடன் கைரேகையைப் போல் ஒவ்வொருவரது மூக்கு அமைப்பும் வேறுபடுவதால் அடையாளம் காண்பது எளிது

**அவயங்களின் அகமியங்கள் 15**




தொண்டை(Throat) என்பது தலையினையும் உடலினையும் இணைக்கும் கழுத்தின் முன்புற பகுதியாகும்.

தொண்டைக்குழி என்பது தொண்டையின் அடிப்பகுதி, அதாவது மார்பின் மேற்பகுதியை குறிக்கிறது

"காது, மூக்கு, தொண்டை " இந்த மூன்றும் ஒன்றோடொன்று தொடர்புள்ளவை .

வாயிலிருந்து உணவுக்குழாயானது, தொண்டை வழியாக வயிற்றுக்குப் போகிறது. அதே போல் மூக்கிலிருந்து சுவாசக் குழாயும் தொண்டை வழியாக உணவுக்குழாயை "கிராஸ்" செய்து நுரையீரலுக்குப் போகிறது

சிலர் சாப்பிடும் போது பேசிக் கொண்டும், சப்தமிட்டுக் கொண்டும் சாப்பிடுவார்கள் பேசுவதற்கு சுவாசக் குழாய் திறக்க வேண்டும் உணவுப் போய்க் கொண்டிருக்கும்.

இந்த சமயத்தில் உணவுப் பொருள் தவறுதலாக சுவாசப் பாதையில் நுழைந்துவிடும் இதை வெளியேற்றும் முயற்சியில் சுவாசக்குழாய் இறங்கும் உள்ளே நுழைந்த உணவுப் பொருளை 'கழுத்தைப் பிடித்து' வெளியே தள்ளும். இந்த செல்பாட்டைத் தான் நாம் "புரையேறுகிறது" என்கிறோம் இதை "Watch Dog mechanism" என்று மருத்துவத் துறையில் சொல்வார்கள்

நாம் சாப்பிடும் உணவு, உள்ளே இறங்கும்போது ( **#wheezing** while **#Eating** ), தவறான பாதையில் நுழைந்துவிட்டால், உள்ளிழுக்க வேண்டிய மூச்சு தடைபட்டு, திணறல் ( wheezing ) ஏற்படும்.

மூச்சுத்திணறல் ( wheezing ) ஏற்பட்டால், 40 வினாடிகளில் மயக்கம் ஏற்பட்டு, நான்கு நிமிடங்களில் மரணமே ஏற்பட்டுவிடும். உடனடி மருத்துவ சிகிச்சை செய்து, உயிர் காப்பாற்றப்பட்டாலும், மூளையில் நிரந்தர பாதிப்பு ஏற்படும். சாப்பிடும்போது, இது போன்ற மூச்சுத் திணறலை பெரும்பாலானோர் சந்திக்கின்றனர்.

புரை ஏறும்போது செய்ய வேண்டிய முதலுதவிகள்

கண்கள் சிவப்பாகி, காற்றை உள்ளிழுக்கும் வகையில், வேகமாக மூச் சிழுப்பர். தொடர்ந்து, பெரிய அளவில் இருமல் ஏற்படும். பேச முடியாம ல், தொண்டையைப் பிடித்து கொள்வர். உடலில் ஆக்சிஜன் குறைந்து, முகம் நீலநிறமாகிவிடும். பின், இருமல் மெதுவாக குறைந்து, மயக்கம் ஏற்படும். உடனடி மருத்துவ உதவி கிடைக்காவிட்டால், உயிரிழக்க நேரிடும்.

புரை ஏறும்போது, அருகில் நிற்பவர்கள், முதுகில் தட்டி, அதை சரி செய்ய முயல்வர். இது பெரும்பாலும் ஆபத்தில் முடியும். முதுகில் வேகமாக தட்டும் போது, உணவு துகள்கள் வெளியேறலாம் அல்லது மூச்சுக்குழாயில் மேலும் இறங்கி விடலாம்.

இது, அரைகுறை அடைப்பை முழுமையாக்கி விட்ட கதையாகி விடும். தண்ணீர் குடிக்க சொல்வது, வாழைப்பழம் அல்லது வேறு திட உணவுகளை சாப்பிடச் சொல்வது, பிரச்னையை மேலும் சிக்கலாக்கி, ஆளை பலி வாங்கிவிடும்.

சம்பந்தப்பட்ட நபர் மயக்கமடையாமல் இருந்து, தொடர் இருமி, நன்றாக மூச்சுவிட்டு, பேசிக் கொண்டிருந்தார் என்றால் , அவரை கீழே குனிய வைத்து, இன்னும் அதிகமாக இருமச் சொல்ல வேண்டும். உள்ளங்கையால், மேல் முதுகை தட்டவேண்டும்"

நரகவாசிகள் சதா வேதனை செய்யப்பட்டுக் கொண்டேயிருப்பார்கள் ஒரே அழுகை கூப்பாடு எந்நேரமும நரகத்தில் கேட்டுக் கொண்டே இருக்கும் அதே நேரத்தில் அவர்களுக்கு உணவும் அவர்களின் தேகத்திலிருந்து வேதனையால் வடியும் சீழ்தான் அவர்களுக்கு நீராகப் புகட்டப்படும்.

அதனை அவர்கள் மிகக் கஷ்டத்தோடு சிறுகச் சிறுக விழுங்குவார்கள் எனினும் அது அவர்களுடைய தொண்டைகளில் இறங்காது விக்கிக் கொள்ளும்.

ஒவ்வொரு திசைகளிலிருந்தும் மரணமே அவர்களை நோக்கி வந்து கொண்டேயிருக்கும். எனினும் அவர்கள் சாகமாட்டார்கள் இதற்குப் பின்னும் கடினமான வேதனையும் அவர்கள் சந்திக்க வேண்டும் (குர்ஆன் 14: 16, 17)

காது சரியாக கேட்பதற்குத் தொண்டையும் ஒரு வகையில் உதவி செய்கிறது. காதுக்குள் அழுத்தத்தைச் சமச்சீராக வைத்திருப்பதற்கு தொண்டையின் ஒத்துழைப்பு அவசியம். தொண்டையில் இருந்து புரையேறி ஒற்றை சோற்றுப் பருக்கை மூக்கு வழியே வருது இதனால்தான். தவிர, இந்த மூன்றையுமே காற்றை அடிப்படியாகக் கொண்டு இயங்கும்

விலக்கப்பட்ட கோதுமை கனியை ஆதம் (அலை) அவர்கள் உண்டதுதான் தாமதம், தாம் செய்த தவறை ஆதம் (அலை) அவர்கள் உணர்ந்து தம் விரலை தம் தொண்டையில் விட்டு , அதனை எடுக்க முயன்றார்கள் .எனினும் அது உள்ளே போய் விட்டது. அடுத்தகணம் ஆதம் , ஹவ்வா இருவரின் சுவனத்து ஆடைகளும் அவர்களுடைய உடலை விட்டு நொடியில் அகன்றது

விலக்கப்பட்ட கனியை வயிற்றுக்குள் செல்லாமல் வெளியே எடுத்து விட வேண்டும் என்று பதறியடித்து தன் விரலை தொண்டை வரை விட்டதால் அக்கனியானது தொண்டையில் நின்று பின் வயிற்றில் இறங்கியது .இதன் காரணமாகவே ஆதம் (அலை) அவர்களின் ஆண் மக்களுக்கு தொண்டையில் முடிச்சு ஏற்பட்டது என்று கூறப்படுகிறது .எனவேதான் அதற்கு ஆங்கிலத்தில் "ஆதத்தின் ஆப்பிள் (Adam's Apple) எனப் பெயர் ஏற்பட்டது .

அக் கோதுமைக்கனி அவ்விருவரின் வயிற்றுக்குள் முப்பது நாட்கள் இருந்தது . இதற்குப் பிராயச்சித்தமாகவே ரமலானில் முப்பது நாட்கள் நோன்பு நோற்கக் கடமையாக்கப்பட்டது என்று மற்றொரு வரலாறு கூறுகிறது.

ஒரு கிராமவாசி நபிகளாரை சந்தித்து இஸ்லாத்தை ஏற்றார். ஹிஜ்ரத்தும் செய்தார். ஒரு போர் முடிந்து நபியவர்கள் கனீமத் பொருளை பங்கிட்டுக் கொடுத்த நேரத்தில் அவர் வெளியே சென்றிருந்தார். அவர் வந்தவுடன் அவரிடம் கொடுங்கள் என நபியவர்கள் கூற, அவ்வாறே அவர் வந்தவுடன் தரப்பட்டது. இது என்ன என்று கேட்டார்.

நபி (ஸல்) அவர்கள் உங்களிடம் தரச் சொன்னார்கள் என்று கூற, மனச்சங்கடத்துடன் அதை வாங்கியவாறு நபி (ஸல்) அவர்களிடம் நான் இதை எதிர்பார்த்து இஸ்லாத்தை ஏற்கவில்லை. மாறாக நான் உங்களுடன் ஒரு போரில் கலந்து கொள்ள வேண்டும். எதிரிகளைக் கொல்ல வேண்டும். இறுதியில் என் தொண்டையின் இந்தப் பகுதியில் ஒரு அம்பு பாய்ந்து வந்து, நான் ஷஹீதாக்கப்பட வேண்டும். என்பதே என் நோக்கம் என்றார்.

நபி (ஸல்) அவர்கள் உங்களின் நோக்கம் அதுவாக இருந்தால், அல்லாஹ் அவ்வாறே ஆக்கட்டும். என்றார்கள்.

அதன் பின் நடந்த போரில் அவர் கொல்லப்பட அவரை கொண்டு வரும்படி நபி (ஸல்) அவர்கள் கூறியபோது அவர் கொண்டு வரப்பட்டார். அவரா இவரா என்று நபி ஸல் கேட்டார்கள்.

ஏனெனில் அவரின் பெயர் கூட தெரியாது. அவர் தன் பெயரை வெளிப்படுத்தவுமில்லை. மேலும் அவர் எப்படி விரும்பினாரோ அவ்வாறே அவரது தொண்டையில் அம்பு பாய்ந்து ஷஹீதாகி இருந்தார். அவருக்கு தம் ஆடையை கஃபனாக நபி ஸல் அணிவித்து அவருக்கு துஆ செய்தார்கள்" ஆதாரம் : Sunan an-Nasa'i 1953

அவயங்களின் அகமியங்கள் 16
( மீண்டும் உயிர்பிக்க உதவும் முதுகெலும்பின் நுனி )




பன்முகத் திறமை கொண்ட முதுகெலும்பு, உடம்பின் மொத்த எடையையும் தாங்குகிறது . தலையை நினைத்த மாத்திரத்தில் எந்தப் பக்கம் வேண்டுமானாலும் திருப்புவதற்கு வசதியாக படைக்கப்பட்டுள்ளது. என்றாலும் முதுகெலும்பின் முக்கியப் பணி அதனுள்ளே இருக்கும் 45 செ.மீ. நீள முதுகுத்தண்டை (spinal cord) பத்திரமாகப் பாதுகாப்பதுதான்.
இந்த முதுகுத்தண்டு வெள்ளை நிறத்தில் மெல்லிய கேபிள்போல் 1 செ.மீ., அடர்த்தியுடன் இருக்கும். கழுத்துக்கு கீழே உடம்பின் எல்லா நடவடிக்கைகளையும் லட்சக்கணக்கான தகவல்களையும் மூளைக்கு அனுப்பிக்கொண்டேயிருப்பது முதுகுத்தண்டுதான். இதற்கு ஏதாவது ஆபத்து ஏற்பட்டால். அப்புறம் வாழ்க்கை முழுவதும் சக்கர நாற்காலியிலேயே இருக்க வேண்டியதுதான்.
அதனால்தான் இதற்கு மூன்று அடுக்குப் பாதுகாப்புக் கொடுத்து, பத்திரமாகப் பாதுகாத்து முதுகெலும்பு. முதலில் அதிர்வுகளைத் தாங்கும் விதமாக இதனை ஒரு திரவத்தினுள் வைக்கப்பட்டிருக்கிறது. அதற்கு மேலே இரண்டு அடுக்குகளாக எலும்புக்கூடு உள்ளது. 31 ஜோடி நரம்புகள் முதுகுத்தண்டிலிருந்து வெளியில் வரும். இதில் பாதிக்கு மேல் மூளைக்குத் தகவல்களை அனுப்பும் சென்சரி (உணர்வு) நரம்புகள். மீதி இருப்பவை மூளையில் இருந்து தகவல்களைப் பெற்று, தசைகளுக்கு செய்ய வேண்டிய வேலைகளைக் கட்டளையிடுபவை (இயக்க நரம்புகள்).

சில அவசரமான சந்தர்ப்பங்களில் மூளையின் கட்டளைக்கோ, மூளைக்கு தகவல் அனுப்புவதற்கோ நேரத்தை வீணடிக்க இவை விரும்புவதில்லை. அவசரமாக சமைத்துக் கொண்டிருக்கும்போது தவறுதலாக சூடான ஸ்டவ்வில் விரல் பட்டு விடுகிறது. உடனே அனிச்சைச் செயலாக முதுகெலும்பின் முதுகுத் தண்டே செயல்பட்டு, பட்டென்று விரலை அதிலிருந்து எடுக்கச் சொல்லி விடும்.
முதுகெலும்பு அமைப்பு ஒரு பொறியியல் அதிசயம். முதுகெலும்பு தலையின் கீழே கழுத்துப் பகுதியில் இருந்து, முதுகின் அடிப்பாகம் வரை இருக்கிறது . முதுகெலும்பு எலும்பின் இரண்டு பக்கமும் சீரான இடைவெளியில் 33 கண்ணிகள் (vertebne) அடுக்கப்பட்டுள்ளன.

முதுகெலும்பு ஆரம்பிக்கும் இடத்தில்(கழுத்துப் பகுதி) 7 கண்ணிகள் உள்ளன. தலைக்கு உதவி செய்யும் இவை அசாதாரணமான அசைவுகள் தரக்கூடியன. கீழே, மேலே, பக்கவாட்டில் என்று எல்லா பக்கங்களிலும் தலையைத் திருப்புவதற்கு இந்த இடமே உதவுகிறது.
கொஞ்சம் கீழே வந்தால், 13 கண்ணிகள் சுவாசப் பகுதியில் உள்ளன. இதை சுவாசக் கண்ணிகள் என்றே அழைக்கலாம். இந்த இடத்தில் பிரச்சினை வருவது அபூர்வம். பின்பக்கம் இணைந்திருக்கும் இவை அசைவதற்கு எந்த மார்பெலும்புகளுடன் அவசியமும் இல்லை.

கீழே இடுப்புப் பகுதியில் 5 கடினமான கண்ணிகள் உள்ளன. உங்களின் அதிகப்படியான உடல் எடையைத் தாங்கும் பகுதி இதுதான். இந்த 5ம் சேர்ந்து காக்சிக்ஸ் என்ற வால்பகுதியாக உள்ளது.
இந்த காக்சிக்ஸ் coccyx பற்றி சொல்லியாக வேண்டும்.
‘‘மனிதனின் உடலில் எலும்பு ஒன்று உள்ளது. அதை பூமி ஒருபோதும் புசிக்காது. அதை வைத்தே மீண்டும் மறுமையில் அவன் படைக்கப்படுவான்’’.
அப்போது அருகில் இருந்த தோழர்கள் கேட்டனர் ‘|அது எந்த எலும்பு என்று எங்களுக்கு விளக்கிச் சொல்ல முடியுமா?’|
அதற்கு நபிகளார் பதில் அளிக்கும்போது, ‘உள்வால் எலும்பின் நுனி’ என்றார்கள். (முஸ்லிம்–5662)

ஜெர்மன் விஞ்ஞானி ஹான்ஸ் ஸ்பீமேன் என்பவர் உள்வால் எலும்பு நுனி குறித்து தீவிரமாக ஆராய்ந்தார். அதனை பல ஆயிரம் டிகிரி வெப்பத்தில் நெருப்பில் எரிக்கவும், வீரியம் மிக்க அமிலங்களின் கலவை கொண்டு அதனை கரைக்கவும் முயற்சி செய்தார். அதில் சிறு மாறுதலைக் கூட அவரால் செய்ய முடியவில்லை. ஆராய்ச்சியின் முடிவாய் திருக்குர்ஆன் வார்த்தைகளை உண்மைபடுத்தி உலகிற்கு அறிவித்தார். இப்படி எத்தனையோ அத்தாட்சிகளைக் கொண்டு அற்புத படைப்பாய் மனிதனை அல்லாஹ் படைத்திருக்கின்றான். சிந்தித்து பார்க்கும் மக்கள் அவனுக்கு சிரம் பணிய வேண்டாமா?

## அவயங்களின் அகமியங்கள் 17

நாக்கு - ( ஒரு 'நா'யகனும் , 32 நட்சத்திரங்களும் )




நரம்பில்லா நாக்கு நாலுவிதமாகப் பேசும்...'
எலும்பில்லா நாக்கு எப்படி வேண்டுமானாலும் வளையும்...'
'இரட்டை நாக்கு நேரத்துக்கு ஏற்றபடி மாறி மாறி பேசும்...'
நாக்கு பற்றி இப்படி எல்லாம் கூறுவோர் உண்டு. ஆனால் நாக்கு மொத்தமும் தடைகளாலும் நரம்புகளாலும் ஆனதுதான்.
பேச்சுக்கு அடிப்படையான உறுப்பு நாக்கு; நீளம் வெறும் 10 செ.மீ எடை 56 கிராம் வினாடிக்கு, 500 முதல், 2 ஆயிரம் வரை ஒலி அலைகளை வெளிப்படுத்தும் திறன் கொண்டது. நிமிடத்துக்கு, 160 சொற்களைப் பேசுகிறது. இதனால் தான் சிறந்த பேச்சாளரை, நாவன்மை உள்ளவர் என்கின்றனர்.
நாக்கின் மையப்பகுதிக்கு, அமைதி மண்டலம் என்று பெயர். இந்த இடத்தில் பேச்சலையை வெளிப்படுத்தும் சக்தி, மிகக்குறைவு. அங்கு சுவை அரும்புகளும் கிடையாது. அதனால் நாக்கின் மையம் சும்மா இருக்கும் சதைப் பகுதிதான்.பேச்சு, தொண்டைக் குழிக்குள் இருந்து தான் வருகிறது. பேச்சலையை புரட்டி சத்தமாக சொற்களை வெளியிடும் ஒழுங்கை தான் செய்கிறது நாக்கு.

அதன் மற்றொரு உன்னத பண்பு, உணவின் அளவை அறிதல். உணவு என்ற உடனேயே அதோடு ஒட்டி வருகிற அறுசுவை என்ற அடைமொழி ஞாபகத்துக்கு வரும்.இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கசப்பு, கார்ப்பு ஆகிய சுவைகளை கச்சிதமாகப் பிரித்தறியும் திறன் நாக்குக்கு இல்லை.அதாவது, நாக்கில் மட்டும் அறுசுவைகளையும் சோதித்து தெரிந்து கொள்ள முடியாது.
அறிவியல் முடிவின்படி இனிப்பு, உவர்ப்பு, கார்ப்பு, கசப்பு போன்ற சுவைகளை மட்டுமே, நாக்கால் அறிந்து உணர முடியும். பின் எப்படி, புளிப்பு, துவர்ப்பு போன்றவற்றை அறிய முடிகிறது. இதற்கென்று வாயின் மேல் அண்ணப் பகுதியில் விசேஷ அமைப்பு உள்ளது; இதன்மூலம் இந்த இரு சுவைகளையும் உணர்ந்து கொள்கிறது மூளை. இனிப்பை நாக்கு நுனிப்பகுதியிலும், உவர்ப்பை நாக்கின் பக்கவாட்டிலும் , புளிப்பை நாக்கின் பக்கவாட்டின் மேலேயும், கசப்பை நாக்கின் பின் பகுதியிலும் சுவைக்கப்படுகிறது.
நம்முடைய உடலில் நாம் பெரிதாகக் கண்டுகொள்ளாத பகுதி என்றால் அது நாக்கு தான். தினமும் இரண்டு வேளை பல் துலக்கினாலும் நம்மில் பலர் நாக்கை சுத்தம் செய்வதில்லை. ஆனால் நாம் சாப்பிடும் ஒவ்வொரு பொருளையும் அதன் சுவை மாறாமல் நம்மை ரசித்து சாப்பிட வைப்பது நாக்கில் உள்ள சுவை நரம்புகள் தான். இனி மேலாவது உங்களுடைய நாக்கையும் கொஞ்சம் கவனியுங்கள். அது உங்கள் உடல் நலனைப் பற்றிய பல அறிகுறிகளை வெளிப்படுத்தும்.

நாக்கில் பாலம்பாலமாக வெடித்து அங்காங்கே வெள்ளைநிறத்தில் கோடுகள் இருந்தால் அது உங்களுடைய உடலில் ஈஸ்ட் தொற்று இருப்பதற்கான அறிகுறியைக் குறிக்கும்.

நாக்கின் நுனிப்பகுதி நல்ல ரத்த சிவப்பு நிறத்தில் தடிப்புடன் காணப்பட்டால் அது தோல் புற்றுநோய்க்கான அறிகுறியாகக் கூட இருக்கலாம்.
நாக்கில் வெந்ததுபோலவும் கொப்புளங்கள் போலவும் இருந்தால் அது உங்களுடைய உடம்பில் ஹார்மோன் மாற்றங்கள் உண்டாகின்றன என்று அர்த்தம்.
நாக்கு பள்ளமும் மேடுமாக லேசாக வெடித்திருந்தால் பெரிதாக பயப்படத் தேவையில்லை. ஆனால் இதுவே வலியுடன் இருந்தால் மருத்துவரிடம் ஆலோசனை பெறுவது நல்லது.
நாக்கில் சொரசொரப்பாகவும் சற்று வலியுடனும் இருந்தால் நீங்கள் அதிக மன அழுத்தத்தில் இருக்கிறீர்கள் என்று அர்த்தம். சளி பிடித்திருந்தாலோ அல்லது அல்சர் இருந்தாலோ இதுபோன்ற அறிகுறிகள் இருக்கும்.
மனிதனின் உயர்வுக்கும் தாழ்வுக்கும் காரணமாகத் திகழ்வது எது என்றால் நாக்கு என்று சொல்லலாம்.
ஒருவரிடம் தன்னடக்கம் இருக்க வேண்டுமென்றால் அவனிடம் நாவடக்கம் இருக்க வேண்டும். இந்த நாவை எவ்வாறு பயன்படுத்துகின்றோமோ அதன்படியே முடிவு இருக்கும்.
இந்த நாக்கில் நல்ல பெயர் கிடைத்து சிறந்த பெயரை வாங்கி மறுமையிலும் சிறப்பிடத்தைப் பெறுகின்றார்கள்.
சிலர் இந்த நாவால் தான் முறையற்ற வழியில் பேசி, மனிதர்களில் மட்டமான பட்டியலில் இடம் பெறுவது மட்டும் அல்லாமல், மறுமையில் அல்லாஹ்வின் கோபத்திற்கு ஆளாகின்றார்கள்.
اِذْ تَلَقَّوْنَهٗ بِاَ لْسِنَتِكُمْ وَتَقُوْلُوْنَ بِاَ فْوَاهِكُمْ مَّا لَيْسَ لَـكُمْ بِهٖ عِلْمٌ وَّتَحْسَبُوْنَهٗ هَيِّنًا وَّهُوَ عِنْدَ اللّٰهِ عَظِيْمٌ
(ஒருவரிடமிருந்து ஒருவராக இப்பொய்யான) அவதூற்றை நீங்கள் திட்டமாக அறியாத விஷயத்தை உங்கள் நாவுகளால் எடுத்துக் கொண்டு, நீங்கள் உங்கள் வாயால் கூறிக்கொண்டு திரிகிறீர்கள். இதனை நீங்கள் இலேசாகவும் மதித்துவிட்டீர்கள். ஆனால், இதுவோ அல்லாஹ்விடத்தில் (பாவங்களில்) மிக்க மகத்தானது. (குர்ஆன் : 24:15)

எந்த ஒரு விஷயம் நமக்கு தெளிவாகத் தெரியவில்லையோ அதைப் பற்றிப் பேசக் கூடாது. அதுபோல் பேசுவது பல வழியிலும் மற்றவர்களுக்குத துன்பம் தருவது மட்டுமல்லாமல், எவ்வளவு பெரிய தவறாகி விடுகிறது.
நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள் : நீங்கள் பேசினால் நல்லதைப் பேசுங்கள். அல்லது அமைதியாக இருந்து விடுங்கள் என்று கூறியுள்ளார்கள். (ஆதாரம் : புகாரி, முஸ்லிம்)
ஏனெனில் மறுமையில் ...

يَّوْمَ تَشْهَدُ عَلَيْهِمْ اَلْسِنَـتُهُمْ وَاَيْدِيْهِمْ وَاَرْجُلُهُمْ بِمَا كَانُوْا يَعْمَلُوْنَ
(நபியே! ஒரு நாளை நீங்கள் அவர்களுக்கு ஞாபகமூட்டுங்கள்.) அந்நாளில் அவர்களுடைய நாவுகளும், அவர்களுடைய கைகளும், அவர்களுடைய கால்களும் (கூட) அவர்களுக்கு விரோதமாக அவர்கள் செய்தவைகளைப் பற்றி சாட்சியம் கூறும். (குர்ஆன் : 24:24)

ஒரு அடியான் சில வார்த்தைகளை மொழிகிறான். ஆனால் அதைப் பற்றி நல்லதா அல்லது கெட்டதா என்று சிந்திப்பதில்லை. இதன் காரணமாக கிழக்கிற்கும் மேற்கிற்கும் இடைப்பட்ட தூரம் அளவிற்கு நரகத்தின் அடிப்பாகத்தில் வீழ்ந்து விடுகிறான் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அறிவிப்பாளர் அபூஹ{ரைரா (ரலி) ஆதாரம் : புகாரி)

எந்த அளவுக்கு இந்த புறம் பேசுவதை நபி (ஸல்) அவர்கள் ஹதீஸில் சொல்லியுள்ளார்கள். ஒருமுறை நபி (ஸல்) அவர்கள் ஸஹாபாக்களிடம் புறம் பேசுதல் என்றால் என்னவென்று உங்களுக்குத் தெரியுமா? என்று கேட்டார்கள். அதற்கு நாங்கள் அல்லாஹ்வும் அவனது தூதரும் நன்கறிந்தவர்கள் என்று பதிலளித்தோம்.
அப்போது நபி (ஸல்) அவர்கள் புறம் பேசுதலைப் பற்றிக் கூறினார்கள் உனது சகோதரன் எதை வெறுப்பானோ அதை அவன் இல்லாத போது கூறுவதாகும். அப்போது நான் கூறுவது எனது சகோதரனிடத்தில் இருந்தாலுமா என்று கேட்டார்கள் அதற்கு நபி (ஸல்) அவர்கள் நீ சொல்வது உன்னுடைய சகோதரனித்தில் இருந்தால் அவதூறு என்று கூறினார்கள். (முஸ்லிம்)

மிஃராஜின் போது நான் ஒரு கூட்டத்தைக் கடந்து சென்றேன். அக்கூட்டத்தினருக்கு இரும்பினாலான நகங்கள் இருந்தன. அவர்கள் அதன் மூலம் அவர்கள் தங்கள் முகங்களையும் நெஞ்சங்களையும் காயப்படுத்திக் கொண்டிருந்தனர்.
அப்போது ஜிப்ரீலே, அவர்கள் யார் என்று கேட்டேன். இவர்கள் மனிதர்களின் மாமிசத்தைச் சாப்பிட்டவர்கள் (புறம் பேசியவர்கள்). மனிதர்களின் கண்ணியத்தில் கை வைத்தவர்கள் என்று விளக்கமளித்தார்கள். (அறிவிப்பாளர் அனஸ் (ரலி) ஆதாரம் : அஹ்மது)

புறம் நாம் பேசாமல் இருக்க வேண்டும். அடுத்தவர் பேசும் பொழுது அதை நாம் தடுத்து விட வேண்டும். அல்லது அந்த இடத்தை விட்டுச் சென்று விட வேண்டும். புறம் பேசுவதைத் தவிர்ப்பதற்கு நபி (ஸல்) அவர்கள் கூறிய பொன் மொழிகளை மனதில் பதிய வைத்துக் கொள்ள வேண்டும்.
முஸ்லிம்களில் எவர் சிறந்தவர் என்று நபி (ஸல்) அவர்களிடம் கேட்ட பொழுது, எவர்களுடைய நாவினாலும் கரத்தினாலும் ஏனைய முஸ்லிம்கள் பாதுகாப்பைப் பெறுகின்றார்களோ அவர்களே
என்று நபி (ஸல்) அவர்கள் பதிலளித்துள்ளாரகள். (அறிவிப்பாளர் அப்துல்லாஹ் பின் அம்ர் (ரலி) ஆதாரம்: புகாரி, முஸ்லிம்

‘எவர் தமது இரண்டு தாடைகளுக்கு மத்தியில் இருக்கும் நாவுக்கும், இரண்டு தொடைகளுக்கு மத்தியில் இருக்கும் பாலின உறுப்புக்கும் பாதுகாப்பு பொறுப்பை ஏற்றுக்கொண்டாரோ, அவருக்கு நான் சொர்க்கத்தின் பொறுப்பை ஏற்றுக் கொள்கிறேன்’ என நபி (ஸல்) கூறினார்கள். (அறிவிப்பாளர் : ஸஹ்ல் பின் ஸத் (ரலி) புகாரி)
நரகில் எது மனிதனை அதிகம் நுழைவிக்கும்? என்று கேட்கப்பட ,
‘நாவும் மறை உறுப்பும்’ என பதிலளித்தார்கள்.
அறிவிப்பாளர்: அபூஹுரைரா (ரலி) நூல்: திர்மிதி 1927

**அவயங்களின் அகமியங்கள் 18**
(என்றுமே நிறையாத பை - இரப்பை)

வயிறு பற்றித்தான் எப்போதும் மக்ககளுக்குக் கவலை, பயம், மூன்று வேளையும் நீங்கள் என்ன சாப்பிடுகிறீர்களோ அதை வாங்கி வைத்துக்கொள்ளும் பைதான் என்னும் இரைப்பை
நபி (ஸல்) அவர்கள் கூற, நபித்தோழர் மிக்தாம் இப்னு மஃதி(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். “ஆதமின் மகன் வயிறை விடக் கெட்ட ஒரு பையை நிரப்புவதில்லை. ஆதமுடைய மகனின் முதுகெலும்பை நிமிர்த்துவதற்கு சில கவளம் உணவே அவனுக்குப் போதுமானது!
அவசியமானால் அவனுடைய வயிற்றில் மூன்றில் ஒரு பகுதி உணவுக்காகவும், மற்றொரு பகுதி தண்ணீருக்காகவும், பிரிதொரு பகுதி மூச்சு விடுவதற்காகவும் (காலியாக) இருக்கட்டும்.
(நூல் : திர்மிதீ)

இரப்பை வயிற்றின் மேல்புறம் இடப்பக்க எலும்புக் கூட்டின் கீழே உணவுக் குழாய்க்கும் சிறு குடலுக்கும் நடுவே இருக்கிறது . காலியாக இருக்கும்போது காற்றுப் போன பலூன் போல இருக்கிறது. நன்றாகச் சாப்பிட்டு உணவை நிரப்பிவிட்டால் மேல்புறம் பெரிதாகவும் கீழ்ப்புறம் சிறியதாகவும் பார்ப்பதற்கு ஆங்கில எழுத்து 'ஜே ' போல ஆகிவிடுகிறது.
வாசனை சம்பா பச்சரியில் கொரவன் அப்பாஸின் பிரியாணி மணம், சமையல் முறைகளின் போது ஏற்படும் சத்தம், சாப்பிடும் தட்டோ, கஞ்சி குடிக்கும் மண் கொட்ராவோ இவற்றின் நினைப்புப் போன்றவைகள் கூட, அவ்வுணவை சாப்பிட்டுவிட வேண்டும் என்ற உணர்வில் பசியைத் தூண்டுவதும் இயல்பான ஒன்று. இந்த உணர்வானது, நரம்புத் தூண்டல்கள், சமிக்ஞைகள், ஹார்மோன்கள் ஆகியவற்றின் கூட்டுச் செயல்பாடாகும். மனித செரிமான மண்டலத்தில் இறைவன் செய்திருக்கும் மாபெரும் அருள் ஏறக்குறைய 30 வகைகளுக்கும் மேற்பட்ட செரித்தல் ஹார்மோன்கள் உற்பத்தியாகின்றன. இதனாலேயே, செரிமான மண்டலமானது மிகப்பெரிய நாளமுள்ள சுரப்பியாகக் கருதப்படுகிறது.

பசியெடுத்தல், வயிறு நிரம்புதல், வயிற்றில் ஏதும் இல்லாமல் இருக்கிறது என்ற எண்ணம் ஏற்படும் வண்ணம் உணவை இரைப்பையிலிருந்து குடலுக்கு நகர்த்துதல், செரிமான உறுப்புகளின் நோய் எதிர்ப்புத் திறனைப் பாதுகாத்தல், அவற்றிற்கான இரத்த ஓட்டம், அந்த உறுப்புகளின் நிகழும் புதிய செல்களின் உருவாக்கம், புதுப்பித்தல் போன்ற அப்பப்பா.. பல்வேறு முக்கியமான பணிகளையும் இந்தச் செரிமான மண்டல ஹார்மோன்களே செய்கின்றன.

கண்ணால் பார்த்தவுடன், கையில் எடுத்து, வாயில் போட்டு ருசித்தும் இது திருநெல்வேலி சாந்தி ஸ்வீட்ஸ் அல்வா என்று சொல்லிவிடுவது நமக்குத் தெரிந்த விஷயம். ஆனால், அதனைத் தாண்டி, ஓராயிரம் வேதிவினைகள் தொடர்ச்சியாக நடைபெற்றுக் கொண்டிருப்பதை நாம் உணர்ந்து கொள்வதற்கு வாய்ப்பு இல்லைதான்.
“வயிறுதான் நோயின் பிறப்பிடம்” என்று கூறியுள்ளார்கள். “அளவோடு உண்டு வாழ்ந்தால் நோய்கள் பல அகன்றுவிடும். சுவாசம் சரளமாக இயங்கும், விரைவாக செரிமானமாகும், ஞாபக சக்தியை அதிகரிக்கும், விஷயங்களை நன்கு கிரகிக்கும் ஆற்றலை உண்டாக்கும், மொத்தத்தில் உடல் ஆரோக்கியத்துடன் சீராக இருக்கும் என மருத்துவர்கள் கூறுகிறார்கள்.

மேலும் மிதமிஞ்சிய உணவு, அறிவைக் குறைத்து சிந்தனையை மழுங்கடிக்கச் செய்துவிடும். வேலைகளிலும், படிப்பிலும் சோர்வை ஏற்படுத்தும் தூக்கத்தை அதிகமாக்குவதோடு, காலப்போக்கில் நரம்புகளுக்கு தளர்ச்சியை உண்டாக்கிவிடும். செரிமானமாகத் தாமதமாகும். (ஜீரணமாகாமல் வயிறு மற்றும் உள்ளுறுப்புகளுக்கு அதிக பாதிப்பை ஏற்படுத்தும்) எல்லாவற்றுக்கும் மேலாக படைத்த இறைவனை வணங்கும் விஷயத்தில் சோம்பலை உண்டாக்கும். சில சமயம் கடமையான தொழுகைகளை நிறைவேற்றுவதை விட்டும் நம்மை மறக்கடிக்கச் செய்துவிடும்.
எனவே, “மிதமான உணவே சிறந்த வைத்தியன்” என்பதற்கிணங்க உணவு உண்ணும் விசயத்தில் ஒரு வரையறையை வகுத்துக் கொள்ள வேண்டும். வாழ்வதற்காகவே உண்பவர்கள் இருக்கிறார்கள், இவர்கள் இலட்சியவாதிகள் தங்கள் வாழ்க்கையை அர்த்தமுள்ளதாக ஆக்கிக் கொள்பார்கள்.

சிலர் உண்பதற்காகவே வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். இந்த இரண்டாம் வகையினர் எந்தவொரு இலட்சியத்திற்காகவும் வாழாமல், தங்கள் வாழ்வை அர்த்தமற்றதாக ஆக்கிக் கொள்வதோடு பல வியாதிகளையும், உடல் பருமனையும் விலை கொடுத்து வாங்கிக் கொள்கின்றனர். (சிலருக்கு இயற்கையாகவே உடல் பருமன் என்பது வேறு விசயம்)
உலக சுகாதார நிறுவனத்தின் (W.H.O ) அறிக்கையின் படி உலகம் முழுவதும் 40 கோடி பேர் தங்கள் உடலுக்குத் தேவையான எடையைவிட அளவுக்கதிகமான எடையுடையவர்களாகவும், 30கோடி பேர் இதற்காக மருந்துவ சிகிச்சை தேவைப்படுபவர்களாகவும், குறிப்பாக தமிழகத்தில் சென்னையில் மட்டும் 49 சதவிகிதம் பேர் அளவுகதிகமான எடையுடையவர்களாகவும் இருக்கின்றனர் என்று அறிவித்துள்ளார்கள்
(நன்றி தினமனி 09.03.2005)

அளவுக்கதிகமாக சாப்பிடுவர்கள், அதற்குத் தகுந்தார் போல உடல் ரீதியான வேலைகளைச் செய்ய வேண்டும். அல்லது உடற்பயிற்சி செய்ய வேண்டும். இவைகளைப் பேணாததினால் வந்த விளைவுகள் தான் பெரும்பாலும் உடல் பருமனுக்கு காரணமாக இருக்கிறது என மருத்துவர்கள் கூறுகின்றார்.
உணவின் ருசி கருதி அதிகமாக உண்ணுவதைத் தவிர்த்து விட்டு, ஆரோக்கியம் தரக்கூடிய சத்தான வகை உணவுகளை கலந்து அளவோடு உண்ணப் பழகிக்கொள்ள வேண்டும். சிறிது காலத்திற்கு முன் பசிக்காக மட்டுமே உண்ணுபவர்களாக இருந்த நாம். இன்று பசிக்காக உண்ணுவதை விட ருசிக்காகவே அதிகம் உண்ணுபவர்களாக இருக்கிறோம்.

## அவயங்களின் அகமியங்கள் 19

(சொற்களின் பின்புலம் பற்கள்)



பற்கள்தானே என்று நினைக்காமல், பற்களைப் பற்றி தெரிந்து கொள்வதும், அதனை பாதுகாப்பதும், அதில் ஏதேனும் பிரச்னை ஏற்படின் உடனடியாக சரி செய்வதும் மிகவும் முக்கியமாகிறது.
பிறக்கும் 2000 குழந்தைகளில் ஒரு குழந்தைக்கு பிறக்கும் போதே பல் இருக்குமாம்.
ஒரு கரு பிறக்க 6 மாதம் இருக்கும் முன்பே கருவிற்கு வளர வேண்டிய பற்கள் தயாராகிவிடுகின்றன.
பிறந்த பிறகு முதன் முதலாக முளைக்கும் பற்கள் பால் பற்கள் என்று கூறப்படுகிறது. அவை விழுந்த பிறகு முளைக்கும் பற்கள் கோரைப் பற்களாகும்.

குழந்தை பிறந்து 6-வது மாதத்தில் முளைக்கத் துவங்கும் பற்கள் 3 வயதில் முழுமை பெறுகின்றன. 3 வயது குழந்தைக்கு பொதுவாக 20 பற்கள் வளர்ந்திருக்கும்.
பிறகு 5 முதல் 6 வது வயதில் ஒவ்வொரு பால் பற்களாக விழத் துவங்கி 12 அல்லது 13 வயதில் அனைத்து பால் பற்களும் விழுந்து கோரைப் பற்கள் அந்த இடத்தை நிரப்புகின்றன.
சில குழந்தைக்கு பால் பற்கள் விழும் முன்பே கோரைப் பற்கள் மூளைக்கத் துவங்கி விடுகின்றன. பல குழந்தைகளுக்கு இரண்டு பற்களையும் ஒருசேர கொண்டிருப்பதும் உண்டு.
நமது பற்களின் மீது இருக்கும் எனாமல்தான், நமது உடலில் உள்ள மிக கடினமான பகுதியாகும்.
மனிதன், உணவை கடிக்க, கிழிக்க, அரைக்க, மெல்ல என நான்கு விதமான பற்களைக் கொண்டுள்ளான்.
ஒரு மனிதனுக்கு இருப்பது போன்ற பற்கள், வேறு யாருக்கும் இருப்பதில்லை. நமது விரல் ரேகைகள், மூக்குகள் போலவே பற்களின் அமைப்பும் தனிச்சிறப்பு வாய்ந்தவை.

நமது பற்களில் ஏற்படும் பல்வேறு பிரச்னைகளால், உடலில் சில வியாதிகள் ஏற்படுவதும் உண்டு.
நமது பல்லின் மூன்றில் 1 பங்கு பல் ஈறுப் பகுதிக்குள் மூடியுள்ளது. அதாவது, மூன்றில் 2 பங்கு பல்லைத் தான் நாம்மால் பார்க்க முடிகிறது.
ஆரோக்கியமான பற்களை முழு வெள்ளை நிறத்தில் இருக்காது. சிறிது பழுப்பு நிறமாகவே இருக்கும்.
உமிழ் நீரில் உள்ள ஜீலி 7 ன் அளவு குறையும் போது, அதில் உள்ள கால்சியம் மற்றும் உப்புச்சத்து, பற்கள் மேல் படியும் போது அவை காரையாக மாறிவிடுகிறது.
பல் சொத்தை என்பதும் ஒரு பரம்பரை வியாதிதான்.

பற்களை ஒரு சில நிமிடங்கள் மட்டுமே தேய்க்க வேண்டும். அதிக நேரம் தேய்ப்பதால் பல் எனாமல் தேய்ந்து போக வாய்ப்பிருக்கிறது.
பொதுவாக எடுப்பான பல் அமைப்பைப் பெற்றிருப்பவர்கள் கம்பி கட்டும் சிகிச்சை முறையைப் பயன்படுத்தி பற்களை சீராக மாற்றி அமைத்துக் கொள்கிறார்கள். இதனை 18 வயதுக்கு மேல் செய்வது நலம் என்கின்றனர் மருத்துவர்கள்.
தற்போது பற்களை சீராக அமைக்க லேசர் முறைகளும் வந்து விட்டன.
பற்களைக் கொண்டு பாட்டிலைத் திறப்பது போன்றவை பற்களை பாதிக்கும் செயல்கள் என்பதை பலரும் அறிவதில்லை.
கவனம் : பால் பற்கள் முளைத்த குழந்தைகளுக்கு இரவில் சர்க்கரை கலந்த பால் கொடுத்துவிட்டு படுக்க வைப்பதாலும், குழந்தைகளின் பற்கள் பாதிக்கப்பட வாய்ப்பிருக்கிறது.
பற்களை பத்திரமாக பாதுகாக்க நார்சத்துள்ள உணவுகளை சாப்பிட வேண்டும். பழம், காய்கறிகளை கடித்து மென்று சாப்பிடுவது உடலுக்கு மட்டும் அல்லது பற்களுக்கும் நன்மை தரும்.

________________________________________

“நபி(ஸல்) அவர்கள் இரவிலோ, பகலிலோ எப்போது விழித்தாலும் உளூ செய்வதற்கு முன் அவசியம் மிஸ்வாக் செய்வார்கள்” (அபூதாவூத்)"
"நாம் மறந்த சுன்னாவில் ஒன்றுதான் மிஸ்வாக் செய்வது. அல்லாஹ்வின் தூதர் முஹம்மது(ஸல்) அவர்கள் தினமும் பலமுறை மிஸ்வாக் செய்பவர்களாக இருந்தார்கள்; அதை வலியுறுத்தியும் இருக்கிறார்கள். “பல் துலக்குவது பற்றி நான் மிகவும் அதிகமாக வலியுறுத்தியுள்ளேன்” என அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி)

நபியவர்கள், தமது மரணத் தருவாயில் இருந்தபோது கூட பல் துலக்க நாடினார்கள் என்பதிலிருந்து மிஸ்வாக்கின் முக்கியத்துவத்தைப் புரிந்து கொள்ளலாம்.
(நபியவர்கள் மரண வேளையில் இருந்தபோது எனது சகோதரர்) அப்திர் ரஹ்மான் பின் அபீபக்ர்(ரழி) அவர்கள் வந்தார்கள். அவரிடம் பல் துலக்கும் குச்சி ஒன்றும் இருந்தது. அதனை நபி(ஸல்) அவர்கள் பார்த்தார்கள். (அவர்களின் எண்ணத்தைப் புரிந்து கொண்ட நான்)
“அப்துர் ரஹ்மானே! அந்தக் குச்சியைக் கொடுங்கள்” என்றேன். அவர் கொடுத்ததும் அதை வெட்டிமென்று நபி(ஸல்) அவர்களிடம் கொடுத்தேன். என் நெஞ்சில் சாய்ந்து கொண்டு நபி(ஸல்) அவர்கள் பல் துலக்கினார்கள்” என்று ஆயிஷா(ரழி) அறிவிக்கிறார்கள். (புகாரி)

"ஒரு அடியான் பல் துலக்கிவிட்டு, தொழுகைக்காக எழுந்து நின்றால், அவரின் பின் வானவர் நின்று அவர் ஓதுவதைக் கேட்பார். பிறகு, அவரை வானவர் நெருங்கி, தன் வாயை அவரின் வாயோடு சேருமளவு நெருங்குவார். அவரின் நாவிலிருந்து வெளியாகும் குர்ஆன் வசனங்கள் வானவரின் குடலை அடையாதிருப்பதில்லை. (இவ்வாறு அவர் வானவரின் நேசத்திற்குரியவராகிறார்) எனவே, நீங்கள் குர்ஆன் (ஓதுவதற்)காக உங்கள் வாய்களை சுத்தமாக வைத்துக் கொள்ளுங்கள். (மிஸ்வாக் செய்வதைப் பேணுதலாகக் கடைபிடித்து வாருங்கள்) என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (பஸ்ஸார்)"

உஹது யுத்தகளம் . அந்த தருணம் நபியவர்களின் வாழ்க்கையிலேயே அவர்களுக்கு ஏற்பட்ட மிகச் சிரமமான நேரமாக இருந்தது. ஆனால், எதிரிகளைப் பொறுத்தவரையில் நபி (ஸல்) அவர்களை கொலை செய்வதற்கு அவர்களுக்குக் கிடைத்த நல்ல வாய்ப்பாக இருந்தது.உடனடியாக நபியவர்களை நோக்கி தங்களது தாக்குதலைத் தொடுத்தனர். நபியவர்களை கொலை செய்து முடிக்க வேண்டும் என்று வெறி கொண்டனர்.
உத்பா இப்னு அபீ வக்காஸ் என்பவன் நபியவர்களை நோக்கிக் கல்லெறிந்தான். இதனால் நபியவர்கள் கீழே விழுந்து விட்டார்கள். நபியவர்களின் வலது கீழ் முன் பல் சேதமடைந்து கீழ் உதடும் காயமடைந்தது.
நபி (ஸல்) அவர்கள் மீது பிரியமாக இருந்த ' பனாஃபி ரசூல் ' உவைஸுல் கரனி (ரஹ்) அவர்களை ஏமனில் கரன் நகர் முழுவதும் தேடி ரொம்பவும் சிரமத்திற்கு இடையில் உவைஸுல் கரனி (ரஹ்) அவர்களை உமர் (ரலி ) , அலி (ரலி) இருவரும் கண்டுபிடித்தனர்.

உமர் (ரலி) அவர்கள் , உவைஸுல்கரனி (ரஹ்) அவர்களிடம் ,
" தாங்கள் ஏன் பெருமானார் (ஸல்) அவர்கள் உயிரோடிருக்கும் போது அவர்களை வந்து தரிசிக்க வில்லை ?"
"தாங்கள் அவர்களைத் தரிசித்துள்ளீர்களா ?" என்று திருப்பி கேட்டார்கள் உவைஸ் .
"ஆம் . அவர்களுடனேயே இருந்திருக்கிறோமே ?
"நல்லது . பெருமானாரின் அழகு திருமுகத்தில் அவர்களின் புருவங்கள் ஒன்று சேர்ந்திருந்தனவா , பிரிந்திருந்தனவா ?" என்று கேட்டார் உவைஸுல் கரனி ,
உமர் (ரலி) அலி (ரலி) யாது கூறுவதென தெரியவில்லை .
"இஃதென்ன புதுமை ! தாங்கள் இருவருமே பெருமானாரின் அன்புத் தோழர்கள் அல்லவா அவர்களைப் பற்றி இது கூடத் தெரியவில்லை .நல்லது .
"அடுத்து உஹது யுத்தத்தில் நபி(ஸல்) அவர்களுக்கு ஒரு பல் உடைந்த போது உண்மைத் தோழர்களாக இருப்பின் அது போன்று உங்களின் ஒரு பல்லை விழச் செய்ய வில்லையா ? நட்பு என்றால் அதுதானே உண்மை நட்பு !

என்னைப் பாருங்கள் ... நான் என் பற்கள் அனைத்தையும் பிடுங்கி விட்டேன். நான் ஒரு பல்லைப் பிடுங்க , அது நபி (ஸல்) அவர்களுக்கு வீழ்ந்த பல்லாக ஒரு சமயம் இல்லாதிருக்குமோ என்ற ஐயம் எனக்கு ஏற்பட , அத்தனை பல்லையும் பிடுங்கி விட்டேன் " என்று தன் பொக்கை வாயைத் திறந்து காட்டினார்.
தோழர்கள் இருவரும் வியந்து போயினர்.

**அவயங்களின் அகமியங்கள் 20**
( உங்களின் எடுப்பான தோற்றத்திற்குக் காரணம் எலும்புகளே )



Types of Bones

Average Adult = 206 Bones

- Long Bones (90)
- Short Bones (28)
- Flat Bones (36)
- Sesamoid Bones (4)
- Irregular Bones (48)

நம் உடலில் உள்ள எலும்புகள் உடலைத்தாங்கிப் பாதுகாக்கும் பணியைச்செய்கிறது என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் நம் உடல் எலும்புகள், உருவ அமைப்பை வரையறுப்பது மட்டுமன்றி மேலும் பல செயல்களைச் செய்கிறது.
ஒருவன் அமிதாப்பச்சனாக இருப்பதற்கும், 'அபூர்வ சகோதர ' அப்புவாக இருப்பதற்கும் காரணம் எலும்புகள் தான். ஒருத்தி மூக்கும் முழியுமாக அழகாக இருப்பதற்கும், வேறொருத்தி வெறும் 'மூக்கியாக ' அவலட்சணமாக காட்சி தருவதற்கும் காரணம் எலும்பு தான்.
உங்கள் உயரம் சுமார் ஐந்தரை அடி இருக்குமா ? எடை என்ன 65 கிலோவா ? இப்படி ஒரு உயரத்தையும் கனத்தையும் கொண்ட உங்கள் உருவத்தை பல்வேறு கோணங்களில் தரையில் நிலைநிறுத்தும் பாதத்தின் நீளம் 9 அல்லது 10 அங்குலங்கள் தான் மட்டுமே ! இந்த நூற்றாண்டில் தலை சிறந்த கட்டடக் கலைஞரால் கூட சாதிக்க முடியாது விஷயம் .

பாதத்தில் பல எலும்புகள் சேர்ந்திருந்தாலும் அவை ஆர்ச் வடிவத்தில் அமைந்து சற்று நெகிழும் தன்மை கொண்டதாக இருப்பதால் அதற்கு நாம் உடலை தாங்கும் சக்தி கிடைக்கிறது.
நாம் ஓடும் போதும், பரதநாட்டியம் அந்த பெண் ஆடும் போதும், ஒரு காலை கீழே ஊன்றி இன்னொரு காலை வளைத்து தூக்கும்போதும் எலும்புகள் சிதறி விடுவதில்லை . அதேசமயம் பாதத்தின் அமைப்பும் மாறுவதில்லை 80 கிலோ எடை கொண்ட ஒருவர் வேகமாக இயங்கி தன் ஒரே காலில் நிற்கும் போது ' மொமென்டம்' எனப்படும் பெருகுவிசை காரணமாக அந்த பாதம் 350 கிலோ எடை தாங்குகிறது என்ன ஓர் அற்புதக் கட்டுமானம் ?
"மனிதனுடைய உடலில் 360 மூட்டுக்கள் (எலும்பு இணைப்புக்கள்) உள்ளன.(அவை சரியாக இயங்குவதால், அதற்கு நன்றி செலுத்தும் பொருட்டு...) ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு மூட்டுக்காகவும் தர்மம் செய்ய வேண்டும்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
உடனே நபித்தோழர்கள், 'அல்லாஹ்வின் தூதரே! இது யாருக்குச் சாத்தியமாகும்?' என்று கேட்டனர்.
அதற்கு நபி (ஸல்) அவர்கள், "பள்ளிவாசலில் எச்சிலைக் கண்டால் அதை மூடி விடுவதும், பாதையில் கிடக்கும் (கல், முள் போன்ற) பொருளை அகற்றுவதும் (தர்மம்) ஆகும். இது உனக்கு முடியவில்லை என்றால், லுஹா தொழுகையின் இரண்டு ரக்அத்துக்கள் உனக்குப் போதுமானது" என்று கூறினார்கள்.
அறிவிப்பவர்: புரைதா (ரலி) நூல்: அஹ்மத், ஹதீஸ் எண் – 21959

"ஒரு விஷயம் (சொல்கிறேன் கேள்:) ஆதமின் மக்களில் ஒவ்வொரு மனிதரும் முன்னூற்று அறுபது மூட்டு எலும்புகளுடன் படைக்கப் பட்டுள்ளனர். எனவே, யார் அந்த முன்னூற்று அறுபது மூட்டு எலும்புகளின் எண்ணிக்கை அளவுக்கு அல்லாஹ்வை (தக்பீர் கூறி)பெருமைபடுத்தி, அல்லாஹ்வை (தஹ்மீத் கூறி) புகழ்ந்து, 'அல்லாஹ்வை தவிர வேறு இறைவன் இல்லை' என்று (தவ்ஹீத்) கூறி, அல்லாஹ்வை (தஸ்பீஹ் கூறி) துதித்து, அல்லாஹ்விடம் பாவமன்னிப்பு (இஸ்திக்ஃபார்) கோரி, மக்களின் நடைபாதையில் கிடந்த ஒரு கல்லையோ, முள்ளையோ, எலும்பையோ அகற்றி, (மக்களிடம்) நல்லதை ஏவி-தீயதை தடுத்தாரோ... அவர் அன்றைய தினத்தில் தம்மை நரக நெருப்பிலிருந்து அப்புறப்படுத்திய நிலையிலேயே நடமாடுகிறார்"- ஆயிஷா (ரலி) நூல் - முஸ்லிம், ஹதீஸ் எண் – 1833

ஏழாம் நூற்றாண்டின் ஓர் எழுதப்படிக்கத் தெரியாத மனிதர், அதுவும், அக்காலத்தில் மருத்துவ - அறிவியல் வளர்ச்சி அடைந்திராத ஒரு சூழலில் வாழ்ந்த ஒரு மனிதர், போகிற போக்கில் இப்படி ஒரு மருத்துவ அறிவியல் உண்மையை, இக்காலத்திய மருத்துவ பட்டப்படிப்பு படித்தவர் கூறுவது போல எப்படி இவ்வளவு துல்லியமாக கூற முடிகிறது..?
இப்பதிவில் படிப்போரை சிந்திக்க வேண்டக்கூடிய விஷயம் இதுதான். நிச்சயமாக, இது அந்த அத்தனை எலும்புகளையும் எண்ணி தேவைக்கேற்ப படைத்த அந்த ஏக இறைவனின் இறைச் செய்தியின் வெளிப்பாடாக மட்டுமே இருக்க முடியும்..! வேறு சாத்தியக்கூறு இல்லை..!
இது மட்டும் அல்ல ; எலும்புகள் ரத்த செல்களை உருவாக்குவதோடு, உடல் உள்ளமைப்பை கட்டுப்படுத்தும் வேலைகளை எலும்புகள் செய்கிறது. மேலும் நம் மூளை, இதயம் மற்றும் நுரையீரல்களுக்கு பாதுகாவலனாக உள்ளது.

மனிதன் குழந்தையாக இருந்து வளரும்போது உடலில் ஏராளமான மாற்றங்கள் ஏற்படுகிறன. உடல் வளர்ச்சி, உடல் இயக்கங்கள் என மனித வாழ்வின் பல்வேறு நிலைகளிலும் உடலில் உள்ள எலும்புகள் முக்கிய பங்கு வகிக்கின்றன.
உடலுக்கு அடிப்படையாக மட்டுமல்லாமல், நம் உடல் வாழ பல முக்கியமான செயல்பாடுகளைச் செய்கிறது உடல் எலும்புகள். சிவப்பு மற்றும் வெள்ளை ரத்த அணுக்கள் எலும்பின் மஜ்ஜையில் உற்பத்தியாகின்றன. நுரையீரல் மற்றும் உடலின் பல பாகங்களுக்கு ஆக்சிஜனை ஏந்திச்செல்லும் பணியை சிவப்பு ரத்த அணுக்கள் செய்கின்றன. அதேபோல் வெள்ளை அணுக்கள் நோய்களை ஏற்படுத்தும் வைரஸ் மற்றும் பாக்டீரியாக்களுடன் போர் புரிகின்றன. இந்த வேலைகளை ஒரு சமநிலையில் வைத்திருப்பது என்பது ஒரு சுலபமான காரியம் அல்ல. இதற்குத்தான் எலும்புக்கூட்டில் பல விதமான எலும்புகள் உள்ளன.

மனிதன் தன் வாழ்நாளில் ஒரு சில எலும்புகளை இழக்கின்றான். ஒவ்வொரு மனிதனும் பிறக்கும்போது சுமார் 300 எலும்புகளுடன் பிறக்கின்றான். ஆனால் இறக்கும்போது இருப்பது 206 எலும்புகள் மட்டுமே.
ஒரு குழந்தைக்குத் தேவை வளைந்து கொடுக்கக் கூடிய எலும்புக்கூடு. குழந்தை கருவில் சுற்றிவரவும், பிரசவத்தின் போது வெளியே வரும் பாதையைக் கடக்கவும் வளைந்து கொடுக்கக்கூடிய எலும்புகள் தேவைப்படுகிறது. இதற்கு குறுத்தெலும்புகள் மிக அவசியம். இந்த குறுத்தெலும்புகள் குழந்தை பிறந்தவுடன் இணைந்து, அந்தக் குழந்தை வளரவளர வலுவான எலும்பாக மாறும்.
இந்த எலும்பு மாற்ற நிகழ்வை 'ஆஸ்சிபிகேசன்' (Ossification) என்பர். இது குழந்தை உருவான 13-வது வாரத்திலிருந்து தொடங்கி 20-வது வாரம் வரை நீடிக்கும். அதேநேரத்தில் வாழ்நாள் முழுவதும் எலும்பு மீளுருவாக்கம் நடைபெறும்.

மனித உடலுக்குள் எலும்புகளின் சுயசிகிச்சை முறை நடைபெறுகிறது. அதாவது, நம் எலும்புகள் உடலுக்குத் தேவையான கால்சியத்தை சேமித்து, பின்னர் வழங்கும் தன்மை பெற்றவை. இதனால் வளையும் தன்மையை மனித உடல் பெறுகிறது. மேலும், சுமார் 10 வருட காலத்தில் எலும்பு செல்கள் மீளுருவாக்கம் அடைகின்றன. முன்னர் கூறியபடி ஒவ்வொரு தசாப்த காலத்திலும் நமக்கு ஒரு புது உடல் கிடைக்கிறது என்று சொல்லலாம். ஆனால் நம் பற்கள் மட்டும் மீளுருவாக்கம் அடையாதவை. பல் மருத்துவர் கூறுவதுபோல் தினசரி இரு முறை பல் தேய்த்து அவற்றை பாதுகாப்பது மிக அவசியம்.

நம் மணிக்கட்டு வரை ஒவ்வொரு கையிலும் 27 எலும்புகளும், அதேபோல் நம் பாத மணிக்கட்டு வரை ஒவ்வொரு காலிலும் 26 எலும்புகளும் உள்ளன. அதாவது, நமது இரு கை கால்களில் மட்டும் 50 சதவீத எலும்புகள் உள்ளன. அடுத்து, நமது காது கேட்கும் திறனுக்கு மூல காரணமாக இருப்பதும் எலும்புகள்தான். காதிலுள்ள 'ஸ்டேப்ஸ்' (Stapes) என்னும் எலும்புதான் உடலிலேயே மிகச்சிறிய எலும்பு ஆகும். இது, 2.5 மில்லி மீட்டர் அகலம் உள்ளது. அளவில் சிறியதாக இருந்தாலும், 'கடுகு சிறுத்தாலும் காரம் குறையாது' என்பதுபோல் காதில் ஒலி அதிர்வலைகளை ஏற்று, காது கேட்க வைப்பது இந்த எலும்புதான். இதனால் தான் அனைத்து ஒலிகளையும் நம்மால் கேட்க முடிகிறது.

சில நேரங்களில் நமது முழங்கை எதன் மீதாவது இடித்துவிட்டால் மின்சார 'ஷாக்' அடித்தது போல வலியுடன் கூடிய அதிர்ச்சி ஏற்படும். இதற்கு காரணம் முழங்கையில் உள்ள எலும்பில் இணைந்துள்ள 'உல்னார்' என்ற நரம்பில் (Ulnar Nerve) அடிபடுவது தான். நமது முழங்கையில் உள்ள நீண்ட எலும்பின் பெயர் ஹுமரஸ் (Humerus). இந்த எலும்பின் கீழ் இந்த நரம்பு அமைந்துள்ளது. இந்த நரம்புதான் உடலிலேயே பாதுகாக்கப்படாத நரம்பு ஆகும். மனித உடலில் நாக்கின் கீழ் ஒரு எலும்பு உள்ளது. இதை 'வி' (V) எலும்பு என்பார்கள். மனித உடலில் உள்ள எலும்புகளில் இது ஒன்றுதான் வேறு எலும்புடன் சேராமல் தனியாக அமைந்துள்ளது.
நாம் பார்க்கும் எலும்புக்கூடெல்லாம் பயமுறுத்துவது போல இருந்தாலும் மேற்கூறிய பல தீவிரமான வேலைகளைச் செய்ய எலும்புகள் உதவுகின்றன. உடலில் ஏற்படும் பதற்றத்தை தணிக்கவும் எலும்புகள் உதவுகின்றன. உடலில் உள்ள திசுக்களுக்கு கால்சியம் தந்து காப்பாற்றுகிறது.
நீங்களும் உங்கள் பங்கிற்கு எலும்பின் வளர்ச்சிக்கு உதவலாம். அதற்கு கால்சியம் சத்து நிறைந்த உணவுகளை சாப்பிடுங்கள், அன்றாடம் உடற்பயிற்சி செய்யுங்கள். உடலில் உள்ள எலும்புகளில் அடிபடாமல் பாதுகாத்துக்கொள்ளுங்கள்.

**அவயங்களின் அகமியங்கள் 21**
( கர்ப்பப்பை : குடியிருந்த கோவில் )

இந்தப் பிரபஞ்சத்தில் ஓர் அதிசயமான நிகழ்வு நடக்கிறது என்றால் அது கர்ப்பப்பைக்குள்தான் .
கர்ப்பப்பைக்குள் வரும் ஒரு சில உயிர் செல்கள் சிக்கலான பல கோடி செல்களாக பெருகி, வளர்ந்து ஓர் உயிராக உருவாகும் அதிசயம் இதுவரை வேறு எங்காவது நடந்திருக்கிறதா ?
பிங்க் நிறத்தில் பேரிக்காய் வடிவில் 57 கிராம் எடையில் சதையால் செய்யப்பட்ட பை போல பெண்ணின் அடிவயிற்றில் கர்ப்பப்பை இருக்கிறது
பெண்களின் கர்ப்பப்பை என்பது பிறப்புறுப்பின் மேல்பகுதியில் காணப்படும் தசையாலான ஒரு உறுப்பாகும். கர்ப்பப்பைக்குள் குழந்தைகள் உருவாகின்றன, மாதவிடாய் இரத்தப்போக்கும் கர்ப்பப்பையிலிருந்துதான் உண்டாகிறது.
பெண்களுக்கு இருக்கும் கர்ப்பப்பை ஆனது ஒரு குழந்தையின் வளர்ச்சிக்கு தேவையான அனைத்து விஷயங்களை செய்வதோடு அதைப்பற்றி இன்னும் நிறைய சுவாரஸ்யமான விஷயங்கள் உள்ளன. அவற்றை பற்றி நாம் இப்பொழுது பார்க்க போகிறோம்.
பெண்களுக்கு கருப்பை என்பது ஒரு முக்கியமான உறுப்பு ஆகும். அவர்களின் இனப்பெருக்க உறுப்பை ஆரோக்கியமாக வைத்திருப்பது மிகவும் அவசியம். கருப்பை என்பது ஒரு கடினமான தசை கொண்ட உறுப்பு ஆகும். இந்த கருப்பை ஒரு குழந்தையின் வளர்ச்சிக்கான அனைத்தையும் தரக் கூடியது. வளர்ந்து வரும் கருவிற்கு ஏற்ப இடமளிக்கவும், விரிவுபடுத்தும் திறன் வாய்ந்தது.
கர்பப்பை
இது பார்ப்பதற்கு வெற்று பேரிக்காய் வடிவில் காணப்படும். இது ஒரு பெண்ணின் இடுப்பு பகுதியில் அமைந்துள்ளது. உங்கள் கருப்பை இனப்பெருக்கம் செய்வதில் முக்கிய பங்கு வகிக்கிறது.
கருவுற்ற கருமுட்டையை பொருத்துவதற்கும் வளர்ப்பதற்கும் இது உதவுகிறது. இந்த உறுப்பு தசைச் சுருக்கம் செய்யும் தன்மை வாய்ந்தது.அதன் மூலம்தான் இது குழந்தையை வெளியேற்றுகிறது.
கருப்பப்பை நெகிழ்வுத்தன்மை வாய்ந்தது

முதல் மூன்று மாதங்களில், கருப்பை ஒரு திராட்சைப்பழம் அளவு தான் இருக்கும். இரண்டாவது மூன்று மாதங்களில், இது ஒரு பப்பாளி போன்று குழந்தையின் வளர்ச்சிக்கு ஏற்ப பெரிதாகும். மூன்றாவது மூன்று மாதங்களில் இது ஒரு தர்பூசணி அளவு மாறும் . குழந்தை பிறந்த பிறகு இந்த தர்பூசணி அளவு சுருங்கி மீண்டும் பழைய நிலைக்கு வந்து விடும்.
சில பெண்களுக்கு இதய வடிவில் கருப்பை இருக்கும். இது பைகோர்னுவேட் கருப்பை என்று அழைக்கப்படுகிறது. இரண்டு புடைப்புகள் ஒன்றாக ஒட்டிக்கொண்டிருப்பது ஒரு இதயத்தைப் போல தோற்றமளிக்கிறது என்று மகப்பேறு மருத்துவர் கூறுகிறார்.

கருப்பை இல்லாமலும் பெண் குழந்தை பிறக்க வாய்ப்பு உள்ளது.
கர்ப்பபை இல்லாமலும் பிறந்த பெண்கள் இருக்கின்றனர். இந்த நிலை மேயர்-ரோகிடான்ஸ்கி கோஸ்டர்-ஹவுசர் நோய்க்குறி (எம்.ஆர்.கே.எச்) என்று அழைக்கப்படுகிறது. இந்த பாதிப்பில் பிறப்புறுப்பும் சரியாக உருவாகாது. அனைத்து இனப்பெருக்க உறுப்புகளின் செயல்பாடுகளும் தடைபடும்.
பெண்களில் சிலருக்கு இரண்டு கருப்பை இருக்கலாம்.
இரண்டு கருப்பைகள் கொண்ட பெண்களும் இருக்கிறார்கள். இது கருப்பை டிடெல்பிஸ் என்று அழைக்கப்படுகிறது. இரண்டு கருப்பைகள் உள்ளவர்களுக்கு இரண்டு கருப்பப்பை வாய்கள் மற்றும் இரண்டு பிறப்புறுப்புகள் கூட இருக்கலாம். இந்த பெண்களாலும் கருத்தரிக்க முடியும்.
கருப்பை மாற்று அறுவை சிகிச்சை செய்ய முடியும்
யாராவது கருப்பை இல்லாமல் பிறந்தால், கர்ப்பமாக இருக்க உதவும் பொருட்டு, கருப்பை மாற்று சிகிச்சை செய்ய முடியும். அதற்கான தொழில்நுட்பம் தற்போது இருக்கிறது.
உடலுறவை மகிழ்ச்சிகரமானதாக மாற்ற உதவுகிறது
கர்ப்பப்பை என்பது உங்க பிறப்புறுப்பு பகுதியை இணைக்கும் பாலமாகும். இது உடலுறுவின் போது புணர்ச்சியை பெற உதவுகிறது. இதனால் தான் பெண்கள் கருப்பை நீக்கம் செய்ய தயங்குகின்றன. கருப்பை நீக்கம் செய்யும் பெண்கள் பாலின இன்பத்தை இழக்கின்றனர்.

11 வயதிற்கு மேல் 50 வயது வரை மாத விலக்கின் காரணமாக கர்ப்பப்பை 500 தடவை கர்ப்பத்திற்கு தயார்படுத்துகிறது
ஒரு பெண்ணின் முழு இனப்பெருக்க வாழ்க்கையிலும், அவளது கருப்பை 500 முறை கர்ப்பமாக இருக்கின்ற வாய்ப்பை அளிக்கிறது. 500 மாதவிடாய் காலங்களை அளிக்கிறது.
கர்ப்பமாக இருக்கும் போது கர்ப்பப்பை மற்றொரு உறுப்பை உருவாக்குகிறது. அதுதான் பிளசன்டா என்னும் குழாய். இதைதான் தொப்பிள் கொடி எனப்படுகிறது. இதன் மூலம் கொஞ்சமும் சளைக்காமல் 24 மணி நேரமும் கருவுக்குத் தேவையான ஊட்டத்தை வழங்குவதில் அது கவனமாக இருக்கிறது. இது எத்தனை அழகான திட்டத்துடன் கூடிய ஒரு படைப்பை இறைவன் படைத்துள்ளான்.

இதுகுறித்து குர்ஆன் முதன்முதலாக இறங்கும் போதே முதல் இரு வசனத்தில் " அலக் " என்று இதைக் குறிப்பிடுகிறான்.

اِقْرَاْ بِاسْمِ رَبِّكَ الَّذِىْ خَلَقَ
(யாவற்றையும்) படைத்த உம்முடைய இறைவனின் திரு நாமத்தைக் கொண்டு ஓதுவீராக.
خَلَقَ الْاِنْسَانَ مِنْ عَلَقٍ
“அலக்” என்ற நிலையிலிருந்து மனிதனைப படைத்தான்.
اِقْرَاْ وَرَبُّكَ الْاَكْرَمُۙ
ஓதுவீராக: உம் இறைவன் மாபெரும் கொடையாளி. (குர்ஆன் : 96:1- 3)
அலக் என்ற சொற்றொடருக்கு மன்திக் என்ற அரபு டிஸ்னெரியில் 400 க்கும் அதிகமான பொருளடக்கம் கூறப்பட்டிருக்கிறது. 400-ல் இரத்தக் கட்டியும் ஒன்று , இன்றொன்று " தொங்குதல் " அதாவது அட்டைப் பூச்சி மாதிரி கருவறையின் மேல் சதைப் பிடித்துக் கொண்டு தொங்குதல் என்பதாகும். இதுதான் இப்போது சரியாக இருப்பதாக சவூதியில் நடைபெற்ற திருக்குர்ஆன் 9 வது மாநாட்டில் முடிவெடுக்கப்பட்டது
'அலக்' கை குறித்து விஞ்ஞானம் இன்னும் தெளிவாக தொங்கும் அந்தப் பொருள்தான் தொப்பிள் கொடி (அலக்) .இந்த தொப்புள் கொடியை குழந்தை பிறந்ததும் பத்திரப்படுத்தி வைத்தால் , அவனது உறுப்புகள் செயலிழந்தால் , அந்த உறுப்பின் ஜீனை எடுத்து தொப்புள் கொடிக்குள் வைத்து வளர்த்தால் அம்மனிதனுடைய புதிய உறுப்பு உருவாகி விடும்
"அலக் "கின் துவக்கத்திலிருந்துதான் உயிரினத்தின் தொடக்கத்தை ஆரம்பித்த இறைவன் , தன் வேதத்தின் துவக்க அத்தியாமாக சூரா அலக்கை வைத்திருப்பது நம் சிந்தனைக்கு விருந்தளிக்கிறது.

## அவயங்களின் அகமியங்கள் 22

( தலை முடி )



நம் தமிழகத்தில் நீண்ட காலமாக தலைமுடிப் பற்றி தவறான கருத்து நிலவி வருகின்றது. “உண்மையான முஸ்லிம் தலையை மொட்டை அடித்துக் கொள்வதே சிறந்தது” என்ற எண்ணம் மக்கள் மனதில் மேலோங்கியுள்ளதை நாம் காண முடிகின்றது. தலையில் முடி வளர்ப்பது தவறு என்றும் கருதப்படுகின்றது. ஆனால் நபிமார்களின் தலைமுடி நவீன இயக்கக்காரர்களின் தலை முடி மொட்டையைப் போலவோ மிக குறைவானதாகவோ இருக்கவில்லை என்பதை இயக்கத்தினர் கண்டுகொள்ள வேண்டும்
அனஸ் இப்னு மாலிக் (ரலி) அவர்களிடம் இறைத்தூதர் (ஸல்) அவர்களின் (தலை) முடி பற்றிக் கேட்டேன். அதற்கு அவர்கள், ‘இறைத்தூதர் (ஸல்) அவர்களின் (தலை) முடி அலையலையானதாக இருந்தது. படிந்த முடியாகவும் இல்லை. சுருள் முடியாகவும் இல்லை. அவர்களின் காது மடல்களுக்கும் அவர்களின் தோளுக்கும் இடையே தொங்கிக் கொண்டிருந்தது” என்று பதிலளித்தார்கள்.
புஹாரி :5905 அனஸ் (ரலி).

நபி(ஸல்) அவர்களின் (தலை) முடி அவர்களின் தோள்களைத் தொட்டுக் கொண்டிருந்தது. புஹாரி : 5904 அனஸ் (ரலி)
முஹம்மத் பின் அலீ பின் ஹுசைன் (ரஹ்) அவர்கள் கூறியதாவது:
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் பெருந்துடக்கிற்காகக் குளிக்கும்போது இரு கைகள் நிரம்பத் தண்ணீர் அள்ளித் தமது தலையில் மூன்று முறை ஊற்றுவார்கள் என்று ஜாபிர் பின் அப்தில்லாஹ் (ரலி) அவர்கள் கூறினார்கள்.

அப்போது ஜாபிர் (ரலி) அவர்களிடம் ஹசன் பின் முஹம்மத் (ரஹ்) அவர்கள், எனக்குத் தலைமுடி அதிகமாக இருக்கிறதே? (மூன்று முறை ஊற்றினால் போதாதே!) என்று கேட்டார்கள்.
அதற்கு ஜாபிர் (ரலி) அவர்கள், என் சகோதரர் மகனே! அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களின் தலைமுடி உமது முடியைவிட அதிகமாகவும் சிறந்ததாகவும் இருந்தது (அவர்களே மூன்று முறைதான் தலைக்குத் தண்ணீர் ஊற்றினார்கள்) என்று பதிலளித்தார்கள். முஸ்லிம் : 548.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

நான் (விண்ணுலகப் பயணத்திற்காக) அழைத்துச்செல்லப்பட்ட இரவில் இம்ரானின் புதல்வர் மூசா (அலை) அவர்களைக் கடந்துசென்றேன். மூசா (அலை) அவர்கள் (யமனியர்களான) "ஷனூஆ" குலத்தைச் சேர்ந்த மனிதரைப் போன்று மாநிறமுடையவர்கள்; உயரமானவர்கள்; சுருள்முடியுடையவர்கள்.
(அப்பயணத்தில்) மர்யமின் மைந்தர் ஈசா (அலை) அவர்களையும் கண்டேன். அவர்கள் நடுத்தர உயரமும் சிவப்பும் வெண்மையும் கலந்த, மிதமான சரும அமைப்புக் கொண்டவர்களாகவும் படிந்த, தொங்கலான தலைமுடி உடையவர்களாகவும் இருந்தார்கள். ஸஹீஹ் முஸ்லிம் : 267.
நபித் தோழர்களின் தலைமுடியைப் பற்றி ஆராயும்போது,
நீண்ட முடியைக் கொண்டவனாக நான் நபி(ஸல்) அவர்களிடம் சென்றேன். அப்போது ஆட்சேபணை செய்வது போன்ற ஒரு சொல்லைக் கூறினார்கள். உடனே நான் திரும்பி என் முடியைக் கத்தரித்துவிட்டு மறுநாள் சென்றேன், அப்போது நபி(ஸல்) அவர்கள் “நான் உன்னை ஆட்சேபணை செய்யவில்லை” என்று கூறினார்கள்.
அறிவிப்பவர் : வாயில் இப்னு ஹுஜ்ர்(ரழி) , நூல் : அபூதாவூது.
இந்த நபி மொழியின் மூலம் நீண்ட தலை முடியை நபி(ஸல்) அவர்கள் ஆட்சேபணை செய்யவில்லை என்று தெரிகின்றது. நபித் தோழர்களில் மிகப் பெரும்பாலோர் தலையில் முடி வளர்த்திருப்பதாகத்தான் அறிய முடிகின்றது. முடி வளர்ப்பதற்கு இஸ்லாம் வழங்கியுள்ள அனுமதியை யாரும் மறுக்க முடியாது.
நபி (ஸல்) காலத்தில் பெண்களின் தலைமுடியைப் பற்றி ஆராயும்போது,

உம்மு சலமா (ரலி) அவர்கள் கூறியதாவது:
நான், அல்லாஹ்வின் தூதரே! நான் தலைமுடியை இறுக்கமாகப் பின்னிக்கொள்ளும் பெண் ஆவேன். பெருந்துடக்கிற்காகக் குளிக்கும்போது பின்னலை நான் அவிழ்த்துவிட வேண்டுமா? என்று கேட்டேன்.
அதற்கு அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள், இல்லை; நீ இரு கையளவுத் தண்ணீரை உன் தலைமீது மூன்று முறை ஊற்றினால் போதும். பிறகு உன் (உடல்) மீது தண்ணீர் ஊற்றிக்கொள்; துப்பரவாகி விடுவாய் என்று சொன்னார்கள். முஸ்லிம் : 549.

“நபி(ஸல்) அவர்கள் தன் தலைக்கு அதிக அளவில் எண்ணெய் தேய்ப்பவர்களாக இருந்தனர்” அறிவிப்பவர்: அபூஹுரைரா(ரழி) நூல் : ஷரஹுஸ்ஸுன்னா
“யாருக்கு முடி இருக்கின்றதோ அதற்கு அவர் மதிப்பளிக்க வேண்டும்” என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அபூஹுரைரா(ரழி) நூல்: அபூதாவூது
“அல்லாஹ்வின் தூதரே! எனக்கு அடர்ந்த முடி உள்ளது. அதை நான் சீவிப் கொள்ளலாமா?” என்று அபூகதாதா (ரழி) அவர்கள் நபி(ஸல்) அவர்களிடம் கேட்டனர்.
அதற்கு நபி(ஸல்) அவர்கள் “ஆம்! அதற்கு மதிப்பளித்துக் கொள்!” என்று கூறினார்கள். நபி(ஸல்) அவர்கள் இப்படிச் சொல்லிவிட்ட காரணத்தால் சில சந்தர்ப்பங்களில் ஒரு நாளைக்கு இரண்டு முறை கூட அவர் எண்ணெய்த் தேய்ப்பார். அபூகதாதா (ரழி) நூல்: முஅத்தா

“நபி(ஸல்) அவர்களுக்கு நான் தலை வாரி விடும்போது, அவர்களின் தலை நடுவில் உள்ள முடியை இரு கண்களுக்கு நடுவில் முன் நெற்றியில் நான் தொங்க விடுவேன்”. அன்னை ஆயிஷா(ரழி) நூல் : அபூதாவூது.
மேற்கூறிய நபிமொழிகள், தலைமுடியை நன்றாக எண்ணெய் தேய்த்து வாரிக் கொள்ள வேண்டும் என்பதையும், அழகு தரும் விதத்தில் நெற்றியில் முடியை சுருள விடுவதும் கூடும் என்பதையும் நமக்கு உணர்த்துகின்றன, எனினும் எப்போது பார்த்தாலும் கண்ணாடியின் முன்னே உட்கார்ந்து கொண்டு இதே வேலையாக இருக்கக் கூடாது. “அழகுப் படுத்துகிறேன்” என்று காலத்தை வீணாக்கலாகாது.
ஏனெனில் நபி(ஸல்) அவர்கள் அவ்வாறு செய்வதைத் தடுத்துள்ளனர். “ஒரு மனிதன், விட்டுவிட்டே தவிர (தொடர்ந்து) சீவிக் கொண்டிருப்பதை நபி(ஸல்) அவர்கள் தடுத்துள்ளனர்” என்று அப்துல்லாஹ் இப்னு முகப்பல்(ரழி) அவர்கள் அறிவிக்கும் ஹதீஸ் திர்மிதீ, அபுதாவூது, நஸயீயில் பதிவு செய்யப்பட்டுள்ளது.
ஒரு மனிதன் அவனுக்கு அழகு தரும் விதமாக எப்படி வேண்டுமானாலும் முடி வைத்துக் கொள்ளலாம். எல்லாவிதமான முடியலங்காரத்தையும் ஒருவன் செய்து கொள்ளலாம். ஏனெனில் நபி(ஸல்) அவர்கள் இதற்கெல்லாம் தடை விதிக்கவில்லை.
தலை முடி பற்றி நபி(ஸல்) அவர்கள் தடுத்துள்ள சில விஷயங்களைப் பார்ப்போம்.
“நபி(ஸல்) அவர்கள் தலையில் ஒரு பகுதியைச் சிரைத்து விட்டு இன்னொரு பகுதியை சிரைக்காமல் விடுவதை தடுத்துள்ளனர்”.
இப்னு உமர்(ரழி) நூல்கள் : புகாரி, முஸ்லிம்.

“ஒரு சிறுவனுக்கு தலையில் ஒரு பகுதி சிரைக்கப்பட்டும், இன்னொரு பகுதி சிரைக்கப்படாமலும் இருக்கக் கண்டு நபி(ஸல்) அவர்கள் அதைத் தடை செய்தனர். மேலும் “(சிரைப்பதென்றால்) முழுமையாகச் சிரைத்து விடுங்கள்! (சிரைக்காமல் விடுவதென்றால்) முழுமையாக விட்டுவிடுங்கள்!” என்று கூறினார்கள்.
மேற்கூறிய இரண்டு ஹதீஸ்களிலிருந்து தலையில் ஒரு பகுதியை மட்டும் சிரைப்பது கூடாது என்பதையும், மொட்டை அடிக்க விரும்புபவர்கள் மொட்டை அடிக்கலாம் என்பதையும் உணர்கிறோம்.
“பெண்கள் தலைமுடியை சிரைப்பதை (மொட்டை அடிப்பதை) நபி(ஸல்) அவர்கள் தடுத்தனர்”. அலீ(ரழி) நூல்: நஸயீ.

இந்த ஹதீஸ்களிலிருந்து பெண்கள் மொட்டை அடித்துக் கொள்ள அனுமதி இல்லை என்று தெளிவாகத் தெரிகின்றது.
நபி(ஸல்) அவர்கள் பள்ளியில் இருக்கும் போது, தாடியும், தலை முடியும் பரட்டையாக ஒருவர் வந்தார். அவரது தலை முடியையும், தாடியையும் சீர் செய்யும்படி அவருக்கு நபி(ஸல்) அவர்கள் உணர்த்தினார்கள்.
அவர் அவ்வாறு செய்து கொண்டு பின்னர் திரும்பி வந்தார். அப்போது (அவரைப் பார்த்து) நபி(ஸல்) அவர்கள், “ஷைத்தானைப் போல் பரட்டைத் தலையராக வருவதை விட இது சிறப்பாக இல்லையா?” என்று கேட்டனர்.
முஅத்தா இப்னு யஸார் நூல் : முஅத்தா இந்த நபி மொழியிலிருந்து தலை முடி வைத்திருப்போர், பரட்டையாக வைத்துக் கொள்ளக் கூடாது என்பது தெளிவு.

ஜாபிர் (ரலி) அவர்கள் கூறியதாவது: மக்கா வெற்றி நாளில் (அபூபக்ர் (ரலி) அவர்களின் தந்தை) அபூகுஹாஃபா, (நபி (ஸல்) அவர்களிடம்) கொண்டுவரப்பட்டார். அவரது தலை முடியும் தாடியும் தும்பைப் பூவைப் போன்று வெள்ளை நிறத்தில் இருந்தன.

அப்போது நபி (ஸல்) அவர்கள் இ(ந்த வெள்ளை நிறத்)தை ஏதேனும் (சாயம்) கொண்டு மாற்றுங்கள். கறுப்பு நிறத்தை தவிர்த்துக் கொள்ளுங்கள்" என்று கூறினார்கள். முஸ்லிம் : 4270.
வெண்மையான முடியை ஏதேனும் சாயத்தின் மூலம் மாற்றி கொள்வது விரும்பத் தக்கது என்பதும் நரை முடிகளுக்கு கருப்பு சாயமிடுவது கூடாது என்றும் இந்த ஹதீஸ் உணர்த்துகின்றது.
நியூயார்க் பல்கலைக்கழகத்தின் லாங்வான் ஹெல்த் குழு சிறப்பு ஸ்கேனிங் மற்றும் ஆய்வக நுட்பங்களின் உதவியுடன் இந்த உயிரணுக்களின் உருவாக்கம் மற்றும் வளர்ச்சியின் செயல்முறையை ஆய்வு செய்துள்ளது.
மன அழுத்தம், அச்ச உணர்வு காரணமாகவும் முடி விரைவாக நரைப்பதாக அக்குழு நிபுணர்கள் கூறுகின்றனர்.
மன அழுத்தம் ஏற்படாமல் தவிர்ப்பது மூலம் முடி நரைப்பதை சில காலத்திற்கு தள்ளிப்போட முடியும் என்று அவர்கள் நம்புகின்றனர்.

فَكَيْفَ تَتَّقُوْنَ اِنْ كَفَرْتُمْ يَوْمًا يَّجْعَلُ الْوِلْدَانَ شِيْبًا
நீங்கள் (இதனை) நிராகரித்துவிட்டால், எவ்வாறு நீங்கள் (நம்முடைய பிடியிலிருந்து) தப்பித்துக் கொள்வீர்கள்? (நாம் பிடிக்கும்) அந்நாளில் (திடுக்கம்) சிறு குழந்தைகளையும் நரைத்தவர்களாக ஆக்கிவிடும். (குர்ஆன் : 73:17)

## அவயங்களின் அகமியங்கள் 23

( நகம் )



விலக்கப்பட்ட கோதுமைக் கனியை நம் ஆதிபிதா ஆதம் (அலை) தம்பதினர் உண்டதும் அவர்களின் வயிற்றுக்குள் கனி இறங்கியதும் அவ்விருவரின் இன உறுப்புகள் வெளிப்பட்டு அவர்கள் அணிந்திருந்த சுவனத்து ரோஸ் நிற ஆடை உடலை விட்டு வேகமாக மறைந்தது
சுவனத்து ஆடை மிருதுவாகவும் மென்மையாகவும் இருந்தன. அக்கனியை உண்டதும் மின்னல் வேகத்தில் ஆடை மறையத் தொடங்க, அவர்கள் விரல்களை மடக்கி பொத்திக் கொண்டனர். இருப்பினும் விரல் நுனிகளில் மட்டுமே அவ்ஆடை கிழிந்து ஒட்டிக்கொண்டது. இதன் அடையாளமாக ஆதத்தின் மக்களுக்கு இப்பொழுது நகங்கள் இருக்கின்றன ரோஸ் நிறத்தில் .
ஒருவனுக்கு அடங்காச் சிரிப்பு ஏற்படும்போது நகங்களில் கை பெருவிரல் நகங்களைப் பார்த்தால் அந்த உடனேயே சிரிப்பு அடங்கி விடும். செய்த பாவத்தின் அச்சம் நம் ஆழ்மனதில் நீங்காமல் இன்னும் இருக்கிறது. - தப்ஸீரே மதார் கிதாபில் உள்ளது.அடுத்து....
ஆதம் (அலை) அவர்கள் இறைவனிடம்: "மலக்குமார்கள் அனைவரும் தம்முன் பணிந்தற்குரிய காரணம் என்ன ? "
"முஹம்மதிய்யாவின் போராளி உம் நெற்றியில் ஒளிர்வதால் "

"என்னால் அதைக் காண முடியவில்லையே , அதைக் கண்டு களிக்கும் பாக்கியத்தை எனக்கும் தந்தருள வேண்டும் "
அதனை சிறிது எடுத்து ஆதம் (அலை) அவர்களின் கைகளின் இரு பெரு விரல்களிலும் இறைவன் வைத்தான் . உடனே ஆதம் , ' யாகுர்ரத்த ஐனைய ( என் கண்களின் குளிர்ச்சியே !) என்று கூறித் தம் இரு பெருவிரல்களையும் தம் இரு கண்களிலும் தடவிக் கொண்டனர்.
இந்த நிகழ்வை பின்பற்றியே பாங்கில் , "அஷ்ஹது அன்ன முஹம்மதர் ரசூல்லாஹ் " என்று கூறப்பட்டதும் , "மர்ஹபன் பி ஹபீபி வ குர்ரத்த அய்னி முஹம்மதிப்னு அப்துல்லாஹ் (ஸல்) " என்று கூறி....தம் இருபெரு விரல் நகங்களையும் முத்தமிட்டு , தம் கண்களில் ஒத்திக் கொண்டு, "அல்லாஹும்ம மத்தி ஃனீ பிஸம்இ வல் பஸரி " என்று கூறுகின்றனர்.
இவ்விதம் செய்பவர்களுக்குப் பார்வை மங்கவோ, கண் குருடாகவோ செய்யாதென்றும் அவர்களை மறுமையில் தாம் 'ஸப்'களில் ( அணி வரிசைகளில் ) தேடிக் கண்டு பிடித்து தம்முடன் சுவனம் அழைத்துச் செல்வதாகவும் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளனர்.
"கை நகம் கண் தொட்டு,
கனிகின்ற ஸலவாத்தில்,
கஸ்தூரி மணம் கமழும் - எம்மான்
அவரின் கருணைக்கு அழுகின்றேன் இந்நாள்
அவரின் கருணைக்கு அழுகின்றேன் இந்நாள் "
நகத்தை பார்த்து நோய் அறியலாம்!

நகங்களில் ஏற்படும் சில மாற்றங்களை வைத்து, உடல் நோய்களுக்கான அறிகுறிகளை எளிதில் கண்டுபிடித்து விடலாம். பொதுவாக நகங்கள் இளஞ்சிவப்பு நிறத்தில் இருக்கும். நமது உடலில் ஏற்படும் பாதிப்புகளை பொறுத்து, நகங்களின் நிறம் வேறுபட்டிருக்கும்.
ஈரல் பாதிக்கப்பட்டிருந்தால் நகங்கள் வெண்மையாக இருக்கும். சிறுநீரக செயலிழப்பு ஏற்பட்டிருந்தால், நகங்களின் வளர்ச்சி குறைந்து, பாதி நகங்கள் சிவப்பாக இருக்கும். மஞ்சள் காமாலையால் பாதிக்கப்பட்டிருந்தால், நகங்கள் மஞ்சள் நிறத்தில் காணப்படும்.

இதயநோயால் பாதிக்கப்பட்டிருந்தால் நகங்கள் அழுத்தமான இளஞ்சிவப்பு நிறத்தில் இருக்கும். இதயத்தில் ஓட்டை ஏற்பட்டு நல்ல ரத்தமும், கெட்ட ரத்தமும் கலந்திருந்தால் நகங்கள் நீல நிறத்தில் இருக்கும். நாள்பட்ட நுரையீரல், இதய நோய் உள்ளவர்களுக்கு, நகங்கள் வளைந்து இருக்கும்.
ரத்த சோகை ஏற்பட்டு, இரும்புச் சத்து குறைவாக இருந்தால் நகங்கள் வெளுத்து குழியாக இருக்கும்.சர்க்கரையின் அளவு அதிகமாகவும், புரதம் மற்றும் துத்தநாக சத்து குறைவாகவும் இருந்தால், நகத்தில் வெண்திட்டுக்கள் காணப்படும்.

நகத்தில் மஞ்சள் கோடுகள் இருந்தால், புகைபிடிப்பதனால் நிக்கோடின் கறை படிந்து ஏற்பட்டதாக இருக்கலாம். நகங்களுக்கு பாலிஷ் தீட்டுவதால் ஏற்பட்ட ரசாயன மாற்றத்தின் காரணமாகவும், மஞ்சள் கோடுகள் இருக்கலாம். நகத்தில் சின்ன சின்னக் குழிகள் உண்டாகி, அவற்றில் வெடிப்பு ஏற்பட்டு செதில் செதிலாக உதிர்ந்தால், சொரியாசிஸ் என்ற தோல் வியாதியின் அறிகுறியாகும். ரத்தத்தில் போதிய அளவுக்கு ஆக்சிஜன் இல்லாவிட்டால், நகங்கள் நீலமாக இருக்கும்.
ஆர்சனிக் என்ற நச்சுக்களால் பாதிக்கப்பட்டிருந்தால், நகங்கள் நீலநிறத்தில் காணப்படும்.மங்கலான நீண்ட கோடுகள் தென்பட்டால், மூட்டுவலி உள்ளதாக காட்டும் மஞ்சள் நிறம் தென்பட்டால் கல்லீரல் பாதிப்பின் அறிகுறி.

நகங்களை நலமாக வைத்துக் கொள்ள, பின்பற்ற வேண்டிய பராமரிப்பு முறை:
நகங்களை ஒரு கருவியாக பயன்படுத்துவதை தவிர்க்க வேண்டும். குழி பறிப்பது, பழங்களின் தோல் உரிப்பது, கண்டவற்றையும் சுரண்டிக் கொண்டிருப்பது போன்ற செயல்களுக்கு, நகங்களைப் பயன்படுத்தக்கூடாது. இது நகங்களுக்கு பாதிப்பை ஏற்படுத்துவதோடு, கிருமிகள் தொற்றி நோய் ஏற்படவும் காரணமாகிறது.
இரண்டு வாரங்களுக்கு ஒரு முறை, அதிகமாக வளர்ந்திருக்கும் நகங்களை நறுக்கி விடலாம்.நகங்களின் நுனிப்பகுதிகளை முழுவதுமாக வெட்டக் கூடாது. அவ்வாறு வெட்டினால் நகத்தை மூடி சதை வளர்ந்து, அதிக வலியை ஏற்படுத்தும்.
நகத்தை பற்களால் கடிக்கக் கூடாது. இதனால் நகங்கள் உடைந்து உள்ளே போக வாய்ப்பு அதிகம். நகம் வெட்டும் கருவியால்
மட்டுமே வெட்ட வேண்டும்.
சாப்பிட்ட பின்னர் கைகளை கழுவும்போது, நகங்களையும் சுத்தம் செய்ய வேண்டும். நகங்களின் இடுக்குகளில் தங்கும் நுண்ணுயிரிகளால் வயிற்றுத் தொல்லை, வலி, வாந்தி, வயிற்றுப்போக்கு ஆகியவை உண்டாகும்.
நகங்கள் அழகுடன் திகழ, காய், கனிகள் நிறைய உட்கொள்ள வேண்டும். இரவில் குளிர்ந்த நீரினால் கை மற்றும் கால் நகங்களை, சுத்தமாக கழுவிக் கொள்ள வேண்டும். இதற்கு ஒலுகு செய்துகொள்ளவது சிறந்தது.

**அவயங்களின் அகமியங்கள் 24**

(தொப்பூழ்)

தொப்புள் என்பது உடலின் அடிவயிற்றில் காணப்படும் ஒரு வடு ஆகும். குழந்தை பிறந்தவுடன் தொப்புட் கொடி நீக்கப்படும். அப்போது உருவாகும் வடுவே தொப்புள் ஆகும்.
தூய தமிழில் கொப்பூழ் என்பதே சரியான உச்சரிப்பு.
இது பேச்சு வழக்கில் தொப்புள் அல்லது தொப்புள் குழி என்று குறிப்பிடப்படுகிறது.
உந்தி,நாபி என்றும் தொப்புள் குறிப்பிடப்படுகிறது. ஆங்கிலத்தில் நாவெல் (navel) அல்லது பெல்லி பட்டன் (belly button) என்று குறிப்பிடப்படுகிறது. மருத்துவ முறையில் தொப்புள் உம்பிளிகிஸ் (umbilicus) என்று குறிப்பிடப்படுகிறது.
அனைத்து பாலூட்டி விலங்குகளுக்கும் தொப்புள் இருந்தாலும் அது தெளிவாகக் காணப்படுவது மனிதர்களில் பெண்களுக்கு மட்டுமே.

(...அப்போ ஏன் ஆம்பள தொப்புள் படம் போட்டீர்கள் என்று கேட்கக் கூடாது )
குழந்தை பிறந்தவுடன் தாதிப் பெண் முதலில் கத்தி போடுவது தொப்பூழ் கொடி மீதுதான் !
தொப்பூழ் கொடியை அறுப்பதன் மூலம் இதுவரை அம்மாவைச் சார்ந்து dependent ' ஆக வாழ்ந்தாய் இன்று முதல் நீ உன்னை மட்டுமே சார்ந்து, சர்வ சுதந்திரமாக அதாவது. Independent ஆக இரு.
வானம்தான் தந்தை, பூமிதான் தாய் என்பதைத் தாதிப் பெண் உணர்த்தாமல் உணர்த்திகிறாளோ ?
தொப்பூழ்க் கொடியை அறுத்ததும் குழந்தை மூச்சை இழுத்தபடி அழத் தொடங்குகிறது, !
அப்போதுதான் அந்த அதிசயம் நடக்கிறது, மூச்சில் இறை பிரவேசிக்கிறது,!
சுவாசம் எனப்படும் காற்று, நாதம் எனப்படும் ஒலி, உயிர் எனப்படும் ஒளி என்னும் மூன்றும் ஒருங்கிணைந்த ஆன்மா, என்ற பேராற்றல்... அறுத்தடைந்த வாசலாகிய தொப்பூழ் வழியே நுழைந்து உச்சிக்குச் சென்று, புருவமத்தி எனப்படும் ஆக்ஞா பீடத்தில் சிம்மாசனமிட்டு அமர்ந்து தன் அரசாட்சியைத் தொடங்குகிறது !
இதை மகான் பீர் முஹம்மது அப்பா ( ரலி) அவர்கள் இப்படி பாடுகின்றார்கள்
"இந்த உடலுக்குயிர் வந்த தெப்படி சிங்கி !. அது தொந்தி நடுக்குழி தொப்பூழ் வழியடா சிங்கா!"
ஆக நாம் விடும் ஒரு மூச்சிக்கு உலகிள் விலை மதிப்பே கிடையாது என்பதால் அதை அல்லாஹ்வின் நினைவில் கொள்வோமாக !

குண்டலினி யோகாசன முறைப்படி மனித உடல் ஆறு சக்தி சக்கரங்களால் ஆனது.அதில் சோலார் ப்லேக்சுஸ் (Solar Plexus) அல்லது மணிப்புற சக்கரம் (Manipura Chakra) எனப்படும் சக்கரம் தொப்புட்பகுதியில் அமைந்துள்ளது.இது நெருப்பின் சக்தியை குறிக்கிறது.
நாபி அதாவது தொப்புள் நரம்பு முடிவலையில் சுருண்டு பதுங்கிக் கிடக்கும் குண்டலினி சக்தியை எழுப்புவதற்குப் பிராணாயாமம் யோகிகளுக்கு உதவுகிறது என்றும் அந்த சக்தி முதுகுத் தண்டினுள் பதிந்து மூளைவரையில் செல்லும் சுழுமுனை எனும் நரம்பு வழியே மேலெழும்புவதாகவும் விளக்கப்படுகிறது.
சூக்ஷும்னா என அழைக்கப்படும் சுழுமுனை என்பது ஒரு வளைவுக்கோடு போன்றது. நாபியிலிருந்து தொடங்கி முதுகுத் தண்டின் வழியே மூளைக்குச் சென்று, அங்கிருந்து வளைந்து கீழிறங்கி இதயத்தில் முடிவுறுகிறது என்று ஸ்ரீ ரமண மகரிஷி கூறியுள்ளார்.

ஆயுர்வேதத்தின்படி தொப்புளும் அதை சுற்றி உள்ள பகுதியும் சிறப்புடையது.ஏன் என்றால் சுமார் 72,000 நரம்புகள் தொப்புட் பகுதியில் ஒன்று கூடுகின்றன. பஞ்சபூதங்களில் ஒன்றான வாயுவின் ஒரு வகையான சமான வாயுவானது தொப்புளில் அமைந்துள்ளது.இது ஜீரணம் மற்றும் உடல் வலிமைக்கு உதவுகிறது
சினிமாவில் தொப்புளில் பம்பரம் விடுதல் பற்றி சிலாகித்துப் பேசப் பட்டாலும், உலகின் பல இலக்கிய நூல்களில் பெண்ணின் அழகை வர்ணிக்கும்போது தொப்புளும் வர்ணிக்கப்படுகிறது.தமிழ் காப்பியங்களிலும் கூட இது இடம்பெற்றிக்கிறது.உதாரணமாக...

பொருநராற்றுப்படையில் பாடினியின் வடிவழகை வர்ணிக்கும்போது "நீர்ப் பெயர்ச் சுழியின் நிறைந்த கொப்பூழ்" என்று குறிப்பிடப்படுகிறது."நீரிடத்துத் தோன்றும் சுழிபோன்ற இலக்கணம் பொருந்திய தொப்புள்" என்பது இதன் பொருளாகும்.
சீவக சிந்தாமணியில் விசயையின் தோற்றம் பற்றிய வரிகைளில் "அங் கை போல் வயிறு அணிந்த வலம் சுழி அமை கொப்பூழ்" என்ற வரியில் தொப்புள் வர்ணிக்கப்படுகிறது.
குமார சம்பவத்தில் உமா (பார்வதி தேவி) கோடைகாலம் கடந்து தவமிருக்கிறார்.குளிர்காலம் வருகிறது. அப்போது பருவமழை ஆரம்பிக்கிறது. அந்த மழையின் முதல் துளி அவர் மேல் படும் தருணத்தை சம்ஸ்கிருத்தில்,
ஸ்திதாஹ் ஸ்னம் பக்ஷ்மசு பயோதரோத்ஷேதனி பத சர்நித்தா | வலிஸூ தச்யாஹ் ஸ்க்ஹலிதாஹ் ப்ரபிதிரே ஷிரின நாப்ஹீம் ப்ரதமோபிந்தவாஹ் || - குமார சம்பவம் - 5.23–24

என்று காளிதாசன் குறிப்பிடுகிறார். "கண் இமைகளில் விழுந்தபின் வழிந்து கீழ் உதட்டில் பிளந்து இரு மார்பகங்களின் நடுவில் பாய்ந்து வயிற்றின் மடிப்புகளில் தவழ்ந்து இறுதியாக தொப்புளைச் சென்று அடைகிறது." என்பது இதன் பொருளாகும்.
கபிலரின் குறிஞ்சி பாட்டில்,
ஐம்பால் ஆய்கவின் ஏத்தி ஒண்தொடி, அசைமென் சாயல் அவ்வாங்கு உந்தி, மடமதர் மழைக்கண் இனையீர் இறந்த, கெடுதியும் உடையேன் என்றனன் - குறிஞ்சிப் பாட்டு -(139-142)

என்ற வரிகள் இடம்பெறுகின்றன. "எம் ஐம்பால் கூந்தலையும் மென்மையான அழகினையும் பாராட்டினான். ஒளிமிக்க வளையல், அசைகின்ற மெல்லிய சாயல், வளைந்திருக்கும் கொப்பூழ், மடப்பம் பொருந்திய செழித்த குளிர்ச்சியான கண்கள் இவற்றையும் பாராட்டினான். பின்பு, இளையவர்களே! என்னிடமிருந்து தப்பிச் சென்ற விலங்கொன்று இந்த வழி போனதோ?" என்றான் என்பது இதன் பொருளாகும்.
விவிலியத்தில் கூட தொப்பூழ் பற்றிய வருணைகள் உள்ளன.

சாங் ஒப் சாலமன் என்னும் யூத மொழி விவிலியம் நூலில் சுலைமி என்னும் பெண்னை வர்ணிக்கும்போது "thy navel is like a round goblet, which wanteth not liquor"(7:2) என்று குறிப்பிடப்படுகிறது. "உனது தொப்புள் திராட்சை ரசம் நிறைந்த வட்டக்கலசம் போலிருக்கிறது" என்பது இதன் பொருளாகும்.
நரத்தின் தீக் கொப்பளங்களின் உள்ளே இருப்பது ஊனீர் (Selous fluid) தீப்பட்ட பகுதியில் உள்ள நுண்ணிய இரத்த குழாய்களின் சுவர்கள் சேதமுறுவதாலும் அவற்றில் இருந்தது வெளிப்படும் ஊனீர் அதிகரிப்பதாலும் பிளாஸ்மா வெளியேற்றம் நிகழ்கிறது
இந்த பிளாஸ்மாவவுள்ள ஊனீரே புடைத்தெழுந்து நசிந்து தோலுக்கடியில் தேங்கி புடைத்து விகாரமாகி கொப்பங்களிருந்து ஊனீர் வெளிப்படும்
நரகவாசிகளுடைய முகங்களை நரகத்தின் நெருப்பு பொசுக்கும் அவர்களுடைய உதடுகளெல்லாம் வெந்து சுருண்டு முகம் விகாரமாக இருக்கும் குர்ஆன் 23:104

அவரகளது முகத்தை நரக நெருப்பு சுட்டுப் பொசுக்கும் அதன் விளைவாக அவர்களது மேல் உதடு இழுத்துக்கொண்டு தலையின் மத்தியப் பகுதி வரை போய்விடும் கீழ் உதடு இழுத்துக் கொண்டு அவர்களது தொப்பிள் வரை தொங்கிக் கொண்டு விகாரமாக இருக்கும் நூல்: திர்மிதி, முஸ்னது, அஹமது

## அவயங்களின் அகமியங்கள் 25

( ஆண் இன உறுப்பு )

( ஆதத்தின் தம்பதியரை ) அவர்களை மயக்கி, (அம்மரத்தின் கனியைப் புசிப்பதற்காக) அதன் பக்கம் அவர்களைச் செல்ல (இப்லீஸ்) வைத்தான். அவ்விருவரும் அம்மரத்(தின் பழத்)தைச் சுவைக்கவே, அவ்விருவரின் மர்ம உறுப்புகளும் அவர்களுக்குத் தெரிந்து, அச்சோலையின் இலையைக் கொண்டு தங்களை மூடிக்கொள்ள அவர்கள் முயற்சித்தனர். (குர்ஆன் : 7:22)

மேற்கண்ட வசனத்தின் படி இறைவன் மனிதனை படைக்கும்போது, இன உறுப்புகள் வெளியே தெரியாமல் உள்ளடங்கியே இருந்தது என்றும் , தம்பதியார் அம்மரத்தின் கனியை புசித்ததும் அவரவர் இன உறுப்புகள் வெளியே தெரிய வந்துள்ளது.
இக்காலத்தில் வெட்கஸ்தலங்களை மறைக்காமல் நிர்வாணமாக இருப்பது கேவலமும் பழிப்பாகவும் இருப்பதுபோலவே, ஆதிகாலத்திலும் கூட நிர்வாணமாக இருப்பது கேவலமாகவும் பழிப்பாகவும் இருந்தது என்பது மேற்கண்ட வசனத்தின் மூலம் அறியமுடிகிறது.
வெளிவந்த நாளிலிருந்து துவங்கிய இன உறுப்புகளின் சகவாசத்தின் அட்டகாசம் இன்றுவரை மனித குலத்தை வழுக்கி வழுக்கி இப்லீஸ் விழச் செய்துகொண்டே இருக்கிறது!

"தம் இரண்டு தொடைகளுக்கிடையே உள்ள இன உறுப்பிற்கும் தம் இரண்டு தாடைகளுக்கிடையே உள்ள ( நாவிற்கும்) என்னிடம் உத்தரவாதம் அளிப்பவருக்காக நான் சொர்க்கத்திற்கு உத்தரவாதம் அளிக்கிறேன் " என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்" என ஸஹ்ல் இப்னு ஸஅத் அஸ்ஸா இதீ (ரலி) புகாரி : 6807
இன்றைய ஆராய்ச்சிகளின்படி ஆண் உறுப்புக்கு மேலை வரும் போது அதற்குள் ரத்த ஓட்டம் அதிகரிக்கிறது இதைக் கட்டுப்படுத்துவது மூளையும் மைய நரம்பு மண்டலமும்தான் . இதைப் பலர் ஆராய்ந்திருக்கிறார்கள் விரைப்பில் வரும் கோளாறுகளை ஆராய " எரக்டைல் டிஸ்ஃபங்ஷன் " என்று ஓர் இயலே இருக்கிறது இந்த இயல்தான் வயாகரா போன்ற மருந்துகளை கொண்டு குறையாத விரைப்பை ஏற்படுத்த முடியும் என்பதை கண்டு பிடித்திருக்கிறது

சாதாரண தினங்களில் மனிதன் தன் மற்ற வேலைகளைக் கவனித்துக் கொண்டிருக்கையில் செக்ஸ் தேவையில்லை அப்போது ஆணுறுப்புக்கு ரத்தம் உபரியாகப் போகாமல் "சிம்பத்தட்டிக் நெர்வ்ஸ் சிஸ்டம்" கட்டுப்படுத்தி விடுகிறது. அதனால் "அது" காற்றடிக்காத நேரத்து கொடி போல் தாழ்ந்து கிடக்கிறது
ஆணுறுப்பு இரண்டு விதக் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டது

1) நரம்பு அமைப்பு அதன் விறைப்புத் தடுக்கிறது
2) நரம்பு அமைப்பு விறைப்பை ஏற்படுத்துகிறது.
இதுதான் இதில் வியப்பான விஷயம்
மூளையிலோ, ஏதாவது ஒரு இன்ப ஞாபகத்திலோ, வாசனையாலோ
( மல்லிகை) ஏதாவது ஒரு காதல் எண்ணத்தாலோ,
தொடுதல், கையாளுதல் , அதைத் தொந்தரவு செய்தல், இப்படி ஏதாவது உட்படுத்தப்படும்போது எங்கிருந்தும் சிக்னல் வரலாம். நரம்பு மண்டலம் இதற்கான ந்யூரோ ட்ரான்ஸ்மிட்டர்களை சிக்னல் வந்ததும் அவிழ்த்து விடுகிறது .
நைட்ரிக் ஆக்சைடு, அசிடைல்கோலைன் , டோப்பாமைன் போன்றவை முக்கியம் இதனால் ஆணுறுப்புக்குப் போகும் ரத்தக் குழாய்கள் பெரிதாகின்றன அதிக ரத்தம் பாய்கிறது அதில் இருக்கும் பஞ்சுத்தனமான அறைகள் எல்லாம் ரத்தத்தால் நிரம்புகின்றன.
இதனால அதன் உள் அறைகள் பெரிதாகி ரத்தக் குழாய்களை மூடிவிடுகின்றன உள்ளே ரத்தம் நிரம்பி விடுதலை பெறாமல் தேங்கி விட , முட்டிக்கொண்டு ஆணுறுப்பு பெரிதாகிறது.காலையில் மூத்திரம் முட்டிக்கொண்டிருந்தாலும் விரைப்பு ஏற்படுவது போன்று.
நவீன அறிவியல் ஆராய்ச்சிப்படி விரைப்பு உண்டாகும் இடத்தை மிக துல்லியமாக கண்டுபிடித்துள்ளார்கள். நரம்பு மண்டலத்தில் முதுகுத்தண்டில் டி12 க்கும் எஸ் 3 க்கும் இடையே வெர்டிப்ராவில் ஓர் இடம் இருக்கிறது அந்த இடத்தில் தொட்டால் "டடாங்" என்று எழுந்து நிற்கும்.

எழுந்து நிற்க வைக்க....
பிரேசில் நாட்டில் காணப்படும் எட்டுக்கால் பூச்சி ஆர்ம்டு ஸ்பைடர், பனானா ஸ்பைடர் உங்களை ஒரு முறை கடித்தால் போதும் 4 மணி நேரத்துக்கு அது உங்களை உச்சத்தில் வைத்து இருக்க உதவும்.
செக்ஸ் தொடர்பான கோளாறுகளுக்கு இந்த பூச்சியின் விஷத்தை பயன்படுத்தி எரக்டைல் டிஸ்பங்ஷன் போன்ற தாம்பத்திய உறவு கோளாறுகளுக்கு மருந்து கண்டுபிடிக்க முடியும் என்று விஞ்ஞானிகள் தெரிவித்து உள்ளனர்.
அமெரிக்காவில் ஜார்ஜியா மருத்துவ கல்லூரியில் உள்ள ஆராய்ச்சியாளர்கள் இந்த விஷம் இந்த வகையான நோய்க்கு சரியான மருந்தாக இது இருக்கும் என்று தெரிவித்து இருக்கிறார்கள்.
இத்தனை விரைப்புத் தேவையா ? கண்டிப்பாக தேவை.

பூச்சிகள், சிறு சிறு முக்கோண வடிவில் வலையைப் பின்னி அதற்குள் தங்களின் விந்துவை சேர்ப்பிக்கும் அப்புறம்தான் ஸ்பூன் சைஸிலிருக்கும் தன் காலை உபயோகித்து அதைக் கொஞ்சம் கொஞ்சமாக அள்ளி தள்ளிக் கொண்டு வந்த 'பெண் " உறுப்பில் சேர்க்கும். ...எவ்வளவு கஷ்டம் தெரியுமா ?
தாவரங்கள் இனச் சேர்க்கைக்கு தங்களது பூக்களுக்கு அதிகமாக நிறம்,மணம் கொடுத்து பூச்சியையும், வண்டையையும் தன் பக்கம் இழுத்து பூக்களில் தேனை லஞ்சமாக கொடுத்து அதன் மீது தேனையை தடவி அதில் மகரந்த தூள்களை ஒட்டும்படி செய்து, பக்கத்து தாவரத்தின் பூக்களில் சூல் பைக்குள் தூவி விட வேண்டும் என்னா ஒரு துன்பம் .நறுமணம் பூசி ஜோடிச்சு இருக்கணும் வண்டு வரணும் அப்பத்தான் கதையே நடக்கும்
பல்லி மாதிரி லுக் உடைய "நியூட்" உட்பட சில முதுகெலும்பற்ற பிராணிகள் தங்கள் ஜோடிகளைக் கண்டுபிடித்து அழைத்து வந்து, ஏற்கனவே தனது விந்துவை பத்திரப்படுத்தி வைத்திருந்ததை கூட்டிக்கொண்டு வந்து "இதோ பார் பெண்ணே ! உனக்கு உனக்காகவே அத்தனையும் " என்று காதல் கீதம் படி பெண்ணுக்குள் செலுத்துகின்றன. அதுவரை வேறு ஒரு ஆண் வராமல் இருக்க வேண்டும். வந்தால் சண்டை .... அப்புறம் சேர்த்து வைத்த விந்து, காதல் கீதம் எல்லாம் வீணாகி ... .உஸ் அப்பாடா....ரொம்ப கஷ்டம் ....ச் சே !

பவளப்பாறை மாதிரி சில கடல் உயிரினங்கள் ஒரே நேரத்தில் தங்கள் விந்து அல்லது சினை முட்டையை கடலிலேயே ரிலீஸ் செய்து அவை ஒன்றோடொன்று சேரும்படி இயற்கைதான் செய்கின்றன.
ஆனால் இது மாதிரி கஷ்டங்கள் எதுவுமின்றி விந்துவை கரெக்ட்டாகப் போய் உரிய இடத்தில் சேர்ந்திடுமா ? என்று சந்தேகத்திற்கு இடமில்லாமல் நடந்து கொள்ளக் கூடியவை மனிதன், குரங்கு , மாடு மாதிரி பாலூட்டி வகையறாதான் எதற்கு வம்பு என்று கர்ப்பப்பை வரையிலுமே விந்துவை பாதுகாப்பாகக் கொண்டு போய்ச் சேர்க்க ஆணுறுப்புக்கு நீளம், விரைப்பு தேவையாக இருக்கிறது. கூடவே ஆண் பெண் இருபாலருக்கும் பிடித்துவிட்ட மாதிரி ஒரு சுகம். மைண்ட் ப்ரீயாக ஆய்டிச்சா ?
"நீங்கள் செலுத்தும் இந்திரியத்தைக் கவனித்தீர்களா ?
அதனை (சிசுவாக ) நீங்கள் படைக்கின்றீர்களா ?
அல்லது நாம் படைக்கின்றோமா ? குர்ஆன் ( 56 : 58 , 59)

**அவயங்களின் அகமியங்கள் 26**

( பெண் இன உறுப்பு- ஜனனத் தொழிற்சாலை )

இந்த உலகில் உங்களைப் பிரமிக்கத் தூண்டும் அதிசயம் எது ? என்று கண்ணதாசனிடம் கேட்கப்பட்டது

"சக்தி வாய்ந்த மைக்ராஸ்கோப் மூலம் மட்டுமே கண்ணுக்குத் தெரியும் ஒரு புள்ளி - ஒரு துளி விந்து ஆறடி உயரமுள்ள மனிதனாக உருமாறும் விஷயம்தான் என்னைப் பொறுத்தவரை மாபெரும் அதிசயம் " சிலிர்த்துப் போய் பதில் சொன்னார் கண்ணதாசன்

கண்ணதாசன் மட்டுமா ? பூவுக்குள் ஒளிந்திருக்கும் கனிக்கூட்டம் அதிசயம் என்று வைரமுத்தும் வியந்த விஷயம் இந்த ஜனனத் தொழிற்சாலை என்னும் படைப்பு விஷயம்தான்

ஆண் - பெண் உடலுறவில் உச்சக்கட்டத்தில் ஆண் வெளியேற்றும் விந்துதான் இந்த ஜனனத் தொழிற்சாலையின் வேலையை ரிப்பன் வெட்டி திறந்து வைக்கிறது. ஒரு முறை ஆண் வெளியேற்றும் விந்தில் 30 கோடி விந்தணுக்கள் இருக்கின்றன ( யப்பா.... - எல்லா உயிரணுவுமே மனிதனாக முடிந்தால். ஒரே தடவையில் கால்வாசி சீனாவை ஒரு மனிதன் உருவாக்கிவிட முடியும் ! சிந்தித்தால் தலை சுற்றும் ) .

இது கர்ப்பப்பை வரை சென்று பத்திரமாக 'சுமை' யை இறக்கி விட்டு வருவதற்கு வழிசெயது கொடுக்கும் வகையில்தான் விரிந்து கொடுக்கும் சதைப் பகுதிகளுடன் கூடியதுதான் இந்த பெண்ணுறுப்பு.

இதன் அமைப்பு ஆண் இன உறுப்பின் அத்தனை நீளத்திற்கும் தடிமனுக்கும், வலுவாக நாலாபுறம் திமிரும் போது அதையும் அட்ஜஸ்ட் செய்து கொள்ளும் வகையில் தான் பெண்ணுறுப்பு பெண்களுக்கு அமைந்திருக்கிறது. இது எப்படி என்று எண்ணி மாளாத பொழுதே விஞ்ஞானத்திறகு இல்லை

பெண்ணுறுப்பின் நீளம் ஒவ்வொரு பெண்ணுக்கும் மாறுபடும் சுமாராக 8 செ.மீ அகலம் 3 செ.மீ இத்தனை சின்ன துளைதான் அப்புறம் ஆச்சரியமாக, அகல விரிந்து, பத்து மாதம் ஆன குழந்தைக்கு வழிவிடுகிறது. இது எப்படி முடிகிறது என்பது விஞ்ஞானத்திற்கு இன்னொரு வியப்பான விஷயம்

பெண்ணுறுப்பினுள்ள கருப்பை பார்ப்பதற்கு கருஞ்சிவப்பு நிறமான ஒரு பேரிக்காயைப் போல மேல்புறம் பறுத்தும், கீழ்புறம் சிறுத்தும் இருக்கும். இந்த வீட்டில்தான் கண்ணுக்குத் தெரியாத புள்ளியாக இருக்கும் கரு முழுக் குழந்தையாக உருவெடுக்கும் அதிசயம் நடக்கிறது.

கர்ப்பப்பையின் இரண்டு பக்கமும் சினைப் பைகள் பாதாம் பருப்பு சைஸில் இருக்கும் குழந்தை உருவாவதற்கு மிக முக்கியமான சினை முட்டையை மாதம் ஒன்று என்ற கணக்கில் உருவாக்கி அனுப்பி வைக்கிறது. இதை இயற்கையே தேர்வு செய்து அனுப்புகிறது இது மூன்றாவது வியப்பான விஷயம்

ஃபெலோப்பியன் என்றும் இரு கருக்குழாய்கள் இது நோட்டுப் புத்தகம் தைக்கும் நூலின் பருமனில் இருக்கும். இந்தக் குழாய்களுக்கு உள்ளேதான் பெண்ணின் சினைமுட்டையோடு ஆணின் உயிர்ணு சேர்ந்து கரு உருவாகும் அற்புதம் நடக்கிறது. இரண்டு குழாயில் ஒன்று பாதிக்கப்பட்டால் இன்னொரு குழாய் வழியாக விந்தணு செல்லும்.

செர்விக்ஸ் என்பது கர்ப்பப்பையின் கழுத்துப் பகுதி கோழி முட்டையின் வெள்ளைக்கரு போல இங்கே சுரக்கும் ஒரு திரவம் பெண்களுக்கு செக்ஸில் இருக்கும் ஈடுபாட்டை அதிகப்படுத்துவ தோடு விந்து உயிரணுக்கள் வழுக்கிக் கொண்டு கர்ப்பப்பையை நோக்கி வேகமாக உள்ளே செல்ல வசதியும் செய்து தருகிறது. டபுள் ஆக்ஷன்

இந்த பெண்ணுறுப்பினுள்ளே உள்ள கர்ப்பையில்தான் கரு உருவாகி அவயவங்கள் பொருத்தி அழகான கோலத்தில்தான் நீங்களும் நானும் இருந்து வெளியே வந்தோம்.

இரட்டை பெண்ணுருப்பை பற்றிச் சொல்ல வேண்டும். அமெரிக்காவைச் சேர்ந்த பெண் சரிஸ்மா, இவர் பிரபலமான யூடியூபராக இருந்து வருகிறார். இவர் பல்வேறு வீடியோக்களை வெளியிட்டு பிரபலமானவர். இவர் சமீபத்தில் தனது உடலில் உள்ள ஒரு அந்தரங்க விஷயத்தை பற்றி கூறியுள்ளார். இவரது உடலில் 2 பிறப்புறுப்புகள் இருப்பதாகவும் அது தனக்கு பிறவியிலேயே இருப்பதாகவும் கூறியுள்ளார்.

பொதுவாக இதுபோன்ற விஷயத்தை பெண்கள் வெளியே சொல்வது கிடையாது. இந்நிலையில் இவர் தைரியமாக வெளியே சொல்லியுள்ளார். இதை அவர் ஒரு வீடியோவில் பேசியுள்ளார். அப்பொழுது அவரிடம் பலர் பல விதமாக சந்தேகங்களை கேட்டனர்.

சிலர் அவரது மாதவிடாய் குறித்தும், சிலர் அவர் சிறு நீர் வெளியேற்றம் குறித்தும், சிலர் அவர் அந்தரங்க வாழ்க்கை குறித்தும் கேட்டனர். இதற்கு எல்லாம் அவர் பதிலளித்தார். இவருக்கு பிறப்புறுப்பு வெளியில் மட்டுமல்ல கர்ப்பை வர இரண்டாக இருக்கிறதாம். இரண்டும் ஒன்றோடு ஒன்று இணைந்திருக்கிறதாம்.

இது குறித்து அவர் பேசியதற்கு பல தரப்பிலிருந்து வரவேற்பு கிடைத்துள்ளது. பலர் இது குறித்து விழிப்புணர்வுகள் வரவேண்டும் என்றும், பெண்கள் இது குறித்து பேச தயங்கக் கூடாது என்றும் கூறியுள்ளனர். **https://youtu.be/7Yq4-n1hogs**

"மனிதனே ' உன்னை சிருஷ்டித்து மேலான விதத்தில் உருவகித்து , மிக்க ஒழுங்காக உன்னை அமைத்த மிக்க கண்ணியமுள்ள உனது இறைவனைப் பற்றி உன்னை மயக்கிவிட்டது எது ? அவனே தான் விரும்பிய (மிக்க அழகான) கோலத்தில் உன்னை (உன்னுடைய அவயவங்களைப்) பொருத்தினான் " (குர்ஆன் 82 : 6 முதல் 8 வரை )

...என்பதாக கூறினாலும் ஒவ்வொரு பெண்ணின் கர்ப்பப் பையில் ஒரு மலக்கை அனுப்புகிறான்.

'அல்லாஹ் கர்ப்பப் பையில் ஒரு வானவரை நியமிக்கிறான். கர்ப்பப் பையில் விந்து செலுத்தப்பட்ட பின்னர் அதன் ஒவ்வொரு நிலையிலும் மாற்றம் ஏற்படும்போது அந்த வானவர்,

'யா அல்லாஹ்! இப்போது விந்தாக இருக்கிறது.

யா அல்லாஹ்! இப்போது 'அலக்' (கருப்பைச் சுவற்றின் தொங்கும்) எனும் நிலையில் இருக்கிறது.

யா அல்லாஹ்! இப்போது சதைத் துண்டாக இருக்கிறது' என்று கூறிவருவார்.

அல்லாஹ் அதை உருவாக்க நாடினால் அது ஆணா? பெண்ணா? நல்லவனா? கெட்டவனா? என்பதையும் அவனுக்குச் கொடுக்கவிருக்கும் செல்வம் எவ்வளவு? அவனுடைய வாழ்நாள் எவ்வளவு? என்பதையும் கூறிவிடுகிறான்.

மனிதன் தன் தாயின் வயிற்றில் இருக்கும் போதே இவை எழுதப்பட்டு விடுகின்றன' என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: என அனஸ்(ரலி) அறிவித்தார். (புகாரி : 318)

## அவயங்களின் அகமியங்கள் 27

மார்பகம்

பெண்ணிடம் ஒரு ஆணுக்கு கவர்ச்சிகரமான ஈர்ப்பு ஏற்படுவது பெண்ணின் மார்பால்தான். ஆனால் அறிவியலாளர்களின் பார்வையில் இது ஒரு வியப்பான உறுப்பு ஏன் தெரியுமா?
இரத்தத்தை பாலாக மாற்றும் அற்புத மினி ஃபாக்டரி இந்த மார்பில்தான் நடைபெறுகிறது
சாதாரணமாக இடது மார்பகம் வலது மார்பகத்தை விட அளவில் பெரியது காரணம் இன்னும் தெரியவில்லை
பெண் 12 வயதை அடைந்ததும் அவள் உடலில் ஹார்மோன்கள் இயங்கத் தொடங்குகின்றன அதனுள் கொழுப்பு திசுக்கள் நிறைகின்றன. அதன் காம்புகள் வளர்ச்சிப் பெறுகின்றன.
இந்நிலையில் காம்பைச் சுற்றி கருநீல வட்டம் உருவாகிறது. காரணம் கொழுப்புத் திசுக்களால் பருத்தும் வலியுடன் விளங்கும் போது காம்புகள் வெடிப்புறுவது தடுக்கப்படும். அதற்காக சற்று கடினமாக தோல் உண்டாக்கப்படுகிறது.
மேலும் காம்புகள் பருத்து விரைப்புத் தன்மை பெறுவதற்கும் இது உதவியாக இருக்கிறது. இதனால் குழந்தையின் சிறுவாய் காம்பினைக் கவ்விச் சுவைத்து பால் அருந்த ஏதுவாகிறது.
மார்பில் குழந்தை வாய் வைத்ததும் உணர்வு நரம்புகளால் தூண்டப்பட்டு மூளையிலுள்ள அடிச் சுரப்பி 30 விநாடிகளில் "அக்சிடோசின் " என்ற ஹார்மோன் சுரக்க வழி செய்கிறது
கர்ப்ப காலம் முடிந்து குழந்தை பிறந்ததும், சுவிட்ச் போட்டாற் போல் சுரக்கும் அதிசயம் இந்த தாய்ப்பால்
பிரசவ நேரம் நெருங்கியதும் பெண்ணின் உடலுக்குள் சில விநோதங்கள் நிகழ ஆரம்பிக்கின்றன,
ஹைபோதாலமஸின் தயாரிப்பான ஈஸ்ட்ரோஜன் ப்ராகஸ்ட்ரோன் போன்ற சில ஹார்மோன்களின் அளவு ரத்தத்தில் குறைய ஆரம்பிக்கிறது. உடனேயே ஹைப்போதாலமஸ் "டெலிவரி டைம் நெருங்கியாச்சு" என்று

உஷாராகி தனக்குக் கீழ் இருக்கும் பிட்யூட்டரி சுரப்பிக்கு தகவல் அனுப்ப, இதோ ப்ரோலாக்டின் ஹார்மோனை வெளிப்படுத்துகிறேன்" என்று சொல்லி வைத்தாற் போல் வேலை நடக்கிறது
இயற்கையின் இந்த படைப்பு டிசைன் அறிவியலாளர்களை ரொம்பவும்.அசர வைக்கிறது
மார்பகங்களுக்குள் ஆரஞ்சு சுளைகள் போல குட்டி குட்டியாய் "அல்வியோல் " என்ற பெயரில் சுரப்பிகள் இருக்கின்றன இவைகள்தான் இரத்தத்திலிருந்து தாய்ப்பாலை சுரக்கின்றன இவைகள் மார்பகத்தினுள்ள 17 கிளைப் பாதைகள் வழியாக வெளியேறி "பிரதான சாலைக்கு வந்து நிப்பிளை அடைய குழந்தை பசியாற உறிஞ்சிக் கொள்கிறது

சராசரி 3 கிலோ எடையுடன் பிறக்கும் குழந்தைக்கு நாளொன்றுக்கு அரை லிட்டர் பால் சுரக்கும் குழந்தை வளர வளர மூன்று லிட்டர் பால் வரை சுரககும் பாலுடன் கால்சியம் வெளியேறி குழந்தையின் வளர்ச்சிக்கு பெரிதும் உதவும இதனால்தான் கால்சியத்தை மூலப்பொருளாக கொண்ட எலும்பினால் பெண் படைக்கப்பட்டாலோ ?
பிரசவம் ஆனதும் சீம்பால் எனப்படும் மஞ்சள் நிறத்தில் திரவம் வெளிப்படுகிறது பெயர் "கொலஸ்ட்ரம் " இது நோய் எதிர்ப்பு சக்தி இதில்தான் அடங்கி இருக்கிறது.
இன்னொரு வியப்பான விஷயம் என்னவென்றால்,இந்த பூலோகத்தின் முதல் குடிப்புப் பாலில் இந்த பூமிக்கு தக்கவாறு குழந்தையின் உடலை மாற்றம் செயது விடுகிறது இந்த சீம்பால். பின்பு மூன்றுநாள் கழித்து குழந்தைக்கான தாய்ப்பால் சுரக்க ஆரம்பிக்கிறது.
அந்த அடிப்படையில் மனித சமூகத்திற்கு முதல் உணவாக அல்லாஹ் “தாய்ப்பால்” எனும் கொடையை வழங்கியிருக்கின்றான்.
அத்தோடு நின்று விடாமல் தாய்ப்பால் என்பது பிறந்த குழந்தைக்கு முறையாக வழங்கப்பட வேண்டும் எனவும் அல்லாஹ் வழிகாட்டி இருக்கின்றான்.

وَالْوَالِدَاتُ يُرْضِعْنَ أَوْلَادَهُنَّ حَوْلَيْنِ كَامِلَيْنِ لِمَنْ أَرَادَ أَنْ يُتِمَّ الرَّضَاعَةَ وَعَلَى الْمَوْلُودِ لَهُ رِزْقُهُنَّ وَكِسْوَتُهُنَّ بِالْمَعْرُوفِ لَا تُكَلَّفُ نَفْسٌ إِلَّا وُسْعَهَا لَا تُضَارَّ وَالِدَةٌ بِوَلَدِهَا وَلَا مَوْلُودٌ لَهُ بِوَلَدِهِ
“தம் குழந்தைகளுக்கு பால்குடியை நிறைவு செய்ய வேண்டும் என்று தந்தையர்களில் எவராவது விரும்பினால் தாய்மார்கள் தங்கள் குழந்தைகளுக்கு இரண்டாண்டு காலம் முழுமையாகப் பாலூட்ட வேண்டும். இந்நிலையில், அத் தாய்மார்களுக்கு நல்ல முறையில் உணவளிப்பதும், உடை கொடுப்பதும் குழந்தைகளின் தந்தையர்கள் மீது பொறுப்பாகும்.
ஆனால், எவர் மீதும் அவரது சக்திக்கு ஏற்பவே தவிர பொறுப்பு சுமத்தப்பட மாட்டாது. தாயும் தனது குழந்தைக்கு பாலூட்டும் காரணத்தால் சிரமத்திற்கு உள்ளாக்கப்பட மாட்டாள். தந்தையும் தனது குழந்தையினால் சிரமத்திற்கு உள்ளாக்கப் படமாட்டார்”. பார்க்க: முழு இறைவசனத்தையும்… ( அல்குர்ஆன்: 2: 233 )
ஆனால், தாய்ப்பால் எனும் இந்த விஷயத்தில் மனித சமூகத்தின் பெரும்பாலோர் அநீதமாக நடந்து கொள்வதைப் பார்க்கமுடிகின்றது.
தாய்ப்பால் குறித்த மகத்துவத்தை, விழிப்புணர்வை மக்களிடையே கொண்டு சேர்க்க வேண்டும் என்பதற்காக, ஆகஸ்ட் 1 –ஆம் தேதி உலக தாய்ப்பால் தினமாக உலகெங்கும் கொண்டாடப்பட்டு வருகின்றது.
குளோபல் பிரஸ்ட்பீடிங் கனெக்டிவ் என்ற அமைப்புடன் ஐ. நா குழந்தைகள் நல நிதியம் ( யுனிசெஃப் ), மற்றும் உலக சுகாதார நிறுவனம் ஆகியவை கூட்டாக மேற்கொண்ட ஆய்வின் அறிக்கையை சமீபத்தில் ஐ. நா வெளியிட்டது.
அதில் “போதிய அளவு தாய்ப்பால் புகட்டப்படாததால் சீனா, இந்தியா, நைஜீரியா, மெக்ஸிகோ, இந்தோனேசியா ஆகிய நாடுகளில் ஒவ்வொரு ஆண்டும் 2,36,000 க்கும் மேற்பட்ட குழந்தைகள் இறக்கின்றன. அதிலும் குறிப்பாக, இந்தியாவில் 99,499 குழந்தைகள் ஒவ்வொரு ஆண்டும் இறக்கின்றன.
குழந்தைகளின் இறப்புக்கு டயோரியா ( வயிற்றுப்போக்கு ) நிமோனியா காய்ச்சல் ஆகியவை இரு முக்கிய காரணிகளாகும்.

முறையாக குழந்தைகளுக்கு தாய்ப்பால் புகட்டுவதன் மூலம் டயோரியா மற்றும் நிமோனியா ஆகியவற்றை தடுக்க முடியும். இது மட்டுமின்றி கர்ப்பப்பை மற்றும் மார்பக புற்று நோய் ஆபத்துகளில் இருந்து பெண் சமூகத்தை காக்கவும் முடியும்.
தாய்ப்பால் புகட்டுவதை தள்ளிப்போடாமல் முன்னதாகவே தொடங்கி, முதல் ஆறுமாதங்களுக்கு தாய்ப்பால் மட்டுமே புகட்டுவது, ஆறுமாதங்களுக்குப் பிறகும் தாய்ப்பால் புகட்டுவதை தொடர்வது ஆகியவற்றால் டயோரியா மற்றும் நிமோனியா வை தடுத்து குழந்தைகள் இறப்பைத் தடுக்க முடியும்” என்று குறிப்பிடப்பட்டது ( நன்றி: தமிழ் தி இந்து 3/08/2017 காஞ்சிபுரம் பதிப்பு )

தாய்ப்பால் கொடுப்பதன் முக்கியத்துவத்தை இஸ்லாம் ஒரு படி மேலே போய்.....
மாயிஸ் (ரலி) அவர்களை அல்லாஹ் பொருந்திக் கொள்வானாக!
மாயிஸ் (ரலி) அவர்களுக்கு விபச்சாரம் செய்ததற்கான குற்றவியல் தண்டனை வழங்கப்பட்டு சில நாட்கள் கூட கழிந்திருக்காத நிலையில் அண்ணலாரையும், நபித்தோழர்களையும் அதிர்ச்சியடையச் செய்த ஓர் சம்பவம் நபிகளாரின் சபையில் நடந்தேறியது.
அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்களின் திருச்சமூகத்திற்கு அஸ்த் குலத்தின் கிளையான ஃகாமிதிய்யா கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு பெண்மணி வருகை தந்தார்கள்.

வந்த அந்தப் பெண்மணி அல்லாஹ்வின் தூதரே! நான் விபச்சாரம் செய்து விட்டேன். எனக்கு உரிய தண்டனையை நிறைவேற்றி என்னை தூய்மை படுத்துங்கள்! என்றார்.
அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் அப்பெண்மணியை திருப்பி அனுப்பி விட்டார்கள். அப்பெண் மறு நாளும் அல்லாஹ்வின் தூதரின் முன் வந்து நின்று முன்பு சொன்னது போலவே சொன்னார்.
அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் திரும்பிச் செல்லுமாறு கூறிய போது, அப்பெண்மணி "அல்லாஹ்வின் தூதரே! ஏன் என்னை திருப்பியனுப்புகின்றீர்கள்? மாயிஸ் இப்னு மாலிக் {ரலி} அவர்களின் விஷயத்தில் நடந்து கொண்டதைப் போன்றல்லவா என் விஷயத்திலும் நடந்து கொள்கின்றீர்கள்.
அல்லாஹ்வின் மீது சத்தியமாக! நான் தகாத உறவில் ஈடுபட்டு கர்ப்பமாக இருக்கின்றேன்" என்று கூறினார்.
நபி {ஸல்} அவர்கள் ஆச்சர்யத்தோடு "நீயா அது?" என்று கேட்டார்கள். அதற்கு அப்பெண்மணி "ஆம்" என்றார்.
அப்படியானால் உமது வயிற்றினுள் உள்ள குழந்தையை பெற்றெடுத்து விட்டு வா!
"
என்று அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள் கூறினார்கள்.
குழந்தையை பெற்றெடுத்த பின்னர் அப்பெண்மணி ஒரு துணியில் அந்தக் குழந்தையை சுற்றியெடுத்துக் கொண்டு, மாநபி {ஸல்} அவர்களிடம் வந்து "இது நான் பெற்றெடுத்த குழந்தை" என்று கூறினார்.
அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள், "நீ சென்று அந்தக் குழந்தைக்கு அமுதூட்டு! பால்குடி மறக்கடிக்கப்பட்ட பின் வா! என்று கூறி அனுப்பி வைத்தார்கள்.

அமுதூட்டும் காலம் நிறைவடைந்த பின்னர், அக்குழந்தையை அழைத்துக் கொண்டு, அக்குழந்தையின் கையில் ரொட்டித் துண்டு ஒன்றை கொடுத்து அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்களின் சபைக்கு வந்து, "அல்லாஹ்வின் தூதரே! இதோ நான் பால்குடி மறக்கடித்து விட்டேன். இப்போது என் குழந்தை உணவை உட்கொள்ள ஆரம்பித்து விட்டது" என்று கூறினார்.

அல்லாஹ்வின் தூதர் {ஸல்} அவர்கள், அக்குழந்தையை அன்ஸாரிகளில் ஒருவரிடம் ஒப்படைத்தார்கள்.
அதன் பின்னர் அந்தப் பெண்ணுக்கு கல்லெறி தண்டனை வழங்குமாறு உத்தரவிட்டார்கள். எனவே, அவருக்காக மார்பளவு குழி தோண்டப்பட்டது.
பின்னர் அக்குழிக்குள் அப்பெண் நிறுத்தி வைக்கப்பட்ட பின் கல்லெறியுமாறு மக்களுக்கு கட்டளையிட, மக்கள் அவர் மீது கல்லெறிந்து அல்லாஹ்வின் தண்டனையை நிறைவேற்றினார்கள்.
அப்போது, காலித் இப்னு வலீத் (ரலி) அவர்கள் கல் ஒன்றை எடுத்து அப்பெண்ணின் தலைமீது எறிந்தார்கள்.
பீறிட்டு வந்த இரத்தம் காலித் இப்னு வலீத் (ரலி) அவர்களின் முகத்தில் தெரித்தது.
அப்போது, காலித் இப்னு வலீத் (ரலி) அவர்கள் அப்பெண்ணை சபித்தார்கள்; ஏசினார்கள்.
இதை அருகில் நின்று கேட்ட மாநபி {ஸல்} அவர்கள் "காலிதே! நிறுத்துங்கள். என் உயிர் எவன் வசம் உள்ளதோ அவன் மீது ஆணையாக! அப்பெண்மணி அழகிய முறையில் தவ்பா பாவமன்னிப்புத் தேடிக்கொண்டார்.
பொது நிதியை மோசடி செய்த ஒருவன் இப்படி பாவமன்னிப்புக் கோரினால் அவனுக்கும்கூட மன்னிப்பு வழங்கப்பட்டிருக்கும்." என்று கூறினார்கள்.
பிறகு அப்பெண்ணுக்கு ஜனாஸா தொழுகை நடத்த ஏற்பாடு செய்யுமாறு நபித்தோழர்களை பணித்தார்கள்.
அவருக்காக ஜனாஸா தொழுகையை தாமே தொழவைத்தார்கள். பின்னர் அப்பெண்மணி நல்லடக்கமும் செய்யப்பட்டார்.

( நூல்: முஸ்லிம், பாபு மன் இஃதரஃப அலா நஃப்ஸிஹி பிஸ்ஸினா, புகாரி, பாபு மன் தரகல் ஃபவாஹிஷ், ஹதீஸ் எண்: 6820, 6824, மிஷ்காத், கிதாபுல் ஹுதூத், பக்கம்: 310 )

அவயங்களின் அகமியங்கள் 28
( எல்லா நோய்க்கும் காரணமான அவயம் : சிறுநீரகம் )



ஒரு பெரிய ஜவுளிக்கடை அதிபரின் மகன் அவர் வங்கி அதிகாரியாக இருந்தார். திடீரென்று அவரைப் பற்றி ஏகப்பட்ட குற்றச்சாட்டுகள். வாடிக்கையாளர்களிடம் எரிந்து விழுகிறார்; தேவையில்லாமல் மற்றவர்களிடம் சண்டை போடுகிறார்; அடிக்கடி வேலை நேரத்தில் தூங்குகிறார் என்று என்னென்னவோ சொல்லி நீண்டது குற்றப்பட்டியல்.

சரி வீட்டில் எப்படி ? வீட்டிலும் அவர் வித்தியாசமாக நடக்க ஆரம்பித்தார். முன்னுக்குப் பின் முரணாகப் பேசுவது, எப்போதும் எல்லாரிடமும் கடுகடுவென்று இருப்பது என்று அங்கேயும் அவரால் தொல்லைகள் அவருக்கு மனநோய்தான் என்று மனநல மருத்துவரிடம் அழைத்துப் போனார்கள்.
மனநோய்க்கான சிகிச்சையும் ஆரம்பித்தது. சில மாதங்கள் கடந்த பிறகும் எந்தவித முன்னேற்றமும் தெரியாமல் போகவே, அந்த மனநல மருத்துவர் அவரை சிறுநீர், ரத்தப் பரிசோதனை எடுத்துவரச் சொல்லியிருக்கிறார்.

அதில் யூரியா க்ரையாட்டின் அளவு அதிகரித்திருப்பதைப் பார்த்ததும் அவரின் சிறுநீரகத்தை சோதித்துப் பார்த்தால், அது சிஆர்.எஃப என்கிற நிரத்தரச் சிறுநீரக செயலிழப்பு ஏற்பட்டிருக்கிறது.
தென்னை மரத்தில் தேன் கொட்டினால், பனை மரத்தில் நெறி கட்டும் என்கிற கதையாக இருக்கிறதே..' என்கிறீர்களா? ஆனால், சிஆர்எஃப் விஷயத்தில் இதுதான் உண்மை. மேலே குறிப்பிட்ட பிரச்னைகள் மட்டுமல்ல.---- சம்பந்தமே இல்லாமல் வேறு என்னென்னவோ உபாதைகள்கூட ஏற்படலாம்.
குழந்தை இல்லாததால் மூன்று திருமணங்கள் முடித்த ஒருவர் மலட்டுத் தன்மையைப் போக்குகிற மருத்துவர்களிடம் போய், ஏதேதோ சிகிச்சைகள் செய்தும் பலனில்லாமல், கடைசியாக சிறுநீரகத்தை சோதித்துப் பார்த்தால், அவரது சிறுநீரகம் செயலிழத்திருந்தது.
அதேபோல், திருமணம் முடித்துப் பல வருடங்களாகியும் குழந்தை இல்லை ஒரு பெண்ணுக்கு திடீரென்று ஒரு மாதம் தேதி தள்ளிப்போனதால், குழந்தைதான் உண்டாகியிருக்கிறது என்று சந்தோஷப்பட்டிருக்கிறார். மொத்த குடும்பமும் தடபுடலாக சந்தோஷப்பட்டிருக்கிறது.
உடனே மருத்துவரிடமும் போகாமல் ஆறு மாதம் கழித்து ஸ்கேன் செய்து பார்த்ததில், கர்ப்பம் இல்லை என்று தெரியவந்து, கடைசியில் சி.ஆர்.எஃப். என்று கண்டுபிடித்திருக்கிறார்கள் .

போலி கர்ப்பங்களில் கூட நிஜ கர்ப்ப மாதிரியே காலையில் எழுந்ததும் தலைச்சுற்றல், வாந்தி, அடிக்கடி படுத்துத் தூங்க வேண்டும் போலிருப்பது எனக் கர்ப்பத்துக்கான எல்லா அறிகுறிகளும் காணப்படும்.
அதனால்தான் கர்ப்பம்தானா என்பதை உறுதி செய்ய, ஸ்கேன செய்யவேண்டும் என்பதை மருத்துவர்கள் வலியுறுத்துகிறார்கள் . முதலிலேயே கண்டுபிடித்துவிட்டால், இந்த மனக்கஷ்டம் வராமல் மட்டுமல்ல. சிறுநீரகத்தையும் காப்பாற்றிவிட முடியுமே!
வேறு என்னவெல்லாம் சி.ஆர்.எஃப்-பின் அறிகுறிகள்?" என்கிற உங்கள் கேள்வி புரிகிறது. ஒரே வார்த்தையில் சொல்ல வேண்டும் என்றால் எல்லாமும்தான். நோய் எல்லாமும்தான்.
நெஞ்சுவலி, மூச்சுத் திணறல், படபடப்பு, தலைவலி, வலிப்பு, மஞ்சள் காமாலை, வயிற்றுவலி, வாந்தி, அல்சர், அனீமியா, வாயுத் தொத்தரவு, செரிக்காமை, குறைந்த ரத்த அழுத்தம், உயர் ரத்த அழுத்தம், மாத விலக்கில் ஒழுங்கின்மை, கண்பார்வை மங்குதல், மலட்டுத்தன்மை, தோல் வியாதிகள் மற்றும் ....
பகலில் வேலை பார்க்க முடியாத அளவுக்குத் தூக்கம் வருதல், எதிலும் கவனம் செலுத்த முடியாமை, பக்கவாதம், உடல் வலி, கைகால் மதமதத்தல், இடுப்பு வலி, நரம்பு தொடர்பான தொந்தாவுகள், மனவியல் ரீதியான பிரசனைகள் என்று நிஜமாகவே உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரை பாதிக்கக் கூடியது - சி.ஆர்.எஃப்.!
நமது சிறுநீர் சிறுநீரகத்தில் உருவாகிறது. அதுதான் நமது ரத்தத்தில் உள்ள கழிவுகளை வடிகட்டுகிறது.அதன்பின் சிறுநீரானது, சீறுநீர் பையில் சேகரித்து வைக்கப்படும்; அதனால்தான் நாம் அன்றாட வேலைகளில் கவனம் செலுத்த முடிகிறது.

சிறுநீர் பையின் கொள்ளளவு 300 மில்லி லிட்டர் முதல் 600 மில்லி லிட்டர் வரை இருந்தபோதும், அது மூன்றில் இரண்டு பங்கு நிரம்பியவுடன் நாம் சிறுநீர் கழித்து விடுவோம்.
நாம் ஒரு வசதியான கோணத்தில் உட்கார்ந்தால், சிறுநீர் பையிலிருந்து சிறுநீர் வெளியேற அது உதவும் தசைகளையும் தளர்வாக்கும். அதன்பின் சிறுநீர் பை சுருங்கி, அது யுரித்ராவில் (சிறுநீர் பையையும் ஆண்குறியையும் இணைக்கும் பகுதி) வழியாக உடம்பிலிருந்து வெளியேறும்.
ஒரு ஆரோக்கியமான மனிதர், சிரமப்பட்டு சிறுநீர் கழிக்க கூடாது.
ஆனால் சில சமயங்களில் தற்காலிகமாகவோ அல்லது நிரந்தரமாகவோ சிறுநீர் கழிப்பதில் ஆண்களுக்கு பிரச்சனை ஏற்படும்.

விரைவீக்கம் உள்ளவர்கள் சிறுநீர் கழிப்பதற்கு சிரமம் ஏற்பட்டால் அவர்கள் உட்கார்ந்து சிறுநீர் கழித்தால் அது பயன் தரும்.உட்கார்ந்து சிறுநீர் கழிக்கும்போது யுரித்ரா பகுதியில் அழுத்தம் இலகுவாகி சிறுநீர் கழிப்பது இலகுவாகிறது.
பிரிட்டனில், தேசிய சுகாதார சேவை, சிறுநீர் கழிப்பதில் சிக்கல் உள்ள ஆண்கள், அமைதியான இடத்தில் அமர்ந்தபடி சிறுநீர் கழிக்க வேண்டும் என்று தெரிவித்துள்ளது.
உலகத்தில் மிக சிறந்த மார்க்கம் இஸ்லாம் மார்க்கம் என்பதை பல சான்றுகளின் மூலம் நிரூபிக்கப்பட்டுள்ளன. அவற்றில் ஒன்று தான் மனிதனின் ஆரோக்கியமாகும். இந்த ஆரோக்கியம் விஷயத்தில் இஸ்லாம் அதிகமாக அக்கரை காட்டுகிறது.
அந்த அக்கரையில் ஒன்று தான் சிறுநீர் விசயங்களில் இஸ்லாம் காட்டக் கூடிய ஒழுங்கு முறையாகும்.
ஆரோக்கியமும், சிறுநீரும் இரண்டரக் கலந்த அம்சமாகும். .
கத்னா (சுன்னத்) செய்தல்:
கத்னா என்றால் மர்ம உறுப்பின் முன் தோலை சிறிதாக வெட்டுதலாகும்.
இஸ்லாம் ஒரு விசயத்தை செய்யும் படி ஏவுகிறது என்றால் அதில் பல உண்மைகள் அடங்கி இருக்கும். சிறு பிராயத்திலேயே ஆண்களுக்கு கத்னா செய்ய வேண்டும் என்று ஏன் இஸ்லாம் சொல்கிறது என்றால், அதில் பல நலன்கள் இருந்தாலும், இதனால் சிறுநீர் கழிக்கும் போது சிறுநீர் இலகுவாக வெளிவந்து விடும்.
கத்னா செய்யா விட்டால் சிறுநீரின் ஓரிரு துளிகள் அந்த தோலுக்குள்ளே இருக்கும் இதனால் தான் அணிந்திருக்கும் ஆடையும் அசுத்தமடைகிறது, மேலும் தோலுக்குள் இருக்கும் ஓரிரு சிறுநீர் துளிகள் மூலம் நோய்கள் ஏற்பட்டு விடும். எனவே கத்னாவின் மூலம் மனிதன் ஆரோக்கியம் அடைகிறான் என்பதை உலகம் ஏற்றுக் கொண்டுள்ளது.

ஓடாமல் தேங்கி நிற்கும் தண்ணீரில் உங்களில் எவரும் சிறுநீர் கழித்துவிட்டுப் பின்னர் அதில் குளிக்க வேண்டாம்’ என்று இறைத்தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்: என அபூ ஹுரைரா(ரலி) அறிவித்தார். (புகாரி 239)
நமது உடம்பை ஆரோக்கியாக வைத்துக் கொள்வதற்காக தான் நீங்கள் குளிக்கும் தண்ணீரும் சுத்தமாக இருக்க வேண்டும் என்பதை மேற் சென்ற ஹதீஸ் நமக்கு எடுத்துக்காட்டுகிறது. ஓடக்கூடிய தண்ணீர் என்றால் அதில் சிறுநீர் கழித்தாலும் தண்ணீரோடு, தண்ணீராக சிறுநீர் ஓடிவிடும்.
ஆனால் தேங்கி நிற்க கூடிய குறைவான தண்ணீரில் சிறுநீர் கழித்தால் அந்த தண்ணீர் அசுத்தமாக மாறிவிடும். எனவே தான் இப்படியான இடங்களில் சிறுநீர் கழிக்க கூடாது என்று ஆரோக்கியத்தை முதன்மை படுத்தி இஸ்லாம் நமக்கு வழிக் காட்டுகிறது.
.
அனஸ் பின் மாலிக் (ரலி) அவர்கள் கூறியதாவது:
ஒரு முறை நாங்கள் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடன் பள்ளிவாசலில் இருந்தோம். அப்போது கிராமவாசியொருவர் வந்து பள்ளிவாசலுக்குள் நின்று சிறுநீர் கழித்தார். உடனே அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்களுடைய தோழர்கள் நிறுத்து! நிறுத்து! என்று கூறினர்.
அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் (அவர் சிறுநீர் கழிப்பதை) இடைமறிக்காதீர்கள். அவரை விட்டுவிடுங்கள் என்று கூறினார்கள். எனவே, நபித்தோழர்கள் அவரை விட்டுவிட்டனர். அவர் சிறுநீர் கழித்து முடித்தார்.
பிறகு அவரை அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் அழைத்து இந்தப் பள்ளிவாசல்கள் சிறுநீர் கழித்தல், அசுத்தம் செய்தல் ஆகியவற்றுக்குரிய இடமல்ல. இவை இறைவனை நினைவுகூர்ந்து போற்றுவதற்கும் தொழுவதற்கும் குர்ஆனை ஓதுவதற்கும் உரியதாகும் என்றோ, அல்லது இந்தக் கருத்திலமைந்த வேறு வார்த்தைகளையோ அவரிடம் கூறினார்கள்.
பிறகு மக்களில் ஒருவரிடம் ஒரு வாளித் தண்ணீர் கொண்டுவரச் சொல்லி அதை அந்தச் சிறுநீர் மீது ஊற்றச் செய்தார்கள் (முஸ்லிம் 480)
தற்போது அனைத்து நிறுவனங்களிலும் ஆண்கள் நின்று கொண்டே சிறுநீர் கழிக்கும்படியான வசதிகள் செய்யப்பட்டுள்ளதால், இன்றைய தலைமுறையினர் பலருக்கு உட்கார்ந்து கொண்டும் ஆண்கள் சிறுநீர் கழிக்கலாம் என்ற ஒரு விஷயமே தெரியாமலும் இருக்கலாம்.
பிஸியான ஆண்கள் உட்கார்ந்து சிறுநீர் கழிக்க பெரிதும் விரும்பலாம். ஏனெனில் அவர்கள் ஓய்வெடுக்கக்கூடிய ஒருசில தருணங்களில் இதுவும் ஒன்றாகும். அதனால் இது அவர்களுக்கு சிறந்ததாக இருக்கலாம். முன்பெல்லாம் ஆண்கள் உட்கார்ந்து தான் சிறுநீர் கழிப்பார்கள். ஆனால் நாகரீகம் வளர ஆரம்பிக்கும் போது, ஆண்களின் இந்த பழக்கம் அப்படியே மாறிவிட்டது.

புரோஸ்டேட் பிரச்சனைகள் உள்ள ஆண்கள், உட்கார்ந்து சிறுநீர் கழிப்பது அவர்களின் சிறுநீர்ப்பைகளை திறம்பட காலி செய்ய உதவுவதோடு, நீர்க்கட்டிகள் மற்றும் பிற உடல்நல சிக்கல்களின் அபாயங்களையும் குறைக்க உதவும்.
புரோஸ்டேட் பெரிதாக உள்ள ஆண்கள் உட்கார்ந்து சிறுநீர் கழிக்க ஆரம்பிப்பது நல்லது. ஏனெனில் இவர்கள் சிறுநீரை வெளியே தள்ளும் போது, இடுப்பு தசைகளை தளர்த்த உதவ வேண்டும் என்று மத்திய புளோரிடா பல்கலைக்கழக மருத்துவக் கல்லூரியின் சிறுநீரக மருத்துவர் மற்றும் பேராசிரியர் டாக்டர் ஜமின் பிரம்பட் கூறுகிறார்.

நீங்கள் சுகாதாரத்தைப் பற்றி அதிகம் கவலைப்படுபவராயின், உங்கள் கழிவறை இருக்கையில் சிறுநீர் தெளிப்பதைத் தவிர்ப்பதற்காக சிறுநீர் கழிக்கும் போது உட்கார்ந்து சிறுநீரைக் கழியுங்கள்.
ஆனால் ஆண்களை உட்கார்ந்து சிறுநீர் கழிக்க சொல்வதற்கு சில நியாயமான காரணங்களும் உள்ளன. அதைத் தெரிந்து கொண்டால், நிச்சயம் ஆண்கள் சிறுநீர் கழிக்கும் முறையை மாற்றக்கூடும். இப்போது அவற்றைக் காண்போம்.
நின்று கொண்டு சிறுநீர் கழிப்பது என்பது ஒரு ஆணின் இயல்பான உள்ளுணர்வு மற்றும் அவர்களின் உடலியல் அமைப்பும் அதற்கு சாதகமாக உள்ளது என சில புதிய கண்டுபிடிப்புகள் வலியுறுத்துகின்றன. அதோடு இது ஆண்களுக்கு மிகவும் வசதியாகவும், எளிமையாகவும் இருப்பதால் பெரும்பாலான ஆண்கள் இதைப் பின்பற்றுகின்றனர்.

பொதுவாக சிறுநீர் சிதறுவது என்பது சுகாதாரமற்றது. மேலும் இது கடுமையான துர்நாற்றத்திற்கும் வழிவகுக்கும். அதுவே உட்கார்ந்து சிறுநீர் கழித்தால், இம்மாதிரியான பிரச்சனையை சந்திக்க வாய்ப்பில்லை. இந்த காரணத்தினாலும் உட்கார்ந்து சிறுநீர் கழிக்க கூறப்படுகிறது.
நின்று கொண்டு சிறுநீர் கழிப்பதால், சிறுநீர் ஆங்காங்கு தெளித்து துர்நாற்றம் மட்டும் வீசுவது மட்டுமின்றி, அது நோய்களையும் எளிதில் பரப்பும். எப்படியெனில் தெளிக்கும் சிறுநீரானது பாக்டீரியாக்களின் வளர்ச்சிக்கு சரியான ஊடகமாக இருப்பதால், நோய்கள் வேகமாக ஒருவரை அண்டும். அதுவே உட்கார்ந்து சிறுநீர் கழித்தால், இம்மாதிரியான நிகழ்வு எதையும் சந்திக்க வேண்டிய அவசியம் இருக்காது.
உட்கார்ந்து சிறுநீர் கழிப்பது, சிறுநீர்ப்பை முழுவதுமாக காலியாக அனுமதிக்கிறது. இதன் விளைவாக சிறுநீர்ப் பாதை நோய்த்தொற்றின் அபாயம் குறையும் மற்றும் பிறப்புறுப்பின் ஆரோக்கியமும் சிறப்பாக இருக்கும். இறுதியில், இது ஒரு சிறந்த பாலியல் வாழ்க்கைக்கு பங்களிக்கிறது.
உட்கார்ந்து சிறுநீர் கழிப்பது சில உடல்நல பிரச்சனைகளைக் கொண்ட ஆண்களுக்கு சாதகமானதாக இருக்கலாம். ஆனால் தற்போதைய சூழ்நிலையில் அனைத்து இடங்களிலும் இதைப் பின்பற்றுவது என்பது முடியாத ஒன்றாக இருப்பதால், உங்களுக்கு பொருத்தமானதைப் பின்பற்றுங்கள்.
இருப்பினும், உங்களால் முடிந்த இடத்தில் உட்கார்ந்து சிறுநீர் கழிக்க முயலுங்கள். இதனால் இக்கட்டுரையின் ஆரம்பத்தில் சொல்லப்பட்ட அனைத்து நோய்களிலிருந்தும் நம்மை நாம் பாதுகாக்கலாம்.

## **அவயங்களின் அகமியங்கள் 29**

( மனித அவயங்களை இயக்கும் உயிர் எங்கிருந்து வந்தது ? )

وَيَسْـــَٔلُوْنَكَ عَنِ الرُّوْحِ قُلِ الرُّوْحُ مِنْ اَمْرِ رَبِّىْ وَمَاۤ اُوْتِيْتُمْ مِّنَ الْعِلْمِ اِلَّا قَلِيْلًا

(நபியே!) ரூஹைப் பற்றி (யூதர்களாகிய) அவர்கள் உங்களிடம் கேட்கிறார்கள். அதற்கு நீங்கள் "அது எனது இறைவனின் கட்டளையால் ஏற்பட்டது. (அதைப் பற்றி) வெகு சொற்ப ஞானமேயன்றி உங்களுக்குக் கொடுக்கப்படவில்லை. (ஆதலால், அதன் நுட்பங்களை நீங்கள் அறிந்துகொள்ள முடியாது)" என்று கூறுங்கள். (குர்ஆன் : 17:85)

உயிரைப் பற்றி விஞ்ஞானம் அறிந்திருக்கும் அந்த வெகு சொற்ப ஞானத்தைப் பற்றி சொல்றேன்.
உயிர் என்பது ஒழுங்கற்ற சூழ்நிலையில் ஓர் ஒழுங்கு அமையும்போது தோன்றுவது, புரோட்டீன்கள். இந்த புரோட்டீன்கள் தான் உயிரின் ஆதாரம். அதாவது இந்த ஒழுங்குதான் உயிர். இந்த புரோட்டீன்கள் அமினோ அமிலங்களின் கூட்டு முயற்சியால் உருவாவதுதான் கொலாஜென் (collagen) இது ஒரு எளிய வகை புரோட்டீன். கொலாஜென் இதை உண்டாக்குவதற்கு 1055 அமீனோ அமிலங்களை ஒரு குறிப்பிட்ட வரிசையில் ஏற்பாடு செய்யவேண்டும். வரிசைக்கிரம் மாறக்கூடாது . இதில் விந்தை என்னவென்றால் யாரும் கொலஜென் செய்வதில்லை. அது தானாகவே தன்னைத்தானே தயார் செய்துகொள்கிறது. வெளியிலிருந்து எந்தக் குறிப்பும் உதவியும் இன்றி இது எப்படி சாத்தியம் ?
ஸ்டாடிஸ்டிக்ஸ் விதிகளின்படி 1055 அமீனோ அமிலங்கள் ஒரு குறிப்பிட்ட வரிசையில் அமைவதற்கு உண்டான சாத்தியக்கூறு என்ன ?
சொல்றேன். 1க்குப் பின் 260 சைபர் போடுங்கள். அத்தனை சாத்தியங்களில் ஒன்றுதான் இது ! இது பிரபஞ்சத்தில் உள்ள மொத்த அணுக்களின் எண்ணிக்கையை விட மிக அதிக எண்ணிக்கை கொண்டது.

மாறாக ஹீமோகுளோபின், இது ரத்தத்தில் உள்ள புரோட்டீன், 146 அமீனோ அமிலங்கள் கொண்டது. இது கூட தானாக அமைவதுதான் ஒரு மிக மிக அரிதான சாத்தியமே. அதாவது ஒரு காயலான் கடையில் புயல் காற்றடித்து அங்கு தானாக 'ஒரு 'கார்' உண்டாவதைப்போல'
இப்படி இருக்கையில், உயிர் உண்டாவதற்கு லட்சக்கணக்கான புரோட்டீன்கள் பங்களிக்கின்றன. அதுவும் அவைகள் ஏதோ ஒரு விதிக்கு கட்டுப்பட்டது போல எவ்வித முரண் இல்லாமல் நடந்துகொள்கின்றன ! இது அடுத்த வியப்பான விஷயம் !

இது எப்படி ? தனிப்பட்ட புரோட்டீன்கள் உயிரின் அங்கங்களே தவிர அவையே உயிரல்ல. ஆனால் தன்னைத்தானே இரட்டிப்பாக்கும் தன்மைதான் உயிர். புரோட்டீன்களால் இது முடியாது. இதற்கு டி.என்.ஏ தேவை . டி.என்.ஏ - என்பது ஒரு மாலிக்யுல் மூலக்கூறு சில செகண்டுகளில் தன்னை இரட்டிப்பாக்கிக்கொள்ளும். வேறு எதும் அது செய்யாது. செய்யவும் தெரியாது. புரோட்டீன்களும் டி.என்.ஏ.யும் சேர்த்து இயங்கினால்தான் உயிர் என்று அதை அடையாளம் சொல்ல முடியும். இது எவ்வளவு பெரிய இடியப்ப சிக்கல்.
அடுத்த சிக்கல் , இது இரண்டு மட்டும் போதுமா என்றால், போதாது. இரண்டையும் சேர்த்துப் பிடித்து வைக்க ஒரு ஜவ்வு வேண்டும். அந்த ஜவ்வு ஒரு தனிப்பட்ட கார்பன், நைட்ரஜன், ஹைட்ரஜன் அணுக்களின் கலவைகளால் ஆனது. ஆனால், இந்த அணுகளுக்கு 'உயிர்' கிடையாது.
உங்கள் உடம்பில் இருக்கும் அணுக்களை ஒவ்வொன்றாக பிரித்துப் பார்த்தால் அதில் எதிலும் 'உயிர்' கிடையவே கிடையாது. குறிப்பிட்ட அணுக்கள் ஒரு 'செல்' என்னும் குடிலுக்குள் ஒன்று சேரும்போது, அங்கு 'உயிர்' என்னும் நடனம் நிகழ்கிறது. அதுவரை அந்த உயிர் எங்கே இருந்தது ? தெரியாது.
சரி, அந்த செல்லுக்குள் இருக்கும் சுவாரஸ்யத்தைச் சொல்றேன்.

வேதியல் பொருட்கள் ஒரு சமையலறையில் மைதா, சர்க்கரை, வெண்ணெய், முட்டை போன்ற தனித்தனிப் பொருள்கள் எல்லாம் தானாகவே ஒன்றுசேர்ந்து ஒரு கேக்காக மாறியது போல மட்டுமல்ல, மாறிய கேக் சற்று நேரத்தில் உடனே இரண்டாகி மற்றொரு 'கேக்'கை உண்டாக்கியது போன்ற அதிசயம் இது. இந்த வித்தையை விந்தையை மெல்ல மெல்ல விஞ்ஞானிகள் இப்போது புரிந்துகொள்ளத் துவங்கியுள்ளனர்.
முதலில் இது எல்லாமே ஒரே சமயத்தில் திகழ்ந்த அதிசயம் என்று நினைத்தால்தான் சிக்கல் வருகிறது. மெல்ல நிதானமாக அணு அணுவாக காலம் காலமாக ஒரு புரோட்டீன் உருவானது என்று யோசித்தால், அப்படி ஒன்றும் பெரிய விந்தையாகத் தெரியாது.
இதற்கு ஓர் உதாரணத்தை சொல்றேன். ஆயிரம் பக்கம் கொண்ட நாவல் ஒரு கணத்தில் முழுவதும் தோன்றியது என்றால் அது விந்தை, அது நடக்கக்கூடியதல்ல. ஆனால் எழுத்து எழுத்தாக, வரி வரியாக யோசித்து யோசித்து, அடித்து, அடித்து, திருத்தி, திருத்தி எழுதி ஒரு வருஷத்தில் ஒரு நாவல் எழுதப்பட்டது என்று சொன்னால் நம்ப முடிகிறதல்லவா?

அதுபோல்தான் சிக்கலான புரோட்டீன்கள் அமைவதற்கு நிறையவே அவகாசம் லட்சக்கணக்கான ஆண்டுகள் ஆயின என்றால் நம்ப முடிகிறது. நம்பணும் .
ஆனாலும் பிரபஞ்சத்தில் தற்செயலான வேதியல் மாற்றங்கள் சதா நிகழ்ந்து கொண்டேதான் இருக்கின்றன. பலவித 'பாலிமர்'கள், சர்க்கரைகள், பலவித ஸ்படிக கிறிஸ்டல்கள் உயிரற்று உண்டாகிக் கொண்டே இருக்கின்றன. அவை உயிராக மாறவில்லை. எனினும், சிக்கலான மாலிக்யுல் அமைப்புகள் உயிர் உண்டாவதற்கு இந்த பிரபஞ்சத்தில் சதா நிகழ்ந்து கொண்டிருக்கின்றன.
இதைத்தான் இறைவன் குர்ஆனில் இப்படி சொல்கிறானோ ..

يُخْرِجُ الْحَـىَّ مِنَ الْمَيِّتِ وَيُخْرِجُ الْمَيِّتَ مِنَ الْحَـيِّ وَيُحْىِ الْاَرْضَ بَعْدَ مَوْتِهَا  وَكَذٰلِكَ تُخْرَجُوْنَ
அவனே உயிரற்றதிலிருந்து உயிருள்ளதை வெளிப்படுத்துகிறான்; உயிருள்ளதிலிருந்து உயிரற்றதை வெளிப்படுத்துகிறான்; இந்தப் பூமியை அது இறந்தபின் உயிர்ப்பிக்கிறான்; இவ்வாறே (மரித்தபின் மறுமையில்) நீங்களும் வெளிப்படுத்தப்படுவீர்கள். (குர்ஆன் : 30:19)

இப்படி பனிக்கட்டியிலிருந்து சனிக்கிரகத்தைச் சுற்றும் வளையங்கள் வரை இவ்வகையிலான மிக மிகச் சிக்கலான, உயிரற்ற, வடிவமைப்புகளின் விளைவுதான் இப்படிப்பட்ட காரியங்கள் தொடர்ந்து நிகழும்போது தவிர்க்க முடியாத விளைவுதான் 'உயிர் ' என்கிறார்கள்.

وَهُوَ الَّذِىْ يَبْدَؤُا الْخَـلْقَ ثُمَّ يُعِيْدُهٗ وَهُوَ اَهْوَنُ عَلَيْهِ وَلَهُ الْمَثَلُ الْاَعْلٰى فِى السَّمٰوٰتِ وَالْاَرْضِ وَهُوَ الْعَزِيْزُ الْحَكِيْمُ
அவன்தான் படைப்புகளை ஆரம்பத்தில் உற்பத்தி செய்பவன். அவனே (அவை மரணித்த பின்னரும் உயிர்கொடுத்து) அவற்றை மீளவைக்கிறவன். இது அவனுக்கு மிக்க எளிது. வானங்களிலும் பூமியிலும் அவனுடைய (உதாரணமும் பரிசுத்தத்) தன்மை(யும்)தான் மிக்க மேலானதாகும். அவன் (அனைத்தையும்) மிகைத்தவனும் ஞானமுடையவனாகவும் இருக்கிறான். (குர்ஆன் : 30:27)
இன்னுமோரு நூற்றாண்டு கடந்த பின்னும் உயிரின் ரகசியத்தை மனித குலம் அறிந்து கொள்ள முடியாது என்பதை அறிவியல் உலகம் அறிந்துகொண்டுள்ளது

**அவயங்களின் அகமியங்கள் 30**
( மனம் என்னும் கணினி )

உடலைப் பற்றித் தெரிந்துகொள்ளும் அதே நேரத்தில் மனம் என்பது என்ன? அதற்கும் உடலுக்கும் சம்பந்தம் உள்ளதா ? என்ற சந்தேகம் நம்மில் பலருக்கும் உள்ளது. 'உனை மனசாரக் காதலிக்கிறேன், என் மனசறிஞ்சி பொய் சொல்லல. மனசாட்சிக்கு துரோகம் செய்வேனா?' இப்படி ஒரு நாளைக்கு பலமுறை நாம் சொல்கிறோம். இல்லை மற்றவர்கள் சொல்வதைக் கேட்கிறோம்.

உண்மையில் மனம் என்பது என்ன? உணர்வுகள், சிந்தனைகள், கற்பனைகள், நினைவுகள், எண்ணங்கள் என்று பலவிதமான அர்த்தங்களில் மனம் பயன்படுத்தப்படுகிறது.
ஓஷோ மனதை கணினி என்கிறார். மகரிஷி எண்ணங்களே மனம் என்கிறார்.' என்னை அலட்சியப்படுத்தி விட்டார்கள் மனது வலிக்கிறது 'என்று சொல்லும்போது, அது உணர்வைக் குறிப்பதாகிறது. இப்படிச் செய்து விட்டாரே, நேற்றுவரை என் மனதில் அவரைப் பற்றி அபிப்பிராயம் இருந்தது என்று சொல்லும்போது, அது கற்பனையைக் குறிக்கிறது.

உண்மையில் மனம்தான் என்ன?
மூக்கு வாசனையை நுகர்கிறது.ஆனால், மூக்காகவே அது என்ன வாசனை நறுமணமா, துர்நாற்றமா என அறிந்துகொள்ள முடியாது. அந்த வாசனை பற்றிய தகவல் மூளைக்கு அனுப்பப்பட்டு, அது அங்குள்ள மூளையின் நினைவகங்களில் தேடி "ஆ ! இது மதுர மல்லி, இது தூத்துக்குடி கருவாடு என்று முடிவை எடுப்பது மனம்
ஒரு காட்சியைக் கண் பார்த்தவுடன் உங்களால் உணர முடிகிறது அது தொடர்பான கற்பனைகளை வளர்த்துக்கொள்ள முடிகிறது. ஆனால், கண்ணால் தான் என்ன பார்க்கிறோம் என்பதை கண் உணர்ந்துகொள்ள முடியாது. அது எதைப் பார்த்ததோ அதைப் பற்றிய தகவல் மூளைக்கு அனுப்பப்பட்டு, அது உணர்வுகளாக மாற்றப்பட்டு, பின் புரிந்து கொள்ளப்படுகிறது. அப்படிப் புரிந்து கொள்ளும் இடம்தான் மனம்.
அதேப் போலவே நாக்கும் ருசியை உணர மூளையைத்தான் எதிர்ப்பார்க்கிறது. இது இருட்டு கடை அல்வா, இது சாந்தி ஸ்வீட் அல்வா என்று திருநெல்வேலிக் காரங்களின் நாக்கால் இனம் காணமுடியும். இது மாதிரியே...
நம் மனம் இம்மையில் உள்ள சுவைகளின் ருசிகளை ருசித்து, அவைகளை மூளையின் மெமரியில் பதிந்திருக்கும். இன்ஷா அல்லாஹ் சுவனபதியில் நமக்கு கொடுக்கப்படும் கனிகளை பார்த்தும், அவைகளின் சுவை குறித்தும் நம் மனத்தின் அந்நேர எண்ணத்தையும் குர்ஆனில் பதிவு செய்கிறான்.
(சுவனபதியில்) நீரருவிகள் (தொடர்ந்து) ஓடிக்கொண்டேயிருக்கும். அவற்றிலிருந்து (அவர்களுக்கு) ஒரு கனி புசிக்கக் கொடுக்கப்படும்போதெல்லாம் முன்னர் நமக்குக் கொடுக்கப்பட்டதும் இதுதானே! என (ஆச்சரியப்பட்டு)க் கூறுவார்கள். (ஏனென்றால்) பார்வைக்கு ஒரே விதமாகத் தோன்றக் கூடியவைகளையே கொடுக்கப் பெறுவார்கள். (எனினும் அவை சுவையில் விதவிதமாக இருக்கும்) (குர்ஆன் : 2:25)
இப்படி உங்களின் எண்ணங்களாக, நினைவுகளாக, கற்பனைகளாக, உணர்வுகளாக, சிந்தனைகளாக இருப்பதுதான் மனம் என்று நம் மனம் இப்படிச் சொன்னாலும் இதுதான் மனம் என்று யாரும் அரிதிட்டு கூற முடியவில்லை.

அமெரிக்கர்கள் தங்கள் தேசியகீதம் இசைக்கப்படும்போது மார்பின் இடப்புறத்தில், இதயம் இருக்கும் இடத்தில் கையை வைத்துக் கொண்டு வணக்கம் செலுத்துவார்கள். மனதார வணக்கம் செலுத்துகிறார்களாம், உண்மையில் மனம் மூளையில்தான் இருக்கிறது என்று சொல்கிறார்கள்.
ஆனால், இதுவரைக்கும் நடந்த ஆராய்ச்சியில் மனதிற்கும் மூளைக்கும் ரொம்பவே நெருங்கிய தொடர்பு உண்டு என்று சொல்லியிருக்கிறார்களே தவிர, மூளையில்தான் மனம் இருக்கிறது என்று யாராலும் உறுதி செய்ய முடியவில்லை.

ஓர் உருவம் இல்லாத பொருள் எப்படி மூளையைப் பாதிக்க, கட்டுப்படுத்த முடியும் என்று 1596 -ல் பிரான்ஸ் விஞ்ஞானி ரெனேடி ஸ்காரட்ஸ் கேட்டதைத்தான் இன்று வரையில் பிடித்துக்கொண்டு அதன் அடிப்படையில் மனம் மூளைக்குள் இருக்கிறதா ? இல்லை மூளையேதான் மனமா என்ற ஆராய்ச்சி தொடர்கிறது.
மனம் பற்றிய புரிதலுக்கு பொதுவாக சொல்லப்படும் கதை ஒன்று. ஓர் அரசனுக்கு திடீரென்று இரண்டு கண்களும் குருடாகி விடுகின்றன. மலைஉச்சியில் உள்ள சஞ்சீவிமலையில் உள்ள மூலிகையைக் கொண்டு வந்து பிழிந்தால் தான் அதைக் குணப்படுத்த முடியும் என்று சொல்லப்பட்டது. அந்த சஞ்சீவி மலைக்குச் செல்ல மலையடிவாரத்தில் உள்ள தேவதை வழிகாட்டினால்தான் முடியும் என்றும் நம்பப்பட்டது.
அந்த அரசனுக்கு மூன்று குமாரர்கள். அதில் முதலாமவன் "நான் கொண்டுவருகிறேன்' என கிளம்புகிறான். அவனுக்கு வழிகாட்ட தேவதை ஒரு நிபந்தனை விதித்ததாம்."நான் உன் பின்னால் வருவேன். நான் இடது பக்கம் திரும்பு என்றால் இடது பக்கம் திரும்ப வேண்டும். வலது பக்கம் திரும்பு என்றால் வலதுபக்கம் திரும்ப வேண்டும். எக்காரணத்தைக் கொண்டும் நீ நடப்பதை நிறுத்தக்கூடாது. நடந்து கொண்டே இருக்க வேண்டும். எது நடந்தாலும் பின்னால் திரும்பிப் பார்க்கவே கூடாது' என்பதே அந்த நிபந்தனை.

முதலாமவன் நடந்து செல்ல தேவதை வழிகாட்டிச் சென்றது. திடீரென்று பின்னால் வரும் தேவதையின் சலங்கை ஒலி கேட்கவில்லை. "என்னாயிற்று?' என்று தன்னையறியாமல் முதலாமவன் திரும்பிப் பார்க்கிறான். நிபந்தனையை மீறிவிட்டதால் அவன் கற்சிலையாகிவிடுகிறான்.
அடுத்து இரண்டாமவன் கிளம்புகிறான். தேவதையின் நிபந்தனைகளுக்கு உட்பட்டு கிட்டத்தட்ட பாதிதூரம் வந்துவிடுகிறான் அவன். திடீரென்று சிரிப்பொலி கேட்கிறது. ஆர்வம் மிகுதியால் திரும்பிப் பார்க்கிறான். அவனும் கற்சிலையாகி விடுகிறான்.

அடுத்து மூன்றாவது குமாரரின் முறை. அவனும் வருகிறான். இவனுக்கும் இதே நிபந்தனையுடன் தேவதை பின் செல்கிறது. இவனோ பின் வரும் சத்தம் நின்று போனாலும் முன்னே செல்கிறான். அவனுக்குப் பின்னால் கேட்கும் அலறல் சத்தம், சிரிப்பொலி இவற்றுக்கெல்லாம் திரும்பாமல் முன்னே... முன்னேறிச்சென்று வெற்றியும் பெற்று மூலிகையையும் கைப்பற்றுகிறான்.
இங்கே... இந்தக் கதையிலே பின்னால் வரும் தேவதைதான் நம் மனம். அது நம் ஒவ்வொருவருக்கும் நிபந்தனையை விதித்துவிட்டு, செயல் உறுதியைத் தடுக்க எல்லா முயற்சிகளையும் செய்யும். அதைப் புறக்கணிப்பதில், கண்டுகொள்ளாமல் பயணிப்பதில்தான் நம் வெற்றி அடங்கியிருக்கிறது.

وَمَآ اُبَرِّئُ نَفْسِىْ اِنَّ النَّفْسَ لَاَمَّارَةٌ بِالسُّوْٓءِ اِلَّا مَا رَحِمَ رَبِّىْ اِنَّ رَبِّىْ غَفُوْرٌ رَّحِيْمٌ
“அன்றியும், நான் என் மனதைப் பாவத்தைவிட்டும் பரிசுத்தமாக்கி விட்டதாகவும் (கூற) இல்லை, ஏனெனில் மன இச்சையானது தீமையைத் தூண்டக்கூடியதாக இருக்கிறது - என் இறைவன் அருள்புரிந்தாலன்றி; நிச்சயமாக என் இறைவன் மிக்க மன்னிப்பவனாகவும், அருளாளனாகவும் இருக்கின்றான்” (என்றுங் கூறினார்). (குர்ஆன் : 12:53)
குறிப்பு :- அவயங்களின் அகமியங்கள் என்ற தொடர் மனித உடலின் இந்த ஆச்சரியங்களை நாம் அறிந்து கொள்ள, அறிந்து கொள்ள நம்மிடத்தில் இரண்டு மாற்றங்கள் நேரும்.
ஒன்று ) படைப்பின் அல்லது இறைவனின் அளப்பரிய ஆற்றல். அந்தச் சக்திக்கு முன் நாம் ஒன்றுமே இல்லை என்ற பணிவு நம் உள்ளே வந்து அமர்ந்து கொள்ளும்.
இரண்டாவது ) மாற்றம் உடல் என்ற இந்தப் பரிசு, நமக்குக் கிடைத்திருக்கும் எத்தனை மகத்தானதோர் கொடை என்ற எண்ணம் தோன்றும். இது நம்மை அறியாமலேயே நம் உடல் மீது ஒரு மரியாதை ஏற்படுத்தும்.
'அவயங்களின் அகமியங்கள் ' தொடர் பதிவுகள் இத்துடன் நிறைவு பெறுகிறது

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 1

( வஸிய்யத்" என்னும் மரண சாசனம் )




நோயாளிகளிடம் மற்றவர்களின் உடமைகள் இருந்தால் அவற்றை ஒப்படைத்து விட வேண்டும் அல்லது அது பற்றி "வஸிய்யத்" செய்து (விவரமான மரண சாசனம் எழுதி) விட வேண்டும். இது நபி (ஸல்) அவர்களின் கட்டளையாகும். ( புகாரி , பைஹகி)

நோயாளி "வஸிய்யத்" (மரண சாசனம் ) செய்வது கட்டாயமாகும். ஏனெனில் "வஸிய்யத்" எழுதப்பட்ட ஓலையை தன் தலைக்கடியில் வைக்காது இரண்டு இரவுகளைக் கழிப்பது ஒரு முஸ்லிமுக்கு ஆகாத செயலாகும் " என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.
இந்த நபிமொழியைக் கேட்ட நாளிலிருந்து ஒவ்வொரு இரவும் நான் எனது மரண சாசனத்தை எழுதி வைத்துக் கொள்ளாது இருக்கவில்லை என இப்னு உமர் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
(புகாரி, முஸ்லிம் , அபூதாவூத் , திர்மிதி )
நோயாளி தன் செல்வங்களிலிருந்து மூன்றிலொரு பகுதியை மரண சாசனம் செய்யலாம். இதைவிட அதிகப் படுத்துவது கூடாது. ஆனால் குறைத்துக் கொள்வது கூடும்
ஸஃதிப்னு அபீவக்காஸ் (ரழி) அறிவிக்கிறார்கள் :

நபியவர்களின் கடைசி ஹஜ்ஜின் போது நானும் சென்றிருந்தேன். அவ்வேளை கடும் நோய்வாய்ப்பட்டேன். நபியவர்கள் என்னிடம் வந்து நலம் விசாரித்தார்கள். அப்போது நான், "இறைத் தூதர் அவர்களே ! என்னிடம் அதிகம் செல்வங்கள் உள்ளன, எனக்கு ஒரே ஒரு பெண் குழந்தை மட்டுமே இருக்கிறது. ஆகவே என் செல்வங்களில் மூன்றில் இரு பங்கை மற்றவர்களுக்கு வஸிய்யத் செய்யட்டுமா?"எனக் கேட்டேன்,
"அவ்வாறு செய்ய வேண்டாம்" என்று நபியவர்கள் கூறினார்கள்.
"அப்படியானால் சரி பாதியையாவது "வஸிய்யத்" செய்யட்டுமா? எனக் கேட்டேன். "வேண்டாம்"" என்றார்கள்.
" மூன்றில் ஒரு பங்கையாவது "வஸிய்யத்" செய்யட்டுமா? " என்று மீண்டும் கேட்டேன்.
"மூன்றில் ஒரு பங்கு! மூன்றில் ஒரு பங்கும் அதிகமே ஸஃதே! உன் வாரிக்களை பணக்காரர்களாக இருக்கச் செய்வது அவர்கள் பிறர் உதவியை எதிர்பார்க்கும் பிச்சைக்காரர்களாய் ஆகி விடுவதை விட மேலானதாகும். ஸஃதே! அல்லாஹ்வுக்காக நீர் செலவு செய்வது உனக்கு நற்கூலியைத் தரும். உன் மனைவிக்குக் கொடுக்கும் ஒரு கவளம் உணவும் நன்மையையே தரும் ! " என்று நபியவர்கள் கூறினார்கள். புகாரி, முஸ்லிம்
இந்த நிகழ்ச்சிக்குப் பின் ஒருவர் தன் செல்வங்களில் மூன்றிலொரு பகுதியை மரண சாசனம் செய்வது மார்க்கத்தில் அனுமதிக்கப்பட்டு விட்டது . மூன்றிலொரு பங்கும் அதிகமே என நபியவர்கள் கூறியதை ஆதாரமாக வைத்து நான்கிலொரு பகுதியையும் வஸிய்யத் செய்யலாம் என்று இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் கூறியுள்ளார்கள்.

உங்களில் எவருக்கு மரணம் நெருங்கி விடுகிறதோ அவர் ஏதேனும் பொருள் விட்டுச் செல்பவராக இருப்பின், அவர் (தம்) பெற்றோருக்கும், பந்துக்களுக்கும் முறைப்படி வஸிய்யத் (மரண சானைச்) செய்வது விதியாக்கப் பட்டிருக்கிறது. (இதை நியாயமான முறையில் நிறைவேற்றுவது) முத்தகீன்கள் (பயபக்தியுடையோர்) மீது கடமையாகும். ( குர்ஆன் 2: 180 )

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 2

( அநீதமான மரண சாசனத்தை நிறைவேற்றக்கூடாது )




لِلرِّجَالِ نَصِيْبٌ مِّمَّا تَرَكَ الْوَالِدٰنِ وَالْاَقْرَبُوْنَ وَلِلنِّسَآءِ نَصِيْبٌ مِّمَّا تَرَكَ الْوَالِدٰنِ وَالْاَقْرَبُوْنَ مِمَّا قَلَّ مِنْهُ اَوْ كَثُرَ  نَصِيْبًا مَّفْرُوْضًا
பெற்றோரோ, நெருங்கிய உறவினர்களோ விட்டுச் சென்ற (சொத்)தில் ஆண்களுக்கு பாகமுண்டு; அவ்வாறே பெற்றோரோ, நெருங்கிய உறவினரோ விட்டுச் சென்ற (சொத்)தில் பெண்களுக்கும் பாகமுண்டு - (அதிலிருந்துள்ள சொத்து) குறைவாக இருந்தாலும் சரி, அதிகமாக இருந்தாலும் சரியே; (இது அல்லாஹ்வினால்) விதிக்கப்பட்ட பாகமாகும். (குர்ஆன் : 4:7)

அவ்ஸ் இப்னு ஸாமித் அன்ஸாரி ( ரலி) அவர்கள் ஒரு மனைவியையும் மூன்று பெண் மக்களையும் விட்டு விட்டு இறந்து போனார்கள், அவரது சிறிய தந்தையின் புதல்வர்கள் வந்து மானத்தைக் காத்து யுத்தத்திற்குச் செல்பவர்கள்தான் அனந்தரபாத்தியமடையத் தகுதியுள்ளவர்கள். குழந்தைகளுக்கும் பெண்களுக்கும் அனந்தரபாத்தியமில்லை என்று கூறி அவ்ஸ் (ரலி) அவர்கள் விட்டுச் சென்ற சொத்துக்களைக் கைப்பற்ற ஆரம்பித்தார்கள்.

இஸ்லாம் மார்க்கம் தோன்றுவதற்கு முன்னருள்ள ஜாஹிலிய்யத்தான அறியாமைக் காலத்தில் இவ்வாறு கைப்பற்றிக் கொள்வது வழக்கம். ஆனால், அவ்ஸ் (ரலி) அவர்களது மனைவி நபி (ஸல்) அவர்களிடம் வந்து இதனைக் குறித்து முறையிட்டார்கள்.
அதற்கு நபி ( ஸல்)அவர்கள்"'இது சம்பந்தமாக அல்லாஹுத்தஆலா கூறுவது என்ன என்பதைக் கவனிப்போம்' என்று கூறி அனுப்பினார்கள்.அப்பொழுது இந்த ஆயத்து அருளப்பட்டது
உடனே நபி (ஸல்) அவர்கள் அவர்களை அழைத்து,பெண்களுக்கும் பங்கிருப்பதாக அல்லாஹுதஆலா கூறி இருக்கிறான். ஆனால் பங்கின் விபரம் தெரியவில்லை. ஆதலால், அனந்தரச் சொத்தை எடுத்தவர்கள் அதனைப் பிரித்துக் கொள்ளலாகாது" என்று கூறி அனுப்பினார்கள்.

பிறகு இந்த அத்தியாயத்திலுள்ள 11 வது ஆயத்தாகிய "அல்லாஹ் உங்களுக்கு வஸிய்யுத்துச் செய்கிறான்" என்ற ஆய்த்து அருளப்பட்டது.
" உங்கள் மக்களில் ஓர் ஆணுக்கு இரண்டு பெண்களுக்குக் கிடைக்கும் பங்குபோன்றது கிடைக்கும் என்று அல்லாஹ் உங்களுக்கு உபதேசிக்கின்றான்; பெண்கள் மட்டும் இருந்து அவர்கள் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்டிருந்தால், அவர்களுக்கு இறந்து போனவர் விட்டுச் சென்றதில் மூன்றில் இரண்டு பாகம் கிடைக்கும். ஆனால், ஒரே பெண்ணாக இருந்தால், அவள் பங்கு பாதியாகும்; இறந்தவருக்கு குழந்தை இருக்குமானால், இறந்தவர் விட்டுச் சென்றதில் ஆறில் ஒரு பாகம் (அவரது) பெற்றோர் ஒவ்வொருவருக்கும் உண்டு.
ஆனால் இறந்தவருக்கு குழந்தை இல்லாதிருந்து, பெற்றோர் மாத்திரமே வாரிசாக இருந்தால் அவர் தாய்க்கு மூன்றில் ஒரு பாகம் (மீதி தந்தைக்கு உரியதாகும்); இறந்தவருக்கு சகோதரர்கள் இருந்தால் அவர் தாய்க்கு ஆறில் ஒரு பாகம் தான் (மீதி தந்தைக்கு சேரும்).

இவ்வாறு பிரித்துக் கொடுப்பது அவர் செய்துள்ள மரண சாஸனத்தையும், கடனையும் நிறைவேற்றிய பின்னர்தான்; உங்கள் பெற்றோர்களும், குழந்தைகளும் - இவர்களில் யார் நன்மை பயப்பதில் உங்களுக்கு நெருக்கமாக இருப்பவர்கள் என்று நீங்கள் அறிய மாட்டீர்கள்;
ஆகையினால் (இந்த பாகப்பிரிவினை) அல்லாஹ்விடமிருந்து வந்த கட்டளையாகும்; நிச்சயமாக அல்லாஹ் (யாவற்றையும்) நன்கறிந்தவனாகவும் மிக்க ஞானமுடையவனாகவும் இருக்கின்றான்" (குர்ஆன் : 4:11)
அப்பொழுது அவ்ஸ் (ரலி) அவர்களது மனைவிக்கு எட்டிலொரு பாகமும், அவரது பெண்மக்களுக்கு மூன்றிலிரண்டு பாகமும், பாக்கியுள்ளவை அவரது சிறிய தந்தையின் மக்களுக்கும் கொடுக்கப்பட்டது.
"அல்அக்ரபூன" என்பதற்கு நெருங்கிய உறவினர்கள். அதாவது அனந்தரப்பாத்திய மடையக் கூடிய உறவினர்கள் என்பது கருத்து. ஆகவே,பெற்றோர்கள். மனைவியர், மக்கள், கணவன் முதலியவர்கள் இந்த இனத்தைச் சேர்ந்தவர்கள்.

மரண சாசனத்தில் சங்கடங்களை ஏற்படுத்துவது ஹராமாகும். உதாரணமாக சொத்துரிமைக்கு தகுதி உள்ளவருக்கு சொத்து கிடைக்கக் கூடாது என்னும் வகையில் வஸிய்யத் செய்வது கூடாது
அல்லது ஒருவருக்கு இரண்டு பிள்ளைகள் இருந்து ஒரு பிள்ளையின் மீது அன்பும், இரக்கமும் கொண்டு அந்த பிள்ளைக்கு மட்டுமே சொத்துரிமை சேர வஸிய்யத்து செய்வது கூடாது இது இஸ்லாத்தில் விலக்கப்பட்டதாகும். அநீதமான வரம்பு மீறிய நூதனமான மரண சாசனம் (வஸிய்யத்) நிராகரிக்கப்பட வேண்டியதாகும். இதே நிறைவேற்றக் கூடாது. ஏனெனில்,
"நம்முடைய இஸ்லாமிய மார்க்கத்தில் அதில் இல்லாததை நுழைப்பவர்களின் செயலானது நிராகரிக்கப்பட வேண்டியதாகும்" என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் கூறியுள்ளார்கள்
(இதுவும்) அவர்களின் மரண சாஸனமும் கடனும் நிறைவேற்றிய பின்னர்தான்; ஆனால் (மரண சாஸனத்தைக் கொண்டு வாரிசுகள்) எவருக்கும் நஷ்டம் ஏற்படக் கூடாது (இது) அல்லாஹ்வினால் விதிக்கப்பட்டதாகும்; இன்னும் அல்லாஹ் (யாவற்றையும்) நன்கறிந்தவனாகவும், மிக்க பொறுமையுடையோனுமாகவும் இருக்கின்றான்.
(குர்ஆன் : 4:12)

## **மரணத்திலிருந்து மண்ணறை வரை 3**

( மரண வேளையில் மற்றவர்கள் செய்ய வேண்டியவை )



நோயாளிக்கு மரணவேளை வந்ததும் அருகில இருப்பவர்களுக்குச் சில செயல்கள் கடமையாகின்றன.
1) அவருக்குக் கலிமாவை எடுத்துக் கூறி அதனைச் சொல்லும்படி செய்ய வேண்டும்.
"உங்களில் யாருக்காவது மரணம் நெருங்கினால், அவருக்கு கலிமாவை எடுத்துக் கூறுங்கள். எவனுடைய பேச்சின் கடைசிச் சொல் "லா இலாஹ இல்லல்லாஹு என்றிருக்கிறதோ அவன் சுவனம் புகுவான். அதற்கு முன்னுள்ள பாவச் செயல்களுக்குப் பரிகாரமாகவும் இருக்கும் என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (முஸ்லிம்)
2) அவருக்காகப் பிரார்த்தனை செய்ய வேண்டும். அவரிடத்தில் நல்லவற்றையே கூறவேண்டும்.
நோயாளியிடத்தில் அல்லது மரணத்தருவாயில் உள்ளவர் இடத்தில் நீங்கள் சென்றால், நல்லவற்றையே கூறுங்கள் ஏனென்றால், நீங்கள் கூறுவதற்கெல்லாம் வானவர்கள் 'ஆமீன்' கூறுகிறார்கள்" என நபி (வால்) அவர்கள் கூறியுள்ளார்கள் (முஸ்லிம், பைஹகி )

கலிமாவை எடுத்துக் கூறுங்கள் என்பதன் பொருள் மரணித்துக் கொண்டிருப்பவர் செவிமடுத்தால் என்பதன் மட்டும் போதுமென்பதல்ல அவர் வாயினால் மொழி வேண்டும் என்பதே கருத்தாகும் ( மரணித்துக் கொண்டிருப்பவர் "லா இலாஹ இல்லல்லாஹு " என்று கூற வேண்டும்.
நோயுற்றிருந்த அன்ஸாரித் தோழர் ஒருவரைக் காண்பதற்கு நபி (ஸல) அவர்கள் சென்றார்கள். தோழரைப் பார்த்து 'லா இலாஹ இல்லல்லாஹ் 'என்று சொல்லுங்கள் என்றார்கள்.
நான் லா இலாஹ இல்லல்லாஹ் என்று கூறுவது நல்லதா? என நோயாளி கேட்டார். ஆம் ! (நல்லது) என்று நபி அவர்கள் கூறினார்கள் ( அஹமத் )
3) ஒரு நிராகரிப்பாளரின் மரணத் தருவாயில் முஸ்லிம் அருகில் இருப்பது பிழை அல்ல. எனினும் அவர் மரணித்து கொண்டிருக்கும் அந்த நிராகரிப்பாளர்களிடம் இஸ்லாத்தை எடுத்து கூற வேண்டும். அவர் இஸ்லாத்தைத் தழுவி கொள்வதை ஆதரவு வைத்து கலிமாவைக் கூற வைப்பது நபி வழியாகும்.
அனஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:
ஒரு யூதச் சிறுவன் நபி (ஸல்) அவர்களுக்கு ஊழியம் செய்து கொண்டிருந்தான். அவன் நோயுற்ற போது நபியவர்கள் நலம் விசாரிக்கச் சென்றார்கள். (அவன் மரணத் தருவாயில் இருப்பதைக் கண்ட) நபியவர்கள் அவன் தலைப்பக்கம் உட்கார்ந்து கொண்டு, "இஸ்லாத்தில் சேர்ந்து விடு! "என்றார்கள்.
அவன் பக்கத்திலிருந்த தன் தந்தையைப் பார்த்தான். அவனுடைய தந்தை 'நபியவர்கள் சொல்லுகிறபடி செய்' எனக் கூறினார்.
உடனே அவன் கலிமா உரைத்து இஸ்லாத்தில் இணைந்து விட்டான். "நரகத்திலிருந்து இவனைக் காப்பாற்றிய அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும் எனக் கூறிக் கொண்டு நபியவர்கள் வெளியேறினார்கள்.
அவன் இறந்தவுடன் உங்கள் தோழருக்காகப் பிரார்த்தியுங்கள் (தொழுகை நடத்துங்கள்) எனத் தோழர்களுக்கு நபியவர்கள் கட்டளையிட்டார்கள், (புகாரி, பைஹகி, ஹாகிம்.

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 4

(மரணமடைந்தவருக்குப் பக்கத்திலிருப்பவர்கள் செய்ய வேண்டியவை)

நோயினால் பீடிக்கப்பட்டவர் மரணமடைந்து விட்டால் பக்கத்திலிருப்பவர்கள் செய்ய வேண்டிய பல வேலைகள் உள்ளன.
1) என் கணவர் அபூஸலமா மரணமடைந்தவுடன் நபி (ஸல்) அவர்கள் வந்திருந்தார்கள். அப்போது என் கணவரின் கண் திறந்திருந்தது. நபியவர்கள் இலேசாக்க் கசக்கிக் கண்ணை மூடிவிட்டு, 'உயிர் கைப்பற்றப் பட்டவுடன் (பிரிந்தவுடன்) பார்வை அதனை நோக்கியே இருக்கும்' எனக் கூறினார்கள்.
இதனைக் கேட்டவர்கள் அளைவரும் நடுக்கமுற்று அழுதார்கள். "நீங்கள் உங்களைப் பற்றி நன்மையான சொல்லையே உபயோகித்துக் கொள்ளுங்கள். ஏனெனில் நீங்கள் கூறுபவற்றுக்கு வானவர்கள் ஆமீன் கூறுகிறார்கள்' எனக் கூறிவிட்டுப் பின்,
"யா அல்லாஹ்! அபூஸலமாவுக்குப் பிழை பொறுப்பாயாக! நேர்வழியடைந்தவர்களில் அவர் பதவியை உயர்த்துவாயாக! அவர் தமக்குப் பின் விட்டுச் செல்லும் மக்களுக்கு நீயே பிரதிநிதியாக இருந்து காப்பாற்றுவாயாக! எல்லா உலகங்களின் அதிபதியே! எங்களுக்கும், அவருக்கும் பிழை பொறுப்பாயாக! அவரின் மண்ணறையை விசாலப்படுத்தி வைப்பாயாக! அதிலே ஒளியையும் ஏற்படுத்துவாயாக!" எனப் பிரார்த்தித்தார்கள். (முஸ்லிம், அஹ்மத்)
2) மரணித்தவரின் உடம்பு முழுவதும் மறையக் கூடியதாகத் துணியினால் மூடி வைக்க வேண்டும். ஏனெனில் நபி (ஸல்) அவர்கள் மரணித்த (வபாத்தான)வுடன் "ஹிப்ராப்" போர்வையினால் (உடம்பு முழுவதும் மறையக்கூடியவாறு) போர்த்தி வைக்கப்பட்டிருந்தார்கள் என அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள். (புகாரி, முஸ்லிம், பைஹகி)
3) ஹஜ்ஜுக்காக இஹ்ராம் கட்டியவராக மரணித்தவருக்கு இவ்வாறு போர்த்தக் கூடாது. இஹராம் கட்டிய பின் மரணித்தவரின் முகத்தையும் தலையையும் மூடக் கூடாது.
நபி (ஸல்) அவர்களுடன் ஹஜ்ஜுக்குச் சென்ற ஒருவர் அரஃபா மைதானத்தில் வாகனத்திலிருக்கும்போது கீழே விழுந்து கழுத்து முறிந்து மரணித்து விட்டார்.
"அவரைத் தண்ணீர், இலந்தை இவை ஆகியவற்றால் குளிப்பாட்டுங்கள். இரண்டு துணியில் (அவருடைய இரண்டு துணியாலும்) கபனி விடுங்கள். வாசனைப் பொருட்களை பயன்படுத்தாதீர்கள். அவரின் தலையையும், முகத்தையும் மூடாதீர்கள். ஏனெனில் அவர் 'தல்பியா'க் கூறியவராகவே, மறுமையில் எழுப்பப்படுவார்" என நபி(ஸல்) அவர்கள் கூறியதாக இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். (புகாரி, முஸ்லிம்)
4 ) மரணித்தவரை அடக்கம் செய்வதைத் தாமதப்படுத்தக் கூடாது. விரைந்து செய்ய வேண்டும். ஏனெனில் "மையித்தை அடக்கம் செய்வதற்கு அவசரப் படுத்துங்கள்" என நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அபூஹுரைரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள். (புகாரி, முஸ்லிம், அபூதாவூத், திர்மிதி, இப்னுமாஜா
5) ஒருவர் மரணித்த ஊரிலேயே அடக்கம் செய்ய வேண்டும். வேறோர் இடத்திற்கு மாற்றக் கூடாது. அவ்வாறு செய்வது அடக்கம் செய்வதைத் தாமதப்படுத்தும். இது முன் கூறப்பட்ட நபிமொழியை அலட்சியப்படுத்துவதாகக் கருதப்படும்.

இதற்காகவே அன்னை ஆயிஷா (ரழி) அவர்களின் சகோதரர்''வாதில் ஹபஷா" என்ற இடத்தில் மரணமடைந்ததும் அவரை அங்கிருந்து மதினா கொண்டு வந்தார்கள், "எங்களைத் துக்கமடையச் செய்யவே இவ்வாறு நடந்து கொண்டீர்கள், அவர் மரணித்த இடத்திலேயே அடக்கம் செய்யப்படுவதை விரும்பினேன்" என அன்னையவர்கள் கூறினார்கள், (பைஹகி)
தான் இறந்து விட்டால் தன்னை இன்ன இடத்திற்கு கொண்டு சென்று அடக்கம் செய்ய வேண்டுமென்று ஒருவர் வஸிய்யத் செய்துவிட்டு இறந்தால், அந்த வஸிய்யத்தை நிறைவேற்றக் கூடாது.
ஏனெனில், ஒரு மையித்தை இன்னோர் இடத்திற்குக் கொண்டு செல்வது ஹராமாகும் என அதிகமான மார்க்க அறிஞர்கள் தீர்ப்பளித்துள்ளார்கள் என்று இமாம் நவவி அவர்கள் தமது "அல்அத்கார்" எனும் ஏட்டில் கூறியுள்ளார்கள்.
6) மரணித்தவர் பிறருக்கு ஏதேனும் கடன் கொடுக்க வேண்டியது. இருந்தால் அதனைக் கொடுத்து விட வேண்டும் அவரிடம் கடனைக் கொடுக்க ஏதுமில்லாவிடில் ஆட்சியாளர் அக்கடனை நிறைவேற்ற வேண்டும்.
கடன் கொடுத்தவர்கள் கடனை மன்னித்து விடுவது கூடும். அல்லது அக்கடனுக்கு மரணித்தவரின் சொந்தக் காரர் யாராவது பொறுப்பேற்றுக்கொள்ளுவதும் சிறந்த தாகும் (எவ்வாறாயினும் அவர் கடனாளியாக இருக்கும் நிலையில் அடக்கம் செய்வது விரும்பத்தக்கதல்ல)

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 5

( மரணித்தவரின் முகத்தைத் திறந்து பார்ப்பதும் முத்தமிடுவதும் )

மரணித்தவரின் முகத்தைத் திறந்து பார்ப்பதும் இரு கண்களுக்கு மத்தியில் முத்தமிடுவதும் (ஆர்ப்பாட்ட மில்லாமல்) அழுவதும் கூடும். என்பதற்குரிய ஆதாரங்கள் உள்ளன.
நபி (ஸல்) அவர்கள் மரணித்த செய்தி கேட்டு அபூபக்கர் (ரழி) அவர்கள் குதிரையில் விரைந்து வந்தார்கள். நபியவர்கள் மரணிக்கும் போது அபூபக்கர் (ரழி) அவர்கள் மதினாவுக்குப் பக்கத்திலுள்ள ஸூன்ஜு என்னும் இடத்தில் இருந்தார்கள். அங்கிருந்து விரைந்து வந்தார்கள்.
நபியவர்களின் பள்ளிவாயிலுக்கு வந்தபோது உமர் (ரழி) அவர்கள் நபியவர்கள் மரணிக்கவில்லை என்ற கருத்துபடப் பிரசங்கம் செய்து கொண்டிருந்தார்கள்.
அபூபக்கர் (ரழி) அவர்கள் நேரே அன்னை ஆயிஷா (ரழி) அவர்களின் வீட்டிற்குச் சென்றார்கள். போர்வையால் உடல் முழுவதும் போர்த்தப்பட்டிருந்த நபியவர்களின் முகத்தை திறந்து பார்த்தார்கள். இரு கண்களுக்கு இடையில் முத்தமிட்டார்கள். பின்னர் அழுதார்கள்.
"என் தாயும் தந்தையும் தங்களுக்கு அர்ப்பணமாவார்களாக! அல்லாஹ்வின் தூதரே! இரண்டு மரணங்களை அல்லாஹ் உங்களுக்கு இணைக்கமாட்டான். உங்களின் (மறைவுக்குரிய) மரணத்தைப் பெற்று விட்டீர்கள்'' எனக் கூறினார்கள்.
(புகாரி, நஸயீ, பைஹகி)
இச்செய்தியில் மரணித்தவரின் முகத்தைத் திறந்து பார்த்தலும், முத்தமிடுவதும், அழுதலும் இடம் பெற்றிருக்கின்றன. இதனால் இவை ஆகுமானவையாகும்.
ஒரு முறை நபி (ஸல்) அவர்கள் தங்கள் மகன் இப்ராஹீம் அவர்களுக்குப் பாலூட்டிய பெண்ணின் கணவர் அபூஸைப் அவர்களின் வீட்டுக்குச் சென்று அங்கு தங்கள் மகனை
எடுத்து முகர்ந்து முத்தமிட்டார்கள். அப்போது இப்ராஹீம் மரணத்துடன் போராடிக் கொண்டிருந்தார்.
நபியவர்களின் கண்களிலிருந்து நீர் வழிந்து கொண்டிருந்தது.
இதனைக் கண்ட அப்துர் ரஹ்மான் இப்னு அவ்பு (ரழி) அவர்கள் ,
"அல்லாஹ்வின் தூதரே! நீங்களுமா (அழுகிறீர்கள்)?" எனக் கேட்டார்கள்.
"அவ்புடைய மகனே! இது பாசத்தினால் வரும் கண்ணீராகும். கண்கள் நீரைச் சொரிகின்றன. உள்ளம் வேதனை அடைகிறது.எனினும் அல்லாஹ் விரும்பும் சொற்களைத் தவிர ஏதும் கூற மாட்டோம்.
(மகனே) இப்ராஹீமே! உன் பிரிவிற்காக நாங்கள் துக்கமடைகிறோம்" எனக் கூறினார்கள். இந்த நிகழ்ச்சியை அனஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள். (புகாரி, முஸ்லிம். பைஹகி)
நபி (ஸல்) அவர்கள் ஜஃபர் (ரழி) அவர்களின் மரணத்தையொட்டி மூன்று நாட்கள் வரை அவர் வீடு சென்று அனுதாபம் தெரிவிக்க அனுமதித்தார்கள். அதன் பின் தடுத்துவிட்டார்கள். (இதன் முழு விபரம் அனுதாபம் தெரிவித்தல் என்ற தலைப்பின் கீழ் இன்ஷா அல்லாஹ் விளக்கமாக வரும்)

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 6

(மரண துக்கத்தை எவ்வாறு அனுஷ்டிப்பது )
தனது உறவினர் ஒருவர் மரணித்து விட்டார் என்ற செய்தியை அறிந்த சொந்தக்காரர்களுக்கு இரண்டு விஷயங்கள் கடமையாகிவிடுகின்றன.
" நிச்சயமாக நரம் உங்களை ஓரளவு அச்சத்தாலும், பசியாலும், பொருள்கள், உயிர்கள், விளைச்சல்கள் ஆகியவற்றின் இழப்பினாலும் சோதிப்போம்; ஆனால் பொறுமையுடையோருக்கு (நபியே!) நீர் நற்செய்தி கூறுவீராக !

( பொறுமை உடையோராகிய) அவர்களுக்குத் துன்பம் ஏற்படும்போது, 'நிச்சயமாக நாம் அல்லாஹ்வுக்கே உரியவர்கள்; நிச்சயமாக நாம் அவனிடமே திரும்பிச் செல்வவோம் என்று கூறுவார்கள்
இத்தகையோர் மீது தான் அவர்களுடைய இறைவனின் நல்லாசியும் நற்கிருபையும் உண்டாகின்றன, இன்னும் இவர்கள் தாம் நேர்வழியை அடைந்தவர்கள். (குர்ஆன் 2 : 155 - 157 )

இந்த வசனங்கள் துன்பம் ஏற்படும்போது பொறுமையைப் பற்றிப்பிடித்து அல்லாஹ்வின் தீர்ப்புக்குத் தலை சாயப்பவர்களுக்குக் கிடைக்கும் நன்மைகளைத் தெளிவாக விளக்குகின்றன. பல நபிமொழிகளும் ஆதாரங்களாக இருக்கின்றன.
ஒரு முறை நபி (ஸல்) அவர்கள் நடந்துபோய்க் கொண்டிருக்கும் போது ஒரு அடக்கஸ்தலத்தில் பெண்ணொருத்தி அழுதுகொண்டிருப்பதைக் கண்டார்கள்.
"பெண்ணே ! அல்லாஹ்வைப் பயந்துகொள் ! பொறுமையாயிரு!"என நபியவர்கள் கூறினார்கள். இவ்வாறு கூறுபவர் யார் என்று அப்பெண் நிமிர்ந்து பாராமல் , "இங்கிருந்து போய்விடு, என் துன்பத்தை நீ அறியமாட்டாய் !" எனக் கூறினாள். நபியவர்கள் சென்று விட்டார்கள் .
"உன்னோடு இப்போது பேசியவர் அல்லாஹ்வின் தூதராகும்" என ஒருவர் வந்து கூறினார்.
நடுநடுங்கி, முகம் வெளுத்தவளாக அவள் நபியவர்களின் வீட்டுக்கு வந்தாள் . அங்கு வாயில் காவலர் யாருமில்லை. "அல்லாஹ்வின் தூதரே! உங்களை நான் தெரிந்து கொள்ளவில்லை. (மன்னித்து விடுங்கள்)" என்றாள்.

துன்பம் ஏற்பட்ட உடனேயே மேற்கொள்ளும் பொறுமைக்குத்தான் நற்கூலி கிடைக்கும்" என நபியவர்கள் கூறியதாக அனஸ் (ரழி) அவர்கள் அறிவித்திருக்கிறார்கள். (புகாரி முஸ்லிம், பைஹகி
தனது குழந்தைகள் இறந்தவுடன் பொறுமையாக இருந்து அல்லாஹ்வின் தீர்ப்புக்குப் பணிந்து விடுபவனுக்குப் பெருங்கூலியுண்டு. இது குறித்து பல நபிமொழிகள் வந்துள்ளன.
(தாய், தந்தையான) இரு முஸ்லிம்களுக்குப் பருவமடைவதற்கு முன் மூன்று பிள்ளைகள் மரணித்து விடுவார்களாயின், அப்பிள்ளைகளையும் அவர்களின் பெற்றோர்களையும் அல்லாஹ் தன் அருளினால் சுவர்க்கத்தில் நுழையச் செய்கின்றான்.
அப்பிள்ளைகள் சுவர்க்கத்தின் வாசலில் நின்று கொண்டிருப்பார்கள். 'சுவர்க்கத்திற்குள் நுழையுங்கள்!' என்று அவர்களிடம் கூறப்படும். அப்போது அவர்கள் 'எங்கள் பெற்றோர் இல்லாமல் (முடியாது)' என்பார்கள்.
நீங்களும், உங்கள் பெற்றோர்களும் "அல்லாஹ்வின் அருளினால் சுவர்க்கத்தினுள் செல்லுங்கள்" என்று அவர்களுக்குக் கூறப்படும்.
(நஸயீ. பைஹகி)

"எந்தப் பெண்ணாவது அவளுக்குரிய மூன்று பிள்ளைகள் மரணித்தால், அப்பிள்ளைகள் அவளை நரகத்திற்குச் செல்ல விடாமல் திரையாக நிற்பார்கள்" என்று நபியவர்கள் கூறியதைக் கேட்ட ஒரு பெண்...
"இரண்டு குழந்தைகள் மரணித்தால் ?" என்று கேட்டாள். "இரண்டு குழந்தைகள் இறந்தாலும் அப்படியேதான்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி, முஸ்லிம்)
அபூஸல்மாவின் மகள் ஜைனபு (ரழி) அவர்கள் மூலம் நான் அன்னை உம்மு ஹபீபா (ரழி) அவர்களின் வீட்டுக்குச் சென்றேன். அல்லாஹ்வின் மீதும், மறுமை நாள் மீதும் நம்பிக்கை கொண்ட எந்தப் பெண்ணும் மூன்று நாட்களுக்கு மேல் துக்கம் கடைப்பிடிக்க கூடாது. இறந்த கணவனுக்காக மனைவி மட்டும் நான்கு மாதம் பத்து நாள் துக்கம் கடைப்பிடிக்கலாம் என நபி(ஸல்) அவர்கள் கூறியதைக் கேட்டேன் என்று அறிவித்தார்கள்.
பின்னர் அன்னை ஜைனப் பிந்து ஜஹ்ஷ் (ரழி) அவர்கள் வீட்டுக்குச் சென்றேன். அப்போது அவர் தமையன் மரணமடைந்திருந்தார். உடனே அவர் வாசனைத் திரவியத்தைக் கொண்டு வரச் சொல்லி அதனைப் பூசிக் கொண்டார்.
"எனக்கு இப்போது மணம் பூசுவதற்கு விருப்பமில்லை. எனினும் கணவன் இறந்த பெண்ணைத் தவிர வேறு எந்தப் பெண்ணும் மூன்று நாட்களுக்கு மேல் துக்கம் கடைப்பிடிக்கக் கூடாது என நபி (ஸல்) அவர்கள் கூறியதைக் கேட்டேன். அதற்காகவே இப்போது மணம் பூசிக்கொள்கிறேன்" என்றார். (புகாரி)

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 7

( இறந்தவருக்காக ஒப்பாரி வைத்தல் )

"ஒப்பாரி தமிழ் நாட்டுப் பாடல் வகைகளில் ஒன்று. தாய், தந்தை, கணவன், பிள்ளை, உற்றார், உறவினர் எவரேனும் இறந்து விட்டால் ஒருவருடைய உள்ளத்தில் எழுகின்ற துன்ப உணர்வை வெளிக்காட்ட ஒப்பாரி பாடப்படுகிறது.
இறந்தவர்களின் வரலாறு பற்றித் தெரியாதவர்கள் அப்பாடல் மூலம் வரலாற்றினை அறிய முடியும் என்பதாக தமிழர்கள் கருதுகின்றனர். ஒப்பாரிப் பாடல்களின் இசை, விளம்பமும் மத்யமும் கலந்த ஒரு லய அமைப்பில் முகாரி, ஆகிரி முதலான இராகச் சாயலுடன் விளங்குகின்றது.

நாட்டுப்புறங்களில் இழவு வீடுகளில் உறுமி எனப்படும் ஒரு இசைக்கருவி இசைக்கப்படும். இன்னைக்கி உறுமிச் சத்தம் கேட்டதென்ன எனப் புலம்பும் ஒரு ஒப்பாரிப் பாடலில் இருந்து, உறுமி சில வட்டாரங்களில் இறப்புக்கான ஒரு குறியீட்டு இசைக்கருவியாக பயன்படுத்தபட்டமை தெரிய வருகின்றது.
சில செயற்பாடுகளை நபி(ஸல்) அவர்கள் விளக்கியுள்ளார்கள் மரணித்தவரின் உறவினர்கள் இவற்றை அறிந்து கொள்ளாது செயற்படுத்திக் கொண்டிருக்கின்றனர். அந்தச் செயல்களிலிருந்து அவர்கள் விலகிக் கொள்ள வேண்டும்.
ஒப்பாரி வைத்து அழுவது அழுவது வேறு, வைத்து அழுவது வேறு அழுவதினால் சப்தம் வெளிவராது.
கண்களிலிருந்து நீர் வழியும் இதற்கு மாற்றமாக மரணித்தவரின் நன்மைகளை எடுத்துக் கூறி 'என் தங்கமே! என் செல்வமே! போய் விட்டாயா?' என்றெல்லாம். கூறி அழுவது ஒப்பாரி வைத்தலாகும். இதனை கண்டித்துப் பல நபிமொழிகள் வத்துள்ளன.
"இரு சாரார் நிராகரிப்பிலே (குஃப்ர் ) இருக்கிறார்கள். வம்சத்தில் குறை காண்பவரும் இறந்தவருக்காக ஒப்பாரி வைத்து அழுபவரும்" என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள் (முஸ்லிம், பைஹகி)
முகத்திலோ, நெஞ்சிலோ அடித்துக் கொண்டு அழுவது.
சட்டைகளை உடைகளைக் கிழித்து ஆர்ப் பாட்டம் செய்து அழுவது.
இப்னு மஸ்ஊத் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள். முகத்திலோ, நெஞ்சிலோ அடித்து அழுபவர்களும், சட்டைகளைக் கிழித்துக் கொண்டு அழுபவர்களும், அறியாமைக் கால வசனங்களைக் கூறி ஒப்பாரி வைத்து அழுபவர்களும் நம்மைச் சேர்ந்தவர்களல்லர் என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (புகாரி முஸ்லிம், பைஹகி)
மொட்டையடித்தல்: உறவினரின் மரணத்திற்காகச் சிலர் மொட்டையடிப்பதுமுண்டு. இதுவும் நபி (ஸல்) அவர்களால் விலக்கப்பட்ட செயலாகும்.
ஒரு தடவை நோயினால் பீடிக்கப்பட்ட அபூமூஸா அஷ்அரீ (ரழி) அவர்கள் மயக்கமடைந்தார்கள். இதனைக் கண்ட அவரது உறவினர் பெண் ஒருவர் ஒப்பாரி வைத்து அழுதார். மயக்கம் தெளிந்த நபித்தோழர் ஒப்பாரி வைத்து அழுபவரையும், ஆடையைக் கிழித்து அழுபவரையும் (துக்கத்தால்) மொட்டையடிப்பவரையும் வெறுத்த நபியவர்கள், இவர்களை விட்டும் நான் நீங்கிவிட்டேன். (இவர்கள் இஸ்லாத்தின் வழியிலுள்ளவர்களல்ல) எனக் கூறியுள்ளார்கள். இதனையே இப்போது நானும் கூறுகிறேன். (நானும் விலகிக் கொண்டேன்) என்று கூறினார்கள் ( புகாரி, முஸ்லிம், நஸயீ )
தலைமுடியை விரித்துப் போடுதல்: சில பெண்கள் துக்கமேலிட்டால் தங்கள் தலைமுடியைக் கொண்டை போடாமலவோ, வாரிக்கொள்ளாமலோ பரட்டையாகக் காட்சியளிப்பார்கள். இதனையும் நபி (ஸல்) அவர்கள் விளக்கியுள்ளார்கள்
“நபி (ஸல் ) அவர்களுடன் (பைஅத்) உறுதிய பிரமாணம் செய்த ஒரு பெண் நாங்கள் நபியவர்களுக்கு மாறு செய்ய மாட்டோம் என்றும் துன்பத்தின் போது முகத்தைப் பிராண்டி, சட்டையைக் கிழித்து. என் கேடே ! தங்கமே ! எனக் கூறி ஒப்பார் வைக்க மாட்டோம் எனவும், தலைமுடியை பரட்டையாக விட மாட்டோம் என்பனவற்றை நிபந்தனையாக வைத்துப் பிரமாணம் செய்தோம்" எனக் கூறினார்கள். ( அபூதாவூத், பைஹகி )

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 8

( மரண அறிவிப்பு )

அறியாமைக் கால அறிவித்தல்கள் ஏற்படாத வகையில் ஒருவரின் மரணத்தை அறிவிப்பு செய்யலாம்.
மரணித்தவருக்குச் செய்ய வேண்டிய குளிப்பாட்டுதல், கபனிடுதல், தொழுகை நடத்துதல் போன்ற செயல்களைச் செய்வதற்கு முஸ்லிம்கள் யாருமே இல்லாத போது அறிவிப்பு செய்ய அனுமதியுண்டு.
நவீன மீடியா காலத்தில், ஒருவரின் மரணத்தை அவரது புகைப்படத்துடன் உலகம் முழுவதும் தெரிவிக்க முடிகிறது. இதனால் மரணித்தவருக்காக அவர் மீது அன்பு கொண்டவர்கள் அவரின் பாவ பிழை பொறுக்க துஆ செய்வதோடு, மரணத்தவரின் வரலாறு, மற்றும் அவரின் நற்குணங்கள், திறமைகள் பற்றி மீடியாவிலேயே பேசப்படுகிறது.
அபிசீனிய மன்னர் நஜ்ஜாஷி அவர்கள் மரணமடைந்த வேளை நபி (ஸல்) அவர்கள் இதனைச் செய்துள்ளார்கள் என்பது குறிப்பிடத்தக்க ஆதாரமாகும்.
இவ்வாறு விளம்பரப்படுத்தும் போது அவருக்காகப் பிழை பொறுக்கத் தேடுங்கள்! எனக் கூறுவது விரும்பத்தக்க செயலாகும்.
அபிசீனிய மன்னர் நஜ்ஜாஷி மரணமடைந்தவேளை அவர் மரணத்தை அறிவித்த நபியவர்கள் "உங்கள் சகோதரனுக்காகப் பிழை பொறுக்கத் தேடுங்கள்!" என தோழர்களுக்குக் கட்டளையிட்டார்கள் என்பதை அறிகிறோம். (புகாரி, முஸ்லிம்)
யார் இந்த அபிசீனிய மன்னர் நஜ்ஜாஷி
இஸ்லாத்தின் ஆரம்ப கட்டத்தில் முஸ்லிம்கள் மக்காவில் பெரும் சோதனைக்கு ஆளானார்கள். இதிலிருந்து தங்களையும் தங்கள் கொள்கையையும் காத்துக் கொள்வதற்காக அபீசீனியாவிற்கு ஜாஃபர் பின் அபீதாலிப் (ரலி) அவர்கள் தலைமையில் அடைக்கலம் தேடிச் சென்றார்கள்.

அப்போது அவர்களுக்கு அங்கு அடைக்கலம் கொடுக்கக்கூடாது என்று சூழ்ச்சி செய்து, தடுப்பதற்காக மக்காவின் இணை வைப்பாளர்கள் ஒரு குழுவினரை அபீசீனியாவின் மன்னர் நஜ்ஜாஷி அவர்களிடம் அனுப்பி வைத்தார்கள். ஆனால் நஜ்ஜாஷி மன்னர், மக்கா இணை வைப்பாளர்களின் கோரிக்கையை நிராகரித்து முஸ்லிம்களுக்கு அடைக்கலம் கொடுத்தார்கள்.
நபி (ஸல்) அவர்கள் மதீனாவுக்கு ஹிஜ்ரத் செய்வதற்கு முன்னர் முஸ்லிம்களின் இந்த ஹிஜ்ரத் அமைந்ததால் இது முதல் ஹிஜ்ரத் என்று அழைக்கப்படுகின்றது.
இந்த முதல் ஹிஜ்ரத் தொடர்பாக முஸ்னத் அஹ்மதில் இடம்பெற்றுள்ள செய்தியைப் பார்வையிடவும்.

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 9

நற்பேறுடன் மரணிப்பவரின் அடையாளங்கள் ( பாகம் 1)

சத்திய சன்மார்க்கத்தை நிலை நிறுத்திய நுண்ணறிவாளர் நபி (ஸல்) அவர்கள் நற்பேறுடன் மரணிப்பவர் சுவனவாசியாக மரணிக்கிறாறா ? என்பதை மரண வேலையில் அறியக் கூடியவாறு சில ( 19 ) அடையாளங்களைக் கூறியுள்ளார்கள். இந்த அடையாளங்களுடன் மரணிப்பவருக்கு நற்பேறு கிடைக்கும்.
1) மரணவேளையில் கலிமாவை உரைப்பவர்
இதற்குச் சான்றாகப் பல நபி மொழிகள் வந்துள்ளன அவற்றிலொன்று முஆத் (ரழி) அவர்கள் மூலம் "யாருடைய கடைசி வார்த்தை 'லா இலாஹ இல்லல்லாஹ்!' என்ற வார்த்தையாக இருக்கின்றதோ, அவன் சுவனம் நுழைவார் என் நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். ( ஹாகிம் )
2) மரணவேளையில் நெற்றி வியர்த்தல்
புரைதா இப்னு ஹஸீப் (ரழி) அவர்கள் குராஸானில் இருக்கும் போது, அவருடைய சகோதரர் ஒருவர் மரணப் படுக்கையில் இருப்பதாக அறிந்து அவரைக் காணச் சென்றார்கள். அப்போது மரணப்படுக்கையில் கிடந்தவரின் நெற்றி வியர்த்திருந்தது. இதனைக் கண்ட புரைதா (ரழி) அவர்கள், " அல்லாஹு அக்பர் " என்று (மகிழ்ச்சியாய்) கூறிவிட்டு "ஒரு நம்பிக்கையாளனின் மரணத்தின் போது அவனது நெற்றி வியர்த்திருக்கும்" என நபி (ஸல்) அவர்கள் கூறியதைக் கேட்டேன் எனக் கூறினார்கள். (அஹ்மத், நஸயீ, திர்மிதி, இப்னுமாஜா இப்னுஹிப்பான், ஹாகிம்)
3) ஜும்ஆ தினத்தின் பகலிலோ இரவிலோ மரணிப்பது?
எந்த முஸ்லிமாவது ஜும்ஆ தினத்தின் பகலிலோ, இரவிலோ மரணமடைந்தால் மண்ணறையின் வேதனையை அல்லாஹ் நீக்கி விடுகிறான் என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.(அஹ்மத், திர்மிதி)
(மண்ணறையின் வேதனை நீக்கப்பட்டவன் வேறு எந்த வேதனைக்கும் உள்ளாக்கப்பட மாட்டான் என்பது இதன் கருத்தாகும்).
4) போர்க்களத்தில் உயிர்த் தியாகம் செய்தல்
அல்லாஹ்வின் பாதையில் போரிட்டுக் கொல்லப் பட்டவர்களை மரித்தவர்கள் என்று நிச்சயமாக எண்ணாதீர்கள் - தம் ரப்பினிடத்தில் அவர்கள் உயிருடனேயே இருக்கிறார்கள் - (அவனால்) அவர்கள் உணவளிக்கப்படுகிறார்கள். தன் அருள் கொடையிலிருந்து அல்லாஹ் அவர்களுக்கு அளித்ததைக் கொண்டு அவர்கள் ஆனந்தத்துடன் இருக்கிறார்கள்; மேலும் (போரில் ஈடுபட்டிருந்த தம் முஃமினான சகோதரர்களில் மரணத்தில்) தம்முடன் சேராமல் (இவ்வுலகில் உயிருடன்) இருப்போரைப் பற்றி: "அவர்களுக்கு எவ்வித பயமுமில்லை; அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள்" என்று கூறி மகிழ்வடைகிறார்கள்.
அல்லாஹ்விடமிருந்து தாங்கள் பெற்ற நிஃமத்துகள் (நற்பேறுகள்) பற்றியும், மேன்மையைப் பற்றியும் நிச்சயமாக அல்லாஹ் முஃமின்களுக்குரிய நற்கூலியை (ஒரு சிறிதும்) வீணாக்கி விடுவதில்லை என்பதைப் பற்றியும் மகிழ்வடைந்தோராய் இருக்கின்றார்கள். (குர்ஆன்: 3:169 to 170)
போர்க்களத்தில் எதிரிகளால் வெட்டிக் கொல்லப்படும் நம்பிக்கையாளர்களுக்கு (ஷஹீதுகளுக்கு) ' சிறப்பம்சங்கள் கிடைக்கின்றன.
அ) முதலாம் இரத்தத் துளியுடன் அவர் பாவங்கள் மன்னிக்கப்படுகின்றன.
ஆ) சுவனபதியில் அவர் தங்குமிடத்தைக் கண்ணால் காண்கின்றார்.
இ) மண்ணறையின் வேதனையிலிருந்து பாதுகாக்கப்படுகிறார்.
ஈ ) மறுமையின் பெருந்திடுக்கங்களிலிருந்து பாதுகாப்புப் பெறுகிறார்.
உ) நம்பிக்கையின் அணிகலன்கள் பூட்டப்பட்டு ஹூருல் ஈன்களுடன் (சுவன மாதர்களுடன்) திருமணம் செய்து வைக்கப்படுகிறார்.
ஊ) அவரது நெருங்கிய இனசனங்களுள் (உறவினர்களுள்) எழுபது பேருக்குப் பரிந்துரை செய்து சுவர்க்கத்தில் சேர்த்து விடுகிறார் என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (அஹ்மத், திர்மிதி, இப்னுமாஜா)
5) போரில் எதிரிகளால் கொல்லப்படாமல் நோயினால் மரணமடைதல்.
"நீங்கள் உங்களுக்கிடையில் ஷஹாதத்(தியாகத்)தை எப்படிக் கருதுகிறீர்கள்?" என நபியவர்கள் தோழர்களிடம் வினவினார்கள்.
"அல்லாஹ்வின் பாதையில் (போர்க்களத்தில்) வெட்டுண்டு இறப்பதுதான் "ஷஹீத்' என்று தோழர்கள் பதிலளித்தார்கள்.

அவ்விதமாயின் என் சமூகத்தவர்களில் ஷுஹதாக்கள் (தியாகிகள்) மிகக் குறைவாகவே இருப்பர் எனக் கூறிவிட்டு, போர்க்களத்தில் எதிரிகளால் கொல்லப்பட்டவரும் தியாகியே! போர்க்களத்தில் நோயுற்றிருப்பவரும் தியாகியே! பிளேக் கொள்ளை நோயினால் இறப்பவரும் தியாகியே! நீரில் மூழ்கி இறப்பவரும் தியாகியே! வயிற்றோட்ட நோயினால் இறப்பவரும் தியாகியே ! என நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். (முஸ்லிம், அஹ்மத்)

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 10

( நற்பேறுடன் மரணிப்பவரின் அடையாளங்கள் ( பாகம் 2 )

6) 'பிளேக்" தோலினால் மரணமடைதல்
(தமிழ் அகராதியில்) கொள்ளை, கோதாரி எனக் கூறப்படும் பிளேக் நோயினால் இறக்கும் முஸ்லிம்கள் தியாகிகளாவர் என நபி (ஸல) அவர்கள் கூறியுள்ளார்கள் (புகாரி , அஹ்மத், தயாலிஸி )
7 ) வயிற்றோட்ட நோயினால் மரணமடைதல்
'எவன் வயிற்றோட்ட (வாத்தி, பேதி) நோயினால் இறக்கின்றானோ அவன் தியாகியாவாள்' என நபி (ஸல்} அவர்கள் கூறியுள்ளார்கள்.
(முஸ்லிம் )
8 ) & 9 ) நீரில் மூழ்கியும் இடிபாடுகளுக்கிடையில் சிக்கியும் மரணமடைதல்
"ஷுஹதாக்கள் (தியாகிகள்) ஐந்து வகையாவர்: காயம்பட்டு இறப்பவர், வயிற்றோட்ட நோயினால் மரணிப்பவர், நீரில் மூழகி, வீடு இடிந்து வீழ்ந்து, மரணிப்பவர், எதிரிகளினால் கொல்லப்படுபவர் என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.
(புகாரி, முஸ்லிம், திர்மிதி
10) பிரசவத் தீட்டு கழியுமுன் இறக்கும் பெண்ணும் தியாகியே யாவார்.
"எதிரிகளினால் கொல்லப்படுபவரும், வயிற்றோட்ட நோயினால் மரணிப்பவரும், பிரசவத்தினால் மரணிப்பவரும். தியாகி (ஷஹீது) களேயாவார்" என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.
(அஹ்மத், திர்மிதி தயாலிஸி )
11) தீயினால் மரணமடைபவரும் தியாகியே.
அல்லாஹ்வின் பாதையில் கொல்லப்படுவது உட்பட மேலும் ஏழு வகையினர் ஷுஹதாக் (தியாகி)களாவார்கள். காயம்பட்டுப் பல நாட்களுக்குப் பின் இறப்பவரும், நீரில் மூழ்கி இறப்பவரும் தியாகிகளேயாவார்கள்" என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.
(அபூதாவூத், நஸயீ, மாலிக், இப்னு மாஜா, ஹாகிம் இப்னு ஹிப்பான்)
12) பாரிசவாத நோயினால் மரணிப்பது இதற்கு முன்னுள்ள நபிமொழி ஆதாரமாகிறது.
13) காசநோயினால் மரணிப்பதும் தியாகியே.
"அவ்லாஹ்வின் பாதையில் போரிட்டு எதிர்களால் கொல்லப்படுபவர் ஷஹீதாவார். காசநோயினால் இறப்பவரும் ஷஹீதாவார். வயிற்றோட்ட நோயினால் இறப்பவரும் ஷஹீதாவார் " என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.( அஹ்மத், தயாலிஸி )
குறிப்பு : இந்த நோய் அதிகமாக புகைப்பிடிப்பவர்களுக்கு ஏற்படுகிறது.நுரையீரலில் புகைமண்டி சுவாசிக்க கஷ்டப்பட்டு இருமி இருமி அவஸ்தப்பட்டு, இந்த நோயினால் பீடிக்கப்பட்டு இறப்பவர்களுக்கு இந்த ஷஹீத் பதவி கிடைக்காது. புகை பிடிக்காமல் இந்த நோய் வருபவர்களுக்கே இப்பதவி கிட்டும் என்று கூறப்படுகிறது.

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 11

( நற்பேறுடன் மரணிப்பவரின் அடையாளங்கள் ( பாகம் 3 )

14) தன் பொருளைப் பாதுகாப்பதற்காக திருடனுடன் போராடி இறத்தல்.
எவன் தன் பொருளைக் காப்பாற்ற திருடனுடன் போராடி இறக்கின்றானோ அவன் ஷஹீதா (தியாகியா )வான் என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். ( புகாரி, முஸ்லிம். அபூதாவூத், நஸயீ, இப்னுமாஜா. அஹ்மதி)
15) மதத்திற்காகக் கொல்லப்படுபவர் தியாகியாவார். (அதாவது ஒரு குடிகாரனைக் கண்டு நீ குடிக்காதே! இஸ்லாத்திலே மது விலக்கப்பட்டுள்ளது என்று கூறும்போது, அவன் ஆத்திரத்தில் இப்படி அறிவுரை கூறுபவரை கொன்று விடுவான். இவ்வாறு கொல்லப்படுபவரே மதத்திற்காக கொல்லப்பட்ட ஷஹீத் பதவியைப் பெறுவார்) எவர் தன் பொருளைப் பாதுகாப்பதற்காகத் திருடனுடன் போரிட்டு மரணிக்கின்றாரோ அவர் ஷஹீதாவார். தன் குடும்பத்தினரின் மானம் காக்கப் போரிட்டு மரணிப்பவனும் ஷஹீதாவான்..
தன் மதப்பிரச்சாரத்திற்காகக் கொல்லப்படுபவரும் ஷஹீத (தியாகி) ஆவார். தன்னுயிரைப் பாதுகாப்பதற்காகப் போரிட்டு மரணிப்பவரும் ஷஹீதாவார் என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (அபூதாவூத், நஸயீ, திர்மிதி, அஹ்மதி )
16) தன்னுயிரைக் காப்பாற்றுவதற்காக போரிட்டு மரணிப்பவர் இதற்கு முன் கூறப்பட்ட நபி மொழியே ஆதாரமாகின்றது
17) அல்லாஹ்விற்காக போரிடுவதற்கு எப்போதும் ஆயத்தமாக இருத்தல்

இவ்வேளை மரணம் சம்பவித்தல், ஒரு பகலும் இரவும் போருக்கு ஈடுபட்டிருப்பது. ஒரு நாள் முழுவதும் பகலில் நோன்பு வைத்து இரவு முழுக்க நின்று வணங்குவதை விட மேலானதாகும்.
அவ்வேளை அவனுக்கு மரணம் சம்பவித்தால் எந்த வேலையில் ஈடுபட்டிருந்தானோ அதன் பிரதி பலன் எடுத்துக் கொண்டே இருக்கும். அவனுக்கு உரிய உணவு அளிக்கப்படும் மறுமை குழப்பங்களிலிருந்து பாதுகாப்பு பெறுவான் என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள் (முஸ்லிம், நஸயீ, திர்மதி, ஹாகிம், அஹமத் )
18) நற்செயல்களில் ஈடுபட்டிருக்கும் போது மரணமடைதல்.
குர்ஆன் ஓதிக் கொண்டிருக்கும்போதோ, தொழுது கொண்டிருக்கும் பொழுதோ, அறிவுரை செய்து கொண்டிருக்கும் பொழுதோ மரணமடைந்தால், அல்லாஹ்வின் மீது உறுதி கொண்டு லாயிலாஹ இல்லல்லாஹ் என்று மொழிபவர் அக்கலிமாவுடனே மரணமடைந்தால் சுவனம் செல்வார்.
அல்லாஹவிற்காக நல்லெண்ணம் கொண்டு ஒரு நாள் நோன்பு வைத்தவர், அதன் நன்மையைக் கொண்டே மரணமடைந்து சுவனம். செல்வார் என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்,
19) கொடுமைக்கார தலைவனால் அவனுக்கு நல்லூரை வழங்கிக் கொண்டிருக்கும் போது கொல்லப்படுவர்
.
ஷுஹதாக்களின் தலைவர் ஹம்சா இப்னு அப்துல் முத்தலிப் ஆவார் ஒரு கொடுமையான தலைவனுக்கு நல்லதை ஏறி தீயதை தடுத்துக் கொண்டிருந்த வேலை அவனால் கொல்லப்படுவார் என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (ஹாகிம், சுதீப் )
மேற்கண்ட 19 அடையாளங்களில் ஏதாவது ஒன்றைப் பெற்றவர் நற்பேறுடன் மரணித்தவராகவே கருதப்படுவார் .

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 12

( பெரிய மனிதரின் மரணத்திற்காகவா கிரகணம் ஏற்படுகிறது ? )

முதல்ல கிரகணத்தைப் பற்றி சொல்றேன். "ஒரு பௌர்ணமியிலிருந்து அடுத்த பௌர்ணமி வரையுள்ள 28 நாட்களில், சந்திரன், முழு நிலவிலிருந்து தேய்ந்து, அமாவசையாகி, மீண்டும் மெதுமெதுவாய் வளர்ந்து பௌர்ணமி நிலவாகும் வரை, ஒவ்வொரு நாளும் வெவ்வேறு அளவில், வடிவில் இருக்கும்.
இந்த 28 சந்திர முகங்களையும் ஒரு முழு சந்திர கிரகணத்தின் போது, சுமார் மூன்றே மணி நேரத்தில், நாம் பார்த்துவிட முடியும். அதாவது, ஒரு மாத காலத்தில் நடப்பது எல்லாம் சில மணி நேரத்தில் சூட்சுமமாக நடக்கிறது.

( இந்த சூட்சுமத்தைப் பற்றி தெரிந்தவர்கள் பின்னூட்டத்தில் சொல்வார்கள் என நினைக்கிறேன். ஒரு சின்ன க்ளு : ஒரு பெரிய போராட்ட வீரரின் வாழ்கையை பிறந்ததிலிருந்து இறப்பு வரை 3 மணி நேரத்தில் ஒரு சினிமா காட்டிவிடுவது போல, ஒரு மாத காலத்தில் நடப்பது எல்லாம் மூன்றே மணி நேரத்தில் இயற்கை நமக்கு விண்வெளியில் படம் காட்டி விடுகிறது )
சக்தி ரீதியாகப் பார்த்தால், ஒரு மாத காலத்தை நாம் வெறும் 3 மணி மூன்றே மணி நேரத்தில் கடந்து விடுகிறோம். இது வியப்புக்குரிய விந்தையான விஷயம்தானே...!
இந்த அடிப்படையில் தான் பூமி, சந்திர கிரகணத்தை, நிலவின் முழு சுற்று என்று தவறாக எடுத்துக் கொள்கிறது. இது இருக்கட்டும்

ஒருவரின் மரணமும் சூரிய, சந்திர கிரகணங்களும் ஒன்று சேர்ந்தால் அது எந்த முக்கியத்துவத்தையும் காட்ட மாட்டா. ஒரு பெரிய மனிதரின் இறப்புக்குத்தான் கிரகணம் ஏற்பட்டிருக்கிறது என எண்ணுவது அறியாமைக் கால (ஜாஹிலிய்யா) நம்பிக்கையாகும்.
இறைத்தூதர் அவர்களின் இனிய மகன் இப்ராஹீம் மரணமடைந்த போது சூரிய கிரகணமும் ஏற்பட்டது. இதனை நம்பி பிரஸ்தாபித்து பேசிக் கொண்டிருந்த மக்களைக் கண்டு நபியவர்கள் கண்டித்து உரையாற்றினார்கள்.
''மக்களே! அறியாமைக்கால மக்கள் ஒரு பெரிய மனிதரின் இறப்புக்காகத் தான் கிரகணம் பிடித்துள்ளது என நம்பிக் கொண்டிருந்தார்கள். இது தவறான நம்பிக்கையாகும்.
சூரிய, சந்திர கிரகணங்கள் அல்லாஹ்வின் அத்தாட்சியில் உள்ளவையாகும். அது யாருடைய பிறப்பிற்கோ இறப்பிற்கோ ஏற்பட்டதல்ல. அதன் மூலம் அல்லாஹ் மக்களுக்கு எச்சரிக்கை விடுகின்றான்.
கிரகணம் பிடிப்பதை நீங்கள் கண்டால் அல்லாஹ்வைத் துதிப்பதற்கும், பிரார்த்திப்பதற்கும், பாவமன்னிப்புக் கோருவதற்கும் விரையுங்கள்! தாமம் செய்யுங்கள்! அடிமையை விடுதலை செய்யுங்கள்! அது (கிரகணம்) நீங்கும் வரை பள்ளி வாசலுக்குச் சென்று தொழுங்கள்!" எனக் கூறினார்கள். (புகாரி, முஸ்லிம், அபூதாவூத்)
காரணம் : சக்தி ரீதியாகப் பார்த்தால், ஒரு மாத காலத்தை நாம் வெறும் 3.மணி நேரத்தில் கடந்து விடுகிறோம். அந்த 3 மணிநேர கால அவகாசத்தில் இறைவனை துதித்தால் அது ஒரு மாத கால வணக்கமாக இறைவன் பதிவு செய்யலாம். லைலத்துல் கதிர் ஓர் இரவு ஆயிர மாதங்களை விட சிறந்தது அல்லவா ...

**மரணத்திலிருந்து மண்ணறை வரை 13**
( மையித்தைக் குளிப்பாட்டுதல் பகுதி 1 )

1) மையித்தை மூன்று முறை குளிப்பாட்டுதல் வேண்டும். அதனைச் செய்பவர்கள் தேவைக்கேற்ப அதிகரித்துக் கொள்ளலாம்.
2) ஒற்றைப் படையாகவே குளிப்பாட்டுதல் அமைய வேண்டும்.
3) குளிப்பாட்டும் பொழுது இலந்தை இலை அல்லது உடலைச் சுத்தப்படுத்தக்கூடிய சோப்பு போன்றவற்றை பயன்படுத்த வேண்டும்.
4) கடைசித் தண்ணீரில் ஏதாவது வாசனைப் பொருட்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். கற்பூரத்தைக் கலப்பது சிறந்ததாகும்.
5) கொண்டைகளை அவிழ்த்து விட்டு நன்றாகக் கழுவ வேண்டும்.
6) தலை முடியைத் தொங்கவிட வேண்டும்.
7) பெண்களுக்கு மூன்று பின்னல் போட்டுப் பின்னால் தொங்க விட வேண்டும்.
😎வலது பக்கத்திலிருந்து குளிப்பாட்டுதலை ஆரம்பிக்க வேண்டும்.
9) ஏதாவது நிர்ப்பந்தம் ஏற்பட்டாலே தவிர ஆணை ஆண்களும் பெண்ணைப் பெண்களும் குளிப்பாட்டுதல் வேண்டும்.
இவற்றுக்கு உம்மு அதிய்யா (ரழி) அவர்கள் மூலம் வந்துள்ள நபிமொழி ஆதாரமாகவுள்ளது.
நாங்கள் நபி (ஸல்) அவர்களின் மகள் ஜைனபைக் குளிப்பாட்டிக் கொண்டிருக்கும்போது, நபியவர்கள் வந்து மூன்று முறை குளிப்பாட்டுங்கள். அல்லது ஐந்து முறை அல்லது ஏழு முறை குளிப்பாட்டுங்கள். தேவையானால் அதிகப்படுத்திக் கொள்ளுங்கள் என்று கூறினார்கள்.
ஒற்றைப்படையாகத்தான் இருக்க வேண்டுமா? என்று கேட்டேன்.
ஆம்! அப்படியே தானிருக்க வேண்டும் என்று கூறிவிட்டு, கடைசியாகக் கற்பூரத்தைக் கலந்து கொள்ளுங்கள். குளிப்பாட்டி முடிந்தவுடன் என்னை அழையுங்கள் என்று நபியவர்கள் கூறினார்கள். குளிப்பாட்டி முடித்தவுடன் நாங்கள் நபி(ஸல்) அவர்களை அழைத்தோம்.
எங்களை நோக்கி வந்த நபியவர்கள் தங்கள் கைகளிலிருந்த சாரத்தை (துணியை) எங்களிடம் வீசி இதனை உள்ளாடையாக உடுத்தி விடுங்கள் என்றார்கள்.
நாங்கள் அதனை உடுத்திவிட்டு அவளின் தலைமுடியை மூன்றாகப் பிரித்துப் பின்னி முதுகுப் பக்கம் போட்டு விட்டோம். எல்லா வேலைகளிலும் வலதையே முற்படுத்துங்கள்! ஒளுவின் உறுப்புக்களையும் அவ்வாறே செய்யுங்கள் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (புகாரி, முஸ்லிம், அபூதாவூத், திர்மிதி, நஸயீ, இபுனுமாஜா, அஹ்மத்)
மையித்தை குளிப்பாட்டுவதற்கு இரண்டு பொருட்களை நபியவர்கள் குறிப்பிடுகிறார்கள் 1) இலந்தை இலை 2) கற்பூரம்
1) இலந்தை இலையின் மகத்துவம் :
இலந்தை இலையில் அதிக மருத்துவ சக்திகள் உள்ளன.
இலந்தை இலையை மை போல் அரைத்து வெட்டுக் காயத்தின் மீது வைத்து கட்டினால் விரைவில் குணமாகும்.
இலந்தை இலையை அரைத்து எலுமிச்சை அளவு எடுத்து பசு மோரில் கலந்து குடித்து வர எருவாய் கடுப்பு குணமாகும்.
இலந்தை இலையை அரைத்து அந்த விழுதைக் கட்டிகள் மீது கட்டி வர விரைவில் கட்டிகள் பழுத்து உடையும்.
இலந்தை இலையை மை போல் அரைத்து பூசி வர மயிர் புழுவெட்டு நீங்கும்.
இலந்தை இலையின் சாறெடுத்து அதனை உள்ளங்கை, உள்ளங் கால்களில் பூசி வர, அங்கு அதிகமாக வியர்வை சுரப்பது கட்டுப்படும்.
உடலில் ஏற்படும் சர்க்கரை பாதிப்புகளை சரி செய்வதில் இருந்து, ஞாபக மறதி, உடல் வலி, கைகால் மூட்டுகளில் ஏற்படும் வலிகள், வாந்தி தலைசுற்றல், கிறுகிறுப்பு மயக்கம், பெண்களின் மாதாந்திர விலக்கின்போது ஏற்படும் வயிற்றுவலி, தலைவலி போக்கி, பெண்களின் மகப்பேறு அடைவதில் உள்ள கோளாறுகளை சரியாக்கி, அவர்களை விரைவில் தாய்மையடைய வைக்கும் தன்மையுள்ள ஒரு அற்புத மூலிகைதான், இலந்தைச்செடி."
2) கற்பூரத்தின் பயன்கள்
மனித வரலாற்றில் கற்பூரம் பல்வேறு நோக்கங்களுக்காக பயன்படுத்தப்பட்டு வருகிறது. பண்டைய எகிப்தில், இது ஒரு வாசனை திரவியமாகவும், உடல்களை (மம்மி) பதனிட (எம்பாமிங்) முகவராகவும் கற்பூரம் பயன்படுத்தப்பட்டது
கற்பூர எண்ணெய் ஒரு இயற்கை பூச்சிக்கொல்லியாக செயல்படும். அதற்கு அரை கப் சுடுநீரை ஸ்ப்ரே பாட்டிலில் ஊற்றி, அத்துடன் 20 துளிகள் கற்பூர எண்ணெய் சேர்த்து நன்றாகக் கலந்து பூச்சி அல்லது கொசுக்கள் வரும் பகுதிகளில் தெளிக்க வேண்டும். ஒரு பாத்திரத்தில் நீரை ஊற்றி அதில் 4-5 கற்பூரத்தைப் போட்டு அறையில் வைத்தால் கொசுக்கள் வராது
நகத்தில் பூஞ்சை ஏற்பட்டால் தொடர்ந்து கற்பூரம் தேய்த்து வந்தால் குறையும். வராமல் தடுக்கப்படும். இதில் இயற்கையாகவே பூஞ்சையைப் போக்கும் நிவாரணி உள்ளது.

கற்பூரம் தோல் அரிப்பு மற்றும் எரிச்சலை நீக்குகிறது. உங்களது தோலில் சிவப்பு நிறத்தில் தழும்புகள் இருந்தால், கற்பூரத்தை பேஸ்ட் ஆக குழைத்து தடவவும். உடனடி நிவாரணம் கிடைக்கும். இது நரம்புகளைத் தூண்டி, சிவப்பு நிறத்தையும் நீக்குகிறது.

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 14

( மையித்தைக் குளிப்பாட்டுதல் பகுதி 2)

10) ஆண் ஆண்களுடன் இருக்கும் போது மறைத்திருக்க வேண்டிய மர்மஸ்தானங்களையும், பெண் பெண்களுடனிருக்கும்போது மறைத்திருக்க வேண்டிய மர்மஸ்தானங்களையும் துணித்துண்டினால் மறைத்து அவற்றில் கைபடாது, கண்படாது பாதுகாத்துக் கொள்ள வேண்டும். துணித்துண்டினால்
11) மரணித்தவரின் எல்லா ஆடைகளையும் களைந்து விட்டு ஒரு துணி துண்டினால் அவர் உடம்பைத் தேய்த்துக் கழுவ வேண்டும். இவ்வாறு செய்வதுதான் நபியவர்கள் காலத்தில் நடைபெற்றுக் கொண்டிருந்தது. இதற்குப் பின்வரும் நபிமொழி ஆதாரமாக இருக்கின்றது. அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:
"நபி (ஸல்) அவர்களைக் குளிப்பாட்டத் தொடங்கியபோதே நாம் வழமையாக மரணித்தவரின் ஆடைகளைக் களைந்து விட்டுக் குளிப்பாட்டுவதுபோல் இறைத்தூதரின் ஆடைகளையும் களைந்து குளிப்பாட்டுவதா? அல்லது ஆடையுடனேயே நபியவர்களைக் குளிப்பாட்டுவதா?'' என்று தோழர்கள் தர்க்கித்துக் கொண்டிருந்தார்கள். இவர்கள் இவ்வாறு தர்க்கித்துக் கொண்டிருந்தபோது, அவர்களுக்கு அல்லாஹ் தூக்கத்தை உண்டாக்கினான், தோழர்கள் எல்லோரும் அந்த இடத்திலேயே உட்கார்ந்து உறங்கி விட்டார்கள். எல்லோருடைய தாடியும் நெஞ்சின் மீது படிந்தது.
பின்பு அடையாளம் காண முடியாத ஒருவர். வீட்டுக்குப் பக்கத்தில் நின்று கொண்டு,"நபியவர்கள் உடுத்தியிருக்கும் ஆடையுடனேயே குளிப்பாட்டுங்கள்" என்று கூறினார்.
திடுக்கிட்டு எழுந்த தோழர்கள் நபியவர்களின் ஆடைகளைக் களையாது ஆடைக்கு மேலாக தண்ணீர் ஊற்றி நபியவர்கள் அணிந்திருந்த ஆடையினாலேயே உடலைத் தேய்த்துக் குளிப்பாட்டினார்கள்.
நபியவர்களைக் குளிப்பாட்டும் வேலைக்கு நான் முந்தியிருந்தால், நபியவர்களின் மனைவியரைத் தவிர வேறு யாரும் நபியவர்களைக் குளிப்பாட்ட விட்டிருக்கமாட்டேன் என அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் கூறுகிறார்கள். ( அபூதாவூத், இப்னுமாஜா. பைஹகி அஹ்மத், இப்னுஹிப்பான் )
படம் : "அல் -கர்ஸ் கிணறு (بئر غرس) al-Ghars Well என்பது சவூதி அரேபியாவின் மதீனா நகரில் உள்ள ஒரு வரலாற்று மிக்க கிணறு ஆகும். பாரம்பரியமாக நபி(ஸல்) அவர்களுக்கு பிலால் இப்னு ரபா (ரலி) அவர்கள் இந்த கிணற்றில் இருந்து நீரை கொண்டு வந்துள்ளார்கள். ஒருமுறை குடித்ததாக நம்பப்படுகிறது, மேலும் அவரது மறைவுக்குப் பிறகு அதன் நீரில் தன்னை குளிப்பாட்ட வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்தார்கள் . இது, தற்போது செயலிழந்த கிணறு, மஸ்ஜித் குபாவிற்கு வடக்கே சுமார் ஒன்றரை கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது"

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 15

( மையித்தைக் குளிப்பாட்டுதல் பகுதி 3)

1) கண்வன் மையித்தை மனைவி குளிப்பாட்டலாம் என்பதற்கு இதற்கு முந்தைய பதில் அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் குறிப்பிட்டிருந்த நபி மொழியைக் கண்டோம் .
அதைப்போன்று மனைவி மையத்தை கணவன் குளிப்பாட்டலாம் என்பதற்கு ஆதாரமாக அதே அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் குறிப்பிட்டிருக்கும் ஒரு சம்பவம்.
பகிஃ மண்ணறைத் தோட்டத்தில் ஒரு மையித்தை அடக்கம் செய்து விட்டு, நபியவர்கள் திரும்பியபோது, நான் கடுமையான தலை வலிலினால் தலையில் கையை வைத்துக் கொண்டு "என் தலையே!" என்று கூறிக் கொண்டிருந்தேன்.
இதனைக் கேட்ட நபியவர்கள் "நானும் அவ்வாறுதான் கத்த வேண்டும் போலிருக்கிறது. (எனக்கும் தலை வலி வந்துவிட்டது) உனக்கு ஒரு கெடுதலும் இல்லை, எனக்கு முன் நீ இறந்து விட்டால், நானே உன்னைக் குளிப்பாட்டி கபனிட்டு, தொழுவித்து நல்லடக்கம் செய்து விடுவேன்" எனக் கூறினார்கள். (அஹ்மத் தாரம். இப்னுமாஜா பைஹகி, தாரகுத்னி )

2) குளிப்பாட்டும் முறைகளை நன்கு அறிந்திருப்பவர்களே குளிப்பாட்டுதல் வேண்டும். குறிப்பாக சொந்தக்காரர்களே குளிப்பாட்டுதல் வேண்டும். ஏனெனில் நபி (ஸல்) அவர்களைக் குளிப்பாட்டும் பணியில் நபியவர்களின் குடும்பத்தினரே ஈடுபட்டிருந்தனர். அவர்களிலொருவர்தான் அலீ (ரழி) அவர்கள். அவர்கள் கூறுகிறார்கள்:

“நான் நபி (ஸல்) அவர்களைக் குளிப்பாட்டினேன். ஏனைய மையித்துக்களுக்கு ஏற்படும் எந்த அசுத்தமும், அசிங்கமும் ஏற்பட்டதை நான் காணவேயில்லை. உயிருடன் இருக்கும் போதும், இறந்த பின்பும் தூய்மையானவர்களாகவே இருந்தார்கள்".
(இப்னுமாஜா, ஹாகிம், பைஹகி)

3) இரண்டு நிபந்தனைகளுடன் குளிப்பாட்டுபவர்களுக்கு நிறைந்த நற்கூலி அல்லாஹ்வினால் வழங்கப்படுகின்றது.
முதலாவது: குளிப்பாட்டுபவர் மையித்தின் உடம்பில் ஏதாவது குறைபாடுகளைக் கண்டால் அதை வேறு யாருக்கும் கூறாமல் மறைத்து விட வேண்டும்.
"ஒரு முஸ்லிமைக் குளிப்பாட்டி அவரிலுள்ள குறைபாடுகளை வெளியிடாது மறைத்துக் கொண்டால், நாற்பது முறை அல்லாஹ் குளிப்பாட்டியவனை மன்னிக்கிறான். கப்ரு தோண்டியவனுக்கு நல்லிருப்பிடத்தை மறுமை வரை அளிக்கின்றான். கபனிட்டவனுக்கு அல்லாஹ் மறுமையில் சுவர்க்கத்தில் மெல்லியதும் அழுத்தமானதுமான உடைகளை அணிவிக்கின்றான்" என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (பைஹகி, ஹாகிம்)
இரண்டாவது: குளிப்பாட்டுவதற்கும், கபனிடுவதற்கும், கப்ரு தோண்டுவதற்கும் எவ்வித கூலியையும், நன்றிகளையும் மையித்தின் குடும்பத்தாரிடமிருந்து எதிர்பார்க்கக் கூடாது. அல்லாஹ்வின் திருப்பொருத்தத்திற்காகவேயன்றி செயல்படும் எந்த வணக்கத்தையும் அல்லாஹ் ஏற்றுக்கொள்ள மாட்டான். இதற்குப் பல ஆதாரங்கள் உள்ளன.
(நபியே!) நீர் சொல்வீராக: "நிச்சயமாக நான் உங்களைப் போன்ற ஒரு மனிதனே! நிச்சயமாக உங்களுடைய இறைவன் ஒரே இறைவன் தான் என்று எனக்கு வஹீ அறிவிக்கப்பட்டிருக்கிறது; எவன் தன்னுடைய இறைவனைச் சந்திக்கலாமென ஆதரவு வைக்கின்றானோ அவன் (ஸாலிஹான) நல்ல செயல்களைச் செய்து, தன் இறைவனை வணங்குவதில் வேறெவரையும் இணையாக்காதும் இருப்பானாக". (குர்ஆன்: 18:110)
இந்த வசனத்தில்
"தன் இறைவனுக்கு ஒருவரையும் இணையாக்காது, அவனையே வணங்கி வருவானாக!” என்ற சொல்லின் கருத்து அல்லாஹ்வின் திருப்பொருத்தத்திற்காகவேயன்றி வணங்கக் கூடாது என்பதாகும்.
செயல்கள் அனைத்தும் எண்ணங்களைக் கொண்டே
நிர்ணயிக்கப்படுகின்றன என்பது நபி மொழியாகும். (புகாரி, முஸ்லிம்)
இந்த நபிமொழியின் படி அல்லாஹ்வுக்காக கப்ரு தோண்டுவது, குளிப்பாட்டுவது போன்ற வேலைகளை செய்தால், அல்லாஹ்வின் நல்லருள் கிடைக்கும். சம்பளத்திற்காக இந்த வேலைகளை செய்தால், சம்பளம் கிடைக்கும் ஆனால், அல்லாஹ்விடம் எந்த கூலியும் கிடைக்காது. மனிதர்களின் கூலியை விட அல்லாஹ்வின் கூலியே மிக முக்கியமாக கருத வேண்டும் மறுமையிலும் பயனளிக்க கூடியதும் அல்லாஹ்வின் கூலியே ஆகும்

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 16

( மையித்தைக் குளிப்பாட்டுதல் பகுதி 4)

(வையித்தைக் குளிப்பாட்டியவன் பின்பு குளிப்பது சுன்னத்தாகும் )
"எவன் மையித்தைக் குளிப்பாட்டினானோ அவன்
குளிப்பானாக ! எவன் மையித்தைச் சுமந்து சென்றானோ
அவன் ஒளுச்செய்து கொள்வானாக!" என நபி (ஸல்) கூறியுள்ளார்கள். (அபூதாவூத், திர்மிதி)
இந்த நபிமொழியின் கருத்தை மேலோட்டமாகக் கவனித்தால் குளிப்பதும் ஒளுச் செய்து கொள்வதும் கட்டாயக் கடமையாகத் தென்படுகிறது. எனினும் வேறு இரண்டு நபிமொழிகளைக் கொண்டு இது கடமையல்ல என்பது புலனாகிறது.
முதலாவது :
உங்களிலொருவனின் மையித்தைக் குளிப்பாட்டுவதனால் நீங்கள் குளிக்க வேண்டியதில்லை. ஏனெனில், உங்கள் மையித்து நஜீஸ் அல்ல.
"நீங்கள் கைகளை மட்டும் கழுவிக் கொண்டால் போதும்'' என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.(ஹாகிம், பைஹகி)
இரண்டாவது:
நாங்கள் மையித்தைக் குளிப்பாட்டுவோம். அதற்குப் பிறகு சிலர் குளிப்பார்கள். சிலர் குளிக்கமாட்டார்கள் என இப்னு உமர் (ரழி) அவர்கள் அறிவிக்கின்றார்கள். (தாரகுத்னி. கதீப் )

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 17
( மையித்தைக் குளிப்பாட்டுதல் - பகுதி 5)

அல்லாஹ்வின் பாதையில் போரிட்டு போர்க் களத்தில் கொல்லப்பட்டவரைக் குளிப்பாட்டக் கூடாது. அவர் பெருந் தொடக்குடையவராய் இருப்பினும் சரியே! இதற்கு ஆதாரமாக பல நபிமொழிகள் உள்ளன.
முதலாவது: ஜாபிர் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:
(போரில் ஷஹீதானவர்களை) அவர்களின் இரத்தத்துடனேயே அடக்கம் செய்யுங்கள். அல்லாஹ்விற்காக போரிட்டு மரணித்தவர்கள் அவர்களின் காயத்திலிருந்து இரத்தம் ஓடக்கூடிய நிலையில் மறுமையில் வருவார்கள். இரத்தம் இரத்த நிறத்திலேயே இருக்கும். ஆனால் அதன் வாடை கஸ்தூரி மணமாக இருக்கும் என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (புகாரி, அபூதாவூத், நஸயீ, திர்மிதி, இப்னுமாஜா)
இரண்டாவது: அபூ பர்ஸத் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:
நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் ஒரு போரில் ஈடுபட்டிருந்தோம். போர் முடிந்த பின் உங்களில் யாரையாவது இழந்து விட்டீர்களா? என்று நபியவர்கள் கேட்டார்கள். ஆம், இன்னாரை, இன்னாரை, இன்னாரை (அவர்களின் பெயர்களைக் கூறி) இழந்து விட்டோம் என்று கூறினோம்.
மீண்டும் நபியவர்கள் உங்களில் யாரையாவது இழந்து விட்டீர்களா? எனக் கேட்டார்கள். நாங்கள் "இல்லை" என்றோம். 'ஆனால் நான் ஜுலைபீபை இழந்து விட்டேன். அவரைத் தேடுங்கள்!" என்றார்கள்.
நாங்கள் இறந்தவர்களுக்கு மத்தியில் அவரைத் தேடினோம். ஓரிடத்தில் ஏழு விரோதிகளுக்கு பக்கத்தில் ஷஹீதாகி இருப்பதைக் கண்டு நபியவர்களிடம் சென்று கூறினோம்.
நபியவர்கள் அங்கு வந்து அவர் பக்கத்தில் நின்று கொண்டு "தனித்து ஏழு பேருடன் சண்டையிட்டு அவர்களைக் கொன்று விட்டு அவர்களால் இவரும் கொல்லப்பட்டுள்ளார். நான் அவருக்குரியவர். அவர் எனக்குரியவர்" என்று இரண்டு மூன்று முறை கூறி விட்டு இரு கைகளையும் நீட்டி "(அவரைத் தூக்கி என் கையில்) வையுங்கள்" என்றார்கள்.
நாங்கள் அவரைத் தூக்கி நபியவர்களின் முன்னங்கையில் வைத்தோம். நபியவர்களின் கைகளே அவருக்கு 'சந்தூக்'காக இருந்தது. நபியவர்கள் தங்கள் கையினாலேயே கப்ரில் வைத்தார்கள். குளிப்பாட்டுவதைப் பற்றிய பேச்சே (கட்டளை எதுவும்) இருக்கவில்லை. (முஸ்லிம், தயாலிஸி, பைஹகி
மூன்றாவது: அப்துல்லாஹ் இப்னு சுபைர் (ரழி) அவர்கள் ஷஹீதான ஹன்லலாவின் சம்பவத்தைக் கூறும் போது ''உங்கள் தோழரை (ஹன்லலாவை) வானவர்கள் குளிப்பாட்டுகிறார்கள். அவர் மனைவியிடம் என்ன நடந்தது? என்று விசாரியுங்கள் என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அவர்கள் சென்று கேட்ட போது 'அவர் ஜுனுபாளியாக (குளிப்பு கடமையானவராக) இருந்தார். பேரிரைச்சல் கேட்டவுடன் பாய்ந்து சென்றார், எனக் கூறியதாக நபியவர்களிடம் வந்து கூறினார்கள்.
"அதனால்தான் வானவர்கள் குளிப்பாட்டுகிறார்கள்" என நபியவர்கள் கூறினார்கள். (பைஹகி, ஹாகிம், இப்னுஹிப்பான்)

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 18
( மையித்தைக் கபனிடுதல் )

அடக்கம் செய்வதற்கு முன் மைய்யித்திற்கு ஆடை அணிவித்தல் வேண்டும். இதற்கு 'கபன்' என்று சொல்லப்படும்.ஒரு மையித்தைக் குளிப்பாட்டி முடித்தவுடன் அதனைக் கபனிடுவது கட்டாயமாகும். மரணமடைத்தவரின் சொந்தப் பணத்திலிருந்து கபனிடுதல் வேண்டும். வேறு யாராவது முன் வந்தும் செலவு செய்யலாம்.
கப்பாப் இப்னுல் அரத் (ரழி) அவர்கள் அறிவித்துள்ள நபிமொழி இதற்கு ஆதாரமாக அமைந்துள்ளது.
"நாங்கள் நபி (ஸல்) அவாகளோடு அல்லாஹ்வுக்காக நாடு துறந்து (ஹிஜ்ரத்) சென்றோம். அல்லாஹ்வின் திருப் பொருத்தத்தை வேண்டியே அவ்வாறு செய்தோம். எனவே எங்களுக்கு நற்கூலி தருவது அல்லாஹ்வின் மீது கடமையாகி விட்டது. அல்லாஹ்வின் நற்கூலியை (இவ்வுலகில்) பெறாமலே எங்களில் சிலர் சென்று விட்டனர். அவர்களிலொருவர்தான் முஸ்அப் இப்னு உமைர் (ரழி) அவர்கள். உஹுக் போரிலே அவர் ஷஹீதாகி விட்டார். ஒரேயொரு போர்வையைத் தவிர வேறெந்தப் பொருளையும் அவர் உடமையாக்கிக் கொள்ளவில்லை.
அவரை நல்லடக்கம் செய்யும்போது அப்போர்வையினால் உடல் முழுவதையும் மூட முடியவில்லை. தலையை மூடினால் கால் திறந்து கொண்டது. காலை முடினால் தலை திறந்து கொண்டது.
"துணியினால் தலையை மூடிவிட்டு கால்களுக்கு இலை தழைகளை வைத்து மூடிவிடுங்கள்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள் ( புகாரி,முஸ்லிம், திர்மிதி. நஸயீ, பைஹகி )
இதன் மூலம் அவரவர் உடமையிலேயேதான் கபனிடுதல் வேண்டும் என்பது தெளிவாகிறது.
நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள் உங்கள் சகோதரருக்கு அழகிய முறையில் கபனிடுங்கள்.' (ஜாபிர்(ரழி) முஸ்லிம்)
வெண்மையான சுத்தமான தூய்மையான ஆடைகளை கொண்டு கபனிடுவதே சிறந்ததாகும்.
அல்லாஹவின் தூதர் நபி(ஸல்) அவர்கள் எமன் தேசத்தில் ஸஹீல்ய்யா என்ற இடத்தில் தயாரிக்கப்பட்ட மூன்று வெண்ணிற ஆடைகளினால் கபனிடப்பட்டார்கள். அவற்றில் சட்டையும் இல்லை
தலைப்பாகையும் இல்லை என ஆயிஷா(ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள். (ஆதாரம் : புஹாரி முஸ்லிம்)

இந்த ஹதீஸிலிருந்து மூன்று ஆடைகள் மையித்துக்கு கபனிடுவதற்கு போதுமானது என்பது தெரிய வருகிறது. மூன்று ஆடைகள் இல்லை எனில் ஒரு ஆடை அல்லது இரண்டு ஆடைகள் இருந்தாலும் போதுமானது. ஹதீஸ்களில் இதற்கு ஆதாரம் உள்ளது.
பெண்களுக்கு கபனை பொறுத்தமட்டில் ஆண்களுக்குரிய சட்டமே ஹதீஸ்களில் உள்ளது. இருப்பினும் நபி(ஸல்) அவர்களின் மகள் உம்மு குல்ஸூம்(ரலி) மரணமடைந்த போது 'நாங்கள் உம்மு குல்ஸூமை ஐந்து ஆடைகளில் கபன் செய்தோம். உயிருள்ளவருக்கு முக்காடு போடுவது போல அவருக்கு நாங்கள் முக்காடு போட்டோம் என்று உம்மு அதியா(ரலி) அறிவிக்கும் செய்தி கவாரிஸிமி என்ற நூலில் பதியப்பட்டுள்ளது.
மகளை குளிப்பாட்டி முடித்ததும் எனக்கு அறிவியுங்கள் என்று நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள். (குளிப்பாட்டி முடித்ததும்) நாங்கள் அவர்களுக்குத் தெரிவித்தோம். தமது இடுப்பிலிருந்து வேட்டியைக் கழற்றி 'இதை அவருக்கு உள்ளாடையாக்குங்கள்!' என நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.( உம்மு அதிய்யா (ரலி)புகாரி 1253, 1254, 1257, 1259, 1261

நபிகள் நாயகம் (ஸல்) அவர்கள் தாம் அணிந்திருந்த ஆடையைத் தமது மகளுக்குக் கஃபனாகப் பயன்படுத்தியுள்ளனர் என்பதால் பழைய ஆடைகளைக் கஃபனாகப் பயன்படுத்துவது தவறல்ல என்று அறியலாம்.
அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்கள் ,'இன்று என்ன கிழமை?' எனக் கேட்டர்கள். 'திங்கள் கிழமை' என்று நான் கூறினேன். 'இன்றிரவுக்குப் பின் எனக்கு மரணம் வந்துவிடும் என்றே எதிர்பார்க்கிறேன்' என்று கூறினார்கள். தாம் அணிந்திருந்த ஆடையை உற்று நோக்கினார்கள்.
அதில் குங்குமப் பூ கறை இருந்தது. 'எனது இந்த ஆடையைக் கழுவி இத்துடன் மேலும் இரண்டு ஆடைகளை அதிகமாக்குங்கள். அதில் எனக்குக் கஃபனிடுங்கள்' என்று கூறினார்கள்.
'இது மிகவும் பழையதாக உள்ளதே!' என்று நான் கூறினேன்.
அதற்கவர்கள் 'உயிருடன் உள்ளவர் தான் புதிய ஆடைக்கு அதிகம் தகுதியானவர். (அறிவிப்பாளர் :ஆயிஷா (ரழி) அவர்கள் )

கபன் துணி உடல் முழுவதையும் மூடக் கூடியவாறு நீளமானதாகவும், விசாலமானதாகவும் இருத்தல் வேண்டும் ஜாபிர் இப்னு அப்துல்லாஹ்(ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
மரணமடைந்தவர்கள் அதிகரித்து கபன் துணிகள் குறைவாக இருந்தால் இருக்கும் கபன் துணிகளை எல்லோருக்கும் பங்கிட்டு அடக்கம் செய்ய வேண்டும் . இச்சூழ்நிலையில் குர்ஆனைப் படித்து விளங்கியவர்களை முதலில் நல்லடக்கம் செய்தல் வேண்டும். அனஸ் ( ரழி) அவர்கள் அறிவிக்கின்ற நபிமொழி இதற்கு ஆதாரமாக இருக்கின்றது.
"உஹத் போர் முடிந்த போது நபி (ஸல்) அவர்கள், மூக்கறுக்கப்பட்டு உடல் சிதைக்கப்பட்டிருந்த ஹம்ஸா (ரழி) அவர்களின் சடலத்தைக் கண்டார்கள். "இவரின் சகோதரி 'ஸபிய்யா' ஏதாவது எண்ணிக் கொள்வாரோ எனப் பயப்படுகின்றேன். இல்லாவிட்டால் இவரை (ஹம்ஸாவை) அடக்கம் செய்யாது விட்டிருப்பேன். இவரின் உடலை பறவைகளும், விலங்குகளும் தின்று மறுமையில் அவற்றின் வயிற்றிலிருந்தே எழுப்பப்படுவதை விரும்புகிறேன்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
அதன்பின் அவருடைய போர்வையினால் கபனிட்ட போது தலையை மூடினால் கால் வெளியே தெரிந்தது. காலை மூடினால் தலை வெளியே தெரிந்தது. தலையை மூடிவிட்டு கால்களுக்கு இலைகளைப் போட்டு நல்லடக்கம் செல்லப்பட்டார்கள்.

போரில் கொல்லப்பட்ட வீரத்தியாகிகளில் இருவருக்கு மட்டுமே தனித்து நபி (ஸல்) அவர்கள் தொழுகை நடத்தினார்கள் "இன்றுள்ள நிலைக்கு நான் சாட்சியாக இருப்பேன்" எனவும் நபியவர்கள் கூறினார்கள்.
கொல்லப்பட்ட முஸ்லிம்கள் அதிகமாக இருந்ததாலும் அன்று துணியும் குறைவாக இருந்ததாலும், இருந்த துணியைப் பங்கீட்டு கபனிட்டு ஒவ்வொரு மண்ணறையிலும் இரண்டு பேர் மூன்று பேர் என்று நல்லடக்கம் செய்யப்பட்டார்கள்.
அப்போது குர்ஆனைக் கற்றவர்களுக்கு முதலிடம் அளிக்கப்பட்டு முதலாவதாக நல்லடக்கம் செய்யப்பட்டார்கள் (அபூதாவூத், திர்மிதி, அஹ்மத், பைஹகி)

போரில் ஷஹீதானவர்கள் அணிந்திருந்த ஆடைகளைக் களையக்கூடாது. அவ்வாடையுடனேதான் நல்லடக்கம் செய்தல் வேண்டும்."அவர்களின் ஆடையிலேயே முடிவிடுங்கள்" என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். (அஹ்மத், நஸயீ)

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 19

( ஜனாஸாவை தூக்கிச் செல்லல் )

ஜனாஸாவை தொடர்ந்து செல்லுங்கள். அது உங்களுக்கு மறுமையை நினைவூட்டும் என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள் (அஹ்மத் , இப்னுஹிப்பான். தயாலிஸ்)
ஜனாஸாவைத் தொடர்வதில் இரண்டு வகைகள் உண்டு.
ஒன்று: மரணித்தவரின் வீட்டிலிருந்து தொழுவிக்கும் இடம் வரை தொடர்தல்,
இரண்டு: வீட்டிலிருந்து அடக்கம் செய்யும் வரை தொடர்தல். இவ்விரண்டு முறையாகவும் நபியவர்கள் செய்துள்ளார்கள்.

அபூஸயீதுல் குத்ரீ (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: நபியவர்கள் மதீனாவுக்கு வந்த புதிதில் எங்களில் வாருக்காவது மரணவேளை வந்தால் நபியவர்களுக்கு அறிவிப்போம் அவர்கள் மரணிப்பவருக்காகப் பிழை பொறுக்கத் தேடுவார்கள். அவர் மரணித்து விட்டால் அவரை நல்லடக்கம் செய்யும் வரை கூடவே இருப்பார்கள். சில வேளை மரணப் போராட்டம் நீடித்து விட்டால் நெடு நேரமாக அங்கு நபியவர்களைக் காக்க வைப்பது எங்களுக்கு வேதனையைத் தந்து விடும். இனிமேல் ஒருவர் மரணித்த பின்பு தான் நபியவர்களுக்கு அறிவிக்க வேண்டும் என தீர்மானித்து அப்படியே செய்தோம்.
ஒருவர் மரணித்த பின்பே நபியவர்களிடம் கூறுவோம். நபியவர்கள் வந்து மரணித்தவருக்கு தொழுகை நடத்தி விட்டு வீட்டுக்குச் சென்று விடுவார்கள். சிலவேளை அவரை அடக்கம் செய்யும் வரை கூடவே இருப்பார்கள். இதுவும் நபியவர்களுக்குக் கஷ்டம் கொடுப்பதாக எண்ணிய நாங்கள் ஜனாஸாவைத் தூக்கிச் சென்று நபியவர்களின் வீட்டருகில் வைத்து விட்டு நபியவர்களுக்குக் கூறுவோம். நபியவர்கள் தொழுகை நடத்துவார்கள். இதுவே கடைசி வரை பின்பற்றப்பட்ட முறையாகும். (ஹாகிம், அஹ்மத், பைஹகி)
இதில் இரண்டாவது வகை சிறந்தது என்பதில் ஐயமில்லை. ஏனெனில் எவன் ஒரு ஜனாஸாவில் கலந்து கொண்டு நம்பிக்கையுடனும், நன்மை கிடைக்கும் என்ற எண்ணத்துடனும், தொழுகை நடத்தும் வரை கூடவே செல்வானாயின் அவனுக்கு உஹத் மலையளவு நன்மை கிடைக்கும்.
அந்த ஜனாஸாவை நல்லடக்கம் செய்யும் வரைத் தொடர்வானாயின் இரண்டு உஹத் மலையளவு நன்மை கிடைக்கும் என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (புகாரி, முஸ்லிம், அபூதாவூத், திர்மிதி இப்னுமாஜா, அஹ்மத் , பைஹகி)
ஒரு முஸ்லிம் ஜனாஸாவைப் பின்பற்றும் இந்த நன்மை (கூலி) ஆண்களுக்கு மட்டும்தான் பெண்களுக்கில்லை. ஏனெனில் ஜனாஸாவைத் தொடர வேண்டாம் என நபியவர்கள் பெண்களுக்குக் கட்டளையிட்டுள்ளார்கள்.
உம்மு அதிய்யா (ரழி) அவர்கள்,
நாங்கள் ஜனாஸாவைத் தொடர்ந்து செல்லக்கூடாது என்று நபியவர்களால் தடுக்கப்பட்டுள்ளோம். எங்களைப் போகவே கூடாது என நபியவர்கள் வலியுறுத்தினார்கள் என அறிவிக்கிறார்கள். (புகாரி, முஸ்லிம், அபூதாவூத், அஹ்மத்)

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 20

( ஜனாஸாவை தூக்கிச் செல்லல் - பகுதி 2 )

ஜனாஸாவுக்குப் பின்னால் செல்வது தான் சிறந்ததாகும். ஜனாஸாவைப் பின்பற்றுங்கள் என்ற நபிவாக்கியத்தை வைத்து இதனை சிறந்தது எனக் கூறலாம்.
"ஜனாஸாவுக்குப் பின்னால் செல்வது முன்னால் செல்வதைவிடச் சிறந்ததாகும். ஜமா அத்தாகத் தொழுவது தனித்துத் தொழுவதைவிடச் சிறந்ததாகும்" என அலி (ரழி) அவர்கள் கூறியிருப்பதும் இதனைப் பலப்படுத்துகின்றது. (அஹ்மத், பைஹகி, இப்னு அபீசைபா)
ஒரு ஜனாஸாவில் கலந்து கொள்ள நபியவர்கள் வந்த போது அவர்கள் ஏறிச் செல்ல ஒரு வாகனம் கொண்டு வரப்பட்டது, நபியவர்கள் அதில் ஏறிச் செல்ல மறுத்து விட்டார்கள்.
ஜனாஸாவை அடக்கம் செய்து விட்டு திரும்பும்போது ஒரு வாகனம் நபியவர்களிடம் கொண்டு வரப்பட்டது. நபியவர்கள் அதில் ஏறிக் கொண்டார்கள்.
அல்லாஹ்வின் தூதரே! ஜனாஸாவுடன் வரும்போது வாகனத்தில் ஏற மறுத்து விட்டீர்கள். திரும்பும்போது ஏறிக் கொண்டீர்களே ஏன? எனக் கேட்கப்பட்டது "(இந்த ஜனாஸாவுடன்) வானவர்களும் நடந்து வருவதைக் கண்டேன் அவர்கள் நடந்து வரும்போது நான் வாகனத்தில் வர விரும்பவில்லை; அடக்கம் செய்தவுடன் அவர்கள் போய் விட்டார்கள்: நான் வாகனத்தில் ஏறிக் கொண்டேன்" என நபி (ஸல்) அவர்கள் விளக்கம் கொடுத்தார்கள். (அபூதாவூத், பைஹ்கி, ஹாகிம்)
ஜனாஸாவை அடக்கம் செய்து விட்டுத் திரும்பும் போது வாகனத்தில் ஏறிக் கொள்வது ஆகுமானதேயாகும் .
ஜாபிர் இப்னு ஸம்ரா (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:
நாங்கள் சென்றிருந்த வேளையில் (மரணமடைந்த) இப்னு தஹ்தாஹ் அவர்களுக்கு நபியவர்கள் தொழுகை நடத்தினார்கள். பின்னர் அடக்கம் செய்யும் இடம் வரை எங்களோடு நடந்து வந்தார்கள்.

திரும்பும் போது (கடிவாளமில்லாத) சேணமில்லாத ஒரு குதிரை கொண்டு வரப்பட்டு நபியவர்களிடம் நிறுத்தப்பட்டது. (வேகமாக ஓட முடியாதவாறு) அதன் காலை ஒருவர் கட்டிவிட்டார். நபியவர்கள் அதன் மீது ஏறித் திரும்பினார்கள். அது குதித்துக் குதித்து நடந்து சென்றது. நாங்கள் அதன் பின்னால் ஓடிக் கொண்டு வந்தோம். அவ்வேளை "எத்தனையோ (பழக்) குலைகள் இப்னு தஹ்தாவுக்காக சுவர்க்கத்தில் தொங்கிக் கொண்டிருக்கின்றன" என நபியவர்கள் கூறினார்கள். (முஸ்லிம், அபூதாவூத், திர்மிதி, நஸயீ, அஹ்மத், பைஹகி)

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 21

( ஜனாஸா தொழுகை - பகுதி1 )

முஸ்லிம் மையித்தின் மீது தொழுகை நடத்துவது பொதுக் கடமையாகும்.
நபி (ஸல்) அவர்களின் தோழர்களில் ஒருவர் 'கைபர்' போரின்போது மரணமடைந்துவிட்டார். இது நபியவர்களுக்கு அறிவிக்கப்பட்டது, 'உங்கள் தோழரை நீங்களே தொழுவியுங்கள்' என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். நபியவர்கள் தொழுவிப்பார்கள் என்று எதிர்பார்த்த தோழர்களின் முகங்கள் நபியவர்களின் சொற்களினால் வாட்டம் அடைந்துவிட்டன.
இதனைக் கண்ட நபியவர்கள் (இறந்த) உங்கள் தோழர் தலைவரின் அனுமதியின்றி போர்ப் பொருளை மோசடி செய்து விட்டார் என நபியவர்கள் தான் தொழுவிக்க மறுத்ததற்குரிய காரணத்தை விளக்கினார்கள்.
உடனே நாங்கள் இறந்த தோழரின் பொருட்களை சோதனை இட்டோம். அங்கு ஒரு யூதனுக்குச் சொந்தமான (தோலைத் துளை போடும்) கருவி இருந்ததைக் கண்டோம். அதன் மதிப்பு இரண்டு திர்ஹம் கூட இல்லை. (முஅத்தா, அபூதாவூத், நஸயீ, இப்னுமாஜா, அஹ்மதி)
அப்துல்லாஹ் இப்னு ஸுபைர் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:
உஹதுப் போரின்போது கொல்லப்பட்ட ஹம்ஸா (ரழி) அவர்களைக் கொண்டு வரும்படி நபியவர்கள் கட்டளையிட்டார்கள். அவர் சடலத்தை ஒரு போர்வையினால் சுருட்டி எடுத்துக் கொண்டு வந்து நபியவர்கள் முன்னே வைத்தார்கள். நபியவர்கள் ஒன்பது முறை தக்பீர் கட்டித் தொழுவித்தார்கள்.
அதன்பின் ஏனைய ஷுஹதாக்களை எல்லாம் எடுத்து வந்து (வரிசையாக) வைக்கப்பட்டது. அவர்களுக்கு தொழுவிக்கப்பட்டதுடன் இவர்களோடு சேர்த்து ஹம்ஸா (ரழி) அவர்களுக்கும் தொழுவிக்கப்பட்டது. (தஹாவி)
இந்த நபிமொழியில் கூறப்பட்ட ஒன்பது முறை தக்பீர் கட்டினார்கள் என்பது நபி (ஸல்) அவர்கள் தங்கள் சிறிய தந்தை ஹம்ஸா (ரழி) அவர்களுக்கு மட்டும் செய்த சிறப்புப் பிரார்த்தனையாகும். இதன் பின் யாருக்கும் நபியவர்கள் 9 முறை தக்பீர் கட்டவில்லை.
ஏற்படுத்தி உங்களுக்கு முன் வந்த கூட்டத்தினமை சங்கம் புரிந்தார்கள் இதனைக் கூறிய பின் இதுகான தான் நல (ல்) அவர்களைக் கடைசியாக கண்ட நிலை என உவர் இப் ைஆ (ரழி) அவர்கள் அறிவிககிறார்கள்.
குற்றப் பரிகாரத்திற்காக உயிர் துறந்தவர்:
ஆமிர் இப்னு ஹஸன் ( ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்.
ஜுஹைனா கோத்திரத்தைச் சேர்ந்த ஒரு பெண் விபச்சாரத்தின் மூலம் கர்ப்பமடைந்து நபி (ஸல்) அவர்களிடம் வந்து "அல்லாஹ்வின் தூதரே! (விபச்சாரம் செய்ததன் மூலம்) நான் தண்டனைக்குரியவளாகி விட்டேன். எனக்குரிய தண்டனையை நிறைவேற்றுங்கள்" எனக் கூறினாள்.
உடனே அப்பெண்ணின் பொறுப்பாளரை, இவரை வீட்டுக்கழைத்துச் சென்று நல்ல முறையில் கவனித்துக்கொள்ளும்! இவர் குழந்தை பெற்றெடுத்த பின் அழைத்து வாருங்கள் எனக்கூறி. அனுப்பி விட்டார்கள். பிரசவம் பின் அப்பெண் அழைத்து வரப்பட்டார். நபியவர்களின் கட்டளைப்படி, ஆடைகளையெல்லாம் அவர் மீது சுற்றிக் கட்டப்பட்டு நிறுத்தப்பட்டார். அதன்பின் நபிக் தோழர்கள் அவரைக் கல்லால் அடித்துக் கொன்று விட்டார்கள்.
இப்பெண்ணின் பிரேதம் கொண்டு வரப்பட்ட போது நபி (ஸல்) அவர்கள் தொழுகை நடத்தினார்கள், "அல்லாஹ்வின் தூதரே! விபச்சாரிக்குத் தொழுகை நடத்துகிறீர்களா?" என உமர் (ரழி) அவர்கள் கேட்டார்கள். "இப்பெண் தான் செய்த குற்றத்திற்காக பிராயச்சித்தம். (பரிகாரம்) தேடிக்கொண்டாள். இந்தப் பிராயச்சித்தத்தை இம்மதினாவிலுள்ள 70 பேருக்குப் பங்கிட்டாலும் அது விசாலமாகவே இருக்கும். தன்னுயிரைத் தண்டனைக்காக தந்ததை விட அதி உன்னத பாவமீட்சி வேறு உண்டா?" என நபி (ஸல்) அவர்கள் கேட்டார்கள். (முஸ்லிம், அபூதாவூத் , நஸயீ, திர்மிதி, இப்னுமாஜா, தாரமி, பைஹகி)

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 22

( ஜனாஸா தொழுகை - பகுதி 2 )

கடனாளி கடன்பட்ட பின் அதனைத் திருப்பிக் 'கொடாமலும் திருப்பிக் கொடுக்கக்கூடிய பொருட்களை வீட்டுச் செல்லாமலும் இறந்த முஸ்லிமுக்கு தொழுகை நடத்தலாம்.
'சலமதிப்னுல் அக்வல் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:
"நாங்கள் நபி (ஸல்) அவர்களுடன் இருந்தபோது ஒரு ஜனாஸா கொண்டுவரப்பட்டது. கொண்டு வந்தவர்கள் நபியவர்களை தொழுவிக்கும்படி கூறினார்கள்.
இவருக்கு ஏதேனும் கடனுண்டா என நபியவர்கள் கேட்டார்கள்.

'இல்லை' எனக் கூறப்பட்டது.
'ஏதாவது விட்டுச் சென்றுள்ளாரா?' என நபியவர்கள் மீண்டும் கேட்டார்கள்.
'இல்லை' எனக் கூறப்பட்டது. நபியவர்கள் இந்த ஜனாஸாவுக்கு தொழுகை நடத்தினார்கள்.
அதன்பின் இன்னுமொரு ஜனாஸா கொண்டு வரப்பட்டது. நபியவர்களைத் தொழுகை நடத்தும்படி வேண்டினார்கள்.
நபியவர்கள், 'இவருக்கு கடன் ஏதும் உண்டா?' எனக் கேட்டார்கள்.
'ஆம்' எனக் கூறப்பட்டது.
'ஏதேனும் விட்டுச் சென்றுள்ளாரா?' என நபியவர்கள் மீண்டும் கேட்டார்கள்.
"மூன்று தினார்களை விட்டுச் சென்றுள்ளார்' எனப் பதிலளிக்கப்பட்டதும் நபியவர்கள் அந்த மையித்திற்குத் தொழுகை நடத்தினார்கள்.
அதன்பின் மூன்றாவதாகவும் ஒரு ஜனாஸா கொண்டு வரப்பட்டது. நபியவர்களைத் தொழுகை நடத்தும்படி வேண்டினார்கள்.
நபியவர்கள், 'இவர் ஏதேனும் விட்டுச் சென்றுள்ளாரா?"
எனக்கேட்டார்கள். 'இல்லை' என பதிலளித்தார்கள்.
"இவருக்கு கடன் ஏதும் உண்டா? என நபி அவர்கள் கேட்டார்கள்.
ஆம்; மூன்று தினார்கள் கடன் உண்டு என பதிலளித்தார்கள்.
உங்கள் தோழருக்கு நீங்களே தொழுகை நடத்துங்கள் (நான் கடனாளிக்குத் தொழுகை நடத்தமாட்டேன்) என நபியவர்கள் கூறினார்கள்.
உடனே (அங்கிருந்த அபூகத்தாதா (ரழி) அவர்கள் "அல்லாஹ்வின் தூதரே, நான் அக்கடனுக்குப் பொறுப்பேற்கிறேன். இவருக்குத் தொழுகை நடத்துங்கள்" எனக் கேட்டுக் கொண்டார்.
நபியவர்கள் அந்த மையித்திற்கு தொழுகை நடத்தினார்கள் (புகாரி, அஹ்மத், நஸயீ

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 23

( ஜனாஸா தொழுகை - பகுதி 3 )

ஒரு முஸ்லிம், அவரைத் தொழுவிப்பதற்கு யாரும் 'இல்லாத ஊரில் இறந்து விட்டால் அவருக்காக ஏனைய முஸ்லிம்கள் காயிப் (மறைவ ஜனாஸா தொழுகை)யை நடத்தலாம்.
அபிசீனியாவில் மரணித்த அந்நாட்டு மன்னர் நஜ்ஜாஷி அவர்களுக்கு இவ்வாறு நபியவர்கள் தொழுகை நடத்தினார்கள்.
அபூஹுரைரா (ரழி) அவர்கள் கூறுகிறார்கள்:
நபி (ஸல்) அவர்கள், மதீனாவில் இருந்த போது அபிசீனிய மன்னர் நஜ்ஜாஷியின் மரணச் செய்தியைக் கூறினார்கள்.
"உங்கள் சகோதரர் ஒருவர் இன்று மரணித்து விட்டார். அவர் உங்கள் (முஸ்லிம்கள்) மத்தியில் இல்லை'' எனக் கூறியதும்,
"அவர் யார்?" எனத் தோழர்கள் கேட்டனர்.
"நஜ்ஜாஷி" எனப் பதிலளித்த நபியவர்கள்
"உங்கள் சகோதரனுக்குப் பிழை பொறுக்கத் தேடுங்கள்" எனக் கூறினார்கள்.
பின்பு தோழர்களுடன் தொழுமிடம் (இன்னொரு அறிவிப்பில் பகீஃ கப்ருஸ்தானம்) சென்று இமாமத் செய்தார்கள்.
தோழர்கள் இரண்டு வரிசையில் நின்றார்கள். ஜனாஸா எங்களுக்கு முன்னிலையில் இருப்பதைப் போன்ற உணர்வுடன் நாங்கள் தொழுதோம், நபியவர்கள் 4 முறை நக்பீர் கட்டித் தொழுவித்தார்கள்.
தொழுகை முடிந்ததும் அல்லாஹ்வின் தூதரே! ஒரு அபிசீனிய அடிமைக்கா தொழுகை நடத்தினீர்கள்? எனக் கேள்வி எழுப்பப்பட்டது.
இவ்வேளை அல்லாஹ் பின்வரும் வசனத்தை வஹீ அறிவித்துக் கொடுத்தான்.
" மேலும் நிச்சயமாக வேதமுடையோரில் சிலர் இருக்கிறார்கள்; அவர்கள் அல்லாஹ்வின் மீதும் உங்களுக்கு அருளப்பட்ட (வேதத்)திலும், அவர்களுக்கு அருளப்பட்ட (மற்ற)வற்றிலும் நம்பிக்கை வைக்கிறார்கள்; அல்லாஹ்வுக்கு அஞ்சுகிறார்கள்; அவர்கள் அல்லாஹ்வின் வசனங்களை அற்ப விலைக்கு விற்கமாட்டார்கள்; இத்தகையோருக்கு நற்கூலி அவர்களுடைய இறைவனிடம் இருக்கிறது; நிச்சயமாக அல்லாஹ் கணக்கு வாங்குவதில் மிகவும் தீவிரமானவன். (அல் குர்ஆன்: 3:199 )
குர்ஆன் வசனம் தவிர்த்த ஏனைய செய்திகளுக்கு புகாரி, முஸ்லிம். அபூதாவூத், நஸயீ, இப்னுமாஜா, பைஹகி, தயாலிஸ், அஹ்மத் ஆகிய ஏடுகளில் ஆதாரம் உள்ளது.

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 24

( ஜனாஸா தொழுகை - பகுதி 4 )

ஜனாஸா தொழுகை நடத்துவதற்கு சொந்தக் காரனை விட தலைவன் அல்லது அவரின் பிரதிநிதிதான் உரிமையுடையவராவர்.
அபூஹாஸிம் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:
"நான் அலீ (ரழி) அவர்களின் மகன் ஹஸன் (ரழி) அவர்களின் ஜனாஸா தொழுகையில் கலந்து கொண்டேன். அப்போது ஹுஸைன் (ரழி) அவர்கள் மதீனாவில் பிரதிநிதியாக இருந்த ஸயீத் இப்னுல் ஆஸ் (ரழி) அவர்களைத் தொழுகை நடத்துமாறு அவரின் பிடரியைப் பிடித்துத் தள்ளினார்கள். (அவர்களிருவருக்கு மிடையில் பிணக்கு இருந்தும்) இதுதான் சுன்னத் என்பதை வலியுறுத்தினார்கள்.
(ஹாகிம், பைஹகீ )
தலைவர் அல்லது அவர் பிரதிநிதி வந்திருக்க வில்லையானால் அங்கு வந்திருப்பவர்களில் குர்ஆனை அதிகம் விளங்கியவர் இமாமத் செய்யலாம். அவருமில்லையாயின் பின்வரும் நபிமொழியில் உள்ளவாறு தகுதியானவர் தொழுகை நடத்த வேண்டும்.
அபூ மஸ்ஊதில் பத்ரி (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:
தொழுகைக்கு இமாமத் செய்பவர் குர்ஆனை ஓத நன்கு அறிந்தவராயிருக்க வேண்டும். அங்கு குழுமியிருப்பவர்கள். அனைவரும் சரிசமமாக ஓதக்கூட்டியவர்களாக இருந்தால், அவர்களில் (சுன்னத்தை) நபி மொழியை நன்கு அறிந்தவர் செய்யலாம்.
சுன்னாவை அறிந்தவர்களும் சரிசமமாக இருந்தால் அவர்களில் முதலில் 'ஹிஜ்ரத்' சென்றவர் செய்யலாம். ஹிஜரத் சரிசமமாக இருந்தால் வயதில் (முதிர்ந்தவர்) முதியவர் செய்யலாம். எவரும் ஒருவருடைய அதிகார எல்லையில் தொழ வைக்க வேண்டாம். மேலும் அவர் அனுமதியின்றி அவர் அமரும் இடத்தில் அமர வேண்டாம். என நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்.
(முஸ்லிம், அபூதாவூத், திர்மிதி, நஸயீ)

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 25

( ஜனாஸா தொழுகை - பகுதி 5 )

ஆண் ஜனாஸாவுக்குத் தலைப்பக்கமும் பெண் ஜனாஸாவுக்கு நடுப்பகுதிக்கு நேராகவும் நின்றுதான் இமாம் தொழுகை நடத்த வேண்டும்.
அபூஹாலிப் கையாத் அவர்கள் அறிவிக்கிறார்கள்:
நான் அனஸ் (ரழி) அவர்கள் ஒரு ஆண் மையித்தைத் தொழுவிக்கும் போது மையித்தின் தலைப்பக்கம் நின்று தொழுவிப்பதைக் கண்டேன்.
சற்று நேரத்திற்குப் பின் அன்சாரிகளில் உள்ள ஒரு பெண்ணின் ஜனாஸா வந்தது. அதனையும் தொழுவிக்கும்படி வேண்டினார்கள். அனஸ் (ரழி) அவர்கள் அப்பெண் மையித்தின் நடுப்பகுதிக்கு (மற்றொரு அறிவிப்பின்படி இடுப்புக்கு) நேராக நின்று தொழுகை நடத்தினார்கள்.
பின்னால் எங்களுடன் நின்று தொழுத அலாஉ இப்னு ஸியாத் (ரழி) அவர்களும் இருந்தார்கள். ஆணுக்கொரு இடத்திலும் பெண்ணுக்கொரு இடத்திலும் நின்று தொழுவித்ததைக் கண்ட அலாஉ அவர்கள் அபூஹம்ஸாவே (அனஸே) இப்படித்தானா நபி (ஸல்) அவர்கள் நின்று தொழுவித்தார்கள்? எனக் கேட்டார்.
ஆம் என அனஸ் (ரழி) அவர்கள் விடையளித்தார்கள். அலாஉ அவர்கள் எங்களைப் பார்த்து இதனை நிளைவிலிருத்திக் கொள்ளுங்கள் எனக் கூறினார்.
(அபூதாவூத், திர்மிதி. இப்னுமாஜா, பைஹகி, அஹ்மதி

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 26

( ஜனாஸா தொழுகை தொழும் முறை )

ஜனாஸா தொழுகையில் சூராக்களும், பிரார்த்தனைகளும் மௌனமாக ஓத வேண்டும்..
அபூஉமாமா இப்னு ஸஹ்ல் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:
ஜனாஸா தொழுகையில் முதலாவது தக்பீருக்குப்பின் பாத்திஹா சூராவை மௌனமாக ஓதுவதுதான் நபி வழி (சுன்னத்) ஆகும்.
பின்னர் இரண்டாம் தக்பீர் கட்டியபின் நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத் கூற வேண்டும்.
அபூஉமாமா இப்னு ஸஹ்லி அவர்கள் அறிவிக்கிறார்கள்: "ஜனாஸா தொழுகையின் நபிவழி என்னவென்றால் இமாம் முதலாவது தக்பீர் கட்டியபின் மெதுவாக பாத்திஹா குராவை ஓத வேண்டும். பின்பு (இரண்டாம் தக்பீருக்குப் பின்) நபி (ஸல்) அவர்கள் மீது ஸலவாத்துக் கூற வேண்டும். பின்னர் (மூன்றாம் தக்பீருக்குப் பின்)

மையித்திற்காகத் தூய்மையுடன் பிரார்த்தனை செய்தல் வேண்டும். இவ்விரண்டிலும் (குர்ஆன் வசனங்கள்) எதுவும் ஓதக்கூடாது.
அதன்பின் (நான்காம் தக்பீருக்குப்பின்) மௌனமாக ஸலாம் கூறி முடிக்க வேண்டும். மஃமூம்களும் இவ்வாறே இமாமைப் பின்பற்றுவது சுன்னத்தாகும்.
இரண்டாம் தக்பீருக்குப் பின் கூறும் ஸலவாத்தின் வசனங்கள் பற்றி எந்த நபிமொழியையும் காணமுடியவில்லை. ஜனாஸா தொழுகையில் குறிப்பிட்ட ஸலவாத்து இதுதான் எனக் கூறுவதற்கில்லை; எனினும் அத்தஹிய்யாத்தில் கூறப்படும் "ஸலவாத்துல் இப்ராஹீமிய்யா"வை ஓதுவது சிறந்ததாகும்.
அடுத்துள்ள (மூன்றாவது) தக்பீர் மையித்திற்காக தூய உள்ளத்துடன் பிரார்த்தனை செய்தல் வேண்டும்.
மூன்றாம் தக்பீருக்குப் பின் ஜனாஸாவுக்காக ஓதும் பிரார்த்தனைகள் பற்றி ஸஹீஹான நபிமொழிகள் பல இருக்கின்றன. அவற்றில் ஒன்றை மட்டும் இங்கு தரப்படுகிறது இதைக் கூறி பிரார்த்திக்கலாம்.
"அல்லாஹும்மஃபிர்லஹு, வர்ஹம்ஹு, வஆஃபிஹி, வஃபுஅன்ஃஹு வஅகரிம் நுஸ்லஹு வவஸ்ஸில் மத்கலஹு, வஹ்சிலீஹு பில்மாஇ, வ்ததலஜி வல்பர்தி. வநக்கிஹி மின்ஹதாயாஹு கமா நக்கைத்த (யுனக்கா)த் தௌபுல் அப்யழு மினத்தனஸி, வஅபதில்ஹு தாரன் ஹைரன் மின்தாரிஹி, வஅஹலன் கைரன்மின் அஹ்லிஹி , வஸவ்ஜன ஹைரன் மின் ஸவ்ஜிஹி, வஅத்ஹில்ஹுல் ஜன்னத, வஅஇத்ஹு மின் அதாபிகல்கப்ரி வயின் அதாபின்னார்".
(முஸ்லிம், நஸயீ , இப்னுமாஜா, அஹ்மத், பைஹகி)

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 27

( நல்லடக்கம் செய்தல் )

மையித்தை அடக்கம் செய்வது (அது நிராகரிப்பவன் பிரேதமாக இருந்தாலும் சரியே ) கடமையாகும் .இதற்கு ஆதாரமாக இரண்டு நபிமொழிகள் உள்ளன.
1) அபூதல்ஹா ரலி அவர்கள் அறிவிக்கிறார்கள். பத்ருப் போர் முடிந்தபின் கொல்லப்பட்ட இருபத்திநான்கு குறைஷித் தலைவர்களின் சடலங்களையும் இழுத்து வந்து 'துவா ' என்னும் (பாழடைந்த) கிணற்றினுள் போடும்படி நபி( ஸல்) அவர்கள் கட்டளையிட்டார்கள் அவ்வாறு செய்யப்பட்டது.
எனினும் 'உமைய்யா'வின் சடலம் அவர் அணிந்திருந்த இரும்புக் கவசச் சட்டையினுள் ஊதிப் பெருத்திருந்தது. அச்சட்டையைக் கழற்று முயன்றும் முடியாது போகவே தூக்கி உதறினார்கள். அப்போது அவர் சடலத்தின் பகுதிகள் துண்டு துண்டாகக் கழன்று விழத் தொடங்கின. இதைக் கண்ட நபித்தோழர்கள் அச்சட்டையுடனேயே போட்டு மண்ணினாலும், கல்லினாலும் சடலத்தை மூடிவிட்டனர்.
(இவர்தான் பிலால் (ரழி) அவர்களைச் சுடு மணலில் படுக்க வைத்து நெஞ்சிலே பெரிய கல்லை. வைத்து இஸ்லாத்தை விட்டுவிடும்படி கட்டளையிட்டுத் துன்புறுத்தியவராவார்) (புகாரி, முஸ்லிம், அஹ்மத்)
2) அலீ (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்: எனது தந்தை அபூதாலிப் அவர்கள் இறந்தவுடன் நான் நபியவர்களிடம் வந்து வழிகேட்டிலிருந்த உங்கள் பெரியப்பா இறந்துவிட்டார். அவரை அடக்கம் செய்வது யார்? எனக்கேட்டேன்.
"நீங்களே சென்று அடக்கம் செய்யுங்கள். அதன்பின் எதுவும் செய்யாது என்னிடம் வாருங்கள்!" என நபி அவர்கள் கூறினார்கள்.
இஸ்லாத்தில் இணையாமல் முஷ்ரிக்காக இறந்தவரை நான் புதைக்க வேண்டுமா? எனக்கேட்டேன்.
"சென்று அடக்கம் செய்து விட்டு வாரும்!" என நபியவர்கள். பணித்தார்கள்.
நான் சென்று அடக்கம் செய்துவிட்டு நபியவர்களிடம் வந்தேன், "சென்று குளித்துவிட்டு வாரும்!" என்று நபியவர்கள் கட்டளையிட்டார்கள்.
குளித்துவிட்டு நபியவர்களிடம் வந்தேன். எனக்காக நபியவர்கள் பிரார்த்தனை செய்தார்கள். இந்தப் பிரார்த்தனை எனக்கு கால்நடைச் செல்வங்கள் அதிகமாக இருப்பதைவிட மகிழ்ச்சியை கொடுத்தது. இதன் பின்னர் அலி (ரழி) அவர்கள் மையத்தை குளிப்பாட்டினால் தாமும் குளிப்பவர்கள் ஆகவே இருந்தார்கள்.
(அஹ்மத் , நஸயீ )

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 28

( கபர்- அருகுக் குழியும் , ஆழக்குழியும் )
கபர் தோண்டுவதில் அருகுக்குழி, ஆழக்குழி தோண்டுவது என இரு வகை உண்டு. நபி (ஸல்) அவர்கள் காலம் முதல் நடைபெறும் செயலாகவே இவை இருக்கின்றன. எனினும் அருகுக்குழி தோண்டிக்கொள்வதே சிறப்பாகும்.
அருகுக்குழி என்பது கற்பூமியில் கப்ரு தோண்டிய பின் அதன் ஒரு பக்கச் சுவரில் மையித்தை வைக்கக் கூடியதாக ஒரு குழி அமைப்பதாகும். கடினமான பூமிகளில்தான் இது சாத்தியமாகும்.
ஆழக்குழி என்பது கப்ரு தோண்டிய பின் அதன் அடிப்பாகத்தில் மையித்தை வைக்குமளவுக்கு ஒரு குழி அமைப்பதாகும். இது மணற்பாங்கான பூமியில் செய்து கொள்வது இலகுவாகும். மணற்பாங்கான கப்ருகளில் அருகுக்குழி அமைக்க முடியாது

கப்ரை ஆழமாகவும், அழகாகவும், விசாலமாகவும் தோண்டுவது அவசியமாகும். இதற்கு ஆதாரமாக இரண்டு நபிமொழிகளைக் காணலாம்.
ஹிஷாம் இப்னு ஆமீர் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள் :
உஹதுச் சண்டையின் போது முஸ்லிம்களில் ஷஹீதானவர்களும் காயமடைந்தவர்களும் இருந்தார்கள். அப்போது நாங்கள் "இறைத்தூதர் அவர்களே! ஒவ்வொருவருக்கும் தனித்தனியே கப்ரு தோண்டுவது கஷ்டமாக இருக்கிறது. உங்கள் கட்டளை என்ன?" என்று கேட்டோம்.
குழியை ஆழமாகவும், அழகாகவும் விசாலமாகவும் தோண்டுங்கள். ஒரு கப்ரில் இரண்டு பேர் மூன்று பேராக அடக்கம் செய்யுங்கள்.
குர்ஆனைக் கற்றவர்களை முதலில் அடக்கம் செய்யுங்கள்! என நபி (ஸல்) அவர்கள் உத்தரவிட்டார்கள்.
இந்த நபிமொழியை அறிவிப்பவர் :
"எனது தந்தை மூன்று பேருடன் முதலில் அடக்கம் செய்யப்பட்டார்கள். ஏனெனில் அவர் அதிகம் குர்ஆனைக் கற்றிருந்தார்" என அறிவிக்கின்றார். (அபூதாவூத், திர்மிதி, நஸயீ, இப்னுமாஜா, அஹ்மத், பைஹகி)
அன்ஸாரித் தோழர் ஒருவர் அறிவிக்கிறார்:
"ஒரு அன்ஸாரித் தோழரின் ஜனாஸா நல்லடக்கத்தில் இறைத்தாதருடன் நானும் சென்றேன். அப்போது நான் சிறுவனாக இருந்தேன், என் தந்தையுடன் சென்றேன். நபி (ஸல்) அவர்கள் கப்ரின் ஓரத்தில் இருந்து கொண்டார்கள். கப்ரு தோண்டுபவரை நோக்கி "தலைப்பக்கம் விசாலமாக்கு! கால்பக்கம் விசாலமாக்கு! எத்தனையோ இன்பங்கள் அவருக்குச் சுவர்க்கத்தில் இருக்கின்றன" என்று கூறிக் கொண்டிருந்தார்கள். (அபூதாவூத், அஹ்மத், பைஹகி)
அருகுக்குழி தோண்டுவதற்கு ஆதாரமாக இரண்டு நபிமொழிகளைக் காணலாம்.
அனஸ் இப்னு மாலிக் (ரழி) அவர்கள் கூறுகிறார்கள்:
"நபி (ஸல்) அவர்கள் மரணமடைந்தபோது மதீனாவில் அருகுக்குழி தோண்டுபவர் ஒருவரும், ஆழக்குழி தோண்டுபவர் ஒருவரும் இருந்தார்கள். நபியவர்களுக்கு எந்தக் குழியை அமைப்பது என்று தோழர்கள் விவாதித்தபோது, செய்தியனுப்புவோம். யாரை முதலில் அல்லாஹ் அனுப்பி வைக்கிறானோ அவரைக் கொண்டே குழி அமைப்போம் எனத் தீர்மானித்து இருவருக்கும் செய்தி அனுப்பினார்கள்.
அருகுக்குழி தோண்டுபவரே முதலில் வந்தார். எனவே கப்ரில் அருகுக்குழி அமைத்து நபி (ஸல்) அவர்களை நல்லடக்கம் செய்தார்கள். (இப்னுமாஜா, அஹ்மத். தஹாவீ )
இப்னு அப்பாஸ் (ரழி) அவர்கள் அறிவிக்கிறார்கள்:
"அருகுக்குழி எங்களுக்குரியது. ஆழக்குழி மற்றவர்களுக்குரியது" என நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள். (அபூதாவூத், திர்மிதி, நஸயீ, இப்னுமாஜா)

## மரணத்திலிருந்து மண்ணறை வரை 29

தல்கீன் ஓதுதல் பற்றி ஓர் ஆய்வு
சங்கைக்குரிய ஷெய்குனா மௌலவீ
அல்ஹாஜ் A.அப்துர்றஊப் (மிஸ்பாஹீ) அவர்கள்
திரை நீக்கம்

“தல்கீன்” ஓதுவது கூடாதென்போர் மரணித்தவர்கள் மண்ணுடன் மண்ணாகி விட்டபடியால் உயிருள்ளவர்களின் அழைப்பை அவர்கள் கேட்கமாட்டார்கள் என்போரும் தமது வாதத்துக்கு பின்வரும் திருக்குர்ஆன் வசனங்களை ஆதாராமாக முன்வைக்கின்றார்கள்.
ومآأنت بمسمع من فى القبور
நீங்கள் கப்றுகளில் இருப்பவர்களுக்கு கேட்கச் செய்பவர்கள் அல்லர். (குர்ஆன் – 35 – 22)
إنك لاتسمع الموتى ولاتسمع الصم الدعاء اذاولوا مدبرين
நீங்கள் மரணித்தவர்களுக்கு கேட்கச் செய்யமாட்டீர்கள் (மரணித்தவர்களுக்குக் கேட்கச் செய்ய உங்களால் முடியாது. இன்னும் செவிடர்கள் பின் காட்டிச் சென்றார்களாயின் அவர்களுக்கும் உங்கள் அழைப்பைக் கேட்கச் செய்ய மாட்டீர்கள் (அவர்களுக்கும் உங்களால் கேட்கச் செய்யமுடியாது) (குர்ஆன் – 27– 80)
மேற்கண்ட திருவசனங்கள் இரண்டையும் மேலோட்டமாகப் பார்த்தால்உயிருள்ளவர்களின் அழைப்பை மரணித்தவர்கள் கேட்கமாட்டார்கள் என்றும், அவர்களின் பேச்சை விளங்கிக் கொள்ள மாட்டார்கள் என்றும் விளங்கவரும். அறிஞர்கள் என்று பிரசித்தி பெற்றவர்களிற் சிலர் இவ்வாறே விளங்கியுமிருந்தார்கள்.
“தல்கீன்” ஓதக் கூடாதென்றும் உயிருள்ளவர்களின் அழைப்பை மரணித்தவர்கள் கேட்கமாட்டார்கள் என்றும் கொக்கரிக்கும் கொள்கைக் குருடர்கள் மேற்கண்ட திருவசனங்கள் இரண்டையுமே தமது வாதத்துக்கு இரும்புத் துருப்பாகக் கொண்டுள்ளார்கள். இவ்விரு வசனங்களையும் வைத்துக் கொண்டே ஒற்றைக் காலில் நின்று கூச்சலிடுகின்றார்கள்.
இந்தக் கொள்கைக் குருடர்கள் மேற்கண்ட இரு வசனங்களையும் இலக்கண,இலக்கிய அடிப்படையில் ஆய்வு செய்யும் முன் ஒன்றைப் புரிந்து கொள்ள வேண்டும். அதாவது நபி ஸல் அவர்கள்اعلم العالمينஉலகமக்களில் மிக அறிஞர் என்பதையும் علمت علم الاوّلين والآخرين.முன்னோர பின்னோர் (கொள்கைக் குருடர்கள் உட்பட) யாவரின் அறிவையும் அறிந்தவர்கள் என்பதையும், மேற்கண்ட திருவசனங்களின் தார்பரியத்தையும் விளக்கத்தையும் அனைவரை விடவும் அதிகம் அறிந்தவர்கள் என்பதையும் புரிந்து கொள்ளுதல் வேண்டும்.

உயிருள்ளவர்களின் அழைப்பையும், பேச்சையும் மரணித்தவர்கள் கேட்கின்றார்கள் என்ற பலம் வாய்ந்த நபி மொழிக்கு “சியாறத்” தொடர்பாக வந்துள்ள நபி மொழிகளுக்கும் மேற்கண்ட (35-22),(27-80) ஆகிய திருவசனங்கள் முரணாகமாட்டாது.
மேற்கண்ட திருவசனங்களில் முதலாவது வசனத்தில்مسمع – முஸ்மிஉன் என்ற சொல்லும், இரண்டாவது வசனத்தில் تسمع – ” துஸ்மிஉ” என்ற சொல்லும் வந்துள்ளன. இவ்விரு சொற்களும் ஒரே சொல்லின் வேறு இரு தோற்றங்களாகும். இவ்விரு சொற்களும் اسمع–“அஸ்மஅ”என்ற சொல்லடியிலுள்ளவையாகும்.
“அஸ்மஅ“என்ற சொல்லுக்கு கேட்கச் செய்தான் என்று பொருள் வரும். “ஸமிஅ“என்ற சொல்லுக்கு கேட்டான் என்று பொருள் வரும். அறபு மொழிச் சொல்லிலக்கணத்தில் “அஸ்மஅ“ என்ற சொல் “முதஅத்தீ“என்றும் “ஸமிஅ“ என்ற சொல் “லாசிம்“ என்றும் சொல்லப்படும்.
“அஸ்மஅ“ என்ற சொல்லுக்கு ஒருவன் தனது அழைப்பை அல்லது பேச்சை பிறருக்குக் கேட்கச் செய்தான் என்று பொருள் கொள்ள வேண்டும். இப்பொருள் தவிர இச்சொல்லுக்கு வேறு பொருள் கிடையாது.
இதன் முந்தின வசனத்துக்கு கப்றுகளில் உள்ளவர்களுக்கு நீங்கள் கேட்கச் செய்பவர்கள் அல்லர் என்று பொருளும், இரண்டாம் வசனத்துக்கு நீங்கள் மரணித்தவர்களுக்கு கேட்கச் செய்யமாட்டீர்கள் இன்னும் செவிடர்கள் பின்காட்டிச் சென்றார்களாயின் அவர்களுக்கு அழைப்பை கேட்கச் செய்யவுமாட்டீர்கள் என்ற பொருளும் வரும்.
“அல்இஸ்மாஉ“ கேட்கச் செய்தல் என்பது அல்லாஹ் தவிர வேறு எவருக்கும் முடிந்த காரியமில்லை. ஒருவனின் அழைப்பை அல்லது பேச்சை இன்னொருவனுக்குக் கேட்கச் செய்தல் என்பது அல்லாஹ்வுக்கு மட்டுமே முடிந்த காரியம்.
மரணித்தவர்களுக்கு மட்டுமன்றி உயிரள்ளவர்களுக்குக் கூட ஓர் அழைப்பை அல்லது பேச்சைக் கேட்கச் செய்தல் என்பது அல்லாஹ்வால் மட்டும் முடிந்ததேயன்றி வேறு எவராலும் முடிந்ததல்ல.
மேற்கன்ட இரண்டு வசனங்கள் மூலமும் அல்லாஹ் வலியுறுத்தும் கருத்து என்னவெனில், உயிருள்ளவனால் தனது அழைப்பையும்,பேச்சையும் மரணித்தவனுக்குக் கேட்கச் செய்ய முடியாதென்பது மட்டுமேயாகும். ஏனெனில் கேட்கச் செய்தல், எட்டிவைத்தல் என்பன அல்லாஹ்வால் மாத்திரம் முடிந்தவையாகும் இது தவிர மரணித்தவனை அழைக்கக் கூடாதென்பதோ, அவர்களுக்கு அழைப்புக் கேட்காதென்பதோ அல்ல. மேற்கண்ட இரு வசனங்களிளும் இப்படியொரு கருத்தின் வாடை கூட இல்லை.
மேற்கன்ட திருவசனம் ஒரு வைத்தியனிடம் உன்னால் இந்நோயைச் சுகப்படுத்தி வைக்க முடியாதென்று சொல்வது போன்றாகும்.ஒரு வைத்தியனால் மருந்து மட்டும்தான் கொடுக்க முடியுமேயன்றி அவனால் சுகமாக்கி வைக்க முடியாது. சுகமாக்கி வைத்தல் அல்லாஹ்வால் மட்டும் முடிந்ததாகும். ஒரு வைத்தியனிடம் உன்னால் இந்நோயைச் சுகப்படுத்த முடியாதென்று சொல்வதால் வைத்தியனிடம் மருந்து கேட்கக் கூடாது என்று கருத்து வந்து விடாது.
இவ்வாறு தான் மேற்கண்ட திருவசனங்களின் கருத்துமாகும்.
கப்றுகளில் உள்ளவர்களுக்கு உங்களால் கேட்கச் செய்ய முடியாதென்பதாலும், மரணித்தவர்களுக்கு உங்களால் கேட்கச் செய்ய முடியாதென்பதாலும் செவிடர்கள் பின்காட்டி சென்றார்களாயின் அவர்களுக்கு அழைப்பை உங்களால் கேட்கச் செய்யமுடியாதென்பதாலும்அவர்களை அழைக்கூடாதென்ற கருத்தோ,அவர்களுடன் பேசக்கூடாதென்ற கருத்தோ அவர்கள் கேட்க மாட்டார்கள் என்ற கருத்தோ வந்து விடாது.
உண்மை இவ்வாறிருக்க உயிருள்ளவர்களின் அழைப்பை மரணித்தவர்களால் கேடகமுடியாதென்றும் அவர்களுடன் பேச முடியாதென்றும் திருக்குர்ஆன் வசனங்களைப் பிழையாக விளங்கிக் கொண்டு தாம் சொல்வதே தூய இஸ்லாம் என்றும் இதுவே திருக்குர்ஆனினதும், ஸுன்னஹ்வினதும், வழி என்றும் சொல்வோர் சற்றுத் தெளிவு பெற வேண்டும்.
இன்னுமொரு விடயம் இங்கு மிக நுட்பமாக ஆராயப்பட வேண்டிய ஒன்றாகும். அதாவது மேற்கண்ட இரண்டு திரு வசனங்களிலும் முந்தின வசனத்தில் வந்துள்ள من فالقبور கப்றுகளில் இருப்பவர்கள் என்பதும், இரண்டாவது வசனத்தில் வந்துள்ள الموتىமரணித்தவர்கள் என்பதும் எதார்த்தத்தில் மரணித்தவர்களையோ, குழியிலிடப்பட்டவர்களையோ குறிக்கவில்லை. இவ்வுண்மை புரியாதோர்தான் மயக்கத்தில் மாட்டி மதியிழந்து உளறுகின்றார்கள்.
“மன்பில் குபுர்“ கப்றுகளில் இருப்பவர்கள் என்றும், “அல்மௌதா“மரணித்தவர்கள் என்றும் சுட்டப்பட்டிருப்பது “கல்பு“என்ற மனக்கண் குருடானவர்களேயன்றி எதார்த்தத்தில் மரணித்தவர்களல்லர். ஆயினும் அல்லாஹ் இப்படியொரு பாணியைக் கையாண்டிருப்பதில் ஏதோ இரகசியம் இருக்காமற் போகாது.
சுருங்கக் கூறின் – மனக்கண் குருடானவர்கள் எதார்த்தத்தில் மரணிக்காதவர்களாயினும், மரணித்தவர்களுக்கு அவர்களை ஒப்பிட்டுப் பேசியிருப்பது அவர்கள் உயிரற்ற வெறும் சடலங்கள் என்பதை உணர்த்துவதற்காகவும் மனக்கண் தெளிவானவன் மட்டுமே உயிருள்ளவன் என்பதை உணர்த்துவதற்காகவுமேயாகும். இது ஒருவனைச் சுட்டி இவன் மாடு போல் நல்ல மனிதன்என்றும், நாய் போல் நன்றியுள்ளவன் என்றும் சொல்வது போன்றது. மனக்கண் குருடானோரை செத்துப் போனவர்கள் எனக் கூறி அவர்களை இழிவு படுத்தி நையப்புடைத்திருக்கும் பாணி விந்தை மிகுந்தது.இதுவே திரு வசனங்கிளில் உள்ள நுட்பம். இதைச் சரியாக விளங்கிக் கொண்டால் மரணித்தவர்கள் உயிரோடுள்ளவர்களின் அழைப்பை கேட்கின்றார்களா? இல்லையா? அவர்களின் பேச்சை விளங்கிக் கொள்கின்றார்களா இல்லையா? என்ற கேள்விக்கே இடமில்லாமல் போய்விடும். இப்படியொரு சர்ச்சையும் இல்லாமல் போய்விடும்.
அடுத்து, அறபு மொழியில் ஓதப்படும் “தல்கீன்.”அந்த மொழி தெரியாதவனுக்குப் புரியுமா?

மரணித்தவன் எந்த மொழி பேசுபவனாயினும் அறபு மொழியில் மட்டும் தல்கீன் ஓதினால் போதும் இதுவே நடைமுறையுமாகும். அவனுக்குத் தெரிந்த மொழியில் மொழி பெயர்க்க வேண்டுமென்பதோ, அங்கு கூடுகின்றவர்கள் புரிந்து கொள்ள வேண்டுமென்பதற்காக அவர்களுக்கு தெரிந்த மொழியில் மொழி பெயர்க்க வேண்டுமென்பதோ அவசியமில்லை.
தல்கீன் ஓதுவதன் நோக்கம் அதில் கூறப்படுகின்ற விடயங்களை மரணித்தவனுக்குச் சொல்லிக் கொடுப்பதேயன்றி அங்கு கூடுகின்றவர்களுக்குச் சொல்லிக் கொடுப்பதல்ல. ஆகையால் கூடுகின்றவர்கள் விளங்க வேண்டுமென்ற நோக்கத்தில் செயல்படத் தேவையில்லை. ஆயினும் அவர்கள் விளங்க வேண்டுமென்பதற்காக அவர்களுக்குத் தெரிந்த மொழியில் மொழி பெயர்ப்பது பிழையாகவும் மாட்டாது.
மரணித்தவன் அறபு மொழி தெரியாதவனாயின் அவனுக்கு தல்கீன் எவ்வாறு விளங்கும்? என்ற கேள்விக்கும், அங்கு கூடி நிற்கின்ற அறபு மொழி தெரியாதவர்களுக்கு அது விளங்காமற் போவதற்கும் காரணம் என்ன? என்ற இரண்டு கேள்விக்களுக்கும் இங்கு விடை எழுதுவது பொருத்தமானது என்று நினைக்கின்றேன்.
இது ஆன்மீகத்தோடு சம்பந்தப்பட்ட விளக்கமேயன்றி பிக்ஹ்-சட்டக்கலையோடு சம்பந்தப்பட்டதல்ல. ஆகையால் சற்று ஆன்மீகத்தோடு நுழைந்து பார்ப்போம்.
றூஹ் என்றும் ஜிஸ்ம் என்றும் இரண்டு அம்சங்கள் உள்ளன. றூஹ் என்றால் உயிர் என்றும், ஆன்மா என்றும் சொல்லப்படும். ஜிஸ்ம் என்றால் உடல் என்று பொருள் வரும். இவ்விரண்டிற்கும் மிக நெருங்கிய தொடர்பு உண்டு. உடல் என்ற கூண்டில் றூஹ் என்ற பறவை இருந்தால் மட்டுமே உடல் உறுப்புக்களில் ஒவ்வொன்றும் இயங்கும். கண் பார்க்கும், காது கேட்கும், மூக்கு சுவாசிக்கும், வாய் பேசும், கை இயங்கும், கால் இயங்கும். இதே போல் ஏனைய உறுப்புக்களும் இயங்கும்.
உயிர் இருப்பது கொண்டுதான் உடல் சிறப்புடையதாகின்றது. உயிர் இன்றேல் உடலால் மட்டும் ஒன்றும் செய்து விட முடியாது.
உயிர் போன பின் உடல் நாற்றம் எடுக்கும் வரைதான் அதை வைத்திருக்கவும் முடியும். நாற்றம் வந்து விட்டால் அவ்வுடலை மண்ணில் மறைக்கவே வேண்டும். அது பாசமுள்ள மனைவியின் உடலாயினும், பெற்ற தாயின் உடலாயினும் சரியே.
உடலில் தேங்கி நிற்கும் மேற்கண்ட தன்மையுள்ள உயிர் மிக பரிசுத்தமானது. அழியாதது. எடை, நிறம் கொண்டு அளக்கவோ வருணிக்கவோ முடியாதது. சிறியது பெரியது என்று கணிக்க முடியாதது.
இத்தன்மையிலுள்ள றூஹ் என்பது எல்லா மொழிகளையும் விளங்கிக் கொள்ளும் இயற்கை ஆற்றல் பெற்றதாகும். அதுவொரு உடலில் தங்கி இருக்கும் வரைதான் அதற்கு கட்டுப்பாடு உண்டு. அது எந்த மொழி பேசுகின்றவனின் உடலில் தங்கி உள்ளதோ அது அவ்வுடலில் தங்கி இருக்கும் வரை அந்த மொழிக்கு கட்டுப்பட்டதாக இருக்கும். அதுவோர் உடலில் தங்கி இருக்கும் வரைதான் ஒரு சப்தத்தைக் கேட்பதற்கு தூரம், திரை என்பன அதற்குத் தடையாக இருக்கும். உடலை விட்டு உயிர் பிரிந்த பின் அதற்கு எத்தடையும் கிடையாது. எந்த கட்டப்பாடும் இருக்கவும் மாட்டாது.
இதனால்தான் பிரேதத்தை அடக்கம் செய்த பின் அதற்குச் சொல்லிக் கொடுக்கப்படுகின்ற தல்கீன் என்பதை அது கேட்கின்றது. அறபு மொழியில் சொல்லிக் கொடுக்கப்படுகின்ற விடயங்களையும் அது விளங்கிக் கொள்கின்றது.
ஆனால் உயிரோடு உள்ள ஒருவனை குழியில் அடக்கம் செய்து விட்டு அவனை அழைத்தால் அது அவனுக்குக் கேட்காது. இதற்குக் காரணம் அவனின் றூஹ் அவனின் உடலில் கட்டுப்ப்டு இருப்பதே ஆகும். இதனால் மண் போன்ற திரையால் அவனுக்குச் சப்தத்தைக் கேட்க முடியாமல் போகின்றது. இவ்வாறுதான் உயிருள்ள ஒருவனுக்குத் தெரியாத மொழி விளங்காமல் போவதுமாகும். இதற்கும் அவனின் உயிர் உடலில் கட்டுப்பட்டு இருப்பதே காரணமாகும்.
எனவே மரணித்த ஒருவனின் றூஹ் கட்டுப்பாட்டை கடந்து விடுகின்ற படியால் அதன் இயற்கையின் படி அது எல்லா மொழிகளையும் கேட்கும் என்பதிலும், அவற்றை புரிந்து கொள்ளும் என்பதிலும் சந்தேகமில்லை.
முடிவுரை
وذكّر فإنّ الذّكرى تنفع المؤمنين.நீங்கள் நினைவூட்டுங்கள். ஏனெனில்
நினைவூட்டுதல் விசுவாசிகளுக்குப் பயன் தரும் என்ற திருக் குர்ஆன் வசனத்தையும் இந்நூலில் எழுதப்பட்டுள்ள நபீ மொழிகளையும் புகஹாஉ எனும் சட்ட மேதைகள் தமது சட்ட நூல்களில் எழுதியுள்ளவற்றையும் ஆதாரங்களாகக் கொண்டு தல்கீன் ஓதுவது நல்ல காரியமேயன்றி அது எந்த வகையிலும் வழிகேடாகவோ, பாவச் செயலாகவோ மாட்டாது என்பதை புரிந்து கொள்ளுதல் வேண்டும்.
அதேபோல் தல்கீன் ஓத வேண்டுமென்று சொல்லியுள்ள இமாம் நவவீ, இமாம் இப்னு ஹஜர் போன்ற சட்ட ஆய்வாளர்களிடம் தல்கீன் கூடாதென்று சொல்லும் அண்மைக்கால அறிஞர்கள் பால் குடிக்க வேண்டுமென்பதையும் தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.
யா அல்லாஹ்! தல்கீன் ஓதுகின்ற அனைவர் மீதும் உன்னுடைய அருள் மழையைச் சொரிவாயாக! அறியாமையினால் அதை மறுப்போரின் மனக் கதவைத் திறந்து விடுவாயாக! அவர்களின் உள்ளங்களை அறிவொளி கொண்டு பிரகாசிக்கச் செய்வாயாக.!மனமுரண்டினாலும் பணவாசை, பதவி மோகங்களினாலும் அதை மறுப்போரின் உள்ளங்களில் ஹிதாயத் – நேர்வழி என்றவிதையை விதைத்து விடுவாயாக.!

ரகசியங்களின் திரைநீக்கம் 1 - ரூஸ்பிஹான் பக்லி
( இம்முதல் பதிவு என் பதிவு தளத்தில் இருந்து நீங்கப்பட்டதால் மறுபடியும் பதியப்படுகிறது )




அபு முஹம்மது ஷேக் ருஸ்பிஹான் பக்லி Ruzbihan Baqli
(1128-1209) ஒரு பாரசீக கவிஞர் , ஆன்மீகவாதி , ஆசிரியர் மற்றும் சூஃபி மாஸ்டர் ஆவார். அவர் தனது சொந்த வாழ்க்கையைப் பற்றி எழுதினார், மேலும் சூஃபி கவிஞர்கள் மற்றும் கருத்துக்கள் பற்றிய வர்ணனைகளை வெளியிட்டார்.
16 ஆம் நூற்றாண்டின் சஃபாவிட் ஈரானில் செய்யப்பட்ட கையெழுத்துப் பிரதியிலிருந்து பக்லியின் மிகவும் புகழ்பெற்ற படைப்பு அவரது சுயசரிதையான அன்வெயிலிங் ஆஃப் சீக்ரெட்ஸ் அல்லது கஷ்ஃப் அல்-அஸ்ரார் ஆகும்.
ரகசியங்களின் திரைநீக்கம் (கஸ்ஃபுல் அஸ்றார்) என்ற இந்த நூல் நாட்குறிப்பு வகைமையைச் சார்ந்தது. உலகில் நாட்குறிப்பு வகையிலான இலக்கியங்கள் புதிதல்ல. சீனர்கள் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அன்றாட அரச நிகழ்வுகளையும் அலுவல்களையும் குறித்து வைத்ததன் மூலமாகத் தங்களது வரலாற்றைத் தக்க வைத்துக் கொண்டனர் என்பதாக க.ப.அறவாணன் எழுதிய தமிழர் அடிமையானது ஏன்? எவ்வாறு? என்ற நூலில் சுட்டிக்காட்டியுள்ளார்.
ரோமப் பேரரசனான மார்கஸ் ஆண்டோனியஸ் அரேலியஸ் எழுதிய 'தியானங்கள்' (Meditations) நூலும் நாட்குறிப்பு வகைமைச் சார்ந்த தத்துவார்த்த நூலே. தனிமனித ஒழுக்கம், அறவிழுமியங்கள், தனிமனிதனுக்கும் பிரபஞ்சத்துக்குமான தொடர்பு, இயற்கையின் இயல்புகள் போன்ற விஷயங்களின் மீது அப்புத்தகம் புத்தொளிப் பாய்ச்சுவதால், ஸ்தோயிக் மரபினர் என்றில்லாமல் அனைவரும் வாசிக்கக்கூடிய பொது பனுவலாக அது திகழ்கிறது.
ருஸ்பிஹான் பக்லி எழுதிய ரகசியங்களின் திரைநீக்கம் என்கிற இந்த நூலும் நாட்குறிப்பு வகையைச் சேர்ந்ததுதான். ஆனாலும் மெய்யியலின் பரவசத்தின் உச்சத்தைத் தொட்ட மாபெரும் தொகுப்பு. இதன் ஒவ்வொரு பக்கமும் விண்ணை முட்டும் வியப்பின் செறிவு.
ருஸ்பிஹான் பக்லி 1128 இல் , இன்றைய ஈரானில் உள்ள ஃபாஸாவில் டெய்லமைட் குடும்பத்தில் பிறந்தார் . ஒரு இளைஞனாக, பாக்லி ஒரு மளிகைக் கடைக்காரராகப் பணிபுரிந்தார்.
மூன்று, ஏழு மற்றும் பதினைந்து வயதுகளில் தனக்கு மத தரிசனங்கள் இருப்பதாக பக்லி கூறியிருந்தார். அவர் இந்த தரிசனங்களை கனவுகள் மற்றும் சக்திவாய்ந்த பரவசங்கள் என "தி அன்வெயிலிங் ஆஃப் சீக்ரெட்ஸில்" விவரித்தார் .

15 வயதில், பாக்லி பாசாவை விட்டு 18 மாதங்கள் பாலைவனத்தில் கழித்தார், அந்த நேரத்தில் அவர் அதிக தரிசனங்களைப் பெற்றதாகக் கூறினார். பாலைவனத்தை விட்டு வெளியேறிய பிறகு, அவர் ஒரு சூஃபி பிரிவில் சேர்ந்தார் . தி அன்வெயிலிங் ஆஃப் சீக்ரெட்ஸில், சூஃபிகளுடன் பயிற்சியின் போது தனது முதல் "திறப்பு" என்று பாக்லி கூறுகிறார்.
அவர் இறுதியில் ஒரு மாஸ்டர் மற்றும் ஆன்மீக வழிகாட்டியைத் தேடுவதற்காக ஃபாஸாவுக்குத் திரும்பினார்; அங்கு அவர் ஷேக் ஜமால் அல்-தின் அபி அல்-வஃபா' இபின் கலீல் அல்-ஃபாஸா'ஐச் சந்தித்து சீடரானார். பக்லி 1209 இல் ஷிராஸில் இறந்தார்.
மௌலானா ரூமியின் வாழ்விலும், ரூஸ்பிஹான் வாழ்விலும் நிறைய ஒற்றுமைகள் உள்ளன. இருவரும் வெவ்வேறு காலக்கட்டத்தில் வாழ்ந்த ஞானிகள் என்றாலும் வேதத்தை (திருக்குர்ஆன்) ஆழமாகக் கற்றவர்களாக உள்ளனர். வாரம் இருமுறை பள்ளிவாசலில் உரையாற்றி வந்துள்ளனர்.

ரூஸ்பிஹான் 1165-ல் மெய்யியல் பள்ளியொன்றை ஷிராஸுல் நிறுவி ஐம்பதாண்டுகள் தனது சீடர்களை வழிநடத்தியுள்ளார். ரூமி அவர்களும் இறுதிவரை சீடர்களை வழிநடத்தியவர்தான். இருவரும் இறைக் காதலில் ஊறித் திளைத்து அதைக் கவிதைகளாகக் கொட்டியுள்ளார்கள்.
ஆனால் ரூமியின் கவிதைகள் அடைந்த புகழை ரூஸ்பிஹானின் கவித் தரிசனங்கள் அடையவில்லை. காரணம், அப்படியொரு பனுவல் இருப்பதே சமீபகாலமாகத்தான் உலகிற்குத் தெரியவந்துள்ளது. அந்த வகையில் தமிழில் வெளிவந்திருக்கும் ரூஸ்பிஹானின் நூல் விசேஷமானதாகும்.
வெளியரங்கமான ரகசியங்கள்:- ரகசியங்களின் திரைநீக்கம் என்ற பெயரே இந்நூல் ரகசியங்களை வெளிப்படுத்தும் நூல் என்ற தகவலைச் சொல்லிவிடுகிறது.
"இறைவன் தன்னை ஒளியாலான எழுபதாயிரம் திரைகளால் திரையிட்டுக் கொண்டான்" என்கிறார்கள் முஹம்மது நபி(ஸல்) அவர்கள். ஒளி என்றாலே திறப்புதான். எத்தனை ஒளியோ அத்தனை வெளியரங்கம். ஆக இறைவன் வெளியரங்கமாகவே உள்ளான். ஆனால் கண்ணிருந்தும் காணாதவர்களுக்கே அவ்வொளி திரையாய் உள்ளதென தூதரின் வார்த்தைகளின் மூலம் புரிந்துகொள்ளலாம்.
இந்நூலை தமிழில் அழகாக மொழிபெயர்த்தவர் என் ஆன்மிக நண்பர் ரமீஸ் பிலாலி அவர்கள் ( 9345244838 ) இந்நூல் பதிப்பாளர் Name:Uvais Ahmad Seermai Mobile:+919944293740
Rs 200 /=

**ரகசியங்களின் திரைநீக்கம் 2 - ரூஸ்பிஹான் பக்லி**
( படைப்புகளின் திறப்பும் இறைத்தூதர் மீதான வாழ்த்தும் )




அவன் மனிதர்களுக்கு பக்தியையும், ஆன்மிக ஞானத்தையும் கொணர்ந்தான். தனது ரட்சகத் தன்மையால் அவர்களைப் பணிவுக்கும் நம்பிக்கைக்கும் அழைத்தான். தனது ஆட்சியின் கருவூலத்திற்குள் அவன் விதானத்தையும் பாதபீடத்தையும் கொண்டுவந்தான்.

அதிகாரத்தின் வெளியை இடத்தில் வைத்தான். வானவர்க்கும் உயிர்களுக்கும் ஆடுகளம் அமைத்தான். வருந்துநர்க்காக நெருப்பையும் மகிழ்நர்க்காகத் தோட்டத்தையும் படைத்தான்.
நெருக்கத்தின் கூடாரக் கயிறுகள்கொண்டு வானங்களை விரித்தான். அண்ட வெளியின் எரியும் விளக்குகளால் அவற்றை அலங்கரித்தான். புகழ்ச்சிக்காரருக்கு விண்மீன்களைத் தொழுகைத் திசையாகவும், தியானத் திடலாகவும் ஆக்கினான். பக்தர்களுக்கும் அரசர்களுக்கும் பூமியை விரித்தான். கல்முளைகளின் கடினத்தால் அவற்றை ஸ்திரப்படுத்தினான். நளினமுள்ள மரங்களால் அதனை அலங்கரித்து ஊற்றுகளும், நதிகளும் பாய்ந்தோடச் செய்தான்.

புனிதத்திற்கும் தூய்மைக்கும் ஆன்மிக ஆளுமைகளைத் தனியாக்கி வைத்தான். தனது வெளிப்பாட்டுக்காகவும் தீர்க்கதரிசனத்திற்காகவும் தூதர்களையும் தீர்க்கதரிசிகளையும் தேர்ந்தான். பரவசங்களுக்கும் ஞானத்திற்கும் ஞானியரைத் தேர்ந்தெடுத்தான். நல்லோர்க்கு அவன் ஏக்கமும் உணர்வெழுச்சியும் காதலும் கொண்டுவந்தான். தீர்க்கதரிசிகளுக்கும் தூதர்களுக்கும் சாட்சிமையும் தரிசனமும் தந்து கண்ணியப்படுத்தினான்.
திரைநீக்கங்களும் தெளிவுகளும் கொண்டு ஞானியரது உட்பிரக்ஞையின் கண்களைத் திறந்தான். அவற்றைப் பல்வேறு தளங்கள், உயர்வுகள் மற்றும் படித்தரங்களில் அமைத்தான்.
ஆன்மிக அறிவு, திரைநீக்கங்கள், அரிய ஞானம், அருள்கள் ஆகியவற்றின் பெருங்கடல்களுக்குள் மூழ்கி நீந்துபவரும். தீர்க்கதரிசிகள் மற்றும் திருத்தூதர்களின் தலைவரும், ஞானியர்க்கும் நல்லோர்க்கும் தூய முன்மாதிரியுமான முஹம்மது அவர்களின் மீது அல்லாஹ்வின் பேரருள் உண்டாவதாக! மேலும், அன்னாரின் தூய சந்ததியினரின், உயர்ந்த சகாக்களின் மீதும் உண்டாவதாக!

---

ர.ரா :
தனித்தோனாகிய அல்லாஹுத்தஆலா தான் மட்டும் தனித்து இருந்த போது தான் அறியப்பட வேண்டும் என்று தேட்டம் கொண்டு தன் பேரொளியில் இருந்து ஒரு ஒளியை வெளிப்படுத்தினான்.
அந்தப் பேரொளிக்கு நூரே கரீம் முஹம்மது ரசூலுல்லாஹ் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் என்று பெயரிட்டான்.
பேரொளி என்பது தானும் வெளிப்பட்டு தான் அல்லாத மற்றவர்களையும் வெளிப்படுத்தி காட்டுவதாகும்.அந்தப் பேரொளியில் இருந்து பல ஒளிகள் வெளியாகி இருக்கிறது.
உதாரணமாக மலக்குமார்கள் சூரியன் சந்திரன் நட்சத்திரங்கள் இன்னும் அண்ட சராசரங்கள் மற்றும் அதில் உள்ளவைகளையும் அந்த நூரே முஹம்மத் ரசூலே கரீம் என்னும் பேரொளியிலிருந்து படைத்தான். படைத்துக் கொண்டும் இருக்கின்றான். இன்னும் படைப்பான்.
كنت كنزا مخفيا فاحببته ان اعرف وخلقت الخلق
நான் மறைந்த பொக்கிஷமாக இருந்தேன் நான் அறியப்பட வேண்டும் என விரும்பி படைப்பை படைத்தேன் என அல்லாஹுத்தஆலா கூறுகிறான்
அல்லாஹுதஆலா தன்னுடைய நூரில் இருந்து நேரடியாக படைக்கப்பட்ட முதல் படைப்பும் ஒரே படைப்பும் நூரே முஹம்மத் ரசூல் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் மட்டும் தான் மற்ற படைப்புகள் எல்லாம் அந்த நூர் என்னும் நூரில் இருந்தே படைக்கப்பட்டன.
மற்ற படைப்புகள் படைக்கப்படுவதற்கு காரணமாக இருந்த நூரே முஹம்மத் அவர்களைப் பற்றி அல்லாஹ் ஹதீஸே குத்ஸியில் கூறியிருக்கிறான்
"நபியே உம்மை படைத்திடா விட்டால், இந்த வானத்தையும் இன்னும் நான் எனது ருபூபிய்யத்தை இரட்சிப்பு தன்மையையும் வெளிப்படுத்தி இருக்க மாட்டேன்.

## ரகசியங்களின் திரைநீக்கம் 3 - ரூஸ்பிஹான் பக்லி

(பரம்பொருள் படைப்பாளன் என்னும் போர்வையில் தன்னையே வெளிப்படுத்தியுள்ளது )



இற்றை நாள்களில், ஸூஃபிகளின் அனுபவ வெளிப்பாடுகளில், அரிதின் அரிதான அறிவுகளின் நிகழ்வுகளும் பல்வேறு வடிவங்களிலான அற்புதமான திரைநீக்கங்களும் இருந்துள்ளன.
ஏனெனில், அவன் தனது தூதர்களுக்குத் தன்னை வெளிக்காட்டியது போல 'அவர் நெருப்பின் அருகே வந்தபோது, பாக்கியம் பெற்ற அப்பள்ளத்தாக்கில் உள்ள ஓடையின் வலப்பக்கத்தில் ஒரு மரத்திலிருந்து, மூசாவே! நிச்சயமாக நானே நான்தான் அல்லாஹ், அகிலங்களின் ரட்சகன் என்று கூப்பிடப்பட்டார் (28:30) என்பதாகக் கலீமான (பேசுபவர்) மூசா (அலை) அவர்களைப் பற்றி அவன் சொன்னதுபோல,
சத்தியப் பரம்பொருள் படைப்பாளன் என்னும் போர்வையில் தன்னையே வெளிப்படுத்தியுள்ளது. இதனைப் போன்றே, அவன் தனது காதலரான முஹம்மது (ஸல்) அவர்களுக்குத் தனது அழகை வெளிப்படுத்தியது பற்றி, 'ஸித்றத்துல் முன்தஹா என்னும் இலந்தை மரத்தருகே, அதன் அருகிலேயே மஃவா என்னும் சொர்க்கம் இருக்கிறது; அப்போது அந்த மரத்தை மூடியிருந்தவை அதனை முற்றிலும் மூடிக்கொண்டன' (53:14-16) என்பதாகச் சொன்னான்.
மேலும், இதனைப் போன்றே, இறையாடையின் திரைநீக்கம் பற்றி முஹம்மது (ஸல் ) அவர்கள் சொன்னார்கள், "நான் எனது ரட்சகனை மிகவும் அழகிய தோற்றத்தில் கண்டேன். அப்போது இறைவன் என்னிடம், 'முஹம்மதே கேளுங்கள்' என்றான். எனவே நான், 'இறைவா! நான் உன்னிடம் சொர்க்கத்தையும், உன்னை நேசிப்பவர்களின் நேசத்தையும் கேட்கிறேன்' என்று சொன்னேன்".
அதற்கு அவன் சொன்னான், ''முஹம்மதே! (வானவர்களின்) மிக உயர்ந்த சபை எதனைப் பற்றி விவாதிக்கிறது?" (38:69)
"நான் சொன்னேன், 'ரட்சகனே! நீயே நன்கறிவாய்', பின்னர் அவன் தனது கையை எனது தோளில் வைத்தான். எனது நெஞ்சில் ஒரு குளிர்ந்த கூச்சத்தை உணர்ந்தேன். அப்போது, நடத்தவையும் நடக்கப்போகின்றவையும் நான் அறிந்தவை ஆயின.

எனவே நான் சொன்னேன், 'என் நண்பனே! இந்த அரிதான படித்தரங்கள் பற்றியும், இந்த உயர்வான அகநிலைகள் பற்றியும் நீ கேட்டதற்கு விடை சொல்ல நான் மிகவும் தாமதித்துவிட்டேன் நான் எனது வாலிபத்தில், எனது போதை நாள்களில், எனது ஊதாரித்தனமான பொங்கும் பருவத்தில் இருந்தேன், எனது இதயம், ஆன்மா, பிரக்ஞை, அறிவு ஆகியவற்றில் வானவருலகின் திரைநீக்கங்களும் சக்தியின் அற்புதமான வெளிப்பாடுகளும் நிகழ்ந்தன.

நான் உன்னதமான ஆதிப் பெருங்கடலில், சாஸ்வதத்தில் இறைப் பிரசன்னத்தில் நீந்தினேன். இறைவனின் சுயம், பண்புகள் ஆகியவற்றின் திரைநீக்கத்தைக் கண்டறிந்தேன். அதனைப் பெரும் பாறைகளும் உயரச் சிகரங்களும் கூடத் தாங்க முடியாது. எனது வாழ்வின் தொடக்கத்திலிருந்து இப்போதுவரை எனக்கு நிகழ்ந்தவை அனைத்தையும் நான் எழுதினால் அது நூல்கள் மற்றும் பக்கங்களின் பெருஞ்சுமைப் பொதி ஆகிவிடும்.

---

ர.ரா :

"துன்பமான நேரத்தில் தன்னுடைய பிரார்த்தனையை அல்லாஹ் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று யார் விரும்புகின்றாரோ அவர் மகிழ்ச்சியான நேரத்தில் அதிகம் பிரார்த்தனை செய்யட்டும்" என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (நூல் : புகாரீ)

"மகிழ்ச்சியான நேரத்தில் அல்லாஹ்விடம் நீ அறிமுகமாகிக் கொள். கஷ்டமான நேரத்தில் அல்லாஹ் உன்னைத் தெரிந்து கொள்வான்' என நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்களுக்கு வஸிய்யத்து செய்தார்கள்.

அவசரப்படாமல் உங்களில் ஒருவர் பிரார்த்திக்கும பிரார்த்தனையை அல்லாஹ் ஏற்றுக்கொள்கின்றான்' என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். (நூல்: முஸ்லிம்)

"தனது இரு கைகளையும் ஏந்தி நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் பிரார்த்தனை செய்தார்கள். நான் அப்பொழுது அவர்களின் அக்குளின் வெண்மையைப் பார்த்தேன்" என அபூ மூஸா அல் அஸ்அரீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார். (நூல்: புகாரீ)

"நிச்சயமாக அல்லாஹ் வெட்கமுள்ளவனும், சங்கையுள்ளவனுமாவான். ஒரு மனிதன் தன் இரு கரங்களையும் உயர்த்தி பிரார்த்தனை செய்தால் அதை ஒன்றுமில்லாமல் வெறுங்கையோடு திருப்புவதற்கு அல்லாஹ் வெட்கப்படுகிறான" என ஸல்மானுல் ஃபார்ஸீ (ரலி) அவர்கள் அறிவிக்கிறார்கள் (நூல்:திர்மிதீ)

## ரகசியங்களின் திரைநீக்கம் 4- ரூஸ்பிஹான் பக்லி

( எனது முதல் திரைநீக்கம் )




இந்த ரகசியங்களின் ஆரம்பங்கள் என் இதயத்தில் நேர்ந்தபோது எனக்குப் பதினைந்து வயது இப்போது நான் ஐம்பத்தைந்து எனது நிரைநீக்கங்கள், எனது நுட்பமான தரிசனங்கள் ஆகியவற்றின் ரகசியங்களை, உனக்கு நிகழாது தப்பியவற்றை எப்படி உனக்கு நான் விளக்குவேன்?

புரிந்துகொள். உன் புரிதலை இறைவன் ஆசீர்வதிப்பானாக. நான் வழிதவறிய குடிகார முட்டாள்களின் மத்தியில் பிறந்தேன். மூன்று வயதுவரை சந்தையின் பொதுமக்களால் வளர்க்கப்பட்டேன். 'வெருண் டோடும் காட்டுக் கழுதைகளைப் போல் அவர்கள் இருக்கின்றனர்; சிங்கத்தைக் கண்டு வெருண்டோடும் (கழுதையைப் போல் ஓடுகின்றனர்)' (74:50-51).

என் இதயத்தில் ஒரு கேள்வி எழுந்தது, 'படைப்புகளின் கடவுளான உன் இறைவன் எங்கே?' எனது இல்லத்தின் முற்றத்தில் எமக்கொரு பள்ளிவாசல் இருந்தது. நான் சில சிறார்களைச் சந்தித்து, 'உமது இறைவனை நீங்கள் அறிவீர்களா?' என்று கேட்டேன்.
'அவனுக்குக் கைகளோ கால்களோ இல்லை என்று சொல்கிறார்கள்' என்று அவர்கள் பதில் அளித்தனர். 'மேலான இறைவன் உறுப்புகள், பாகங்கள் ஆகியவற்றை விட்டும் தூய்மையானவன்' என்று அவர்கள் தமது பெற்றோர்கள் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறார்கள்.
ஆனால் அக்கேள்வியை நான் அவர்களிடம் கேட்ட தருணத்தில் எனது இதயத்தில் மட்டற்ற ஆனந்தம் நிறைந்தது. இறைவனின் திருப்பெயர்களை உச்சாடனம் (திக்ரு) செய்யும்போதும் தியானத்தி நிலைகளிலும் ஏற்படும் ஒளியேற்றங்களைப் போன்றதொரு அப்போது எனக்கு நேர்ந்தது. ஆனால், அதன் எதார்த்தம் என்னவென்று அப்போது எனக்குத் தெரியவில்லை.
நான் ஏழு வயதை அடைந்தேன். அவனை நினைப்பதும் அடிபணிவதுமான ஒரு நேசம் என் நெஞ்சில் உண்டாயிற்று. நான்

பிரக்ஞையில் தேடி அது என்னவென்று அறிந்துகொண்டேன். பிறகு என் இதயத்தில் தீவிரக் காதல் எழுந்தது. காலம் சென்றது. நான் தீவிரக் காதலில் தொலைந்துபோனேன். மதியத் தொழுகைக்காக என் கடையிலிருந்து எழுந்து அங்க சுத்திக்கான நீர் தேடிப் பாலைவனத்திற்குச் சென்றேன்.
இனிய குரலைக் கேட்டேன். எனது பிரக்ஞையும் இதயமும் துடித்தன. நான் சொன்னேன், 'பேசுபவரே, என்னுடன் இரும்' அருகிலிருந்த ஒரு மலையின் மீது ஏறினேன். குருமார்களின் உடையணிந்த ஓர் அழகிய நபரைக் கண்டேன், என்னால் பேச இயலவில்லை. இறைவனின் ஏதத்துவம் பற்றி அவர் ஏதோ சொன்னார். ஆனால், அதைப் பற்றி நான் ஒன்றுமே அறிந்திருக்கவில்லை. ஒரு பிதற்றலும் திகைப்பும் என்னைப் பிடித்தன.
நான் அஞ்சினேன். மக்கள் என்னைச் சுற்றிலும் உலவினர். ஒரு பாழ் மண்டபத்தில் இருந்தேன். இரவுவரை அங்கேயே தங்கினேன். பிறகு அவ்விடம் நீங்கி எனது கடைக்குத் திரும்பினேன். விடியும்வரை பரவசத்திலும் சிரமத்திலும் பெருமூச்சுகளும் கண்ணீரும் கொண்டிருந்தேன். நான் திகைத்தேன்.
அனிச்சையாக எனது நாவில் சொற்கள் எழுந்து வந்தன, 'என் ரட்சகனே, உனது மன்னிப்பு! என் ரட்சகனே, உனது மன்னிப்பு! (2:285). எனது நா அசைவு அற்றது. ஏதோ பல நாள்களாக அமர்ந்திருப்பதுபோல் அப்படி இருந்தது. மேலும் ஒரு மணி நேரம் அப்படி அமர்ந்திருந்தேன். பிறகு என்னைப் பரவசம் ஆட்கொண்டது.
பணப்பெட்டியையும் கடையில் இருந்த சரக்குகளையும் தட்டுப்பாட்டிற்கான சேமிப்புகளையும் சாலையில் வீசியெறிந்தேன். என் ஆடைகளைக் கிழித்தபடி பாலைக்கு ஓடினேன். ஒன்றரை வருடங்கள் அந்நிலையில் இருந்தேன்,

பிதற்றலும் திகைப்பும் மிகைத்தவனாக, அழுகையிலும் பரவசத்திலும். பெரும் களிப்புகளும் மறைவான காட்சிகளும் ஒவ்வொரு நாளும் நிகழ்ந்தன. அப்பரவசங்களில் நான் வானங்கள், பூமி, மலைகள், பாலைகள், ஒளியாலானவை போன்ற மரங்கள் ஆகியவற்றைக் கண்டேன். பிறகு அக்கொந்தளிப்பு மெல்ல அடங்கி அமைதியானேன்.
எனது வாழ்வின் ஆரம்ப காலத்து திரைமூடலை விட்டும் நான் மீண்டு விட்டேன் ஸூஃபிகளுக்கு தொண்டு செய்ய ஏங்கினேன். மிக அழகிய கேசம் இருந்தபோதும் என் தலையை மழித்துக் கொண்டேன். ஸூஃபிகளிடம் சேர்ந்தேன். அவர்களின் பணிகளில் ஊழியம் செய்தேன். கடும் முயற்சிகளும், ஆன்மீக பயிற்சிகளும் மேற்கொண்டேன். குர்ஆனைப் பயின்று மனனமும் செய்து முடித்தேன்.
எனது பொழுதுகள் பெரிதும் சூஃபிகளுடன் பரவசத்திலும், ஆன்மீக நிலையிலும் கழிந்தன. ஆனால் ஒரு குறிப்பிட்ட நாள் வரை மறைவின் திரை நீக்கம் என்று தக்க எதுவும் எனக்கு நிகழாய் இருந்தது.
அந்த நாள் வந்த போது மறைவுலகத் தியானத்தப்படி நான் கூரை மீது அமர்ந்திருந்தேன். அப்போது நான் இறைத்தூதர் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களையும், அபூபக்கர், உமர், உஸ்மான், அலி ( ரலி ) ஆகியோருடன் என் முன் வரக் கண்டேன். அதுவே எனது முதல் திரை நீக்கம்.

---

ர.ரா :
(நபியே! உமக்கு) அல்லாஹ்வுடைய உதவியும் (மக்காவின்) வெற்றியும் கிடைத்து, அல்லாஹ்வுடைய மார்க்கத்தில் ஜனங்கள் கூட்டம் கூட்டமாக நுழைவதையும் நீர் கண்டால் (அதற்கு நன்றி செலுத்தும் பொருட்டு) உம் இறைவனைப் புகழ்ந்து துதி செய்து அவனுடைய (அருளையும்) மன்னிப்பையும் கோருவீராக. நிச்சயமாக அவன் (பிரார்த்தனைகளை அங்கீகரித்து) மன்னிப்புக் கோருதலையும் அங்கீகரிப்பவனாக இருக்கிறான்'
– என்ற திருமறையின் 110 ஆவது அத்தியாயமே பெருமானார் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீது இறங்கிய முழுமையான இறுதி அத்தியாயமாகும்.
இவ்வத்தியாயம் இறங்கிய பிறகு நபி பெருமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் இறைவனை அதிகமாகப் புகழ்ந்து துதிப்பதும், பிழை பொறுக்கத் தேடுவதிலும் ஈடுபட்டிருந்தார்கள். இதன் பின்னர் ஒவ்வொரு தொழுகையின் ருக்கூஃ மற்றும் ஸுஜூதிலும்
سُبْحَانَكَ اللّٰهُمَّ وَبِحَمْدِكَ اَللّٰهُمَّ اغْفِرْلِيْث
'எங்கள் இரட்சகனான அல்லாஹ்வே! நீ மிகத் தூய்மையானவன், புகழ் அனைத்தும் உனக்கே, அல்லாஹ்வே! என்னை மன்னிப்பாயாக! என்று அதிகமாக ஓதி வந்ததாக முஃமின்களின் அன்னை ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறுவார்கள்.

பெருமானாரின் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) இறுதிக் காலத்தில் எழும்போதும், அமரும்போதும், போகும் போதும், வரும் போதும் அவர்களின் திருவாயானது ‘அல்லாஹ் தூய்மையானவன், புகழனைத்தும் அவனுக்கே’ என்று புகழ்ந்து கொண்டிருந்தது.
‘நாயகமே! இவ்வாறு அதிகமாகத் தாங்கள் ஓதுவதேன்? என்று கேட்டேன். ‘எனக்கு அவ்வாறு ஓதும்படியாக ஏவப்பட்டுள்ளது’ என்று கூறி மேற்கூறிய அத்தியாயத்தை ஓதிக் காட்டினார்கள் என்று உம்முல் முஃமினீன் ஹழ்ரத் உம்மு ஸலமா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் கூறுகிறார்கள்.
இவ்வத்தியாயம் இறங்கிய பின் இவ்வாண்டின் இறுதியில் நான் மரணமடைவேன் என்று அவர்கள் அறிவித்ததாக அன்னை உம்மு ஹபீபா ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் அறிவிக்கிறார்கள்.
பொதுவாக இந்த அத்தியாயம் இறங்கிய பின் நாயகம் அவர்கள் மறுமை வாழ்வுக்கான தேட்டத்திலும், தெண்டிப்பிலும் எப்போதும் இல்லாத அளவுக்கு ஈடுபட்டிருந்தார்கள் என்றும்
‘நான் வந்த காரியம் முடிந்து விட்டது. எனக்கு மரண அறிவிப்பு கிடைத்து விட்டது என்று அவர்கள் கூறினார்கள் என்று அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ்; ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அறிவிக்கின்றார்கள்.

## ரகசியங்களின் திரைநீக்கம் 5 - ரூஸ்பிஹான் பக்லி

( குருவைத் தேடலும், தீட்சையின் முதல் தரிசனங்களும் )

அப்போது எனக்கொரு குரு இருக்கவில்லை. நான், பாசாவில் இருந்த எனது வீட்டிற்குத் திரும்பினேன், ஈடேற்றம் அடைந்துவிட்ட ஒரு குருவை, வழிகாட்டியைத் தேடினேன், மேலான இறைவன் என்னை ஷைஃகு ஜமாலுத்தின் அபில் வஃபா இப்னு ஃகலீல் அல்ஃபசாயி (இறைவன் அவர்மீது கருணை புரிவானாக!) அவர்களிடம் கொண்டுசேர்த்தான்.
அவருமே ஆரம்ப நிலையில்தான் இருந்தார். அவரின் சகவாசத்தில் இறைவன் எனக்கு வானவருலகின் கதவுகளைத் திறந்ததுடன் தடங்கலற்ற திரைநீக்கங்களையும் தந்தான், அவரது சகவாசத்தில் ஆன்மிக நிலைகள் மறைஞானங்களுடனும் சமய ரகசியங்களுடனும் பாய்ந்திருந்தன, எண்ணற்ற பரவசங்களும் திரைநீக்கங்களும் நிகழ்ந்து முடிக்கும்வரை.

எனக்கு நினைவு வருபவற்றுள் ஒன்று, ஆற்றல். வல்லமை, சாஸ்வதம் ஆகிய பண்புகள் கொண்டவனாக மேலான இறைவனை நான் எனது வீட்டின் கூரைமீது கண்டேன்.
அவ்விடமே முழு உலகம் என்பதுபோல் பிரகாசமான ஒளியாக, எண்ணிலடங்காத பேருருவாகத் தோன்றிற்று. அவ்வொளியின் நடுவிலிருந்து அவன் என்னைப் பாரசீக மொழியில் எழுபது முறை அழைத்தான், 'ரூஸ்பிஹான், நான் உன்னை எனது ஞான நேசத்திற்கு (விலாயத்) தேர்ந்துள்ளேன். காதலுக்கு உன்னை எடுத்துள்ளேன். நீ எனது நண்பனும் (வலீ) காதலனும் ஆவாய். துயர் பற்றி அஞ்சற்க, ஏனெனில் நான் உனது இறைவன். உனது ஒவ்வொரு லட்சியத்திலும் நான் உன்னைப் பார்த்துக்கொண்டிருக்கிறேன்".
நான் மண்டியிட்டிருந்தேன். மீண்டும் மீண்டும் மண்டியிட்டேன். பிறகு பரவசங்களின் பெருங்கடல்கள் என்னை மூழ்கடித்தன. தேம்புதலும் குறையாத அழுகையும் என்னை ஆட்கொண்டன. அதிலிருந்து மிக அதிகமான அருள்களை அடைந்தேன்.

எனது இளமைப் பருவத்திலிருந்து நான் நினைவு கொள்ளும் ஒன்று. ஏழு வானங்களுக்கு மேலுள்ள மறைவான பாலைவனங்களில் எனக்கொரு பெருங் கடல் காட்டப்பட்டது. அதன் நடுவில் தீவு ஒன்றைக் கண்டேன். அத்தீவின் நடுவில் அளக்கவியலா உயரம் கொண்டதொரு மாபெரும் கோட்டையைக் கண்டேன்.
அதன் அடிவாரத்தில் இருந்து என் பார்வை எட்ட முடிந்த உயரம் வரை எண்ணற்ற சாளரங்கள் இருந்தன. ஒவ்வொரு ஜன்னலில் இருந்தும் எனக்கு இறைவன் தரிசனமானான்.
" இறைவா! இது என்ன கடல் ? " என்று கேட்டேன்.
" இது புனித்துவத்தின் பெரும் கடல்" என்று அவன் சொன்னான்
" இது என்ன தீவு ? "என்றேன்
" இது புனித்துவத்தின் தீவு "என்றான்.
" இது என்ன கோட்டை ? என்றேன்
" இது புனிதத்துவத்தின் கோட்டை " என்றான்.
ஆனால், மேலான இறைவன் இடப் பரிமாணத்தைக் கடந்தவன் அல்லவா.

**ரகசியங்களின் திரைநீக்கம் 6 - ரூஸ்பிஹான் பக்லி**
( கரடிக் குட்டியின் தைலம் )




மனித குலம் முழுதும் ஒரு வீட்டில் விருந்து நடத்துவதாக கண்டேன். அது ஒரு பகல்போல் பற்பல விளக்குகள் எரிந்தன. நான் அவர்களை அடைய முடியவில்லை. எனவே நான் அவ்வீட்டின் கூரைக்குச் சென்றேன்.
அங்கே, என்னைப் போலவே தோன்றிய, ஸூஃபி ஆடை அணிந்த அழகிய குருமார்கள் இருவரைக் கண்டேன். கெண்டி ஒன்று அந்தரத்தில் மிதக்கக் கண்டேன். அவ்விரு குருமார்களின் விறகுகள் புகையின்றி மிக நுட்பமாக எரிந்து கொண்டிருந்தன. அவர்களின் கூடாரத்திலிருந்து உணவு விரிப்பொன்று தொங்கியது.
நான் அவர்களுக்கு முகமன் உரைத்தேன். அவர்கள் என்னை நோக்கிப் புன்னகைத்தனர். அவர்கள் நல்விதமாய்த் தோன்றிய ஷைஃகுகள். அவர்களில் ஒருவர் தனது உணவு விரிப்பை எடுத்துத் திறந்தார்.
அதில் ஓர் அழகிய கிண்ணமும் தூய வெண்ணிற ரொட்டிகளும் இருந்தன. அந்த ரொட்டிகளைப் பிய்த்து கிண்ணத்தில் போட்டுவிட்டு, கெண்டியை அதில் கவிழ்த்தார். எடையற்ற மங்கிய தைலம்போன்ற நுட்பமான ஆன்மிகப் பொருளொன்று அதில் வழிந்தது. நான் அதனை உண்ண வேண்டும் என்பதுபோல் அவர் என்னிடம் குறிப்புக் காட்டினார்.
நான் கொஞ்சம் உண்டேன். நான் அவை அனைத்தையும் தின்று முடிக்கும்வரை அவர்களும் என்னுடன் கொஞ்சம் உண்டனர்.
'அந்தக் கெண்டியில் என்ன இருந்தது என்று உனக்குத் தெரியுமா?' என்று அவர்களில் ஒருவர் கேட்டார்.
'எனக்குத் தெரியாது' என்றேன். 'இது கரடிக் குட்டியின் ( விண்மீன் மண்டலத்தின் ) தைலம். உனக்காக அதை நாங்கள் எடுத்து வந்தோம்' என்று அவர் சொன்னார். நான் எழுந்தபோது அதைப் பற்றிச் சிந்தித்தேன்.
அது, வானவருலகின் ஏழு அச்சாணிகளுக்கு (அக்தாப் ) நேர்ப்பட்ட ஏழு படித்தரங்களில் இப்பூமியில் அமைந்த இறைநேசர்கள் எழுவர் பற்றிய குறியீடு என்பதும், அவற்றின் படித்தரங்களின் தூய சாராம்சத்திற்காக மேலான இறைவன் என்னைத் தேர்ந்திருக்கிறான் என்பதும் சில நிமிடங்கள் கழித்தே எனக்குப் புரிந்தது.
பிறகு நான் கரடிக் குட்டி விண்மீன் மண்டலம் நோக்கித் திரும்பினேன். அவ்விண்மீன்கள் ஏழு ஜன்னல்கள் எனக் கண்டேன். அவை அனைத்திலும் மேலான இறைவன் என்னிடம் தோன்றினான்.
"என் இறைவா என்ன இது? " என்று கேட்டேன்.
கற்பனைகள் அனைத்தையும் கடந்த மேலான இறைவன் சொன்னான் :
''இவை ஏழும் எனது விதானத்தின் ஜன்னல்கள் ''
ரஹ்மத் ராஜகுமாரன் 944344 6903 வாட்ஸ் அப் 9360181033

---

கரடி விண்மீன் மண்டலம் பற்றிய சிறு குறிப்பு :-
"பெருங் கரடி (Ursa Major) என்பது, ஆண்டு முழுதும் வட அரைக்கோளத்தில் காணப்படுகின்ற விண்மீன் கூட்டம் ஆகும். இப்பெயர் இலத்தீன் மொழியில் அர்சா மேஜர் (Ursa = கரடி, major = பெரிய) எனப் பொருள்படும்.
இதனை தமிழில் எழுமீன் என்றும் சப்தரிஷி மண்டலம் என்றும் அழைப்பர். Visible at latitudes between +90° and −30 தெற்கு°.
இக் கரடி உருவின் பின்பகுதியிலும் வாலிலும் அமைந்துள்ள, ஏழு ஒளி மிகுந்த விண்மீன்கள் பெரிய கரண்டி எனப் பொருள்படுகின்ற, பிக் டிப்பர் (Big Dipper) என்னும் பெயரில் அழைக்கப்படுகின்றன.
இவற்றுள், பிக் டிப்பரில் உள்ள டுப்ஹே, அல்கைட் ஆகிய இரண்டைத் தவிர ஏனையவை அனைத்தும் தனு இராசியில் உள்ள ஒரு பொதுப் புள்ளியை நோக்கிய முறையான இயக்கங்களைக் (proper motions) கொண்டுள்ளன. இது போன்ற இயக்கங்களைக் கொண்ட வேறு சில விண்மீன்களும் அறியப்பட்டுள்ளன. இவை அனைத்தும் ஒன்றாக, அர்சா மேஜர் நகர்வுக் கூட்டம் (Ursa Major Moving Group) என அழைக்கப்படுகின்றன

## ரகசியங்களின் திரைநீக்கம் 7 - ரூஸ்பிஹான் பக்லி

( விண்ணின் சாளரங்கள் )



நான் கரடிக் குட்டி விண்மீன் மண்டலம் நோக்கித் திரும்பினேன். அவ்விண்மீன்கள் ஏழு ஜன்னல்கள் எனக் கண்டேன். அவை அனைத்திலும் மேலான இறைவன் என்னிடம் தோன்றினான்.
"என் இறைவா என்ன இது? " என்று கேட்டேன்.
கற்பனைகள் அனைத்தையும் கடந்த மேலான இறைவன் சொன்னான் :
''இவை ஏழும் எனது விதானத்தின் ஜன்னல்கள் ''
காலம் கடந்தது. ஒவ்வோர் இரவும் நான் அதைப் பற்றிச் சிந்தித்திருந்தேன். அவற்றின் மீதான காதலால் ஏங்கினேன், ஒரு நாள் இரவு, அவை திறந்திருக்கக் கண்டேன். மகத்தானவனும் நிராமயமும் ஆன சத்தியப் பரம்பொருள் அவற்றிலிருந்து வெளிப்பட்டு என்னிடம் சொன்னான்,
''நான் இந்த ஜன்னல்களில் உன்னிடம் தோன்றினேன். இவை வானவரது பேருலகின் எழுபதுனாயிரம் கதவுகளாகும். அவை அனைத்தின் வழியாகவும் உன்னிடம் நான் தோன்றினேன். இதைப் புரிந்துகொள்'.
நான் என் பிரக்ஞையால் படைப்புகளின் வசிப்பிடங்களைக் கடந்தேன் . என் உயிர் வானங்களுக்கு மேல் உயர்ந்தது. மேலான இறைவனின் வானவர்களை நான் ஒவ்வொரு வானத்திலும் கண்டேன். ஆனால் இறைவனின் பிரசன்னத்தை அடையும்வரை அவர்களை எல்லாம் கடந்துபோனேன்.
அவனுடைய வானவர்கள் பூமியில் உள்ள அவனது படைப்புகளை விடவும் மாபெரிய படைப்புகளாக இருக்கக் கண்டேன். அவர்கள் தொழுது கொண்டும், இறை நெருக்கத்தின் சாட்சியத்தில் திளைத்துக் கொண்டும், அவனது புகழை முழங்கிக்கொண்டும் இருந்தனர்.
பிறகு நானோர் ஒளிரும் உலகிற்குள் புகுந்தேன். அது என்ன என்று உசாவினேன். அவ்வுலகே அர்ஷ் எனப்படும் இறை விதானம் எனப்பட்டது. பரிமாணங்களற்ற ஒரு வெளியிடை ஏகி நித்தியத்தின் கதவுகளை அடைந்தேன். அங்கே நான் பாலைகளையும் பேராழிக் கடல்களையும் பார்த்தேன்.
நான் அழிந்துகொண்டிருந்தேன். நான் மருண்டிருந்தேன், மறைந்துகொண்டிருந்தேன். சத்தியப் பரம்பொருள் எங்கிருந்து வந்தான் என்று வியந்திருந்தேன். ஏனெனில், எங்கு என்பதோ எப்போது என்பதோ இல்லவே இல்லை.

## ரகசியங்களின் திரைநீக்கம் 8 - ரூஸ்பிஹான் பக்லி

( கூந்தல் கொண்ட வானவர்களை சக்தியிரவில் சொர்க்கத்தில் கண்டேன் )



சக்தியின் இரவை (லைலத்துல் கத்ர்) இறைவன் எனக்குத் திரைநீக்கி, மனிதவுருவில் வானவர்களைச் சிரித்தவர்களாகவும், ஒருவரை ஒருவர் வாழ்த்தியவர்களாகவும் இருப்பதைக் காண்பிக்காமல் ஒரு வருடமும் சென்றதில்லை.
அவர்களில் ஜிப்ரீலும் ஒருவர். வானவருள் அவரே அதியழகர். வானவர்களுக்குப் பெண்களது போன்ற கூந்தல் உண்டு. அவர்களின் முகங்கள் செந்நிற ரோஜாக்களைப் போல் இருக்கும். சிலரின் தலைகளில் ஒளியாலான

திரை இருக்கும். சிலரின் சிரங்களிலோ நவமணிகள் பதித்த தொப்பிகள், சிலரோ முத்துக்களாலான ஆடைகள் அணிந்திருப்பர். நான் அடிக்கடி அவர்களைத் துருக்கியரின் தோற்றத்தில் கண்டேன்.
நான் சுவன அதிபதியான ரிள்வாளையும் சொர்க்கத் தோட்டத்தையும் கண்டு அதனுள் நுழைந்தேன். குர்ஆனில் இறைவன் வருணித்திருப்பது போன்றே நான் அங்கு சுவன அழகிகளையும் சிறார்களையும் கண்டேன். நான் கோட்டைகளுக்குள் நுழைந்து ஓடைகளில் பருகினேன். சொர்க்கத் தோட்டத்தில் நான் கனிகளை ருசித்தேன். மேலும் அங்கே தர்பூஸ் பழமும் உண்டேன்.
இறைவிதானத்தையும் பாதபீடத்தையும் (அர்ஷ் வ குர்சீ )நான்அடிக்கடி கண்டேன். தெய்வீக ஆடைகட்டிய மேலான இறைவனைப் பார்த்தேன். அங்கி அணிந்ததொரு எஜமானன் போல் இருந்தான். அலனது வல்லமையிலும் மாட்சிமையிலும் நான் உருகினேன்.
நான் அவனை வல்லமை, அழகு ஆகிய பண்புகளுடன் கண்டேன். அவனுடன் அழகிய பெண்களைப் போன்ற வானவர்கள் இருந்தனர். அவர்களின் கூந்தல் மிக நீளமாக இருந்தது, அவற்றுள் ஒன்று இன்னும் வளர்ந்தால் பூமியைத் தொட்டுவிடும் என்பதுபோல் இருந்தது.
நான் கேட்டேன் , ''இறைவா! நீ எனது உயிரை எப்படிக் கைப்பற்றுவாய்?"
அவன் சொன்னான், ''நான் உன்னிடம் முன்னூழியின் கருவறைகளிலிருந்து வருவேன். எனது கையால் உனது உயிரைப் பற்றுவேன். அதனை நெருக்கத்தின் தலத்திற்கு எடுத்துச் செல்வேன். நெருக்கத்தின் பானத்தை உனக்குப் புகட்டுவேன்.
உனக்கென் அழகையும் வல்லமையையும் காட்டுவேன், நிரந்தரமாக, நீ விரும்பியபடி, திரையின்றி'. நான் ஜிப்ரீல், மீக்காயீல், இஸ்ராஃபீல், இஸ்றாயீல் (அலை ) ஆகியோரைக் கண்டேன். ஒளியாடை அணிந்து அவர்கள் எனது வருணிப்புக்கு எட்டாத பேரழகுடன் இருந்தனர்.
மரணித்தோரின் ஆன்மாக்களை விசாரணை செய்யும் இரு வானவர்களான முன்கர், நகீர் ஆகியோரை இரண்டு அழகிய இளைஞர்களாகக் கண்டேன். அவர்கள் எனது மண்ணறை மீது யாழிசைத்துக்கொண்டிருந்தனர். அவர்கள் சொன்னார்கள், 'நாங்கள் உனக்குக் காதலர்கள். உனது மண்ணறைக்குள் நாங்கள் இந்தத் தோற்றத்தில்தான் நுழைவோம்'.
அச்சம் என்னைவிட்டும் அகன்றுபோயிற்று.

## ரகசியங்களின் திரைநீக்கம் 9 - ரூஸ்பிஹான் பக்லி

அல்மகாமுல் மஹ்மூதா ( புகழோங்கும் தலம் )




முற்காலத்தில் அடிக்கடி எனது மனத்தில் ஒரு கேள்வி வந்திருந்தது: புகழோங்கும் தலம் ( அல்மகாமுல் மஹ்மூதா ) ( 17:79) என்பதன் அர்த்தம் என்ன ?
கரைகளே இல்லாத கடல் ஒன்றினை ஓரிரவு நான் இறை பிரசன்னத்தில் கண்டேன்.
இறைத்தூதர்களையும் அதில் ஆடையற்ற நிலையில் கண்டேன், அனைத்து வானவர்களையும், அனைத்து இறைநேசர்களையும் அப்படியே அதில் கண்டேன்,
விண்ணிலிருந்து அக்கடலுக்கு அடர் திரை ஒன்று தொங்கியிருக்கக் கண்டேன். அக்கடலில் ஆதம் நபியைக் கண்டேன். கடல் அவர்களின் நெஞ்சுவரை இருந்தது. இறைவனுக்கு நெருக்கமான எவரும் அந்தத் திரையைவிடவும் அவருக்கு மிகவும் நெருக்கமாகவே இருப்பார்,
ஆதம் நபியும் திருத்தூதர்களில் திடசித்தம் கொண்டோரும் (உலுல் அஸ்மி மினர் றுசுலி 46 : 38) அந்தத் திரைக்கு முன்னால் இருந்தனர். அத்திரைக்கு அப்பால் என்ன இருக்கிறது என்பதை அறிய நான் ஆவல் கொண்டேன்,

எனவே நான் அதன் விளிம்புக்குச் சென்றேன். நான் அதை அடைந்தபோது அதற்கு அப்பாலிருந்து பேரொளி ஒன்று வரக் கண்டேன்,
உச்சிமுதல் பாதம்வரை நிலா போன்றிருந்த ஒரு நபரைக் கண்டேன் அவரின் முகம் நிலவின் முகம்போல் இருந்தது. அனைத்து வானங்களைவிடவும் அவர் பெரிதாக இருந்தார். இறைப் பிரசன்னம் முழுவதையும் அவர் தன்னில் கொண்டிருந்தார்.
ஊசியின் முனை அளவுள்ள பொருள்கூட அவரில் இல்லாது விடுபட்டிருக்கவில்லை. அவரின் முகத்தில் இடையறாது, இறைப் பிரசன்னத்திலிருந்து ஒரு ஒளி வீசிக்கொண்டிருந்தது.
நான் அந்தத் திரைக்கு அப்பால் செல்ல முனைந்தேன். ஆனால் அது என்னால் முடியவில்லை. எனவே நான் எனக்கே சொல்லிக்கொண்டேன், 'இது என்ன இடம்? இந்த மனிதர் யார்?"
எனது பிரக்ஞையில் குரலொன்று ஒலித்தது, 'இது புகழோங்கும் தலம். அவர் முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவரது முகத்தில் நீ காண்பது சற்குணப் பேரொளி, திரையைத் தாண்டி உன்னால் வர முடிந்திருந்தால் மேலான இறைவனையே நீ திரையின்றிக் கண்டிருப்பாய்'.
மேலும் என்னிடம் சொல்லப்பட்டது, 'இது பிரத்தியேகமாக முஹம்மது நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்களின் தலமே ஆகும். வேறு எவருக்கும் இத்தலத்தில் பிரவேசிக்க உரிமை இல்லை".

## ரகசியங்களின் திரைநீக்கம் 10 - ரூஸ்பிஹான் பக்லி

( "நான் உனது" )



இன்மையின் படித்தரத்தில் நான் அழிக்கப்படுவதை நானே கண்டேன், நான் சொன்னேன், 'உன் படைப்புகளில் மிகவும் கீழானவன் நான். நான் உனது அடிமை உன் அடிமையின் மகன் உடனே, ஏகத்துவத்தின், வல்லமையின் தாக்குதல்கள் என் இதயத்தின் மீது இறங்கின.
அவன் சொன்னான், 'எனக்கு அடிமையாய் இருப்பதற்கு நீதான் யார்?'
நான் சொன்னதைப் பற்றி மேலான இறைவனின் முன் நான் வெட்கிப்போனேன்,
நான் சொன்னேன், 'நான் வேறென்ன சொல்ல? உனது ஆட்சிமையில் நானும் ஒரு பொருள் மாத்திரமே.
அவன் சொன்னான், ' நீ உன்னையும் அர்ஷ் முதல் பூமிவரை உள்ள நானல்லாத அனைத்தையும் மறந்துபோகும்வரை தீ ஒருபோதும் உண்மையான நம்பிக்கையாளன் ஆகமாட்டாய்',
மாபெரும் திரை ஒன்றில் நான் வியப்புற்று நின்றேன். என்னால் பேச முடியவில்லை. பிறகு நான் அவனை அவனது பெயர்கள் கொண்டு நினைவுகூர எண்ணினேன்.
அவன் எனக்குத் தன்னில் எனது அழிவையும் அவனுக்கான எனது ஏக்கத்தையும் கற்பித்தான்.
மறைவான பாலைவனங்களின் தோற்றத்தில் அவன் என்னிடம் தோன்றி, தன்னைச் சுட்டிக்காட்டி, 'நான் உனது' என்றான். நான் பரவசத்தில் ஆனேன். எனது இதயம் களித்தது.
பிறகு அவன் துருக்கியரின் கோலத்தில் வெளிப்பட்டான். அவனது அழகிலும் பொலிவிலும் எனது ஆன்மாவும் இதயமும் அழிந்தன.
பிறகு மீண்டும் அவன் என்னை அணுகிச் சொன்னான்." இங்கே நீ ஏகத்துவத்தின் வார்த்தைகளால் சஞ்சலம் கொள்ள மாட்டாய் ஏனெனில் இங்கே ஏகத்துவம் என்பது ஒரு தந்திரம். எனது அழகு பொலிவு ஆகிய பண்புகளில் நான் இருந்தபடி என்னை நீ தரிசித்தாய் "

குறிப்பு: இத்துடன் " ரகசியங்களின் திரைநீக்கம் " என்ற தொடர்பதிவு நிறைவு பெறுகிறது . இந்த புத்தகத்தின் பதிப்பாளரிடம் 10 பதிவுகளுக்கு மட்டுமே அனுமதி பெற்றிருந்தேன்.
மேற்கொண்டு நீங்கள் தொடர்ந்து படிக்க வேண்டுமாயின் இந்நூல் பெறுவதற்கு இதன் பதிப்பாளர் Name:Uvais Ahmad Seermai Mobile:+919944293740 அணுகவும்

நவீன காலச் சாதனங்கள் 1
(பொழுதுபோக்கு விளையாட்டு சாதனங்கள் )



சிறுவர்கள் விளையாடும் பிசினஸ், ஸ்டாம்ப், பல்லாங்குழி, பரமபதம் இவையெல்லாம் கூட்டல். கழித்தல், பெருக்கல்களை கற்றுக் கொடுக்கும் கணித புதிர் விளையாட்டுகள் விடை தெரியாதவற்றை விடை காண வழிவகுக்கின்றன. இது வாழ்க்கையின் புரியாத புதிர்களை கண்டடைய வைக்கிறது.
பரமபதம் என்பது கடல் சோவிகளைப் பயன்படுத்தி தாய விளையாட்டு ஆடுவது. தற்காலத்தில் அது ஏணியும், பாம்பும் கொண்ட ஒரு பாரம்பரிய பலகை விளையாட்டு. இரண்டுக்கு மேற்பட்டோர் விளையாடும் இவ்விளையாட்டில் பலகை சதுரக் கட்டங்களைக் கொண்டதாக இருக்கும்.
இவ்விளையாட்டு பண்டைய இந்தியாவில் கி.மு இரண்டாம் நூற்றாண்டளவில் விளையாடப்பட்டது. 1892 அளவில் இங்கிலாந்தில் அறிமுகமானது.

இவ்விளையாட்டு கூறும் வாழ்வியல் தத்துவம் நல்வினைகளதும், தீவினைகளதும் விதிப்பேறுகளைக் கொண்டது என்பதை குழந்தைகளுக்கு விளக்குவதாக அறிமுகம் செய்யப்பட்டிருக்கிறது என்பதை யார் அறிவர் ?
தாயக்கட்டை மற்றும் பல்லாங்குழி விளையாட்டையும் பாத்திமா (ரலி) அவர்கள் விளையாடியதாக வரலாற்றில் காண .முடிகிறது.
சரியான முறையில் புரிந்து கொண்டு, தெரிந்ததை கொண்டு தெரியாததை அறிவுப்பூர்வமாக யோசித்தாலே விடைகளை கண்டறிந்து விடலாம். மூளைக்கு வேலை கொடுக்கவும், மனதை மகிழ்ச்சி படுத்தவும் புதிர் கணக்குகள் விளையாட்டாக மட்டுமல்ல; வினையாகவும் பயன்படுத்தப்படுகின்றன.
பல்வேறு நாடுகளில் விளையாடப்பட்ட பல்லாங்குழிப் பலகைகள்
முதற் பூப்படைந்த பெண்ணின் தீட்டுக்குரிய காலத்திலும், கருவுற்ற பெண்கள் அமர்ந்து பொழுதுபோக்குவதற்கும் இந்த விளையாட்டை இப்பொழுது ஆடிப் பார்க்கிறார்கள்.
தமிழர்களின் பண்பாட்டு மரபினில் பெண்ணுக்குரிய சீர்வரிசைப் பொருள்களில் பல்லாங்குழியும் ஒன்றாக இடம் பெறுகிறது. பல்லாங்குழி ஆட்டம் பற்றி தேவநேயப் பாவாணர் 'தமிழ்நாட்டு விளையாட்டுக்கள்' என்ற தம் நூலில் முதன்முதலாக எழுதினார்.
பின்னர் பேராசிரியர் தாயம்மாள் அறவாணன் 'பல்லாங்குழி (திராவிட ஆப்பிரிக்க ஒப்பீடு)' என்ற விரிவான நூலை எழுதியுள்ளார். உலகெங்கிலும் பல்லாங்குழி ஆட்டம் சிற்சில மாறுதல்களுடன் பழங்குடிகளிடம் விளங்கி வருகிறது

பல்லாங்குழி என்பது மரம் அல்லது உலோகத்தால் ஆன ஒரு விளையாட்டுச் சாதனம். அதில் இரு வரிசைகளில் ஏழு குழிகள் இருக்கும். இரு வரிசையிலும் சேர்த்து பதினான்கு குழிகள் இருப்பதால் பதினான்கு குழி விளையாட்டு என்பதை பன்னாங்குழி என அழைத்தனர். பின்னர் பல்லாங்குழி என அழைக்கப்பட்டது.
பொதுவாக புளியங்கொட்டையை வைத்தோ அல்லது ஏதாவது பெரிய விதைகளையோ அல்லது சோளி (சோவி)களையோ ஆடுபொருளாக வைத்து இவ்விளையாட்டு ஆடப்படுகிறது.
நவீன யுகத்தில் பொழுதுபோக்கு விளையாட்டாக லெகோஸ் (legos) என்ற ஒன்றுடன் ஒன்று செருகிக் கொள்ளும் வண்ண வண்ண பிளாஸ்டிக் அடிப்படைத் துண்டுகள் 1949-ல் டென்மார்கைச் சேர்ந்த கிறிஸ்டியான்ஸன் என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டன.
உலகெங்கும் சிறுவர்கள் இவற்றைக் கூட்டி வைத்து பொம்மை நகரங்கள் கட்ட உதவிய இந்தத் துண்டங்கள் இதுவரை இரண்டாயிரம் கோடிக்கு மேல் உற்பத்தி செய்யப்பட்டு விட்டன. இன்றும் மாறாத முதலிடம் பெற்றிருக்கும் சிறுவர்களுக்கான இந்த விளையாட்டுப் பொருள்களில் இரண்டாயிரம் வகைத் துண்டுகள் உண்டு.

நூற்றாண்டின் பொழுதுபோக்கை ஆக்கிரமித்த மற்ற சாதனங்கள் கோடாக் பெட்டிக் காமிரா (1900), கோடாக்ரோம் ஃபிலிம் (1935), போலராய்டு காமிரா (1948), 1978-ல் ஜேவிசி விடியோ ரிக்கார்டர், 1982-ல் பிலிப்ஸ் சோனி கொண்டு வந்த வாக்மன் மற்றும் சிடி.

**நவீன காலச் சாதனங்கள் 2**

( ஜெம் க்ளிப் )




நபி (ஸல்) அவர்களுக்கு இறக்கியருளப்பட்ட திருகுர்ஆன் வசனங்கள் அவரது தோழர்களால் மனனம் செய்யப்பட்டும், காய்ந்த களிமண் சட்டங்கள், விலங்குகளின் தோல், எலும்புகள் மற்றும் ஓலைகள் ஆகியவற்றில் எழுதப்பட்டும் பாதுகாக்கப்பட்டன என்பதை வரலாற்றில் அறிய முடிகிறது.

ஓலைச் சுவடிகள் எவ்வாறு தயாரித்துப் பதப்படுத்தப்பட்டன என்பதை, "சுவடிகள் தயாரிப்பதற்கு முதலில் பனையோலைகளைத் தேவையான அளவில் கத்தரித்துக் கொள்வர். இவ்வாறு அளவு செய்து கொள்ளப்பட்ட ஏடுகள் மிக நன்றாக உலர்த்தப்படும். சற்றும் ஈரமின்றி நன்றாகக் காய்ந்த பிறகு இவ்வோலைகள் தண்ணீரில் இட்டு வேகவைக்கப்படும்.

இவ்வாறு இவை கொதிக்க வைக்கப்படுவதால் ஏடுகளில் ஒரு துவள்வு ஏற்படுகிறது. பிறகு ஓலைகள் மறுபடியும் நன்கு காயவைக்கப்படும், காய்ந்த பிறகு கனமான சங்கு அல்லது மழுமழுப்பான கல்கொண்டு ஓலைகளை நன்றாகத் தேய்ப்பார்கள். இப்படிச் செய்வதால் ஏட்டிற்கு ஒரு பளபளப்பு ஏற்படும்.

மேலும் நேராகத் தகடுபோல ஆகிவிடும். இப்போது ஏடு எழுதுவதற்கு ஏற்ற நிலையை அடைந்து விட்டது. இம்முறைக்கு ஏட்டைப்பாடம் செய்தல் அல்லது பதப்படுத்துதல் என்று பெயர்'' (சுவடிப் பதிப்புத் திறன்,2, ப.172) என்று தி. வே. கோபாலய்யரும்,

சில முறைகளில் ஓலைகளின் மேல்பரப்பு மிருதுவானதுடன் அதில் உள்ள லிக்னின் என்ற பொருள் வெளியேற்றப்படுகிறது. இதனால் ஓலைகள் விரைவில் சிதலமடைவதில்லை. ஒரிசாவில் ஓலை பாதுகாப்பிற்காக மஞ்சள்நீர் அல்லது அரிசிக்கஞ்சியில் அரைமணி நேரம் ஊறவைத்துப் பதப்படுத்தினர்'' (சுவடிச்சுடர், ப.429) என்று ப. பெருமாளும் குறிப்பிட்டுள்ளார்.

இவ்வாறு பதப்படுத்திய சுவடிகளில் ஒன்று அல்லது இரண்டு துளைகளிடுவர். இதனை 'ஓலைக்கண்' என்பர். ஒரு துளையில் கயிற்றை நுழைப்பர். கயிறு உருவாமலிருக்க ஈர்க்குடன் உள்ள ஓலையில் இரண்டு முக்கோணங்கள் உள்ளதாக கிளிமூக்குப் போலக் கத்தரித்துக் கட்டியிருப்பர். இதற்கு 'கிளிமூக்கு' என்று பெயர். மற்றொரு துளையில் ஒரு குச்சி அல்லது ஆணியைச் செருகியிருப்பர். இதற்குச் 'சுள்ளாணி' என்று பெயர்.

சுவடிகளுக்கு மேலும் கீழும் மரத்தாலான சட்டங்களை வைத்துக் கிளிமூக்குக் கட்டப்பட்ட கயிற்றினால் சுவடியை இறுக்கிக் கட்டி வைப்பர். இவ்வாறு சுவடி தயாரித்துப் பதப்படுத்தப்படுகிறது.

இன்று அலுவலகத்தில் எண்ணற்ற நூதன சாதனங்கள் வந்துவிட்டாலும் நூற்றாண்டின் மிக முக்கியமான அலுவலக கண்டுபிடிப்பாக கருதப்படுவது சாதாரண பேப்பர் க்ளிப் தான் என்றால் நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள்! நார்வையைச் சேர்ந்த ஜான் வாலர் குண்டூசியால் காகிதங்களை குத்தி குத்தி நொந்து போனார். அதையே குத்தாமல் வளைத்து போட்டு இடைவெளியில் செருகினால் என்ன என்று யோசனை செய்து அதனை 'பேட்டண்ட்' உரிமையை ஜெம் கம்பெனிக்கு சகாய விலைக்கு விற்றுவிட்டார். பாவம். அது இருக்கட்டும்.

இன்று ஜெம் க்ளிப் என்று அழைக்கப்படும் இந்த பேப்பர் க்ளிப்புகள் இதுவரை எத்தனை கோடானுகோடி உற்பத்தியாகி இருக்கின்றன என்பதற்கு கணக்கு வழக்கே இல்லை.

பழங்காலத்தில் ஓலைச் சுவடிகளை கட்டிவைக்க பயன்படுத்தப்பட்ட சுள்ளாணி மனிதகுலத்தின் மரபணுவில் தொடர்ந்து பதியப்பட்டு, அதன் பயன்பாடு ஜெம் க்ளிப்பாக இப்போது அலுவலங்களில் உருவெடுத்தாக நம்பப்படுகிறது !
அலுவலகத்தில் அதிகமாக பயன்படும் மற்ற கண்டுபிடிப்புகள் ஜெராக்ஸ் போட்டோ காப்பியர் (1959) ஜெராக்ஸ் கம்பெனியின் ஃபேக்ஸ் மெஷின் (1966) இண்டெல் கம்பெனியின் மைக்ரோப்ராஸஸர் சில்லு (1971) திரீ எம் கம்பெனியின் 'போஸ்ட் இட்' என்னும் பசை தடவிய குறிப்பு சீட்டுகள் (1980) ஆப்பிள் கம்பெனியின் மாக்கின்டாஷ் கணிப்பொறி (1986) இவை இந்த நூற்றாண்டில் அதிகம் பயன்பட்ட ஆபீஸ் சாதனங்கள்.
இந்த புதிய சாதனங்களெல்லாம் பழங்காலத்தில் என்ன பயன்பாட்டின் சாதனங்களாக இருந்ததோ என்று தெரியவில்லை.
ஆனாலும் சுள்ளாணியின் மறு உருவமாக ஜெம் க்ளிப்கள் இன்னும் புழக்கத்தில் உள்ளது.

**நவீன காலச் சாதனங்கள் 3**

( ரேஸர் பிளேடுகள் )




முதல் ரேஸர் பிளேடுகள் 1903 -ல் கில்லெட் என்பவர் "பயன்படுத்திப் புறக்கணிக்கும்" ரேஸர்க்கான ஐடியாவை எட்டு வருஷமாக யோசித்துக் கொண்டு வந்தார். முதல் உலகப் போரின் போது கில்லட் 35 லட்சம் ரேஸரும், மூன்றரை கோடி பிளேடும் தயாரித்து அமெரிக்க சோல்ஜர்களுக்கு விற்றார். இதுதான் இந்த நூற்றாண்டுக்கு இந்த பிரிவில் முதலிடம் பெறுகிறது .
முதல் ரேஸர் பிளேடுகள் போன்றவற்றை கண்டுபிடிக்கப்படுவதற்கு முன் ஆதிகாலத்தில் தலைமுடி இல்லாமல் மொட்டை போடுவதற்கும் , தாடி ஒதுக்கி அழகுப்படுத்துவதற்கு எப்படி கையாண்டிருப்பார்கள் ?
"நபி(ஸல்) அவர்களின் தலைமுடி தோள்புஜத்தில் படும் அளவுக்கு இருந்தது" அறிவிப்பவர்: அனஸ்(ரழி) நூல்: முஸ்லிம்
"நபி(ஸல்) அவர்களின் தலைமுடி இரண்டு காதுகளின் பாதி அளவு வரை இருந்தது. அனஸ் (ரழி) நூல்: முஸ்லிம்
மேற்கூறிய இரண்டு ஹதீஸ்களிலிருந்த "சில நேரங்களில் தோள் வரைக்கும், சில நேரங்களில் காதின் பாதியளவு வரைக்கும் நபி(ஸல்) அவர்கள் மட்டுமின்றி அவர்களின் அன்புத்தோழர்கள் நீண்ட தலைமுடி வளர்த்ததையும் அங்கீகாரம் செய்துள்ளனர்.
யாருக்கு முடி இருக்கின்றதோ அதற்கு அவர் மதிப்பளிக்க வேண்டும்" என்று நபி(ஸல்) அவர்கள் கூறினார்கள். அபூஹுரைரா(ரழி) நூல்: அபூதாவூது

முதல்ல தாடியின் வரலாறு ...ஹவ்வா (அலை) அவர்கள் நபி ஆதம் அலை அவர்களின் விலா எலும்பிலிருந்து படைக்கப்பட்ட போது அவர்களுக்கு மிக நீண்ட கூந்தலைக் கண்டு ஆதம் அலை அவர்கள் இறைவனிடத்தில் தனக்கும் இது போன்ற அழகிய அம்சம் கேட்க இறைவன் ஆதமுக்கு அழகான தாடியைக் கொடுத்தான் அந்த தாடியின் அழகில் ஹவ்வா சொக்கி போனார்கள்.
4000 வருடங்களுக்கு முன்பே தாடியை அழகுப்படுத்த கத்தியும் கத்தரிக்கோலும் பயன்படுத்தப்பட்டிருக்கவேண்டும் .
கத்தரிக்கோலுக்குப் பின்னால் இருக்கும் வரலாறு அல்லது முதல் கத்தரிக்கோல் எப்போது கண்டுபிடிக்கப்பட்டது என்பதைப் பற்றி நீங்கள் எப்போதாவது யோசித்திருக்கிறீர்களா?

முதல் கத்தரிக்கோல் சுமார் 3,000 முதல் 4,000 ஆண்டுகளுக்கு முன்பு எகிப்தில் பயன்படுத்தப்பட்டது. கத்திகளின் முடிவில் மெல்லிய, வளைந்த வெண்கலப் பட்டையால் இணைக்கப்பட்ட இரண்டு வெண்கல கத்திகளால் அவை செய்யப்பட்டன. கத்திகளை அழுத்துவது அவற்றை ஒன்றாகக் கொண்டு வந்து விடுவித்தது. இது "ஸ்பிரிங் கத்தரிக்கோல்" என்று அழைக்கப்படுகிறது, மேலும் இது இன்றுவரை செய்யப்பட்ட ஒரு பாணியாகும்.
நவீன கால கத்தரிக்கோலின் நேரடி மூதாதையர் (இரண்டு கத்திகள் ஒரு பிவோட்டில் இணைக்கப்பட்டுள்ளன) பண்டைய ரோமானியர்களால் கி.பி 100 இல் உருவாக்கப்பட்டது மற்றும் "பிவோட் கத்தரிக்கோல்" என்று அழைக்கப்பட்டது.

எகிப்து நாட்டில் 4000 வருடங்களுக்கு முன் இறந்த போன அரசர் ராணி போன்றவர்களின் உடல்களை மம்மிகளாக பாடம் செய்யப்பட்டு பிரமிடுக்குள் வைக்கப்பட்டு பாதுகாக்கப்படும்
அதாவது ஒவ்வொரு மம்மியிலும் தவறாமல் இறந்தவருக்கு உண்மையில் தாடி இருந்திருந்தாலும் இல்லாவிட்டாலும் தாடி இணைக்கப்பட்டது
ஏனென்றால் தாடி என்பது மன்னர்களின் அடையாளம் இதில் இன்னுமொரு வேடிக்கை என்னவென்றால் இந்தத் தாடி வீரம் அதிகாரம் ஆகியவற்றின் அடையாளமாகவும் கருதப்பட்டதால் ராணி ஹேட்ஷிப்சுட் ( Queen Hat Shepsut ) இறந்தபோது அந்த மம்மிக்கும் தாடி ஒட்டப்பட்டு அவள் ஒரு மகாராணி என்பது உறுதி செய்யப்பட்டது.
இப்போது ரேஸர் பிளேடுகளை ஓரம் கட்டிக்கொண்டு டிரிம்மர்கள் வந்து கொண்டிருக்கிறது.

## நவீன காலச் சாதனங்கள் 4

( கடல் பயணத்திற்கு தேவை நிற்காத நல்ல கடிகாரம்)




ஆரம்பகால கடற் பயணங்களில் கடல் வழி அறிவதற்கு நட்சத்திரங்களின் இருப்பைக் கொண்டு தடம் அறிந்து பயணித்தனர்.

وَعَلٰمٰتٍ وَبِالنَّجْمِ هُمْ يَهْتَدُوْنَ

(பகலில் திசைகளை அறிவிக்கக்கூடிய மலைகள் போன்ற) அடையாளங்களைக் கொண்டும் (இரவில்) நட்சத்திரங்களைக் கொண்டும் (பயணிகள்) தங்கள் வழியை அறிந்து கொள்கின்றனர். (குர்ஆன் : 16:16)
பின் பூமியின் அட்ச ரேகை கடக ரேகை என்று பூமி உருண்டை மீது கற்பனையாக கோடு வரைந்து இருப்பதை எல்லோரும் பூமி உருண்டை படங்களிலும் பார்த்திருப்போம். இந்த முறை கி.மு 3-நூற்றாண்டில் இருந்து வருகிறது. டாலமி (Ptolemy ) கிபி 150 முதல் உலக அட்லஸ் பதிப்பித்தார்.
கடலில் செல்லும் மாலுமிகளால் அட்சரேகை அளவுக்கு கடக ரேகையை கணக்கிட இயலவில்லை. அதற்கு காரணம் அவை இரண்டும் இணை கோடுகள் அல்ல. அவற்றுக்குள் உள்ள இடைவெளி பூமத்திய ரேகையில் மிக அதிகமாக துவங்கி வடக்கே செல்லச் செல்ல அவை நெருக்கமாகி துருவங்களில் புள்ளியாக ஒன்று சேர்ந்து விடுகின்றன.

பூமி ஒரு முறை சுழல்வதற்கு எடுத்துக் கொள்ளும் நேரம் 24 மணி நேரம் அதில் 360 டிகிரி கடக ரேகை பிரிப்பதால், ஒரு மணி நேரம் இடைவெளி என்பது 15° கடக ரேகை வித்தியாசம் என்பது தெரிந்தது. அது பூமத்திய ரேகையில் ஆயிரம் மைல் தூரத்துக்குச் சமம். ஒவ்வொரு தினமும் சூரியன் உச்சத்தில் இருக்கும் போது மதியம் மணி 12 என்று கடிகாரத்தை அமைத்துக் கொண்டார்கள்.

அப்போது அதே சமயத்தில் புறப்பட்ட இடத்தில் என்ன மணி என்று தெரிந்தால், ஒவ்வொரு மணிக்கு 15° என்று கணக்கிட்டு கடக ரேகை மதிப்பை கண்டுபிடித்து அட்சரேகையுடன் சேர்த்து இருப்பிடத்தை தெரிந்துகொள்வார்கள். இதற்கு ஒரு நல்ல கடிகாரம் தேவைப்பட்டது

அந்த காலங்களில் அந்த அளவுக்கு துல்லியமாக கடிகாரங்கள் இல்லை அவர்கள் காலத்து கடிகாரங்கள் தட்ப நிலைகளுக்கு ஏற்ப விரைந்து மெள்ளமாகவோ ஓடுகின்றன அல்லது நிற்கின்றன.
அதனால் நீண்ட நாள் பயணத்தில், புறப்பட்ட இடத்தில் அல்லது தெரிந்த மற்றொரு இடத்தில் சரியான மணி என்ன என்பதை அறியாமல் மாலுமிகள் பலர் திசை தவறினார்கள். கப்பல்கள் மூழ்கி, ஆயிரக் கணக்கானவர்கள் இறந்துபோனார்கள். கப்பல்கள் தரை தட்டின.

வாஸ்கோடகமா, மெகல்லன், சர் ஃப்ரானசிஸ் ட்ரேக் போன்ற தேர்ந்த மாலுமிகள்கூட, போக விரும்பிய இடங்களை அடைந்ததற்குக் கொஞ்சம் அதிர்ஷ்டத்தையும், கடவுளையும் காரணம் காட்டினார்கள்.
கடலில் செல்லும்போது நிற்காத ஒரு கடிகாரத்தைக் கண்டு பிடிப்பதுதான் அந்நாட்களின் தலையாய கவலையாக இருந்தது. அது ஈயத்தைத் தங்கமாக்குவது, தட்டினால் போதும் சும்மா ... சதா இளமைக்கு மருந்து, எப்போதும் இயங்கும் இயந்திரம். அவற்றைப் போல மிகப்பெரிய சவாலாக இருந்தது.
1687-ல் 'அடிபட்ட நாய் தத்துவம்' என்று ஒன்று பிரபலமாக இருந்தது. சர் கெனலம் டிக்பி (Sir Keneim- Digby) என்கிற ஒரு போலி டாக்டர், தெற்கு பிரான்ஸில் ஒரு அதிசய மருந்தைக் கண்டுபிடித்தார். இது ஒரு சூரணம். பொடி அதன் விசேஷம் என்னவென்றால் அதனால் வெகுதூரத்தில் இருப்பவர்களைக் கூடக் குணப்படுத்த முடியும். இதற்கு டிக்பி அனுதாப் பவுடர் (powder of Sympathy ) என்று பெயர் சூட்டினார்.

ஒவ்வொரு முறையும் கப்பலில் பயணப்படும்போது, ஒரு நாயைக் காயப்படுத்தி அழைத்துச் சென்றார்கள். கிளம்புவதற்குமுன், அதன் காயத்தைக் கட்டின துணியை ஊரில் உள்ள நம்பகமான ஆளிடம் கொடுத்துவிடுவார்கள், தினமும் அந்த ஊரில் இருக்கும் ஆசாமி. அந்தத் துணியின்மேல் அனுதாப பவுடரைச் சரியாகப் பகல் பன்னிரண்டு மணிக்குத் தெளிப்பார்.
அப்போது கடலில், கப்பலில் செல்லும் நாய் வலியில் ஊளையிடுமாம் ! உடனே நம்ம ஊரில் நேரம் பன்னிரண்டு இங்கே நேரம் நாலரை. அதனால் தம் கடகரேகை இத்தனை' என்று முடிவு செய்தார்கள். நாய்கள், அதுவும் கப்பலில் செல்லும் நாய்கள் அவ்வப்போது வீட்டு ஞாபகம் வந்து ஊளை இட்டால் ஆச்சரியமில்லை. அதை வைத்துக் கணக்கிட்ட மாலுமிகளும் திசை தவறியதில் ஆச்சரியம் இல்லை
இங்கிலாந்து அரசு 1714-ல் "கடகரேகை சட்டம்" ஒன்று இயற்றியது. இன்று ஏறக்குறைய பத்து லட்சம் டாலர் மதிப்புள்ள பரிசு தருவதாக அந்த அறிவித்தார்கள். கடலில் பயன்படக்கூடிய நல்ல கடிகாரம் கண்டுபிடிப்பவர்களுக்கு .

1714-ல் அறிவிக்கப்பட்ட பரிசு, 1773 -ல் தான் கொடுக்கப்பட்டது. அந்தப் பரிசை பெற்ற ஜான் ஹாரிசன் பெண்டுலம் இல்லாமல் கப்பலின் ஆட்டத்திற்குக்கேற்ப ஈடு கொடுத்து தட்பவெப்பங்களுக்கு ஏற்ப சுருங்கி நீளும் உலோகங்களை நுட்பமாக ஜோடி சேர்த்து அருமையான கடிகாரத்தை வடிவமைத்திருந்தார்.
ஹாரிசன் அதிகம் படித்தவர் அல்ல அதனால் அவருக்கு பரிசு கொடுக்க அந்தக்கால வானவியல் நிபுணர்களும் படித்தவர்களும் தயங்கினார்கள். ஏறக்குறைய சாகும் தருவாயில் அவருக்கு அந்த பரிசு கொடுத்து தொலைக்கப்பட்டது. காரணம் ஹாரிசனின் கடிகாரங்கள் சரியாக வேலை செய்து மாலுமிகளுக்கு வழிகாட்டின.
இன்று பர்மா பஜாரில் 100 ரூபாய்க்கு கிடைக்கும் டிஜிட்டல் கடிகாரம் ஹாரிஸனின் கடிகாரத்தை விட பல மடங்கு நுட்பமானது. எல்லா விஞ்ஞான கண்டுபிடிப்புகளும் இப்படி தடுக்கி தடுக்கி தான் உன்னதம் பெறும். அறிவியல் அறிவு முன்னேற முன்னேற இந்த 'உன்னத இடைவெளி' சுருங்கி வருகிறது.

## நவீன காலச் சாதனங்கள் 5

( இன்டர்நெட் எழுத்து )

'அமெரிக்காவில் சிறு பத்திரிகைகளை 'ஸ்மால் பிரஸ்' என்கிறார்கள். சென்ற இருபத்திரண்டு வருடங்களாக புஷ்கார்ட் பிரைஸ் (Pushcart Prize) என்ற பெயரில் சிறு பத்திரிகைகளிலிருந்து சிறந்த படைப்புகளைத் தேர்ந்தெடுத்து வருடா வருடம் நேர்த்தியாகப் புத்தகம் வெளியிடுகிறார்கள்.
உதாரணமாக, 1997-ல் நாற்பத்துநான்கு பத்திரிகைகளிலிருந்து அறுபத்தொன்பது படைப்புகளைத் தேர்ந்தெடுத்துப் பிரசுரித்திருக்கிறார்கள்.
இப்போதெல்லாம் இன்டர்நெட் வந்த பிறகு, அதில் மிக அதிகமாக படைப்புகள் தரப்படுகின்றன. புஷ்கார்ட் தொகுப்பாசிரியர் பில் ஹெண்டர்ஸன் இன்டர்நெட் படைப்புக்கள் பற்றிச் சொல்லியிருப்பது கருத்தாழமிக்கது.
"சைபர்வெளியில் உலவும் ஆரவாரங்களையும் படித்துத் தேர்ந்தெடுத்து வெளியிட வேண்டும்.' என்று போன வருடம் ஒருவர் சொன்னார்.
" நம்முடைய கலாசாரத்தை ஆக்கிரமிக்கும் இந்த எலெக்ட்ரானிக் புரட்சியின் 'ப்ளக்கைப் பிடுங்கி விட விரும்புகிறேன். ஏதோ ஒரு வேர்டு ப்ராசசரில் (சொல் தொகுப்புக்கான மென் பொருள்) எதையாவது எழுதி அடுத்த நிமிஷமே அதை இன்டர்நெட்டில் போட்டுவிட்டுத் தங்கள் படைப்பு பிரசுரமாகிவிட்டதாக முதுகைத் தட்டிக்கொன்பவர்கள் தம்மை தாமே மோசமாக ஏமாற்றிக் கொள்கிறார்கள்.

இலக்கியத்தில் உடனடி திருப்தி என்பது முடியாது, கிடையாது. அற்புதமாக, சிறப்பாக எழுத சிறப்பாக பழக வேண்டும். எழுதி எழுதித் திருத்தி எழுதி, பிரசுரத்துக்கு அனுப்பி, நிராகரிக்கப்பட்டு அந்த வேதனைக்குப் பின்தான் நல்ல இலக்கியம் உருவாகும்.
மாக்கின் டாஷ் கணிப்பொறியில் எதையாவது எழுதிப் பதிப்பிப்பது இலக்கிய அந்தஸ்துக்கு உத்தரவாதமில்லை. வார்த்தைகளைத் தொகுப்பது அவற்றுடன் விளையாட அல்ல. வார்த்தைகள் நமக்குக் கிடைத்த சிறந்த பரிசுப் பொருள்கள். நாம் பேசவும் பிரார்த்திக்கவும் பயன்படுத்தும் அற்புதங்கள். அவை மூலம் உண்மையை அணுகுகிறோம்.

வார்த்தைகள் சாப்பிடும் பண்டங்கள் அல்ல. ஒரு இயந்திரம் உங்கள் வார்த்தைகளைத் தொகுக்க முடியாது. உங்கள் கனவுகளையும் காட்சிகளையும் உண்டாக்க முடியாது. மெஷின்கள் உங்கள் படைப்புகளைப் பிரசுரத்துக்கேற்றவாறு மாற்ற முடியாது. எதையாவது எழுதி இன்டர்நெட்டில் உடனடியாகப் பதிப்பது சுலபம்தான். ஆனால், அவ்வளவும் சைபர்காஸ் (cybergas),
ஹெண்டர்ஸன் சொல்வதன் சாரம் இதுதான் கணிப்பொறியில் சொல் தொகுப்பது, இன்டர்நெட்டில் பதிப்பிப்பது எல்லாம் நல்ல நூதனமான பேனாக்கள் போல. நல்ல எழுத்துக்கு, நல்ல பேனா மட்டும் போதாது. அந்த எழுத்தில் ஆன்மா உறைந்திருக்க வேண்டும்

ஆன்மா உறைந்திருக்கும் ஓர் இலக்கியத்தைப் பற்றி சொல்றேன்.
மஸ்னவி (Masnavi) என்பது ஜலாலுத்தீன் முகம்மது பல்கி சுருக்கமாக ரூமி என்றும் அழைக்கப்படும் சூபி ஞானி பாரசீக மொழியில் எழுதிய ஒரு மிகப்பெரிய கவிதை ஆக்கமாகும்.
மஸ்னவி நூலானது சூஃபித்துவத்தின் மிகவும் செல்வாக்குமிக்க படைப்புகளில் ஒன்றாகும், இது பொதுவாக "பாரசீக மொழியின் குர்ஆன்" என்று அழைக்கப்படுகிறது. இதை பல வர்ணனையாளர்கள் உலக இலக்கியத்தில் மிகப் பெரிய மருளியலான கவிதை என்று கருதினர்.

மஸ்னவி என்பது ஆறு கவிதை நூல்களின் வரிசையாகும். இவை சுமார் 25,000 வசனங்கள் அல்லது 50,000 வரிகளைக் கொண்டுள்ளன. இறைவனை உண்மையாக நேசிப்பதன் இலக்கை எவ்வாறு அடைவது என்பதை சூஃபிக்களுக்கு கற்பிக்கும் ஒரு ஆன்மீக உரையாக இது உள்ளது.
மஸ்னவி கவிதைகளை ரூமி தனது வாழ்க்கையின் இறுதி காலத்தில் படைக்ககத் தொடங்கினார். 1258 ஆம் ஆண்டில் தனது 54 வயதில் முதல் புத்தகத்தை சொல்லச் சொல்ல எழுத வைக்கத் தொடங்கினார். அதன்பிறகு 1273 இல் அவர் இறக்கும் வரை வசனங்களை இயற்றினார். ஆறாவதும் இறுதி புத்தகம் முழுமையடையவில்லை. ரூமி தனது விருப்பமான சீடரான ஹுசாம் அல்-தின் சலாபியின் வேண்டுகோளின் பேரில் மஸ்னவியின் வசனங்களை கூறத் தொடங்கினார் என்று ஆவணப்படுத்தப்பட்டுள்ளது.
ரூமியைப் பின்பற்றுபவர்கள் பலரும் சனா மற்றும் 'அத்தாரின் படைப்புகளை பாராயணம் (மனப்பாடம்) செய்வதைக் கவனித்தார். இதனால் ரூமி சனா மற்றும் 'அத்தாரின் பாணியில் ஒரு படைப்பை உருவாக்கத் தொடங்கினார். ரூமி வசனங்களை ஓதும் கூட்டங்களில் இந்த மனிதர்கள் தவறாமல் கூடியதாகவும், சலாபி அவற்றை எழுதி அவரிடம் திரும்பப் படித்து காட்டியதாகவும் கூறப்படுகிறது.
ஒவ்வொரு புத்தகமும் சுமார் 4,000 வசனங்களைக் கொண்டுள்ளது மேலும் ஒவ்வொரு நூலும் தனியாக அறிமுகம், முன்னுரை ஆகியவற்றைக் கொண்டுள்ளது. ஆறாவது தொகுதியானது ரூமியின் மரணத்தினால் நிறைவடையவில்லை என்பதுடன், அதன்பிறகு மற்றொரு தொகுதி எழுதப்பட்டிருக்கலாம் என்பன போன்ற கூற்றுகள் உள்ளன.
காலம் கடந்தும் ரூமியின் இந்த இலக்கியம் உலகை இன்னும் வலம் வந்து கொண்டுதான் இருக்கிறது . ரூமியின் பெயரை இந்த உலகம் இன்னும் உச்சரிச்சரித்துக் கொண்டேதான் இருக்கிறது. ஆனால் இன்டர்நெட் எழுத்தாளர்கள் காணாமல் போய்விட்டார்கள் !
இலக்கியத்தில் இதுதான் சத்தியத்திற்கும் அசத்தியத்திற்கும் உள்ள உதாரணம் .

**நவீன காலச் சாதனங்கள் 6**
( வருங்கால குவாண்ட்டம் கம்ப்யூட்டர் )




தற்கால கம்ப்யூட்டர்களில் உள்ள சில்லுகளில் அடிப்படை கோட்பாடு மிக எளிமை ஒரு சுவிட்ச். வீடுகளில் உள்ள லைட் சுவிட்ச் போல கம்ப்யூட்டர் உள்ளத்தில் இவையும் ஏற்றி (ON), அணைக்கக்கூடிய (OFF) இருநிலை சாதனங்கள். ஆனால், மிகச் சிறியவை. இதை ஃபீல்டு எஃபெக்ட் டிரான்ஸிஸ்டர் என்பார்கள்.
அவற்றின் ஊடே மின்சாரம் பாய்வது, தடுப்பது என இரண்டு நிலைகள் உண்டு. அதை 1, 0 என்று இரு இலக்கங்களாகக் குறிப்பிடுகிறார்கள்.
ஆதாரமாக, இந்த இரண்டு நிலை சுவிட்சுகளை வைத்துக் கொண்டுதான் கம்ப்யூட்டர்களின் மகத்தான சாம்ராஜ்யமே அமைக்கப்பட்டிருக்கிறது. கால்-அங்குல சதுரத்தில் லட்சக்கணக்கில் ஏன், கோடிக்கணக்கில் சுவிட்ச் அமைக்கக்கூடிய எல்எஸ்ஐ டெக்னாலஜியை அவர்கள் உன்னதப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.
இன்டெலின் பெண்டியம் போன்ற சில்லுகளில் உள்ளே பார்த்தால் இப்படி லட்சக்கணக்கான சுவிட்சுகள்தாம். ( ஆன் / ஆப் )
கணிப்பொறியாளர்களின் வருங்கால கனவு "குவாண்ட்டம் கம்ப்யூட்டிங்" ( இது அழகான அலாவுதீன் ஜீனி பூதம்) என்பதில் லட்சக்கணக்கான எலெக்ட்ரான்களின் ஒட்டு மொத்தமான மின்போக்கைக் கட்டுப்படுத்துவதற்குப் பதிலாக, ஒவ்வொரு எலெக்ட்ரானையும் இரண்டு நிலைப்படுத்த இயலுமா என்று யோசித்து வருகிறார்கள்.
புரியவில்லையா ? விளக்கமாகச் சொல்றேன்.
எலெக்ட்ரான் மிகமிக நுட்பமான ஒரு மின்துகள். ஒரு சக்தித் தீற்றல், அதற்கு ஸ்பின் அதாவது தன்னைத்தானே சுழன்றுக் கொள்ளும் ஒரு குணம் இருக்கிறது. நீங்கள் விட்ட பம்பரம் போல் சுழற்சி.
அந்தச் சுழற்சி வலப்புறச் சுழற்சியாக இருக்கலாம்...கடிகாரமுள் போல. அல்லது இடப்புறமாக இருக்கலாம். கஃபாவை வலம் சுற்றுவது போல..அந்தந்த எலக்ட்ரானை எந்த புறம் சுழற்சி செய்ய வேண்டும் என்பது இயற்கை வகுத்த நியதி.
இந்தச் சுழற்சியை எப்படியாவது கட்டுப்படுத்த முடிந்தால் வலம், இடம் என்பதை 1, 0 என்று அந்த ஒரே ஒரு எலெக்ட்ரானிலேயே பதிக்கலாம். அதாவது அந்த ஒரு எலக்ட்ரானை, " நீ வலதாகவும் சுற்ற வேண்டும்". அதே எலக்ட்ரானை, " நீ இடதாகவும் சுற்றவேண்டும்" என்று மனிதன் கட்டளை இடுவது.
இதனால் என்ன விளைவு ?
ஒரு அணுவில் அல்லது மாலிக்யூல் என்னும் கூட்டணுவில் கோடிக்கணக்கான பிட்டுகளை கொண்டு உலகையே எழுத முடியும், மாற்றமுடியும். இதுவரை கண்டுபிடிக்கப்பட்ட நிறைய விஞ்ஞான கருவிகளை புறந் தள்ள வேண்டியது வரலாம். இதுதான் குவாண்ட்டம் கம்ப்யூட்டிங்கின் ஆதாரத் தத்துவம்.
இப்போதுள்ள மரபார்ந்தக் கணினிகள் இரு நிலைகளான, 0 மற்றும் 1 நிலைகளைக் கொண்டு தகவலைச் சேமிக்கவும் பரிமாறவும் செய்கின்றன.
அதே போல, குவாண்டக் கணினிகளும் இரு "நிலைகளையும், அதுமட்டுமல்லாது, இரண்டுக்கும் மேற்பட்ட நிலைகளையும் கொண்டு இயங்கக் கூடியன.
மேலும் மரபார்ந்தக் கணினிகள் காந்தத்தகடுகளின் மூலமாகவும், ஒளித்தட்டுகளின் மூலமும் சேதிகளைச் சேமிக்கும்,
குவாண்டக் கணினிகளில் கணினியின் தன்மையைப் பொறுத்து, ஒளிவடிவிலோ, அணு, அணுக்கரு, அல்லது குவாண்டத் துகள்களின் மின்னியல் காந்தத் தூண்டலின் நிலைகளைப் பொறுத்து, அதாவது, மின் மற்றும் காந்தத் திருப்புத் திறன்களைப் பொறுத்து அமையும்.

இந்த ஐடியாவை முதலில் கொடுத்தது ரிச்சர்டு ஃபேயன்மன் என்னும் நோபல் விஞ்ஞானி 1981-லேயே இதன் சாத்தியங்களைச் சொல்லியுள்ளார். இதுவரை, அது நடைமுறையில் இல்லாத சித்தாந்தமாகவே, தியரியாகவே இருந்து வந்தது. வரும் காலங்களில் சாத்தியம் ஆகும் போலத் தெரிகிறது.
ஃபோட்டான் என்னும் வெளிச்சத் துணுக்குகளுக்குக் கூட இந்த ஸ்பின் கழற்சி உண்டு எனவே, ஒரு அணுவின் அல்லது கூட்டணுவின் எலெக்ட்ரானை காந்தப்புலத்தின் வழியாக அனுப்புவதன் மூலமும் போலஎரஸ் செய்யப்பட்ட கண்ணாடி வழியாக அனுப்புவதன் மூலமும் அவற்றின் சுழற்சியை மாற்ற முடியும்.
ஒவ்வொரு எலெக்ட்ரானையும் இரு நிலைப்படுத்த வலதாகவும், அதே எலக்ட்ரானை இடதாகவும் சுற்ற வைக்க இயலுமா ? இது பற்றி குர்ஆனில்

قَالَ فَمَنْ رَّبُّكُمَا يٰمُوْسٰى
(இதற்கு ஃபிர்அவ்ன்) “மூஸாவே! உங்களிருவருடைய இறைவன் யார்?” என்று கேட்டான்.
قَالَ رَبُّنَا الَّذِىْۤ اَعْطٰى كُلَّ شَىْءٍ خَلْقَهٗ ثُمَّ هَدٰى
“ஒவ்வொரு பொருளுக்கும் அதற்கான அமைப்பை வழங்கி பின்னர் வழிகாட்டியிருக்கிறானே அவன்தான் எங்கள் இறைவன்” என்று கூறினார். (குர்ஆன் : 20:49,50)
இந்த வசனத்தில் "கல்கஹு " என்பதற்கு அதற்குரிய உருவம் சுய இயல்பு எனக் கூறப்படுகிறது
"எங்களது றப்பு சிருஷ்டிகளிலுள்ள சகல வகைகளுக்கும் அவற்றிற்குரிய உருவங்களையும், அதற்கென இயல்பான சுய குணங்களையும் தகுதியான முறையில் கொடுத்து, அதனால் அவற்றிலிருந்து உண்டாகும் காரியங்களின்பால் அவை ஒவ்வொன்றையும் அதற்கென ஈடுபடுத்தினானே அவன்" என்பது ஹளரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களது விடையின் கருத்து.
அதாவது சிருஷ்டிப் பொருள் யாவற்றுக்கும் ஜீவியமும், ஆன்மாவும் இருந்து வருகின்றன. ஆனால் இவ்வித ஜீவியமும் ஆன்மாவும் புறத்தில் நேரடியாக தெரியவரும். இவற்றைத்தான் ஜீவ வர்க்கத்தில் சேர்த்திருக்கிறார்கள். இவற்றைத் தவிரவுள்ள மற்றவைகளுக்குள்ள ஜீவியமும், ஆன்மாவும் இவைகள் நேரடியாகக் காணப்பட மாட்டா. இவ்வாறான ஜீவியத்தையும், ஆன்மாவையும் தாது வர்க்கம் (அணு) மற்றும் தாவர வர்க்கங்களில் காணலாம். இதனால்தான் இறைவன் எப்பொருளும் அவனுடைய புகழைக் கொண்டு தஸ்பீஹ் செய்யாமல் இல்லை என்று கூறியுள்ளான். (57:01) (59:01) (61:01)

எனவே, சிருஷ்டிகளில் எப்பொருளையும் அதனதன் அறிவுக்கும். ஆன்மாவுக்கும், வாழ்வுக்கும் இயல்பான சுய குணங்களையும் தக்கவாறு அல்லாஹுதஆலாவுடைய " மஅரிஃபத்" என்னும் ஞானத்தின்பால் வழி காட்டாமல் இல்லை எனப் பெரியார்கள் கூறியிருக்கிறார்கள்.
ஒவ்வொரு பொருளுக்கும் அதனுடைய உருவத்தை அதாவது எதற்காக சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறதோ அதற்குரிய திறமையைக் கொடுத்திருக்கிறான். பின்னர் நேர்வழி காட்டினான்.
அதாவது எதற்காக அதனைச் சிருஷ்டித்தானோ அதை இலேசாக்கிக் கொடுத்தான். வலது புறமாக சுற்றும் எலக்ட்ரான் , இடது புறமாக சுற்றும் எலட்க்ரான் என்று இரு வகை எலக்ட்ரான் தனித்தனியாக சுழல்வதை அவைகளுக்கு இலேசாக்கி கொடுத்தான்.
ஆனால் மனிதன் அந்த ஒரு எலக்ட்ரானை வலதாகவும் சுற்று, இடதாகவும் சுற்று என்று கஷ்டப்படுத்தினால் என்ன நிகழும் என்பதை அதைப் படைத்த அல்லாஹ்வே அறிவான்.
அல்லாஹ் நாடினால் அலாவுதீனின் - ஜீனி பூதமாக குவாண்டம் கம்ப்யூட்டிங் நம் ஒவ்வொருவருக்கும் கிடைக்கப் பெறலாம்.

## நவீன காலச் சாதனங்கள் 7

( ரிமோட் கண்ட்ரோல்)



டிவி-யில் ரிமோட் கண்ட்ரோல் என்கிற வஸ்து இருக்கிறதே...சின்னக் குழந்தைக்கு தாய்ப்பால் மறப்பதற்கு முன்னாலேயே அதை இயக்கத் தெரிந்துவிடுகிறது.
இப்போதெல்லாம் ஃப்ரிஜ், ஏ.ஸி., வாஷிங்மெஷின், ஏன்... ஷேவிங் ரேசருக்குக் கூட ரிமோட் வந்துவிட்டது.

காரை வாசலிலிருந்தே திறக்க, அதில் உட்காரும் முன்னே ஏ.ஸி. போட்டுவைக்க... எல்லாவற்றுக்கும் வந்து ரிமோட். அதுவும் blue tooth வந்தபின் நம் வீட்டு சாதனங்களை வெளிநாட்டில் பிளேன் பிடிக்கும் முன்பிருந்தே இயக்கலாம். உலகெங்கிலும் அதன் இன்ஃப்ரா ரெட் கதிர்களின் ரகளைதான்.
இவற்றில் தொலைக்காட்சிப் பெட்டியின் ரிமோட் கண்ட்ரோல்தான் நம் தின வாழ்க்கையில் மூச்சு விடுவதற்கு அடுத்தபடியான விஷயமாகிவிட்டது.
ரிமோட் கண்ட்ரோலைப் பற்றி ஆராய்ச்சிக் குறிப்பு ஒன்று உள்ளது. ஆண்கள் அதிகமாக ரிமோட்டில் சேனல் தாவுகிறார்களாம் (85 விழுக்காடு) ஏதாவது ஒரு சேனலில் தங்கிப் பொறுமையாக பார்க்கிற வழக்கம் பெண்களிடம்தான் அதிகமாம்.

சாதாரணமாக யாராவது என்னை பார்க்க வந்தால் ரிமோட்டை இயக்கி முதல் டிவியை அணைத்து விடுவேன். இதை எல்லோரும் செய்வதில்லை. அவர்களைப் பார்க்கச் சென்றால், பேசிக்கொண்டே ஓரக்கண்ணால் சேனல் மேய்வார்கள். நம்மையும் எந்த ஒரு சேனலையும் 10 செகண்டுக்கு மேல் பார்க்க விடமாட்டார்கள்.
பிரபுதேவா ஆடிக்கொண்டிருக்கும்போது, சிங்கம் மானைத் துரத்த, சினேகா சிரிக்க, காஷ்மீரில் மற்றொரு தீவிரவாதி குண்டடிப்பட்டு விழ, எட்வர்டு ஹீத் பேசுவதை கேட்பதற்கு முன் சதாம் உசேன் வெங்காயத்தை பொடிப்பொடியாக நறுக்கி வைத்துக் கொள்வார். தலை சுற்றும். கன்னம் கன்னமாக இழைத்து ரிமோட்டை பிடுங்கிக் கொள்ளலாமா என்று ஆத்திரம் ஆத்திரமாக வரும்.
ஆண்கள் ஏன் அடிக்கடி சேனல் மாற்றுகிறார்கள் என்பதற்கு பல சுவராசியமான காரணங்கள் சொல்லப்படுகின்றன. அவற்றில் எட்டு.

1) ரிமோட் கண்ட்ரோல் என்பது ஆண்களுக்கு ஒரு விதமான சக்தி தருகிறது" நான் தான் குடும்பத் தலைவன் எனக்கு கீழ்படிந்து தான் டிவி உட்பட எல்லோரும் இயங்க வேண்டும் என்கிற ஆணாதிக்கச் செயல் என்கிறார்கள்.
2) ஒரு மனைவியின் கூற்றின்படி, ''என் கணவரால் என்னை கண்ட்ரோல் பண்ண முடியவில்லை. ரிமோட் கண்ட்ரோலை இம்சை செய்கிறார்"
3) ஆண்களின் ஆதி கால வேட்டையாடும் குணத்தின் நவீன வடிவம் இது. கையில் ரிமோட் வைத்திருக்கும் ஆண் சுவராசியமான இறைகளைத் தேடும் வேட்டை மிருகம்.
4) ஆண்களுக்கு உடனடியாக காரியம் நடக்க வேண்டும். மேலும் கொஞ்சம் சந்து கிடைத்தால் 'அங்கே என்ன ஓடிக்கொண்டிருக்கிறது அதை தவற விடக்கூடாது' என்று எட்டி பார்க்கும் ஆசையும் உண்டு.
5) எப்போதுமே ஆண்களுக்கு கொஞ்சம் அலையும் ஆசையும், இருக்கிறதை விட்டுப் பறக்கிறதை பிடிக்கும் ஆசையும் உண்டு. "இதைப் பார்த்தாகிவிட்டதே....வேறு ஏதாவது கிடைக்கிறதா பார்ப்போம் " என்கிற நப்பாசை.
6) ஒரு எலி பூனை நாய் போல பாவ்லாவியன் ரிஃப்ளக்ஸாக (pavlovian Reflex) பட்டனை அழுத்தும் போதெல்லாம் சந்தோஷம் கிடைத்தால், அதிகம் சேனல் மாற்ற மாட்டார்கள். ஆனால் அப்படி கிடைப்பதில்லை. அதனால் சந்தோஷத்தை தேடி இன்னும் இன்னும் தாவல்.
7) ரிமோட் கண்ட்ரோல் என்பது ஒரு கணவன் தன் மனைவியை சுலபமாக வெறுப்பேற்றுவதற்கான சாதனம்.
😎ஒரு மனைவி எழுதியிருந்தார் ..'என் கணவனுக்கு பக்கவாதம் வந்து மெல்ல மெல்ல செயலிழந்து கொண்டிருந்தார். கடைசி வரை அவரால் தன்னிச்சையாக செய்ய முடிந்த காரியம், ஒரு பென்சிலை வாயில் வைத்துக் கொண்டு மிகுந்த சிரமத்துடன் ரிமோட்டின் பட்டனை அமுக்குவதே. அந்த காரியம் அவருக்கு மிகவும் பிடித்திருந்தது. அதையும் இழந்த பின் அவர் இறந்து போனார்.
நீங்கள் ஒரு சேனலில் சராசரி எத்தனை நேரம் தங்குகிறீர்கள் என்பதை வைத்து, உங்கள் ஆணாதிக்க சுபாவத்தை கணக்கிடலாம்.
மனிதனைப் பற்றி அவனைப் படைத்த இறைவனும்...
وَيَدْعُ الْاِنْسَانُ بِالشَّرِّ دُعَآءَهٗ بِالْخَيْرِ‌ وَكَانَ الْاِنْسَانُ عَجُوْلًا
மனிதன் நன்மையைக் கோரி பிரார்த்திப்பதைப் போலவே (சில சமயங்களில் அறியாமையினால்) தீமையைக் கோரியும் பிரார்த்திக்கிறான். ஏனென்றால், மனிதன் (இயற்கையாகவே பொறுமையிழந்த) அவசரக்காரனாக இருக்கிறான். (குர்ஆன் : 17:11)
கட்டுரை மட்டும் சுஜாதா - கற்றதும் பெற்றதும் (2) - "ஆண்கள் ஏன் அலைகிறார்கள்

**நவீன காலச் சாதனங்கள் 9**
( கனவு வழியே காலம் எந்திரம் பயணிக்கிறது )



மனித சரித்திரத்தில் கனவுகள் முக்கியம். அவை எதனால், எதற்காக வருகின்றன என்பது பற்றி உளவியல் ஆராய்ச்சியாளர்கள் பல காரணங்கள் சொல்கிறார்கள். இதுவரை யாரும் தெளிவு பெறவில்லை.
ஃபிராய்டு கனவுகளை அக்கக்காக, அலசியிருக்கிறார். கனவுகள் உள்மன விருப்பங்கள், இச்சைகள் என்கிறார். 'அவைகள் இன்று நேற்றைய இச்சைகள் மட்டும் அல்ல...எப்போதாவது ஏற்பட்ட ஒரு ஆசையாகவும் இருக்கலாம்' என்கிறார்.

கனவுகள் அவசியம் என்று ஆராய்ச்சியாளர்கள் நிரூபித்திருக்கிறார்கள். சில ஆய்வாளர்கள் கனவு எதற்கோ தேவை என்பது மட்டும் புரிகிறது. ஆனால் எதற்கு என்றுதான் தெரியவில்லை.
ஒரு சித்தாந்தத்தின்படி கனவுகள் மூளையில் உள்ள வேண்டாத விஷயங்களைத் துடைப்பதற்கு பயிற்சிகள் என்று சொல்கிறார்கள். இந்த வகையில் சில ஆச்சரியமான கனவுகளுக்கு நம்மால் காரணம் காட்ட முடியும். ஆனால், சில கனவுகள் இம்மாதிரி விளக்கவே முடியாத ஆச்சரியங்கள் கொண்டது.
உதாரணமாக, திருமதி பாட்ரிக் காம்பெல் நல்ல நடிகை... முன்னாள் அழகி. அவள் உடல் நலமில்லாது படுத்த படுக்கையாக இருக்கும்போது ஸேரா ஆல்குட் என்னும் இளம் நடிகை அவளுக்கு உதவி செய்தாள். குணமானதற்கு நன்றியாக திருமதி காம்பெல், ஸேராவுக்கு ஒரு படத்தைப் பரிசாகக் கொடுத்தாள். ஒரு நாரையின் வாட்டர்கலர் சித்திரம் அது. அதன்பின் திருமதி காம்பெல் பிரான்ஸுக்குப் போய்விட்டாள்.
ஸேரா, ஹாலிவுட் போய்விட்டாள். வருஷம் 1940. ஸேரா ஒரு புதிய வீட்டில் குடிபுகுந்தாள். அங்கு அவளுடைய முதல் கனவில் திருமதி காம்பெல் வந்தாள். வினோதமான கனவு. “கல்லறையிலிருந்து நான் கொடுத்த பரிசைக் கண்டுபிடித்தாயா? படத்துக்குப் பின்னால் பார்த்தாயா?" என்று காம்பெல் கேட்பது போல் கனவு, ஸேராவுக்கு அந்தக் கனவு வியப்பூட்டியது. கல்லறையிலிருந்தா ?

திருமதி காம்பெல்தான் பிரான்ஸில் உயிருடன் இருக்கிறாளே என்று பிரமித்து அவள் கொடுத்த படத்தைச் சட்டம் பிரித்து பின்பக்கம் பார்த்தாள். மற்றொரு ஆச்சரியம் அதில் ஒரு கோட்டுச் சித்திரம் இருந்தது. அது மேக்ஸ் பீர்பாம் என்கிற பிரபல விமரிசகர் சித்திரக்காரர் திருமதி காம்பெல்லை வரைந்தது. அப்போதே இரண்டாயிரம் டாலர் தேறும் விலை உயர்ந்த சித்திரம்.
ஸேரா ஆல்குடுக்குப் பிற்பாடுதான் செய்தி தெரிந்தது-திருமதி காம்பெல் அவள் கனவு கண்ட அதே தினத்தில் பிரான்ஸில் இறந்திருக்கிறாள் என்று. இதை எப்படி விளக்க முடியும் ?
கனவு காண்பது உண்மையில் ஓர் நல்ல அனுபவம் ஆகும். நிஜத்தில் செய்ய முடியாத பல காரியங்களை கனவில் சிறப்பாக செய்து முடிக்க முடியும். பல ஆண்டுகளுக்கு முன் துவங்கி இன்று வரை வெறும் கனவாகவே இருந்து வரும் விஷயம்தான் டைம் டிராவல் அதாவது காலப் பயணம்.
சிறு வயது நினைவுகளை பின்னோக்கி சென்று நேரில் காணும் அனுபவம் இன்றும் சிலருக்கு கனவாக வரலாம். இதற்கு கால எந்திரம் தேவை இல்லையே !

நீங்கள் டைம் டிராவல் பண்ணுவதற்கு கால எந்திரத்தை விஷுவலாகவே எதிர்பார்க்கிறீர்கள். விஷுவலான கால எந்திரத்தை தயாரிப்பதற்கு ஒரு சிக்கல் உள்ளது, நொடிக்கு 2, 85,000 கிமீ என்பது அதிவேகத்தை விட அதிக வேகம் ஆகும். தற்சமயம் பூமியில் இருக்கும் வாகனமானது நொடிக்கு 1 கி.மீ வேகத்தில் கூட செல்ல முடியாது. பூமியை விட்டு விண்வெளி செல்லும் விண்கலம் கூட நொடிக்கு 10 கி.மீ வேகத்தில் மட்டுமே செல்லும்.
ஒரு வேலை இத்தகைய வேகத்தில் பயணம் செய்தாலும், இத்தகைய வேகத்திற்கு நம் உடல் ஒத்துழைக்க வேண்டும். இதனால் காலப் பயணம் என்பது சாத்தியம் என்றாலும், தற்சமயம் வரை இது மிகவும் கடிமான காரியம் ஆகும்.
காலத்தில் பின்னோக்கி பயணம் செய்ய உதவும் காலப் பயண இயந்திரம் ஒன்றை உருவாக்கி, இதற்கான ஆய்வு அறிக்கை ஒன்றை ஃபிரான்க் டிப்லர் வெளியிட்டார்.

1974 ஆம் ஆண்டு வெளியான இந்த ஆய்வு அறிக்கையில் காலப் பயண இயந்திரம்,ஃபிரான்க் டிப்லர், சிலண்டர் எப்படி செய்ய வேண்டும் என்ற வழிமுறைகளை அவர் குறிப்பிட்டிருந்தார்.

தேவையானவை : காலப் பயண இயந்திரம் அதாவது டைம் மெஷின் கருவியை உருவாக்க அதிகப்படியான பணம், மிகப்பெரிய நீள் உருளை. மிகப்பெரிய என்றால் 100 கிமீ நீளம் கொண்ட உருளை தேவைப்படும். உருளையில் சூரியனுக்கு நிகரான பொருண்மை இருக்க வேண்டும். மேலும் இது இறுக்கமாக மூடப்பட்டிருப்பது அவசியமாகும்.

இவை முடிந்ததும் நீள் உருளையை அதிவேகமாக சுழல செய்ய வேண்டும். இவ்வாறு செய்யும் போது புவி மற்றும் நேரம் பாதிக்கப்பட்டு ஈர்ப்பு அலைகளில் மாற்றம் காணப்படும்.
இவ்வாறு செய்யும் போது உடலுக்கு பாதிப்பு ஏற்படும். பூமியின் திணிவு நம்மை இழுக்கும், இது நம் உடலுக்கு பேராபத்தை விளைவிக்கும், இதனால் நம் உடல் முழுவதும் நசுக்கப்படும் அபாயமும் இருக்கின்றது.
உடல் நசுங்கும் பிரச்சனைக்கு தீர்வு காணும் போது இந்த கருவியானது காலத்தில் பின்னோக்கி செல்ல நேரத்தின் திசையை தகர்க்கும் என்பதால் உருளையின் சுழலுக்கு ஏற்ப உங்களால் சில காலம் பின்னோக்கி செல்ல முடியும். மீண்டும் திரும்பி செல்ல உருளையை விட்டு நகர்ந்தாலே போதுமானது.
இதெல்லாம் நடைமுறைக்கு ஒத்துவருமா ? ஒத்து வரக்கூடிய ஒரு விஷயம் கனவு. எப்படி ? சொல்றேன்.
" அவ்தார் " என்ற ஆங்கில சினிமாவில் கால் ஊனமுற்ற கதாநாயகன் கனவு காணும் மெஷினில் படுக்க வைத்து கனவு காண்பான். கனவில் அவ்தார் கிரகத்தில் அவ்தார் மக்கள் மாதிரியே நீண்ட காதுகள் கொண்ட மனிதனாக அங்கு நடமாடுவான். அவ்தார் கிரகத்திற்கு கதாநாயன் பயணித்தது டைம் மிஷினில் அல்ல. கனவில்.
சூஃபியிஸத்தின் தலைவர் ஹளரத் ஜுனைதுல் பாக்தாதி ( ரஹ் ) அவர்களின் சீடர் ஒருவர் குளிப்பதற்காக தஜ்லா நதிக்கு வருகிறார் அந்நேரம் சுபுஹ் தொழுகைக்கு சற்று முந்தைய நேரம் ஆடைகளை களைந்து ஆற்றின் ஓரத்தில் வைத்து விட்டு நதியில் இறங்கி ஒரே ஒரு முங்குதான் போட்டார்.
..அவ்வளவுதான் அவர் கண்டம் விட்டு கண்டமோ அல்லது இந்த பிரபஞ்சத்தின் வேறு ஏதோ ஒரு கிரகத்தின் நதியிலோ குளித்தவாறு வெளியே வருகிறார். அங்கு ரொம்ப காலம் அங்குள்ள மக்களோடு மக்களாக வாழ்ந்து வருகிறார் . வாழட்டும். அடுத்து ,

ஒரு நாள் அவர் அங்குள்ள நதியில் யதார்த்தமாக குளிக்கிறார். அந்த நதியில் ஒரே ஒரு முங்கு போட்டார்...அவ்வளவுதான் மீண்டும் தஜ்லா நதியில் ஆற்றில் நின்று கொண்டு இருக்கிறார்.ஆச்சரியம் அதே சுபுஹ் நேரம் இன்னும் சுபுஹ் தொழுகை நடைபெறவில்லை களைந்து வைத்த துணி கூட அங்கு அதே இடத்தில் அப்படியே இருக்கிறது...துணி உடுத்துக் கொண்டு சுபுஹ் தொழுகையில் கலந்து கொள்கிறார்
இதைப்பற்றி தனது ஷைகான ஜுனைதுல் பக்காதி ( ரஹ் ) அவர்களிடம் கூறிய போது சில சமயம் ரொம்ப அதிகமாக வணக்க வழிபாடுகளில் ஈடுபட நினைக்கும் சாதாரண சாதகருக்கு பல காலம் வணங்கும் பாக்கியத்தை இப்படியும் இறைவன் வழங்குகின்றான்
இது சாத்தியமா ? என்றால் விஞ்ஞானத்தின் பதில்...சாத்தியமே.
இந்த சீடர் டைம் டிராவல் செய்தது கால எந்திரத்தில் அல்ல, சிறு கனவில் . ஆக கனவு வழியேதான் கால எந்திரம் பயணிக்கிறது. எந்திரத்தின் உருவத்தை எதிர்ப்பார்காதீர்கள் .கனவு காணுங்கள். பயணம் புறப்படுங்கள் . பயணம் சுகமாக ஆச்சா ? அது போதும் .

**நவீன காலச் சாதனங்கள் 10**
( optical illusion - ஒளியியல் மாயை )



இன்றிலிருந்து 45 வருடத்திற்கு முன்பாக இரும்புக்கை மாயாவி என்கிற முத்து காமிக்ஸ் புக் விரும்பிப் படிப்பேன். அதில் மாயாவி தன் ஒற்றை இரும்புக் கரத்தால் மின்சாரத்தைத் தொட்டதும் இரும்புக்கையைத் தவிர உடலெல்லாம் மறைந்து போகிறது . இது என் 17 வயதில் இந்த சாகஸத்தை நினைத்து நினைத்துப் பார்ப்பேன் நாமும் மின்சாரத்தை தொட்டால் , உடல் மாயமாகி கரம் மட்டும் இரும்பாகிவிடுமா என்றெல்லாம் கூட யோசித்திருக்கேன்.
2000 ல் Hallow man என்கிற ஆங்கில சினிமா , பயத்தோடு பல கற்பனையை துவக்கி விட்டது எனக்கு. அட , இப்படியா பயமுறுத்துவது ? அமெரிக்க - ஜெர்மன் அறிவியல் புனைக்கதையின் புதிய சாகஸம் இந்த சினிமா படம் .

Hallow man சினிமாவுக்கு ஊற்றுக்கண்ணாக கற்பனைக் கதை களம் வகுத்துக் கொடுத்த Ralph Ellison எழுதிய" invisible man " என்ற 1952 ல் வெளியான நாவல் . ரொம்பவும் அருமையான நாவல்.
ஆக, மனிதன் தன்னை மறைத்துக் கொள்வதில் ஆர்வப்படுகிறான் இதில் அவனுக்குப் பல சௌகரியங்கள் இருப்பதாகக் நிறைய கற்பனையும் செய்கிறான். நாம பார்க்கிறது அவளுக்கு தெரியாமல் இருந்தால் எவ்வளவு சௌகரியம் .
இப்படி மறைத்துக் கொள்ள வேண்டி , பல விஞ்ஞான துறைகளும் தங்கள் துறை வளர்ச்சிக்கு " மறைதல் " என்பது அத்தியாசிமாக அவசியப்படுகிறது. இதனால் மறைதல் விஷயத்தில் விஞ்ஞானம் முனைப்புடன் ஆய்வு செய்தது. இதன் தேவையை முன்னிறுத்தி டோக்கியோ பல்கலைகழகத்தைச் சார்ந்த "சுசுமா" என்ற ஜப்பானியர் ஒருவிதமான அங்கியைக் கண்டு பிடித்துள்ளார். அந்த அங்கியை அணிந்ததும் உடம்பு மறைந்து விடுகிற மாதிரி ஒரு மாயத் தோற்றத்தை ஏற்படுத்துகிறது. இதற்கு optical illusion என்கிற விஞ்ஞான யுக்தியைப் பயன்படுத்துகிறார்.

ஆப்டிகல் மாயைக்கு ஒர் எளிய உதாரணத்தை சொல்றேன்.
ஒளியியல் மாயை என்பது திரையில் நிஜ வாழ்க்கையின் தொடர்ச்சியான இயக்கமாகும். தொலைகாட்சி என்பது ஆப்டிகல் மாயைக்கு ஒரு எடுத்துக்காட்டு, அங்கு டிவி கேமராவின் படச் சட்டத்தின் ஸ்கேனிங் கற்றை டிவி செட்டின் பார்வைத் திரையில் மிக வேகமாக நகரும்போது அத்தனை புள்ளிகளும் மறைந்து உருவம் தெரிகிறது. காரணம் நம் கண்கள் அதனுடன் வேகத்தை வைத்திருக்க முடியாது.
இரண்டாவது உதாரணம் ஆப்டிகல் மாயைகள் என்பது படங்கள் அல்லது காட்சிகள் அவை என்னவென்பதில் இருந்து வேறுபட்டதாக நமக்குத் தோன்றும். இதை வேறு விதமாகச் சொல்வதானால், நம் கண்கள் நம் மூளைக்கு தகவல்களைத் தெரிவிக்கும்போது ஒளியியல் மாயைகள் நிகழ்கின்றன, அது உண்மையில்லாத ஒன்றை நம்புவதற்கு வழிவகுக்கிறது. படம் - 2 - ல் இரண்டு நபர்கள் தெரிந்தாலும், கூர்ந்து பார்த்தால் 5 நபர் .
அதாவது காரின் வியூ ஃபைன்டர் என்ற கண்ணாடி உதவியுடன் இதை சாதித்திருக்கிறார். இந்த மாய அங்கி அணிந்ததும் அணிந்திருப்பவரின் உடல் மறைந்து விடுகிறது. இதன் வழியாக பின்புறம் இருக்கும் காட்சிகள் முன்புறம் இருந்து பார்பவர்களுக்குத் தெரிகிறது .
இந்த ஆப்டிக்கல் இல்லியூஷனைப் பயன்படுத்தி மருத்துவ துறையில் பெரும் மாற்றம் வர இருக்கிறது. ஆப்ரேஷன் செய்யும்போது சர்ஜியன்களுக்கு அவர்கள் செய்யும் ஆப்ரேஷனை அவர்களது கைகளே நோயாளியின் உறுப்புகளை மறைத்து விடுகின்றன. இதனால் ஆப்ரேஷனில் முழு திருப்தி ஏற்படுவதில்லை. தங்கள் கைகள், கருவிகள் எல்லாம் மறைந்து போய் விட்டால், ஆப்ரேஷன் செய்கிற இடம் மட்டும் தெளிவாக தெரிந்தால், எவ்வளவு நல்லதாக இருக்கும்.
அடுத்து , விமானம் அவசர அவசர தரையிறங்க "லேண்டிங் " செய்ய முயலும் போது. விமானிகளுக்கு "காக்பிட் "டின் கீழ் பகுதி கண்ணாடிபோல் இருந்தால் வசதியாக இருக்கும். காக்பிட் சரியாக தெரியாததால்தான் லேண்டிங் செய்யும் போது நிறைய விமானம் விபத்துக்குள்ளாகிறது. எனவே ஏரோனாட்டிக் துறை மறைதல் விஷயத்தை விரும்புகிறது .
போதும் விஞ்ஞானம் இன்னும் சொன்னால் அடுத்த தளத்திற்கு போய் விடுவீர்கள்.
"அழியட்டும் அபூலஹபின் இரு கரங்களும் அவனுமே நாசமாக அழியட்டும்". குர்ஆன் (111 : 1 - 5)
என்ற வசனம் இறங்கியதும் மக்கமா நகர் பரப்பரப்பாகியது. அபூலஹபின் மனைவி "உம்முல் ஜமீலுக்கு " விஷயம் தெரிய வருகிறது .உடனே இவள் கூர்மையான கல்லை எடுத்துக் கொண்டு கஃபாவிற்குள் வருகிறாள். அங்கே நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் , அவர்களும் அபூபக்கர் ( ரலி) அவர்களும் பக்கத்தில் பக்கத்தில் இருக்கிறார்கள்.
அபூபக்கர் (ரலி) அவர்கள் : "யா ரசூல்லாஹ் ! இதோ உம்மு ஜமீல் கையில் கூர்மையாக கல்லைக் கொண்டு வருகிறாளே...தங்களைப் பார்த்து விடப் போகிறாள். " என்று கூறியபோது , என்னை அவளால் காண முடியாது என்று கூறி,
"நபியே... நீர் குர்ஆனை ஓத ஆரம்பித்தால் , உங்களுக்கும் , மறுமையை நம்பாதவர்களுக்கும் இடையில் தடுத்துக் கொள்ளக் கூடிய ஒரு திரையை நாம் ஆக்கி விடுவோம் " - குர்ஆன் ( 17 : 45) என்ற வசனத்தை நபியவர்கள் ஓதுகிறார்கள் .
"எங்கே உமது தோழர் முஹம்மது ?" என்று உம்மு ஜமீல் கேட்க, "அபூ குஹாபா மகன் அபூபக்கரைக் காட்டிலும், அல்லாஹ்வே அவர்களைப் பார்த்த வண்ணம் இருக்கிறான் " என்று உண்மையை மறைக்காமல் அபூபக்கர் (ரலி) அவர்கள் கூறினார்கள்.
"நான் கோபத்துடன் தாக்க வந்ததை அவரிடம் சொல்லி வையும் " என்றாள் உம்மு ஜமீல் .
அபூபக்கர் (ரலி) அவர்களின் கண்களுக்கு நபி (ஸல்) அவர்கள் தெரிந்தாலும், உம்மு ஜமீல் கண்களுக்கு நபியவர்கள் தெரியவில்லை.
ஆப்டிக்கல் இல்லியூஷன் உடலை மறைத்து ஒளி ஊடுருவி அப்புறமாக உள்ள காட்சி தெரிகிறது . இந்த இளந்துறை இன்னும் வளர்ச்சி அடைந்து, இரும்புக்கை மாயாவி மாதிரியோ , Hallow man மாதிரியோ, Invisible man மாதிரியோ மறைந்தாலும் , நபி (ஸல் ) அவர்கள் மாதிரி முழுமையாக எப்போதுமே மறையவே முடியாது.
அறிவியலுக்குக் கூட அழகிய முன்மாதிரி அண்ணலெம் பெருமானார் நபி முஸ்தபா (ஸல்) அவர்களிடம் மட்டுமே உள்ளது.

## நவீன காலச் சாதனங்கள் 11

( கண்ணுக்குத் தெரியாத எழுத்தை எழுதும் பேனாக்கள் )



சில கண்ணுக்குத் தெரியாத மைகள் ஒளியில் வெளிப்படும் போது ஒளிரும். சமீபத்திய மை கலவையில் கண்டுபிடிப்பு ஒளி உணர்திறன் கண்ணுக்கு தெரியாத மை புதிய கலவைக்கு வழிவகுத்தது, இதில் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட இரசாயனங்கள் உள்ளன, அவை நிர்வாணக் கண்ணால் பார்க்க முடியாது, ஆனால் மிகவும் சிவப்பு அல்லது IR அல்லது UV ஒளியில் வெளிப்படும் போது ஒளிரும் விளைவைக் காட்டுகிறது.
காசோலைகள், பாதுகாப்பு மற்றும் கொள்கை ஆவணங்களில் இந்த மைகள் பரவலாகப் பயன்படுத்தப்படுகின்றன. கலவையில் எளிமையானது முதல் சிக்கலான ஃப்ளோரோஃபோர் (பாலிமெரிக் பொருட்களுடன் சிக்கலானது) உள்ளது. இந்த கலவையானது மிகவும் உணர்திறன் மிகுந்த சிவப்பு அல்லது அகச்சிவப்பு ஃப்ளோரோஃபோரை உள்ளடக்கியது, இல்லையெனில் நிர்வாணக் கண்ணுக்குத் தெரியாதது மற்றும் FR/IR ஒளியால் மட்டுமே வெளிப்படும்.

'அதேபோல், UV உணர்திறன் ஃப்ளோரோஃபோர் அல்லது ஃப்ளோரோபோரிக் கலவையும் பயன்படுத்தப்படுகிறது, இது புற ஊதா ஒளியால் ஒளிரும். கண்ணுக்குத் தெரியாத எழுத்துகளில் பெரும்பாலானவை புற ஊதா ஒளியின் கீழ் தெரியும், இது சிறப்பியல்பு ஒளிரும் தன்மையை அளிக்கிறது.
பொதுவாக கிடைக்கும் UV மார்க்கர் பேனா பெரும்பாலும் மோசடி செய்பவர்களால் பயன்படுத்தப்படுகிறது.
வழக்கு ஆய்வு: காசோலை மோசடி செய்பவர்களால் கண்ணுக்கு தெரியாத மை பயன்படுத்தப்பட்டுள்ளது."அனிந்திதா ராய்" வழக்கில், மோசடி செய்பவர் (தனியார் வங்கி கடன் முகவர்) இரண்டு வெற்று காசோலைகளை கேட்டார், அதில் "ரத்து செய்யப்பட்டது" என்ற வார்த்தை எழுதப்பட்டுள்ளது. அனிந்திதாவால் "கொந்தளிப்பான" மை பேனா (முகவர் மூலம் புத்திசாலித்தனமாக வழங்கப்படுகிறது). பின்னர், காசோலையில் இருந்து "ரத்துசெய்யப்பட்டது" என்ற வார்த்தை மறைந்து, அனிந்திதா கையொப்பமிட்ட வெற்று காசோலையைப் பயன்படுத்தி, அனிந்திதாவின் கணக்கில் இருந்து 4 லட்ச ரூபாய்க்கு மேல் எடுக்கப்பட்டது
இதேபோல், சமீபத்திய TNPSC குரூப்-IV தேர்வில் முறைகேடுகள் பதிவாகியுள்ளன, அங்கு விண்ணப்பதாரர்கள் பதில்களைக் குறிக்க கண்ணுக்கு தெரியாத மை பேனாவைப் பயன்படுத்தினர்.
பாதுகாப்பின் அறிகுறியாக, முதல் உலகப் போரின் முடிவில் பெரும்பாலான கண்ணுக்கு தெரியாத மைகள் பயன்படுத்தப்பட்டன. இருப்பினும், 1999 ஆம் ஆண்டில், அமெரிக்க மத்திய புலனாய்வு நிறுவனம் , முதல் உலகப் போரின் கண்ணுக்குத் தெரியாத மை, தேசியப் பாதுகாப்பிற்கு இன்னும் பொருத்தமானது என்ற அடிப்படையின் அடிப்படையில், கட்டாய வகைப்படுத்தலில் இருந்து விலக்கு அளிக்கப்பட வேண்டும் என்று கோரியது. முதலாம் உலகப் போர் ஆவணங்கள் 2011 வரை வகைப்படுத்தப்பட்டன.

முன்னாள் MI6 ஏஜென்ட் ரிச்சர்ட் டாம்லின்சன் கூறுகையில், பயணங்களில் இருக்கும் போது கண்ணுக்கு தெரியாத செய்திகள் வடிவில் ரகசிய எழுத்தை உருவாக்க பென்டல் ரோலிங் ரைட்டர் ரோலர்பால் பேனாக்கள் MI-6 முகவர்களால் பரவலாக பயன்படுத்தப்பட்டன.
மீண்டும் எழுத்து தெரிய வேண்டும் என்ற எண்ணம் இல்லாமல், குறிப்பிட்ட காலம் தெரியும் மைகள், பின் மறைந்துபோகும் மைகள் உள்ளன.
பொதுவாக தைமால்ப்தலீன் மற்றும் சோடியம் ஹைட்ராக்சைடு போன்ற அடிப்படைப் பொருளுக்கு இடையேயான இரசாயன எதிர்வினையை பொதுவாக நிறமற்ற தைமால்ப்தலீன், அடித்தளத்துடன் கரைசலில் நீல நிறமாக மாறும். அடித்தளம் கார்பன் டை ஆக்சைடுடன் வினைபுரியும் போது (எப்போதும் காற்றில் இருக்கும்), pH 10.5 க்கு கீழே குறையும்போது நிறம் மறைந்துவிடும். இந்த மாதிரி பேனாக்களும் இப்போது கிடைக்கின்றன.

------------------------ x ------------------------------------------ x ------------------------------------------ x --------------------

மறையும் எழுத்துக்கள் , பின் ஊடகத்தின் உதவியால் தெரியும் எழுத்துக்கள், நிரந்தரமாக மறையும் எழுத்துக்கள் என்று அறிவியல் ஆயிரம் கண்டுபிடிப்புகளை நிகழ்த்தினாலும் , இறைநேசர்கள் செய்யும் கராமத்துகள் இதற்கெல்லாம் பல மடங்கு உச்சத்தில், வல்லமையை உணர்த்தி காட்டுகிறது

கௌது நாயகம் அவர்களால் மனத் தெளிவு பெற்று நாத்தீகக் கொள்கையிலிருந்து விடுபட்ட ஷெய்கு முஜப்பர் பின் மன்ஸூர் சொல்கிறார்கள்:
நான் எனது வாலிப வயதில் நாத்திகம் நிறைந்தவனாக இருந்தேன். எனது சட்டையின் உள்ளே நாத்திகம் போதிக்கும் நூல் ஒன்றை மறைத்து வைத்தவனாக கௌதுல் அஃளம் அவர்களின் சபையில் அமர்ந்தேன். திடீரென என்னை விளித்த அவர்கள் உனது உட்சட்டையில் மறைத்து வைத்துள்ள நூல் உனக்கு உகந்ததல்ல. அதைத் தண்ணீரில் எறிந்துவிடு என்றார்கள்.
மறைவான விஷயத்தை எப்படி அறிந்தார்கள் என்று வியந்தேன். ஆனால் அந்நூலை நான் தண்ணீரில் எறிவதற்கு விரும்பவில்லை. அதை ஓரிடத்தில் ஒழித்துவைத்து விடலாம் என்று எழுந்தேன். என்னால் எழ முடியவில்லை. தரை என்னைப் பிடித்துக் கொண்டது.
பின்பு "அந்நூலை என்னிடம் கொடு" என்றார்கள்.
அதை நான் கொடுக்கும் போது விரித்துப் பார்த்தேன். அதில் எவ்வெழுத்துகளும் இன்றி வெறுந் தாள்களே காணப்பட்டன. இது எனக்கு பெரும் வியப்பைக் கொடுத்தது. அதிலிருந்த எழுத்துக்கள் எங்கே என்று சிந்தித்தவனாக அந்நூலை அவர்களிடம் கொடுத்தேன்.
கௌது நாயகம் அவர்கள் அதைக் கையில் பெற்று அதைப் புரட்டி,
"இது திருமறை ஞானத்தைப் பற்றி இப்னு ஷரீஸ் முஹம்மது எழுதிய ' பழாயிலுள் குர்ஆன்தான்' என்று சொல்லி என்னிடம் தந்தார்கள்.
அதை நான் திறந்து பார்த்த போது கௌதுல் அஃளம் கூறிய நூலாகவே அது இருந்தது. என்னே ஆச்சரியம் ! அது மட்டுமன்றி அந்நாத்தீக நூலில் நான் மனனம் செய்திருந்த பகுதிகளும் என் நினைவிலிருந்து மறைந்து விட்டது. என்று கௌது நாயகத்தின் மாண்பை எடுத்தோதினார்கள்.
கௌதுல் அஃளமுக்கு நூலையே மாற்ற முடியுமாயின் கறடுமுறடான இருள் படிந்த எமது இதயக் கறையை மாற்றவும் தமது இறை நெருக்கத்தால் எமது கழாகத்றின் (விதியின்) வேகத்தைக் குறைத்து தீமைகளை அழித்துவிடவும் சக்தியுடையவர்களாக இருக்கிறார்கள் என்பது தெளிவாகிறது.

**நவீன காலச் சாதனங்கள் 12**
( மனிதனும், சிந்திக்கும் இயந்திரமும் )



கலிலியோவுக்கு டெலஸ்கோப் ஒரு செயற்கைப் பார்வை தந்து விண்ணில் உள்ள கிரகங்களையும், நட்சத்திரங்களையும் சுமார் 100 மடங்கு பெரிதாக பார்க்க வைத்தது
கணிப்பொறியும் ஒரு வகையில் பெரிதுபடுத்தும் சாதனம்தான் என்ன? நம் புத்தியை! புத்திக் கூர்மையை! டெலஸ்கோப் செயற்கைப் பார்வை தந்ததுபோல் கணிப்பொறி செயற்கை மூளை தந்திருகிகிறது.
ஆரம்பத்தில் கணிப்பொறி நம் மூளையில் கணக்குப் போடும் திறமையை மட்டும் பெரிதுபடுத்தியது. மிகப்பெரிய கூட்டல், கழித்தல், பெருக்கல், வகுத்தல், கணக்குகளைப் போட மனிதனுக்கு மிகுந்த நேரமாகி அதில் தவறுகளும் நிறைய நிகழ்ந்தது.
கணிப்பொறிகள் இந்த வேலைகளை மிக வேகமாக, மிகச் சரியாகச் செய்தது. அந்த ஆரம்ப நாட்களில் ஹெர்பர்ட் சைமன், அலன் நியுவெல் என்ற இரு விஞ்ஞானிகள் கணிப்பொறி என்பது வெறும் 'கால்குலேட்டரி

மட்டும் இல்லாமல் சில குறியீடுகளையும் அலசக்கூடியவை எனக் கண்டனர். இவ்விருவரும் 1956-ல் முதன் முறையாக ஒரு 'சிந்திக்கும் இயந்திரம்' செய்யப் போவதாகச் சொன்னார்கள்.
சிந்திக்கும் இயந்திரம் என்பது கணினிகள் மற்றும் ரோபோக்களின் அறிவியல்,.
அந்த இயந்திரத்துக்கு 'லாஜிக்கல் தியரிஸ்ட்' என்று பெயர் வைத்தார்கள். ஜெனரல் ப்ராப்ளம் ஸால்வர் என்ற மற்றொரு யந்திரமும் தயாரித்தார்கள். அது செஸ் விளையாடியது. புதிர்களை விடுவித்தது. அதன் ஆதார அமைப்பில் சிந்தனை என்பதனை ஒரு பொது விதியாக சொல்ல முடியுமா என்று முயற்சி செய்தார்கள்.
அதற்காக சைமனும், நியுவெல்லும் விற்பன்னர்களை அழைத்து அவர்கள் ஒரு கணக்கு போடும்போதோ, ஒரு புதிரை விடுவிக்கும் போதோ, எவ்வாறு சிந்திக்கிறார்கள் என்பதை வாய் வார்த்தையாக வர்ணிக்கச் சொன்னார்கள். அதை இயந்திரத்திற்கு சொல்லிக் கொடுத்தார்கள்.
ஆதாரமாக புத்திசாலித்தனம் என்பது சிக்கலான விஷயத்தை எளிமைப்படுத்துவது என்று சைமன் எண்ணினார். பல்வேறு சாத்தியக் கூறுகளிலிருந்து ஒவ்வொன்றாக சோதித்துப் பார்த்து, எந்த கணக்குக்கும் கடைசியில் விடை கண்டுபிடித்துவிட முடியும் என்றனர். இதிலிருந்து உள்ளுணர்வு, கற்பனை, உள்நோக்கு எல்லாம் சுலபம் என்று எண்ணினார்.

இது அத்தனை சுலபமில்லை என்று சீக்கிரமே கண்டுகொண்டனர். ஒவ்வொரு முறையும் அந்த இயந்திரம் புதுசாக ஒவ்வொரு பிரச்சினையையும் அணுகியது. மனித யத்தனத்தில் நாம் அவ்வாறு செய்வதில்லை. இதற்கு முன் இந்த கணக்கைப் போட்டிருக்கிறோமே அப்போது என்ன செய்தோம் என்கிற அனுபவபூர்வமான அறிவைப் பயன்படுத்துகிறோம். இந்த அனுபவ அறிவை இயந்திரத்துக்குக் கற்றுத்தர முடியவில்லை.

ஆரம்ப உற்சாகம் தணிந்தது. அறிவுள்ள இயந்திரம் அமைப்பது அத்தனை சுலபமல்ல என்று கண்டுகொண்டனர். மனித ஜென்மங்களான நாம் சில காரியங்களை மிகச் சுலபமாகச் செய்கிறோம். உதாரணமாக மெட்ராஸ் பாஷையில் பேசப்பட்ட தமிழ் வாக்கியத்தை அர்த்தம் பண்ணிக்கொள்ள முடிகிறது. 'மியாவ்' என்று சப்தம் போட்டாலே பூனையின் முழு உருவத்தையும் கற்பனை பண்ணிக்கொள்ள நம்மால் முடிகிறது. இதையெல்லாம் ஒரு கணிப் பொறியைச் செய்ய வைப்பது மிக மிக மிக கஷ்டம்.
ஆனால், '12384561218ஐ 63-ஆல் வகு' என்றால் கணிப்பொறி. மனிதனைக் காட்டிலும் மிக விரைவாக, மிகத் திறமையாகச் செய்துவிடும்.
மூளையின் திறமையின் வேலைப்பாடுகளை அலசிப்பார்த்தால் மனிதன் பரிணாம ரீதியாக வளர்ந்த விதத்தில் அதன் ரகசியம் இருப்பதை உணர முடியும். கணக்குப் போடும் திறமை உயிர்வாழ
அத்தனை தேவையில்லை.
ஆனால் எதிராளி பேசும் பேச்சை, அது மெட்ராஸ் பாஷையாக இருந்தால்கூட அர்த்தம் பண்ணிக் கொள்வது உயிர்வாழத் தேவைப்படும் 'த்தா டாய் பீஸ் பீஸா 'கீச்சுருவேன்" என்றால் உடனே அர்த்தம் பண்ணிக்கொண்டு ஓட வேண்டுமல்லவா,

விவசாயம் 1800 வருஷம் முன் செய்தான். கி.மு. 3000-த்தில்தான் முதலில் எழுத ஆரம்பித்தான். அவனை விற்பன்னன், அறிவாளி என்று சொல்வது கடந்த சில நூற்றாண்டுகளாகத்தான்!
இத்தனை மெல்ல வளர்ந்த மூளையை ஒரு கணிப்பொறி சில வருஷங்களில் செய்ய முடியுமா? அபத்தம் என்கின்றனர் சிலர். நன்றாக செஸ் ஆடத் தெரிந்த கணிப்பொறியால் அதன் காய்களை பெட்டியிலிருந்து எடுத்து வைத்து ஆட்டத்தைத் துவக்கத் தெரியாது. மனிதனின் மிக சிக்கலான வியாதிகளைக் கண்டுபிடிக்கும் கணிப்பொறிக்கு 'மனிதன்' என்பதன் அர்த்தம் தெரியாது.

ஒவ்வொரு முறையும் குழந்தை பிறக்கும்போது சுத்தமான மூளையுடன் பிறக்கிறது. தாய் தந்தையர் சேர்த்து வைத்த அறிவு குழந்தைக்குப் பிறக்கும் போது ஒவ்வொரு மனிதக் குழந்தையும் ஆரம்பத்திலிருந்துதான் கற்றுக்கொள்கிறது. இந்த முறை கணிப்பொறிக்குக் தேலையில்லை.
பரிணாம வளர்ச்சியில் ஒவ்வொரு முறையும் புதுசாக ஒரு கம்ப்யூட்டர் பிறக்கும்போது அதுவரை ஒன்று சேர்த்துள்ள அத்தனை அறிவும் அதற்கு ஆரம்பத்திலேயே கிடைத்துவிடும்.
எனவே, இந்தப் பரிணாமம் மிக வேகமாக நிகழும் என்கிறார்கள். இப்படி வளர்ந்தால் கணிப்பொறிகள் சில வருஷங்களிலேயே நம்மை மிஞ்சி அதிதூரத்துக்குச் சென்றுவிடும். நம்முடன் பேசவே அவைகளுக்கு விருப்பம் இராது, "ரொம்ப ஸ்லோப்பா நீ "
அவைகளுக்குப் பேச்சு என்பது ஒரு பிக்கோ செகண்டுக்கு (பிக்கோ
செகண்டு என்பது ஒரு செகண்டின் லட்சம் கோடியில் ஒரு பாகம்) ஒரு கலைக்களஞ்சியத்தில் உள்ள அத்தனை வார்த்தைகளும் உள்ளே செல்லும் வேகம்! சீக்கிரம் நம்மிடம் பொறுமையின்றி அந்த புதிய ஜீவன்கள் விண்வெளிக்குச் சென்று அங்கே தனி சாம்ராஜ்யம் அமைத்துக்கொள்ளும் என்கிறார்கள்.
அந்த நாள் இப்போது வராது.
இப்போது கணிப்பொறிக்கு 'ஒரு கப் காப்பி' என்பதன் சமூக அர்த்தம் தெரியாது. அவள் தலையை குனிந்து கால் பெருவிரல் தரையில் கோலம் போட்டால், என்ன அர்த்தம் என்று சத்தியமாக கணிப்பொறிக்கு தெரியவே தெரியாது .

---

மனிதன் கம்ப்யூட்டரை வடிவமைத்ததைப் பற்றி ஆய்வு செய்தோம்

இப்போது இறைவன் மனிதனைப் படைத்ததைப் பற்றி பார்ப்போம்.

وَاِذْ قَالَ رَبُّكَ لِلْمَلٰٓٮِٕكَةِ اِنِّىْ جَاعِلٌ فِى الْاَرْضِ خَلِيْفَةً قَالُوْٓا اَتَجْعَلُ فِيْهَا مَنْ يُّفْسِدُ فِيْهَا وَيَسْفِكُ الدِّمَآءَ وَنَحْنُ نُسَبِّحُ بِحَمْدِكَ وَنُقَدِّسُ لَـكَ قَالَ اِنِّىْٓ اَعْلَمُ مَا لَا تَعْلَمُوْنَ
இன்னும், உம் இறைவன் வானவர்களை நோக்கி “நிச்சயமாக நான் பூமியில் ஒரு பிரதிநிதியை அமைக்கப் போகிறேன்” என்று கூறியபோது, அவர்கள் “(இறைவா!) நீ அதில் குழப்பத்தை உண்டாக்கி, இரத்தம் சிந்துவோரையா அமைக்கப்போகிறாய்? இன்னும் நாங்களோ உன் புகழ் ஓதியவர்களாக உன்னைத் துதித்து, உன் பரிசுத்ததைப் போற்றியவர்களாக இருக்கின்றோம் என்று கூறினார்கள்; அ(தற்கு இறை)வன் “நீங்கள் அறியாதவற்றை யெல்லாம் நிச்சயமாக நான் அறிவேன்” எனக் கூறினான்.
(குர்ஆன் : 2:30)

மனிதன் தோற்றுவிக்கப்படுமுன்னரே கௌரவிக்கப்படுகிறான்:
மனித வர்க்கத்தின் மூலபிதாவான ஹஜ்ரத் ஆதம் (அலை) அவர்களுக்கு வழங்கியுள்ள மகிமையை வானவர்களுக்கும் மற்றைய படைப்பினங்களுக்கும் எடுத்துக் காட்டுவதே இவ்வசனத்தின் கருத்து. மனித வர்க்கத்தைப் படைக்கும் முன்னரே இதன் மகிமை மலக்குகளுக்கு விளக்கப்படுகிறது, எவ்வாறெனில்,

‘நான் என் பிரதிநிதியாக பூமியில் ஆதமை படைக்க நாடுகிறேன். அவர், அவருடைய சந்ததியினர் முதலானோர் வாயிலாக என் சட்டங்களை அமுல்படுத்தப் போகிறேன்” என்னும் கருத்தை இறைவன் கூறியபொழுது, மலக்குகள் எண்ணியதாவது:

இரு காரணங்களைக் கொண்டு இறைவனால் ஆதம் தெரிந்தெடுக்கப்பட்டவராக இருப்பார் போலும்!
(1) அவர் படைக்கப்படுமுன்னரே அவர் பிரஸ்தாபிக்கப்படுகிறார்.
(2) அவர் படைக்கப்பட்ட பின்னர் இறைவனின் பிரதிநிதியாக புவியில் ஆட்சி செய்வார்.
மனிதனைப் பற்றி மலக்குகளின் எண்ணம் :
இவ்வாறு எண்ணிக் கொண்டு இருந்த மலக்குகளுக்கு மற்றொன்றும் தோன்றியது. ஆதம் படைக்கப்படுவதற்கு மூலப் பொருளாக இருக்கிற களிமண் பல தன்மைகளைக் கொண்டதாக இருக்கிறது. இதனால் அவரில் காம இச்சையும், ஆத்திர உணர்ச்சியும் அவசியம் இருந்து வரும். இவ்விரு உணர்ச்சிகளும் கொண்டவர், விஷம புத்தி கொண்டவராகத்தான் இருக்க முடியும்.

இதனால் கொலை, பகைமை உணர்ச்சி ஆகியவைதாம் பெருகும். இத்தன்மைகளைக் கொண்டவர் எங்ஙனம் இறை பிரதிநிதியாக இருக்க முடியும்? இறைவனின் தூய்மையை இவரால் எவ்வாறு வெளிப்படுத்த இயலும்? இவ்விரு உணர்ச்சிகள் மட்டுமே மனிதனில் இருந்து வருமென்ற நினைப்புத்தான் விஷமம் செய்பவரையும் இரத்தங்களை ஒட்டுபவரையும் அதில் நீ உண்டாக்கப் போகிறாயா? என்று உனது தூய்மையை வெளிப்படுத்த நாங்கள் இருக்கின்றோமே என்றும் கூற அம்மலக்குகளைச் சொல்ல தூண்டிற்று.
ஆனால், அவ்விரு உணர்ச்சிகளையும் அறிவு, விவேகம் ஆகியவற்றினால் அடக்கி ஆளும் சக்தி மனிதனுக்கு உண்டு என்ற தத்துவத்தை அவர்களால் அறிந்து கொள்ள முடியவில்லை. அதனை அப்போதைக்கு அவர்களுக்கு உணர்த்தினாலும் அவர்களால் அதை புரிந்து கொள்ள முடியாது.
ஆகவேதான், 'நீங்கள் அறிந்து கொள்ளாதவற்றை நான் நிச்சயமாக அறிவேன்" என்று இறைவன் பொதுப்படையாகக் கூறினான்.

மனித உணர்ச்சிகள் :
1.காம உணர்ச்சி: இது மேம்படும் பொழுது மனிதன் தனது மனிதத் தன்மையை இழந்து மிருகத்தனமாக நடந்து கொள்ள ஆரம்பிக்கின்றான்.
2. ஆத்திர உணர்ச்சி: இது மிகைப்படும் பொழுது அக்கிரமும் அனைவரையும் அடக்கிய வேண்டுமென்ற அகந்தையும், விஷமமும் குழப்பத்தை உண்டாக்கும் கேவலத் தன்மையும் அவனில் ஏற்பட்டு விடுகின்றது.
3. விவேகம்: இது மிகைப்பட்ட மனிதன், முந்தைய இரண்டையும் ஒரு கட்டுப்பாட்டிற்கு கொண்டுவந்து நேர்மையான வழியைக் கடைப்பிடிக்கத் தலைப்படுகிறான். விவேகத்தின் பொருட்டால் வீரம்,நீதி,தூய்மையான எண்ணம், நல்லொழுக்கம், தன்னை. உணர்ந்து அநீதிக்கும் இடம் கொடாமல் ஆளுந்தன்மை, நேர்மையை நிலைநாட்ட நீதி வழுவாமல் ஆட்சிபுரியும் ஆற்றல் முதலியவை மனிதனில் ஏற்படுகின்றன.
இத்தன்மைகளினாலேயே மனிதன் பூமியிலிருந்து கொண்டே இறைவனின் பிரதிநிதியாக அவனது வரம்பிற்குட்பட்டு ஆட்சி புரிகிறான்
இப்பிந்திய தத்துவத்தை அம்மலக்குகளால் உணர முடியவில்லை

**நவீன காலச் சாதனங்கள் 13**

( கால்குலேட்டர் )



'அபாகஸ்' கருவியே உலகின் முதல் கணினி. மரச்சட்டங்களில் பொருத்தப்பட்ட கம்பிகளில் மணிகள் கோக்கப்பட்டிருக்கும் தமிழ்நாட்டில் 'மணிச்சட்டம்' என்ற பெயரில் பயன்பாட்டில் இருந்தது. இந்தியாவில் இன்றைக்கும் அபாகஸ்' மூலம் மாணவர்களுக்குக் கணக்கீடுகளைக் கற்றுத் தரும் பயிற்சி மையங்கள் ஏராளமாய் உள்ளன.

பதினாறாம் நூற்றாண்டில் நேப்பியர் என்பார், மணிச்சட்டத்தைப் போன்ற ஒரு கணக்கீட்டுக் கருவியை உருவாக்கினார். நேப்பியர் போன்ஸ் (Napier Bones) என்று அழைக்கப்பட்டது.
கணித மேதை பிளைசி பாஸ்கலின் தந்தை வரிவசூலிப்பவராகப் பணியாற்றி வந்தார். தினமும் இரவு வெகுநேரம் வரை வரிவசூல் கணக்குடன் போராடிக் கொண்டிருப்பார். கல்லூரி மாணவராய் இருந்த பாஸ்கல் தன் தந்தையின் கணக்குகளில் உதவ விரும்பினார்.
தன்னுடைய 19-வது வயதில் கூட்டல் கணக்குகளை எளிதாகச் செய்ய உதவும் ஒரு கருவியை உருவாக்கினார். எண்முறைச் சக்கரக் கணிப்பி' (Numerical Wheel Calculator) என்று அக்கருவிக்குப் பெயரிட்டார்
செவ்வக வடிவ வெண்கலப் பெட்டியில் உருளக் கூடிய எட்டு சக்கரங்கள் பொருத்தப்பட்டிருக்கும். எட்டு இலக்க எண்களைக் கூட்ட இது பயன்பட்டது. ''கூட்டல் எந்திரம்' என்றும் 'பாஸ்கலைன்' என்றும் இக்கருவி அழைக்கப்பட்டது.

ஜெர்மன் நாட்டுக் கணிதமேதையும் தத்துவ ஞானியுமான காட்ஃபிரைடு வில்வெல்ம் லைப்னிக், 1694 -ஆம் ஆண்டில், பாஸ்கலன் எந்திரத்தை மேம்படுத்திப் புதிய கருவியை உருவாக்கினார். கூட்டல் கணக்கு மட்டுமின்றி பெருக்கல் கணக்கையும் அக்கருவியில் எளிதாகச் செய்ய முடிந்தது.
இன்றைய நவீன கணினியின் தந்தை (Father of Computer) என்று அழைக்கப்படுபவர். இங்கிலாந்து நாட்டுக் கணிதப் பேராசிரியர் சார்லஸ் மாபேஜ் (1791-1871) ஆவார். கணிதத்தில், வேறுபாட்டியல் நிகர்ப்பாடுகளை (Differential Equations) தீர்வு செய்யக் கூடிய வேறுபாட்டுப் பொறி (Difference Engine) என்னும் எந்திரத்தை உருவாக்கினார்.

நீராவியால் இயங்கும் மிகப்பெரிய எந்திரம். இந்த எந்திரத்தில் கணினி நிரல் (Program) சேமிக்கப்பட்டிருக்கும் கணக்கீடுகளைச் செய்து விடையைத் தானாகவே அச்சிட்டுத் தரும்.
நவீன காலத்தில் பொதுமக்கள், வியாபாரிகள் எளிதாக பயன்படுத்தும் சாதாரண கால்குலேட்டர்கள் தற்போது அதன் ஆற்றலை மேன்படுத்தி வைஃபை மூலம் இயங்க வைத்துள்ளனர்.
இந்தியாவைச் சேர்ந்த ஸ்டார்ட்-அப் நிறுவனம் வைஃபை மூலம் இயங்கும் வகையிலும் கணக்குகளை நினைவகத்தில் சேமித்துவைத்துக்கொள்ளும் வகையிலும் ஸ்மார்ட் கால்குலேட்டரைக் கண்டுபிடித்துள்ளது.
இந்த கால்குலேட்டர் பெரும்பாலும் வியாபாரிகளுக்கு பெரிதும் உதவியாக இருக்கும் என இதைக் கண்டறிந்த டூஹேண்ட்ஸ் நிறுவனத்தின் இணை நிறுவனர் தெரிவித்துள்ளார்.
மகாராஷ்டிரத்தை தலைமையிடமாகக் கொண்டு இயங்கும் டூஹேண்ட் எனும் நிறுவனம் கடந்த 2017ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது.

பிரவீன் மிஸ்ரா, சத்யம் சாஹு, சண்முக வடிவேல் ஆகிய மூவரும் இணைந்து இந்த நிறுவனத்தைத் தொடங்கியுள்ளனர்.
இந்நிலையில், இந்நிறுவனத்தின் இணை நிறுவனரான பிரவீன் மிஸ்ரா, காய்கறி கடையில் பணிபுரியும் பெண் எல்லா கணக்குகளையும் காகிதத்தில் எழுதி வைத்துக்கொண்டு, பின்னர் கடைசியாக எல்லாவற்றையும் மீண்டும் ஒட்டுமொத்தமாக கணக்கு பார்க்கும் சிரமத்தைக் கண்டுள்ளார்.
அதன் விளைவாக நினைவக திறன் மற்றும் வைஃபை வசதியில் இயங்கும் புதிய ஸ்மார்ட் கால்குலேட்டரைக் கண்டுபிடித்துள்ளார். இந்த கால்குலேட்டரில் 50 லட்சம் கணக்குகளை உள்ளீடாக சேமித்துவைத்துக்கொள்ளலாம். இதனால் மொத்த கணக்கு பார்க்க எளிதாக இருக்கும். கணக்குகளை சேமித்துவைத்துக்கொள்ள 16MB நினைவகம் கொடுக்கப்பட்டுள்ளது. 2,400-mAh திறன் கொண்ட பேட்டரியும், சி-டைப் சார்ஜிங் போர்ட்டும் கொடுக்கப்பட்டுள்ளது.

இது பொதுமக்களுக்கு உதவுவதை விட வியாபாரிகளுக்கு பெரிதும் உதவியாக இருக்கும் என மிஸ்ரா குறிப்பிடுகிறார்.
1400 வருடத்திற்கு முன்பாக எந்தவித கணக்கிட்டு கருவிகளும் பயன்படுத்தப்படாத காலத்தில், அலீ ( ரலி ) அவர்களைப் பற்றி நபி( ஸல் ) அவர்கள் கூறும் போது," நான் அறிவின் பட்டணமாக இருக்கின்றேன் அலீ அப்பட்டணத்திற்கு தலைவாயிலாக இருக்கிறார்கள் " என்று பெருமைப்படுத்திய கூறி அலீ ( ரலி )அவர்களிடம் , யூதன் ஒருவன் அலீ ( ரலி )அவர்களின் அறிவு திறனையும் கணித அறிவையும் சோதிக்க எண்ணினான். அலீ (ரலி) அவர்கள் தொழுகைக்காக மஸ்ஜித்திற்கு விரைந்து கொண்டிருக்கும்போது ,

"ஒன்று முதல் ஒன்பது வரையுள்ள எண்களினால் மீதமின்றி வகுபடக் கூடிய எண்ணை உம்மால் கூற முடியுமா ? " என்று கேட்க , அதற்கு அலீ (ரலி ) அவர்கள் வேகமாக நடந்து கொண்டே அந்த யூதனிடம் ,
மாதத்தின் நாட்கள் எண்ணிக்கை 30
வாரத்தின் நாட்கள் எண்ணிக்கை 7
மாதங்களின் எண்ணிக்கை 12
இம்மூன்றையும் பெருக்கினால் வரும் விடை எதுவோ அதுவே உன் கேள்விக்கான விடை என்றார்கள்.
யூதன் பெருக்கி பார்த்தான்.2520 வந்தது அதை 1 முதல் 9 வரையுள்ள எண்களால் வகுத்துப் பார்தான் வியந்து போனான் இஸ்லாத்தை ஏற்றான்

## ஞானிகளின் பார்வை 1

பூஜ்யம் என்பது ஞானியின் நிலை




"பூஜ்ஜியத்தை கண்டுபிடித்தவர் இந்தியர்கள் தான். இன்றைய உலகில், உலகின் ஒவ்வொரு நகர்வுக்கும் அடிப்படையாக திகழ்வது பூஜ்ஜியம். பூஜ்ஜியத்திற்கு இடமதிப்பு சிந்தனையை முதன் முதலில் கொடுத்தவர் இந்தியாவில் வாழ்ந்த முதல் ஆர்யபட்டர் ஆவார்.
அதுமட்டுமல்ல, அடிப்படை கணித வாய்ப்பாடுகளான a 0=a, a-0=a, 0 0=0, ax0=0, 0/a=0 என்ற சமன்பாடுகளை முதன் முதலில் வழங்கியவர் மற்றொரு இந்திய கணித மேதை பிரம்மகுப்தர் ஆவார்.
அந்தப் பூஜ்ஜியம் இல்லை என்றால் என்னவாகும் ?
ஒன்றுமில்லை என்பதை ஒன்றுமில்லை எனக் கூற முடியாது. ஒன்றுமில்லை எனக் கூறினால் ஒன்று இருப்பது எனப் பொருள்.
இல்லையென்று சொன்னாலே இருந்த ஒன்று இப்போது இல்லை என்றே கூறுகிறோம்.
ஒன்றுமில்லை என்றால் ஏதோ ஒன்று இருக்கிறது.
இந்த பூஜ்ஜியம் இல்லை என ஒதுக்கிவிட்டால், எந்தக் கணக்கையும் போட முடியாது.
ஆர்யபட்டர் காலத்திற்கு முன்பு சூனியம், வெறுமை, இல்லாமை, சைபர் போன்ற பல்வேறு பெயர்களில் பல குடியினர் பயன்படுத்தியுள்ளனர்.
எது எப்படியே பூஜ்ஜியத்திற்கு எண் என்ற அந்தஸ்த்தை வழங்கிவர்கள் இந்தியர்களே.

பூஜ்ஜியம் கண்டு பிடிப்பதற்கு முன்பு பூஜ்ஜியத்திற்கு பதிலாக பூஜ்ய மதிப்பிற்கு நிகராக எண்களில் எதை பயன்படுத்தினர் ?
பதில் : ' தெரியாது '
பூஜ்யம் (சைபர்) என்ற எண்ணின் மதிப்பு பற்றி நாம் என்ன அறிந்துள்ளோம்? சைபரை வைத்துக்கொண்டு என்ன செய்வது என்று கேட்கிறீர்களா? 'அவன் வெறும் சைபர் அவனுக்கு ஒன்றும் தெரியாது' என மிகச் சாதாரணமாகப் பேச்சு வாக்கில்- சிலரைப்பார்த்து ஏளனமாகச் சொல்லி விடுகிறோம்.
ஆனால் இந்த 'பூஜ்யம்' என்ற எண் மற்ற எண்ணைக் காட்டிலும் மிகவும் மதிப்பு வாய்ந்தது மட்டுமல்லாது அது இல்லாமல் மற்ற எண்கள் இயங்கமுடியாது என்பதே உண்மை.
பூஜ்யம் தான் இயங்காமல் தான் இருந்த இடத்தில் இருந்த கொண்டே மற்ற எண்களை இயக்குகிறது. மற்ற எண்களின் மதிப்புகளை உயர்த்துகிறது என்றே சொல்லவேண்டும். ஒன்றுக்கும் குறைவான அது ஒன்றுமில்லாதது போல் தோன்றலாம்.

ஒன்றுமில்லாத சூனியத்திலிருந்துதான் இந்த பிரபஞ்சம் தோன்றியது என்பது ஞானிகளின் கூற்று. சில மகான்களின் பெயருக்கு முன்னால் 'பூஜ்யஸ்ரீ' என்று போடுவதுண்டு. 'இல்லை' என்கிற ஒன்றிலிருந்து தான் 'உண்டு' என்பதும் உண்டாகிறது. அது சூட்சமமாக ஒளிந்திருக்கிறது. இல்லாததும் இருப்பதும் சேர்ந்ததுதான் இயக்கம். இது தான் இயற்கையின் தத்துவம். ஒன்றுமே இல்லாத வானவெளி கூட பஞ்ச பூதங்களில் ஒன்றாக உள்ளது.

இதிகாசங்களில் 'வெறுமை', 'வெற்றிடம்' என்பவற்றைக் குறிக்க 'சூனியம்' என்ற சொல் பயன்படுத்தப்பட்டது. சூன்யம்" என்றால் சம்ஸ்கிருத்தில் ஒன்றுமில்லை என்று பொருள். இந்த 'சூன்யம்'"என்ற சொல் வெவ்வேறு மொழிகளில் மாறி பிரெஞ்சு மொழியில் 'ஜீரோ' என வழங்கப்பட்டு அதுவே நிலைத்து விட்டது.
முட்டை வடிவமான பூஜ்யத்திற்கு ஆரம்பம் இல்லை, முடிவும் இல்லை. 1,2,3,4,5 முதலிய மற்ற எண்களைப் பாருங்கள். அவற்றுக்கு ஆரம்பமும் இருக்கிறது முடிவும் இருக்கிறது. ஏதாவது ஒரு எண்ணை எடுத்துக்கொள்வோம். உதாரணமாக 5 (ஐந்து) என்று வைத்துக்கொள்வோம். அதன் வலது புறம் ஒரு பூஜ்யத்தை இட்டால் 50. இரண்டு பூஜ்யத்தை இட்டால் 500. நான்கு பூஜ்யத்தை இட்டால் 50,000.
இப்படியாக பூஜ்யத்தைக் கூட்டக் கூட்ட அதன் மதிப்பு பல மடங்கு பெருகிறது. இதே பூஜ்யத்தை 5-ன் இடதுபுறம் ஒரு பூஜ்யம் என்ன ஆயிரம் பூஜ்யம் போட்டாலும் அதன் மதிப்பு 5 தான். அது கூடுவதும் இல்லை குறையுவதுமில்லை. இவ்வாறான நிகழ்விற்கு பூஜ்யம் காரணமல்ல. பூஜ்யத்தின் மதிப்பு எப்போதும் போல் தான் உள்ளது. இங்கு நாம்தான் தவறு செய்கிறோம்.
மதிப்பு மிக்க ஒரு பொருளை எங்கு வைத்தால் அதன் மதிப்பு உயருமோ அந்த இடத்தில் அதை வைக்கவேண்டும். விளக்கில் எரியும் நெருப்பு மிகவும் பிரகாசமானது. ஒளிமயமானது. இதில் எந்த ஐயமும் இல்லை. ஆனால் அதை இருட்டில் வைத்தால் அதன் ஒளி அந்த இடத்தைய பகல்போல் மாற்றிவிடும். அந்த நேரத்தில் விளக்கின் பெருமை அளப்பரியதாக தோன்றுகிறது.
இதே விளக்கை பகலில் ஓர் இடத்தில் வைத்தால் அதன் மதிப்பு துளியும் உயராது. அதாவது, பூஜ்யத்தின் இடது புறம் போட்ட எண்ணின் கதைதான். இங்கே விளக்கின் மீது எந்த குற்றமுமில்லை. நாம் அதை வைத்த இடம்தான் குற்றம்.

பூஜ்யத்தின் மதிப்பையும் அதன் பலத்தையும் நாம் பெறவேண்டுமானால் நாம் பூஜ்யத்தின் இடது புறத்தில் எண்களை இடவேண்டும். இங்கே பலர் அப்படித்தான் உண்மையில் நினைக்கிறார்கள்.
ஒரு நாத்திகன் கடவுள் என்கிற பூஜ்யத்தின் வலது புறம் நின்று கொண்டு 'எனக்கு கடவுளின் அருள் எதுவும் கிடைக்கவில்லையே' என்று தூற்றுகிறான். ஒரு ஆத்திகன் கடவுள் என்கிற பூஜ்யத்தின் இடது புறம் நின்று கொண்டு 'கடவுளின் கருணை எனும் நற்பயனைப் பெற்றேனே' என இறைவனைப் போற்றுகிறான்.
இறை நம்பிக்கை என்பது பூஜ்யத்திற்கு இடதுபுறம் இடும் எண்ணாகவும், அவநம்பிக்கை என்பது பூஜ்யத்திற்கு வலது புறம் இடும் எண்ணாகவும் உள்ளது. நாம் தேர்ந்தெடுக்கும் பாதையைப் பொருத்துத்தான் நாம் நினைத்த இலக்கை வெற்றிகரமாக அடையமுடியும். கண்களை மூடிக்கொண்டு உலகைப் பார்த்தால் எல்லாம் இருட்டாகத்தான் தெரியும்.

விழிகளைத் திறந்தால்தான் வெளிச்சத்தைப் பார்க்கமுடியும். இறைவன் படைப்பில் எல்லா மனித சக்திக்குள்ளும் ஒரு அற்புதமான அறிவு பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. அந்த அறிவை மனிதன் இங்கே எப்படிப் பயன்படுத்துகிறான் என்பது தான் கேள்வி.
ஒருவன் அருகிலுள்ள நகருக்குச் செல்ல 10 கி.மீ சுற்றி வருகிறான். ஏன் என்று கேட்டால் இடையில் ஆறு ஓடுகிறது. கடக்க முடியாத நீண்ட ஆறு என்கிறான். இன்னொருவனோ இதற்கு மாற்று வழியாக யோசித்து படகு மூலம் கடந்து நகரை அடைகிறான். முன்னவன் ஆற்றைக்கடக்க எடுத்துக்கொண்டது ஒரு மணி நேரம். பின்னவன் ஆற்றைக்கடக்க எடுத்துக்கொண்ட நேரம் பத்து நிமிடம்.
முட்டாள்கள் பூஜ்யத்தின் வலது புறம் எண்ணைப்போட்டு விட்டு தோல்வியடைகிறார்கள். அறிவாளிகள் பூஜ்யத்தின் இடது புறம் எண்ணைப்போட்டு விட்டு வெற்றியாளராகிறார்கள்.

‘பூர்ணம்’ என்றால் நிறைவு. ‘பூஜ்யம்’ என்றால் பெருமைக்கு உரியது. சூன்யம் என்றால் கண்ணுக்குப் புலப்பட வேண்டிய பொருட்கள் கண்ணுக்குப் புலப்படாமல் மறைந்திருப்பது. அதை ‘அவ்யக்தம்’ என்று பௌத்தம் சுட்டிக்காட்டும்.
பூர்ணம் என்றால் முழுமை பெற்றது; எடுக்க எடுக்கக் குறையாதது என்கிறது உபநிடதம்.

**ஞானிகளின் பார்வை 2**

வெறுமை என்பது ஞானியின் அகநிலை.



ஒரு காலத்தில் இமயமலை எவராலும் ஏற முடியாத சிகரம் என்று கருதப்பட்டது. எட்ட முடியாத உயரத்தில் இருந்த அது எண்ணற்ற இடையூறுகள் நிரம்பிய பாதைகளைக் கொண்டது. அதன் மேல் உயிரைப் பயணம் வைத்து ஏறினார்கள் டென்சிங் நார்கே, எட்மண்ட் ஹிலரி இருவருமே எவரெஸ்ட்டின் சிகரத்தில் காலடி பதித்தனர்.

"இமயத்தின் உச்சத்தில் காலடி வைத்தபின் எப்படி இருந்தது உங்கள் மனநிலை ? "என்று நிருபர்கள் கேட்டனர். ஒரு வெறுமையை உணர்ந்தேன்" என்றார் டென்சிங்.

சத்தியமான வார்த்தை ஏனெனில் உலகில் அதற்கு மேல் ஏறுவதற்கு எந்த உயரமும் இல்லை. எட்டுவதற்கு எந்த சிகரமும் இல்லை. இந்த நிலையில் மனதில் வெறுமையை தவிர வேறு என்ன தோன்ற முடியும் ?

வெறுமை என்பது ஒருவித எதிர்மறையான வார்த்தை - இருக்கவேண்டிய ஒன்று, இல்லாததை அது குறிக்கிறது. வெறுமை என்பது இல்லாமை இல்லை - அது எல்லையில்லாத ஒரு இருப்பு.

பூஜ்ஜியம் என்பது இந்தியாவில் கண்டுபிடிக்கப்பட்டது. பூஜ்ஜியத்தை கண்டுபிடித்தபோது, நாம் அதை இல்லாத ஒன்றாக பார்க்கவில்லை, எண்ணின் உச்சம் என்றே பார்த்தோம். பூஜ்ஜியம் என்றால் ஒன்றுமில்லை, ஆனால் இன்னொரு எண்ணின் மதிப்பை அதனால் கூட்டமுடியும்.

ஆனால் நீங்கள் இந்த வெறுமைப் பற்றி நீங்கள் விழிப்புணர்வாக சிந்திக்காவிடில் ஆணவம், ஆடம்பரம், பதவி, செல்வத்தின் அணிவகுப்பு - ஏனென்றால் உங்களை நீங்கள் கணிசமான அளவு முக்கியத்துவம் வாய்ந்தவராக மாற்றிக்கொள்ள வேண்டும் என்ற பரிதவிப்பு இருக்கிறது.

அண்டத்தில் 99 சதவிகிதத்திற்கும் மேற்பட்டது வெறுமை என்று நவீன பிரபஞ்சவியல் நிபுணர்கள் சொல்கிறார்கள். ஒரு அணுவினுள் 99 சதத்திற்கும் மேற்பட்டது வெறுமை. பிரபஞ்சத்தின் 99 சதவிகிதம் வெறுமையாக இருக்கிறது.

படைப்பின் மூலமான இந்த வெறுமை உங்கள் ஒவ்வொரு செல்லினுள்ளும் துடித்துக்கொண்டு இருக்கிறது என்பதுதான் உண்மை. இது உங்கள் அனுபவத்தில் உண்மையானால், நீங்கள் முற்றிலும் மாறுபட்ட விதத்தில் வாழ்வீர்கள்.

உங்கள் குடும்ப அமைப்பில், நீங்கள் முக்கியமான ஒரு உயிராக இருக்கிறீர்கள். ஊருக்குள் நீங்கள் ஓரளவு முக்கியமானவராக இருக்கலாம், ஆனால் நீங்கள் இல்லாமலும் அவர்களால் இருக்கமுடியும்.

தேசத்தில் பார்த்தால், ஆதார் அட்டையால் கண்டு எடுக்கப்பட்ட மிகக் குறைவான முக்கியத்துவம் கொண்ட ஒரு மனிதர் - நீங்கள் இல்லாமல் போனால், எவரும் கவனிக்கமாட்டார்கள். வருத்தப்பட மாட்டார்கள்

உலகில் பார்த்தால், நீங்கள் அதனினும் சிறியதொரு உயிர். அண்டவெளியில் பார்த்தால், நீங்கள் இருந்தும் இல்லை இல்லை என்றே சொல்லிவிடலாம்.

நீங்கள் இருக்கும் உயிரின் தன்மையால், உங்களுக்கு இரண்டு வாய்ப்புகள் உள்ளன: ஒன்று, இந்த அகண்ட வெறுமையில் ஒரு சிறு உயிரினமாக இருக்கமுடியும், அல்லது எல்லா படைப்பிற்கும் மூலமான அந்த வெறுமையாகவே நீங்கள் இருக்கமுடியும்.

இந்த வெறுமை, அதைத் தேடித்தான் அரசர்கள் பிச்சைக்காரர்களாக மாறுவதைத் தேர்ந்தெடுத்தார்கள்.

இப்ராஹீம் பின் அத்ஹம் அரசாட்சியை துறந்து வெறுமையானார்.

ராஜகுமாரனான சித்தார்தன் கௌதம புத்தராகி வெறுமையை நாடினார். அலங்காரமும், ஆடம்பரமும், எவ்வித கூடுதல் ஆபரணமும் தேவைப்படாத ஒன்றை அவர்கள் வெறுமையில் இருப்பதை நிதர்சனமாக கண்டார்கள் .

இந்த வெறுமை பிரபஞ்சம் முழுவதிலும் வியாபித்திருப்பது போல் சும்மா உட்கார்ந்திருக்கும் உங்களுக்குள்ளும் பரவியிருந்தால் உங்களை நீங்கள் இலேசாக காண்பீர்கள் , இந்த வெறுமை தன்னளவில் முழுமையாக இருக்கிறது என்றால் மௌனமே உங்களை வியாபித்திருக்கும்.

உங்கள் உள்ளத்திலுள்ள வெறுமையைப் போலவே உங்களை வந்தடையும் எல்லா பிரச்சனையும் உங்களுக்கு வெறுமையாகி விடுகிறது.

தங்களுக்கு கிடைத்தவற்யெல்லாம் பிறருக்கு கொடுத்துவிட்டு, தன்னைத் தானே வெறுமையாக்கி கொள்பவர்களைப் பற்றி

اَلَّذِيْنَ يُنْفِقُوْنَ اَمْوَالَهُمْ بِالَّيْلِ وَالنَّهَارِ سِرًّا وَّعَلَانِيَةً فَلَهُمْ اَجْرُهُمْ عِنْدَ رَبِّهِمْ وَلَا خَوْفٌ عَلَيْهِمْ وَلَا هُمْ يَحْزَنُوْنَ

(நம்பிக்கையாளர்களே!) எவர்கள் தங்கள் பொருளை (பிறருக்கு உதவிடும் நோக்கில்) இரவிலும், பகலிலும், இரகசியமாகவும், வெளிப்படையாகவும் செலவு செய்கின்றார்களோ அவர்களுக்குரிய கூலி அவர்களின் இறைவனிடம் அவர்களுக்கு உண்டு. தவிர, அவர்களுக்கு (மறுமையில்) எவ்வித பயமும் இல்லை. அவர்கள் துக்கப்படவும் மாட்டார்கள். (குர்ஆன் : 2:274)

**ஞானிகளின் பார்வை 3**

( ஞானிகளின் குருகுலம் )



குருகுலம் என்பது இந்தியாவில் பண்டைய காலத்தில் கல்வி கற்றுத் தரும் குருவின் ஆசிரமத்தில் மாணவர்கள் தங்கி, குருவிற்கு பணிவிடைகள் செய்துகொண்டே, குருவின் அருகிலே இருந்து கல்வி பயிலும் இடமாகும்.

தெற்காசியாவில் இந்து, பௌத்த, சமணம் மற்றும் சீக்கிய சமயங்களில் குருகுலக் கல்வி முறை இருந்தது, இந்தியாவை அடிமைப்படுத்திய பிரிட்டானியார்கள் வருகைவரை தொடர்ந்து இயங்கிக் கொண்டுதான் இருந்தது. குரு பரம்பரை இன்றளவும் போற்றப்படுகிறது.

சீடர்கள் குருவின் ஆசிரமத்திற்கு அனைத்து தேவையான வேலைகளைச் செய்து கொண்டே கல்வி கற்க வேண்டும். குருகுலத்தில் கல்வி பயிலும் காலம் குறைந்தபட்ச 12 ஆண்டுகளாகும். குருகுலத்தில் கல்வி பயிலும் காலகட்டத்தில், மாணவர்கள் தங்கள் குடும்பத்தை விட்டு விலகி இருக்க வேண்டும்.

குருகுலத்தில் ஞானம் மட்டும் அல்லாமல் வேளாண் விவசாயம் , தோட்டக்கலை மற்றும் கால்நடை பராமரிப்பு போன்றவற்றின் கல்வியையும் அனுபவத்தோடு பயிற்றுக்கப்படுகிறது .

குருகுலம் இந்த உலகம் சார்ந்த கல்விமுறைகள் சீடர்களின் தனித்திருத்தலின் வெறுமையைப் போக்கி மனஅமைதியைத் தருகிறது.

சிறைச்சாலைகளில் 20 ஆண்டுகளுக்கும் மேலாக இருந்த நெல்சன் மண்டேலாவின் மனத்தை அமைதிப்படுத்தியது அவர் ஈடுபட்ட தோட்ட வேலைதான்.

ஒவ்வொரு செடியும் பிஞ்சு விடும்போதும், அவருடைய லட்சியக் கனவும் துளிர்ப்பது போன்ற மகிழ்ச்சியை அவருக்கு ஏற்படுத்தியது. இதயத்தில் இயற்கையோடு இயைந்து இருப்பது போன்ற இனிமை அவருக்கு உண்டானது.

லியோ டால்ஸ்டாய் இறுதிக் காலத்தில் வேளாண்மை செய்து தன்னை முழுமையாக இருத்தலோடு கரைத்துக் கொண்டவர்.

قَالَ اِنِّىْۤ اُرِيْدُ اَنْ اُنْكِحَكَ اِحْدَى ابْنَتَىَّ هٰتَيْنِ عَلٰٓى اَنْ تَاْجُرَنِىْ ثَمٰنِىَ حِجَجٍ فَاِنْ اَتْمَمْتَ عَشْرًا فَمِنْ عِنْدِكَ وَمَاۤ اُرِيْدُ اَنْ اَشُقَّ عَلَيْكَ سَتَجِدُنِىْۤ اِنْ شَآءَ اللّٰهُ مِنَ الصّٰلِحِيْنَ

அதற்கு அவர் (மூஸாவிடம்) கூறினார்: "நீங்கள் எனக்கு எட்டு வருடங்கள் வேலை செய்ய வேண்டுமென்ற நிபந்தனையின் மீது இவ்விரு பெண்களில் ஒருத்தியை நான் உங்களுக்கு திருமணம் செய்து கொடுக்க விரும்புகிறேன்.

நீங்கள் அதைப் பத்து வருடங்களாக முழுமை செய்தால், அது நீங்கள் எனக்கு செய்யும் நன்றிதான். நான் உங்களுக்கு (அதிகமான) சிரமத்தைக் கொடுக்க விரும்பவில்லை. அல்லாஹ் நாடினால், நீங்கள் என்னை உங்களுக்கு உபகாரியாகவே காண்பீர்கள்" (என்றார்).(குர்ஆன் : 28:27)

மணப் பெண்ணின் தந்தைக்கு வேலை செய்வது பெண்ணுக்கு மணமகன் கொடுக்கும் மஹராக அக்காலத்திலிருந்த ஷரீஅத்தில் நிர்ணயிக்கப்பட்டும் இருந்திருக்கலாம். எவ்வாறாயினும், எட்டு வருடம் பூர்த்தியாக வேலை செய்ய வேண்டும் என்ற நிபந்தனை, ஹளரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களுக்க விதிக்கப்பட்டது என்பதும்,

அது அங்கீகரிக்கப்பட்டது என்பதும்தான் இங்கு முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டிய விஷயம். இது மஹரா என்பதை திருக்குர்ஆனும் தெளிவாகக் கூறவில்லை இங்கு கவனிக்க வேண்டிய முக்கிய பிரச்சினையுமல்ல.

ஹளரத் ஷூஐபு அலைஹிஸ்ஸலாம் அவர்கள் நபியாக இருந்ததால் தம்மிலுள்ள நபித்துவ ஜோதியின் மூலம் எட்டு வருட காலம் தம்மிடம் இருந்து பயிற்சி பெற்றால், ஹளரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் பரிபூரண நிலையை அடைந்து விடுவார்கள் என்பதைக் கண்டு கொண்டார்கள். அதற்கப்புறமும் பயிற்சியளிக்க வேண்டிய அவசியமில்லை என்பதை உணர்ந்தார்கள்.

ஆனால், பரிபூரண நிலையிலும்கூட பூரண நிலையை பத்து வருட காலத்தில் அவர் அடைந்துவிட முடியும் என்பதையும் அவர் தெரிந்ததால்தான். பத்து வருட காலம் வேலை செய்வதை நிபந்தனையாக ஏற்படுத்தாமல் ஹளரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்களது விருப்பத்துக்கு விட்டு விட்டார்கள்.

பத்து வருட பயிற்சிக்குப் பிறகு இராதத்துடைய (குருவை நாடுவதுடைய) நிலை அவருக்கிருக்காது. இஸ்திக்லால். இஸ்திகாமத் ( தனித்து, சுயேட்சையாக, உறுதியாக நிற்கும்) அந்தஸ்துக்கு அவர் வந்து விடுவார் என்பதையும் கண்டார்கள். எனவேதான் உமக்கு நான் சிரமம் கொடுக்க விரும்பவில்லை என்றும் தெரிவித்தார்கள் என்று சில மெஞ்ஞானிகள் கூறியிருக்கிறார்கள்.

ஹளரத் மூஸா அலைஹிஸ்ஸலாம் அவர்கள் முப்பதாவது வயதில் ஹளரத் ஷுஜபு அலைஹிஸ்ஸலாம் அவர்களைச் சந்தித்தார்கள். பத்து வருட கால பயிற்சிக்குப் பிறகு நாற்பது வயது பூர்த்தியானவுடன் தம் சொந்த ஊருக்குத் திரும்பினார்கள். வழியில் நுபுவ்வத்தை அடைந்தார்கள்.

ஆகவே, ஹளரத் ஷுஜபு அலைஹிஸ்ஸலாம் அவர்கள் எட்டு வருடகாலம் தமக்கு வேலை செய்ய வேண்டும் என்று நிபந்தனை ஏற்படுத்தியதன் கருத்து, குருகுலம் என்னும் பரமார்த்திகத் துறையில் ஞானவழிப் பயிற்சி பெற வேண்டும் என்று கூறினார்கள் என விரிவுரை செய்தது மிகப் பொருத்தமான விரிவுரை எனத் தெரிகிறது.

குருகுலம் இந்த உலகம் சார்ந்த கல்விமுறைகள் மூலம் சீடர்களின் தனித்திருத்தலின் வெறுமையைப் போக்கி, மனஅமைதியைப் பெற்று தருவதோடு, ஆன்மிகத்தின் அடிநாதத்தையும் அது போதிக்கிறது .

**ஞானிகளின் பார்வை 4** ( "நீங்கள் கடவுளைக் கண்டதுண்டா?" )



நரேந்திரரின் மனத்தில் பெரும் ஞானப்பசி இருந்தது. அதனால் இந்தக் கேள்வி அவரை ஓயாமல் வருத்தியது. உபன்னியாசம், விரிவுரை, பிரசங்கம் எது நடந்தாலும் சரி ஓடிப் போய் அதில் அவர் கலந்து கொள்வார். கூட்டம் முடியும் வரை இருந்து ஒன்று விடாமல் கேட்பார். கூட்டம் முடிந்து மக்கள் களையும்போது, இவர் ஓடிப்போய்

மேடையில் ஏறுவார். புராண விரிவுரை செய்தவரை நோக்கி ஒரே ஒரு கேள்வி உச்சி மண்டையில் ஆணி அறைந்தது போல் ஒரே ஒரு கேள்விதான் கேட்பார்.

"நீங்கள் கடவுளைக் கண்டதுண்டா?”

எப்பேர்ப்பட்ட மனிதரையும் திணறித் திக்கு முக்காட வைத்து விடும் கேள்வி இது.வேறு யாராவதாக இருந்திருந்தாலும் அவர்கள் இப்படிக் கேட்டிருக்க மாட்டார்கள். கடவுள் உண்டா என்று மட்டும்தான்

கேள்வி கேட்டிருப்பார்கள். அவ்வளவுதான், நூற்றுக் கணக்கான பதில்கள் வந்து கொட்டியிருக்கும்.

அவர் அந்தர்யாமி என்பார் ஒருவர். அவர் அனாதியாய் எங்கும் நிறைந்த பரிபூரணம் என்பார் ஒருவர். அவர் உன்னுள்ளும் இருப்பவர், என்னுள்ளும் இருப்பவர் என்பார் இன்னொருவர். அவரைப் பார்க்க முடியாது. உணரமட்டும் தான் முடியும் என்பார் வேறு ஒருவர்.

ஆக தனக்கே தெரியாத ஒரு விஷயத்தைப் பற்றி சத்தமாகப் பேசிக் கொண்டு இருப்பார்கள் பலரும். இவற்றுக்கெல்லாம் இடமே இல்லாத வகையில் அவர் ஒரே கேள்வியில் எதிராளியை 'ஹாண்ட்ஸ் அப்' என்பது போல் நிறுத்தி விடுவார்.

"நீங்கள் கடவுளைக் கண்டதுண்டா?"

எவரால் சொல்ல முடியும் 'நான் கண்டேன்' என்று?' திணறி விடுவார்கள். அப்படிப்பட்ட நரேந்திரன் இதே கேள்வியை ராமகிருஷ்ண பரமஹம்ஸரிடமும் கேட்டார்.

கும்பலாக அமர்ந்து கொண்டு மும்முரமாகப் பேசிக் கொண்டிருந்த பரமஹம்ஸரிடம் நேராகச் சென்ற நரேந்திரன் கேட்டார், "நீங்கள் கடவுளைக் கண்டதுண்டா?" என்று.

சட்டென்று திரும்பிய பரமஹம்ஸர் கேட்டார், "ஏன் உனக்கும் பார்க்க வேண்டுமா?" என்று.

நரேந்திரனை விவேகானந்தர் ஆக்கிய சம்பவம் இது. அவர் மட்டும் வேறு ஏதாவது சொல்லியிருந்திருந்தால் நிலைமையே வேறு.

ஒரே வார்த்தையில், 'உனக்கும் பார்க்க வேண்டுமா? பார்க்க வேண்டும் என்றால் இரு. இல்லையேல் போ. வீண் கதை கேட்டுக் கொண்டிருக்காதே!' என்ற பொருளில் சொல்லப்பட்ட சொற்கள் இவை. பின்னாளில் சுவாமி விவேகானந்தர் பல முறை சிலாகித்து எழுதிய சம்பவங்கள் இவை.

இதே மாதிரி இன்னொரு சம்பவம்

அஷ்டாவதான முனிவரிடம் கிராமவாசி ஒருவன் 'கடவுள் எப்படி இருப்பான் ?' என்று கேட்டானாம்.

‘நீயே நேரில் தெரிந்து கொள்' என்றாராம் அவர்.

"நேரில் எப்படிப் பார்ப்பது?" என்றானாம் அவன்.

"தேடிப்பார்த்துத் தெரிந்துகொள்" என்றாராம் அவர்.

எப்படித் தேடுவது?" என்று கேட்டானாம் அவன்:

திணறித் திணறித் தேடு " என்றாராம் அவர்

எப்படித் திணறித் தேடுவது?" என்றானாம் அவன்

" இதோ இப்படி" என்றபடியே அவனைத் தண்ணீரில் பிடித்து அழுத்தினார் அவர் ' நீருக்குமேல் வரவிடாமல் தலையை அவர் கைகள் அழுத்த, தண்ணீருக்குள் முகம் அழுந்தி முச்சுத்திணறி நுரையீரல் காற்றுக்குத் தவித்து, நீர் புகுந்துவிடாமல் இருக்க முக்கையும், வாயையும் இறுக மூடி ,காதுகள் அடைக்க குடல் எழும்ப, மார்பு விம்ம.. அவன் மூச்சு விடத் திண்டாடிய நிலையில் சட்டென அவர் கையை விடவும் வெளியே பாய்ந்து.... தலையை அண்ணாந்து வாயை அகலத் திறந்து காற்றை இழுத்து, இழுத்து அவன் சுவாசிக்க...

"இதேதான். இப்படித்தான். தேடணும்" என்றாராம்.

"நீருக்குள் மூழ்கிய நிலைவில் எப்படி உனக்கு மூச்சு ஒன்று மட்டும் பிரதானமாயிருந்ததோ, அதைத்தவிர வேறு எதுவும் தேவைப்படவில்லையோ அதுபோல் இறைவன் மட்டும்தான் தேவை வேறு எதுவும் வேண்டாம் என்ற தவிப்பு எப்போது உனக்குள் மூழ்கிறதோ அப்போது உன்னுள் இறை அனுபவம் ஏற்படும்.

**ஞானிகளின் பார்வை 5**

( துறவு என்பது வெறும் சொல் அல்ல,இறைவனுள் கரைக்கும் ஒரு வாழ்வு அது )

சுஃப்யான் அத்தௌவ்ரீ கொரோசான் நகரில் கி.பி. 714 ஆண்டில் பிறந்தார்.தனது கல்விக்காக ஈராக்கின் கூஃபாவுக்குச் சென்றார் , மேலும் உமையாத் கலீபாவுக்கு எதிராக, நபிகளாரின் மருமகன் அலி இபின் அபிதாலிபின் (ரலி) அவர்களின் குடும்பத்தை ஆதரித்தார் .

ஞானத்தின் ஒளியைக்கொண்டு மெய்ஞான உலகில் சஞ்சரித்து, அதன் அனைத்து சூட்சுமங்களையும் கற்றுத் தேர்ந்த மாபெரும் ஞானி சுஃப்யான் அத்தௌரீ. இவர் சூபி உலகின் முன்னோடி. சொல்வதைச் செயலில் மட்டுமல்லாமல் எண்ணத்திலும் காட்டிய இவர்,இறைவனின் மீதான இவரது நேசம் அளப்பரியது. இவரது பக்தி கேள்விக்கெல்லாம் அப்பாற்பட்டது !.

அளவற்ற ஞானமும் தெளிவான அறிவும் தீர்க்கமான சிந்தனையும் இறைவனால் இவருக்கு வழங்கப்பட்ட அருட்கொடைகள். சிறுவயது முதல், ஆன்மிக மார்க்கமே இவரது விருப்பமாக இருந்தது. தொழுகையும் நோன்பும் இவரது அன்றாடமாக இருந்தது. பசியைத் துறந்து தூக்கத்தைத் தொலைத்து இறைப் பக்தியில் முற்றிலுமாக ஐக்கியமாகி வாழ்ந்த இவரை, சூபி ஞான உலகில் ஒரு சுயம்பு என்று சொல்லலாம்.

வயது ஏற, ஏற இவரது ஆன்மிக நிலையும் உயர்ந்து கொண்டே இருந்தது. இவரது உரையில் மெய்ஞானம் ததும்பி ஓடியது. அவரது உரையைக் கேட்பவர்கள், எளிதில் பரவச நிலைக்குச் சென்றனர். பக்தியின் பல படித்தரங்களை இவரது உரை தெளிவாக விளக்கியது. ஆன்மிகத்தின் சிக்கலான நிலைகளை எளிதான மொழியில் சாமானியருக்கும் புரியும் வகையில் விளக்கும் வல்லமையை இயல்பிலேயே அவர் கொண்டிருந்தார்.

இவரது உரையைக் கேட்கப் பெரும் கூட்டம் கூடுவது அப்போதைய வாடிக்கையாக இருந்தது. மனத்தில் பட்டதை எந்த விதத் தயக்கமும் இன்றி கூறும் தன்மைகொண்டவர்.

மன்னராக இருந்தாலும், அவரிடம் உள்ள குறையை முகத்துக்கு நேராகக் கூறினார். நேர்மையின் உருவமாக இருந்த இவரிடம் எதிர்த்துப் பேச மன்னர்களே அஞ்சும் நிலை அன்று நிலவியது.

மனத்தின் இச்சைகளை அடக்கும் சூத்திரம் தெரிந்திருந்த காரணத்தால், மனமும் அதன் எண்ணங்களும் அவரது விருப்பப்படி இருந்தன.

ஒருமுறை தன்னுடைய நண்பருடன் நடந்து செல்லும்போது, அங்கிருந்த செல்வந்தரின் பகட்டான வீட்டை அவருடைய நண்பர் ஏக்கத்துடன் பார்த்தது இவரது கண்ணில் பட்டது. “செல்வந்தரின் ஆடம்பர பகட்டை விட உனது இந்த ஏக்கப் பார்வையே மோசமானது".

ஏக்கமாகவும் வியப்பாகவும் பார்ப்பதற்கு யாரும் இல்லையென்றால், உலகில் எந்த செல்வந்தரும் தனது செல்வத்தை வெளிக்காட்டும் விதமாக இத்தகைய பகட்டான வீடுகளைக் கட்ட மாட்டார்” என தன்னுடைய நண்பரிடம் கூறினார்.

இவர் உரையாற்றும் சபைகளில் எப்போதும் செல்வந்தர்களுக்குக் கடைசி வரிசையே ஒதுக்கப்பட்டது. செல்வத்தை மட்டுமல்லாமல்; செல்வந்தர்களையும் அதிகாரத்தில் இருப்பவர்களையும் ஒருங்கே ஒதுக்கி வைத்தார். தாங்களும் ஏழையாக இருந்திருக்கக் கூடாதா என்ற ஏக்கத்தை இவரது இந்தச் செயல் செல்வந்தர்களின் மனத்தில் விதைத்தது.

செல்வத்தின் பகட்டைத் தொலைத்து, ஏழைகளுக்கு வாரி வழங்கும் ஈகைக் குணத்தை அந்த செல்வந்தர்களுக்குள் இவர் தன்னுடைய உரையின் மூலமும் செயலின் மூலமும் ஏற்படுத்தினார்.

“துறவு என்பது வெறும் சொல் அல்ல, அது முழு ஈடுபாட்டுடன் நிகழ்த்த வேண்டிய செயல். ஆசைகளை மட்டும் துறக்காமல், தன்னையே முழுமனத்துடன் இறைவனுள் கரைக்கும் ஒரு வாழ்வு.” என்று எப்போதும் தன்னுடைய சீடர்களிடம் அவர் கூறுவார்.

அந்தச் சொற்களின் படித்தான் அவரது துறவும் வாழ்வும் அமைந்திருந்தன. அவரது துறவை துறவின் உச்சநிலை எனலாம். சுற்றம் துறந்து, குடும்பம் துறந்து, வீட்டைத் துறந்து, ஊரைத் துறந்து அவர் எங்கும் செல்லவில்லை. மக்களுடன் மக்களாக, சுற்றம் சூழ வாழ்ந்தே தனது துறவை அவர் மேற்கொண்டார்.

“செல்வந்தர்களுடன் நட்புறவை விரும்பும் துறவி, ஒரு நயவஞ்சகனாக மட்டுமே இருக்க முடியும். அதே போல் அதிகாரத்தில் இருப்போரிடம் நட்புறவை விரும்பும் துறவி ஒரு திருடனாக மட்டுமே இருக்க முடியும்” என்று பின்னொரு நாளில் இதுகுறித்து அவர் விளக்கமளித்தார்.

தன்னைப் புகழ்பவரிடம் காட்டும் அன்பைவிட அதிகமான அன்பைத் தன்னை இகழ்பவரிடம் அவர் வெளிப்படுத்தினார். “இகழ்பவரே நம்மை நல்வழிப்படுத்துபவர்” என்று எப்போதும் கூறுவார்.

“நன்மை செய்வது மனிதராகப் பிறந்த அனைவரின் கடமை. ஒரு நன்மையைச் செய்துவிட்டது அதற்காக மகிழ்வதை விட கேடு கெட்ட செயல் எதுவுமில்லை. நன்மை புரிய வாய்ப்பளித்த இறைவனுக்கு நன்றி கூறுங்கள்” என்பதே சீடர்களுக்கு அவர் வழங்கிய முக்கியமான அறிவுரை.

ஒருமுறை மன்னர் அவரை அரண்மனைக்கு அழைத்தார். அவருடைய பகட்டும் அதிகார மிடுக்கும் முகம் சுளிக்கும் விதமாக இருந்தன. “சுப்யான் அவர்களே, எனக்குத் தங்களின் அறிவுரை என்ன?” என்று மன்னர் சற்றே திமிர் தொனிக்கக் கேட்டார்.

இறைவன் படைத்த மண்ணில் அநீதியையும் அட்டூழியத்தையும் விதைக்க வேண்டாம். ‘மண்ணிலிருந்தே உங்களைப் படைத்தோம். அதிலேயே நாம் மீண்டும் உங்களைச் சேர்ப்போம். பின்னர் ஒரு தடவை அதிலிருந்தே உங்களை வெளிப்படுத்துவோம்’ என்ற குர்ஆன் வாசகத்தை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள்” என்று கூறிவிட்டுத் திரும்பிப் பார்க்காமல் வெளிவந்துவிட்டார்.

அவர் நோயுற்று, மரணப் படுக்கையிலிருந்தபோது, அவரைக் காண வந்த மக்களின் கூட்டத்தால், பஸ்ரா நகரமே தள்ளாடியது. மன்னர்களும் அமைச்சர்களும் சான்றோர்களும் ஞானிகளும் அவருக்கு இறுதி விடை கொடுக்க அங்கே குழுமியிருந்தனர்.

முடிவு நெருங்கிவிட்டது என்பதை உணர்ந்த சுப்யான், தன்னிடமிருந்த சொற்ப காசுகளைச் சீடர்களிடம் கொடுத்து ஏழைகளுக்குத் தானமாகக் கொடுக்கச் செய்தார்.

அதன் பின்பு கண்களை மூடி, இறைவணக்கத்தில் ஈடுபட்டவர், தனது கண்களை ஒருபோதும் திறக்கவில்லை.

## ஞானிகளின் பார்வை 6

(சூஃபியாக்களின் கம்பளி ஆடை )



கம்பளி எனும் பொருள் கொண்ட ஸூப் எனும் சொல்லிலிருந்து சூஃபி சொல் பிறந்ததாகவும் சிலர் கூறுகின்றனர். மக்களின் பொதுவான அபிப்பிராயமும் இதுவாகவே இருந்து வருகிறது.

ஆரம்ப கால ஸூபிகள் முரட்டுக் கம்பளி ஆடை அணிவதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். அநேகமாக அது கறுப்பு நிற கம்பளியாக இருக்கும். இது துறவின் – ஏழ்மையின் சின்னமாகக் கருதப்பட்டது. மேலும், கம்பளியே நபிமார்களின் ஆடையாகவும் இருந்து வந்திருக்கிறது..!

"ரௌஹா நோக்கி வெறும் காலுடன் அபா என்னுமிடத்திலுள்ள மலையைக் கடந்து, எழுபது நபிமார்கள் கஃபாவை நோக்கிக் வெரும் காலுடன் அபா எனும் கம்பளி ஆடை அணிந்தவர்களாகவும் நடந்து சென்றனர்"

என்று நபி (ஸல்) அவர்கள் கூட கம்பளி ஆடையணிந்து பயணம் செய்வதையும் (விருந்திற்காக) சாதாரண மனிதனின் அழைப்பை ஏற்றுக் கொள்வதையும் வழக்கமாகக் கொண்டிருந்தார்கள்" என்றும் அபூ மூஸா அஷ் அரீ கூறியுள்ளார்கள்"

ஹஸன் அல் பஸ்ரீ (ரஹ்) "யும், நான் பத்ர் போரில் கலந்து கொண்ட நாயகத் தோழர்களை அறிவேன். அவர்கள் கம்பளியையே அணிந்தனர்" என்று கூறிகிறார்.

இன்னும் சிலர் அஹ்லுஸ் ஸுப்பா (திண்ணைத் தோழர்கள்) என்னும் சொற்றொடரிலிருந்து இச் சொல் தோன்றியதாகக் கூறுவர் ஏனெனில் ஸூபீகளின் இயல்புகளும், செயல்களும் பெருமானாரின் திண்ணைத் தோழர்களின் இயல்புகளையும் செயல்களையுமே பெரிதும் ஒத்திருந்தன்.

திண்ணைத் தோழர்கள் எனப்படுவோர் சத்தியத்தை (ஹக்கை) அறிவதற்காக உலகையும் அதன் ஆசாபாசங்களையும் துறந்தவர்கள், ஒரு குறிப்பிட்ட இடம் என்றில்லாமல் எங்கும் அலைந்து திரிந்தவர்கள், தியானிப்பதையும் சிந்திப்பதையுமே தமது வாழ்வாகக் கொண்டவர்கள். அல்லாஹ்வும் அவனுடைய தூதர்களிடமிருந்து நல்லவற்றை ஈர்ப்பதையே அவர்களுடைய இலக்காக கொண்டனர்.

திண்ணைத் தோழர்கள் நபிகளாரிடமிருந்து இறைவேதத்தையும், நபிகளாரின் சொல், செயலையும் மனதில் ஈர்த்துக் கொண்டு அவற்றை பதிவுத்தளத்தில் பதிவு செய்வதற்கு முனைப்போடு காத்திருந்தனர். இதற்கு அவர்களின் கறுப்பு நிற கம்பளியும் ஒரு

காரணமாக இருந்திருத்திருக்கலாம்.

ஆனால் உலக மக்கள் துக்கம் வரும்போது கறுப்பு உடை அணிகிறார்கள் -கறுப்புக் கொடிகாட்டி வெறுப்பை உமிழ்கிறார்கள்- 'கறுப்பு' என்பது மக்களின் எப்போதும் மகிழ்ச்சிக்குரிய நிறமல்ல - ஆனால், கூந்தலில் மட்டுமே மனிதன் கறுப்பு நீடிக்க வேண்டுமென்று நினைக்கிறான்

'கறுப்பு' ஏன் அப்படி கருதப்படுகிறது?

கறுப்பு நிறமல்ல; அது நிறங்களற்ற தன்மை.எந்த நிறமும் இல்லாத தன்மை கறுப்பு துக்கத்தை 'நிறமில்லாமல்' 'Colourless' மூலமாகத்தானே எதிர்கொள்ள முடியும்? எனவே கறுப்பைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள் .

கறுப்பு நிறத்துக்கு ஒரு குறிப்பிட்ட தன்மை உண்டு. கறுப்பு ஆடை அணிந்தால் நீங்கள் பலவற்றையும் ஈர்க்கக் கூடும். அனைத்து நிறங்களையும் ஈர்க்கிறோம். எதையும் பிரதிபலிக்க மாட்டோம். ஆனால் 'பல விஷயங்களையும் ஈர்ப்போம். அப்படியாயின், கறுப்பு நிறத்திலுள்ள பொருள் வெளிச்சத்தில் எல்லா வண்ணங்களையும் உள்ளிழுத்துக் கொள்கிறது என்பதை உணரலாம்.

தொடர்ந்து கறுப்பு நிற ஆடையே அணிந்து கொள்ள வேண்டும் என்றால், உங்களை ஒரு குறிப்பிட்ட விதமான சாதனா மூலம் நீங்கள் தயார்படுத்திக் கொண்டிருக்க வேண்டும். திண்ணைத் தோழர்கள், சூஃபிமார்கள் எப்போதுமே கறுப்பு கம்பளி ஆடை அணிகிறார்கள். ஆடை மட்டுமின்றி தலையில் கூட கறுப்புத்துணி கட்டிக் கொள்வார்கள். ஏனென்றால் அவர்கள் பலவிதமான சக்திகளை ஈர்க்க விரும்புகிறார்கள்.

அதேபோல் ஒரு பொருள் கறுப்பாகத் தோன்றினால், அது அனைத்து நிறங்களையும் உள்ளே இழுத்துக் கொண்டு எதையும் பிரதிபலிக்கவில்லை என்று அர்த்தம்.

வெண்மை நிறம் மற்றும் கறுப்பு நிறத்தில் கவனிக்கத்தக்க விஷயம் உள்ளது. ஒரு பொருள் வெண்மை நிறமாக தோன்றுகிறது என்றால் அது, எதையும் உள்ளே இழுத்துக் கொள்ளவில்லை என்று பொருள். அனைத்தையும் வெளியேற்றிவிடுவதால் வெண்மையாக இருக்கிறது.

கறுப்பு எந்த நிறமும் இல்லாத தன்மையென்றால் வெண்மை எல்லா நிறங்களும் இருக்கும் தன்மை சரிதானே ?

வெள்ளைக் கதிரைப் பிரிக்கும்போது ஏழு வண்ணங்களும் கிடைக்கின்றன - எல்லா வண்ணங்களும் இணையும்போது வெண்மை உண்டாகிறது

எல்லா மனங்களும் ஒன்றுபடும்போது சாந்தி உண்டாகிறது. சமாதானம் உண்டாகிறது. அதனால்தான் சமாதானத்திற்கு நாம் வெண்மையை அடையாளமாக்குகிறோம்.

கஷ்டங்களை நீக்கும், நல்லவை நடக்கும் வாழ்வில் சுபிட்சத்தை ஏற்படுத்தும் என்ற அடிப்படையில் எந்த ஒரு ஆடைக்கும் இஸ்லாம் முக்கியத்துவம் வழங்கவில்லை என்பதை நினைவில் வையுங்கள்

நபி (ஸல்) அவர்கள் சிவப்பு (புகாரி 3551), கருப்பு (முஸ்லிம் 2418), பச்சை (நஸயீ (1554)) போன்ற பல்வேறு நிறங்களில் ஆடை அணிந்துள்ளார்கள்.

மஞ்சள் நிற ஆடை ஒருவருக்கு அழகாக இருந்தது. அதை நபியவர்கள் பாராட்டியுள்ளார்கள். ( புகாரீ 3071, 5823)

ஒருவன் தான் விரும்பிய நிறத்தில் ஆடை அணிந்து கொள்ளலாம்.

நபி (ஸல்) அவர்கள் வெள்ளை அணிவதை ஆர்வமூட்டியுள்ளார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: நீங்கள் வெள்ளை ஆடைகளை அணிந்து கொள்ளுங்கள். இது தான் உங்கள் ஆடைகளில் சிறந்ததாகும். இன்னும் உங்களில் மரணமடைந்தவர்களுக்கும் வெள்ளையிலேயே கஃபனிடுங்கள்.

இப்னு அப்பாஸ் (ரலி) திர்மிதி (915)

நபி (ஸல்) அவர்கள் வெள்ளை ஆடையை அதை அணிவதால் மகிமை ஏற்படும் என்ற அடிப்படையில் வலியுறுத்தவில்லை. அதற்குரிய காரணத்தையும் நபி (ஸல்) அவர்கள் தெளிவுபடுத்தியுள்ளார்கள்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: வெள்ளை ஆடையை அணியுங்கள். ஏனென்றால், அது மிகத் தூய்மையானது. மணமிக்கது. அதிலேயே உங்களில் மரணித்தவர்களுக்கும் கஃபனிடுங்கள். அறிவிப்பவர் : ஸமுரா (ரலி) திர்மிதி (2734)

நாம் நிறமுள்ள ஆடைகளை அணியும் போது அதில் அழுக்குப் படிந்தாலோ கறைகள் ஏற்பட்டாலோ வெளியே தெரியாது. ஆனால், வெள்ளை ஆடை அப்படிப்பட்டதல்ல. அதில் சிறிதளவு அழுக்குப் படிந்தாலும் வெளியே தெரியும். எனவே தான் நபி (ஸல்) அவர்கள் தூய்மையை வலியுறுத்தி வெள்ளை ஆடை அணியும்படி கூறியுள்ளார்கள்.

சூஃபியாக்களின் கம்பளி கறுப்பு என்ன மட்டமான நிறமா ?

கறுப்பாய் இருக்கும் குயிலிடமிருந்து அழகிய பாடல்கள் வெளிப்படவில்லையா?"

கறுப்பாய் இருக்கும் காகம் தெருக்களைச் சுத்தம் செய்து 'ஆகாயத் தோட்டியாய்' வலம் வரவில்லையா?

கறுப்பாய் இருக்கும் மேகம் மழையாய் இறங்கி பூமியைக் குளிர்விக்கவில்லையா?

மண் சுறுப்பாக மாறமாற அதில் உள்ள 'ஆர்கானிக் 'கார்பன்' அதிகமாகி பயிர்களைச் செழிக்கச் செய்வதில்லையா?

உடலின் முக்கியப் பாகங்களையெல்லாம் கறுப்பாய் இருக்கும் முடி பாதுகாப்பு செய்யவில்லையா?

.... இதைத்தானே சூஃபியாக்களும் செய்கிறார்கள்.

## ஞானிகளின் பார்வை 7

( இறைபக்தி-சடங்கு சம்பிராயங்களில் இல்லை )



சம்பிராய சடங்குகள் மூலம் பக்தியாய் இருக்கிறோம் என்கிற மாயத் தோற்றத்தை ஏற்படுத்தி நம்மை மகிழ்ச்சியடையச் செய்கின்றன - புனிதத் தலத்திலே நீராடினால் நம் பாவங்களெல்லாம் கரைந்துவிடும் என நினைத்து, தெரிந்தே பாவங்கள் செய்பவர்கள் இருக்கிறார்கள் -

கபீர் தன்னுடைய தோஹேவில்

"புனிதத் தலங்களில் நீராடுவதால் மோட்சம் கிடைக்கும் என்று சொன்னால், அங்கு ஏற்கெனவே வசித்துக்கொண்டிருக்கும் மீன்களுக்கும், தவளைக்கும் இந்நேரம் மோட்சம் கிடைத்திருக்க வேண்டுமே!"என்று கிண்டலாகக் குறிப்பிடுவார்.

Antony Demello ஒரு அழகிய உருவகக் கதையைக் கூறுவதுண்டு.

ஒரு குருவுடைய சீடர்கள் புனித யாத்திரை போக விருப்பத்துடன் இருந்தார்கள். அவர்களுக்கு இறைபக்தி-சடங்கு சம்பிராயங்களில் இல்லை என்பதை எப்படிப் புரிய வைப்பது எனத் தெரியவில்லை. நேரடியாகச் சொன்னால் அது விளங்காது. ஒரு செயலின் மூலம்தான் அதைப் புரிய வைக்க வேண்டும்.

அவர் ஒரு பாகற்காயைக் கொடுத்து எல்லாப் புனித நீரிலும் கழுவிக் கொண்டு வரச் சொன்னார். கழுவி வந்த பாகற்காய் கறி சமைக்கப்பட்டு எல்லோருக்கும் பரிமாறப்பட்டது.

குரு, அதை சாப்பிடும்போது, '' எந்தப்புனித நீரும் இதை

இனிப்பாக்கவில்லயே" என்று சொன்னார். சீடர்களுக்குப் புரிந்தது, வெறும் சடங்கு சம்பிராயங்கள் இறை நெருக்கத்தைத் தராது.

Soape Goat ! பலிகடா என்ற வார்த்தை எப்படி வழக்கில் வந்தது என்பது மிகவும் சுவாரசியான செய்தி !

யூதர்களுடைய குரு ஒரு விசேஷ நாளில் யூதர்களுடைய பாவங்களையெல்லாம் ஒரு ஆட்டின் நெற்றிக்கு மாற்றுவார். அந்த ஆடு பாவம் மனிதர்கள் செய்த எல்லாக் குற்றங்களையும் சுமந்துகொள்ளும். பிறகு ஆட்டைப் பலி கொடுத்து, அந்த ஆட்டின் பலி மூலம் எல்லோருடைய எல்லாப் பாவங்களையும் போக்குவார்கள். அந்த ஆட்டைப்பலி கொடுத்தால் தங்கள் எல்லோருடைய பாவங்களும் நீங்கிவிடுவதாக ஐதிகம்.

ஆனால் இஸ்லாம் ,

(இவ்வாறு குர்பானி செய்தபோதிலும்) அதன் மாமிசமோ அல்லது அதன் இரத்தமோ அல்லாஹ்வை அடைந்து விடுவது இல்லை. உங்களுடைய இறை அச்சம்தான் அவனை அடையும். (குர்ஆன் : 22:37) இறைபக்தி சடங்கு சம்பிராயங்களில் இல்லை என்பதை தெள்ளத் தெளிவாக விளக்குகிறது .

அதைப்போலவே Whipping Boy என்கிற பதமும் பயன்படுகிறது. அரண்மனை ராஜ்குமாரனைப் படிக்க அனுப்பும்போது, அவனுடன் இன்னொரு மாணவனும் அனுப்பப்படுவான்.

ராஜ்குமாரன் தவறு செய்தால், அவனை அடிக்கமுடியாது. ஆனால் ஆசிரியர் கண்டிக்காமல் இருக்கவும் முடியாது. கண்டிக்காவிட்டால் ஆசிரியர் திருப்தியடைய முடியாது.

ஆசிரியருக்கும் திருப்தி ஏற்பட வேண்டும். அரண்மனை ராஜ்குமாரனும் அடிபடக்கூடாது எனவே,ஆசிரியர் ராஜ்குமாரன் மீது கோபம் வரும்போதெல்லாம் உடன் இருக்கும் மாணவனை அடிப்பார். அவன்தான் சவுக்கடி பையன்.

ஆனால் இஸ்லாம்.... "பாவம் செய்யும் ஒவ்வோர் ஆத்மாவும் தனக்கே, கேட்டைத் தேடிக்கொள்கிறது; ஓர் ஆத்மாவின் (பாவச்)சுமையை மற்றோர் ஆத்மா சுமக்காது. பின்னர், நீங்கள் (அனைவரும்) உங்கள் இறைவன் பக்கமே திரும்பிச் செல்ல வேண்டியதிருக்கிறது; அப்போது நீங்கள் பிணங்கி விவாதம் செய்து கொண்டிருந்தவை பற்றி அவன் உங்களுக்கு அறிவிப்பான்" என்று (நபியே!) நீர் கூறும் ".(குர்ஆன் : 6:164)

நமது சடங்குகள் மாயத்தோற்றம் ஏற்படுத்தி, இறை நெருக்கத்தைத் தடை செய்கின்றன. இது ஆன்மிக வாழ்வில் மட்டுமல்ல சாதாரண - தினப்படி வாழ்விலும் போலியான விஷயங்கள் நம்மை எளிதில் கவர்ந்துவிடுகின்றன !

உண்மையான செய்திகளை விட்டுவிட்டுப் போலியானவற்றின் கவர்ச்சியில் திளைத்துவிடுகிறோம். யார் போலியான அழகில் சிக்காமல் முன்னேறுகிறார்களோ, அவர்கள் உண்மையான அழகைக் கண்டு அது எவ்வளவு தத்ரூபமானது ஆழமானது, ஆனந்தமானது என்பதைக் கண்டுபிடிக்கிறார்கள் .

அதைப் போலவே சம்பிராய சடங்குகளைத் தாண்டினால் - தியானம் உண்மையாகவே நிகழ்கிறது.

ஓர் இளைஞன் மிதிவண்டியில் மார்க்கெட்டுக்குச் சென்றான் அங்கே மிதிவண்டியை ஓர் ஓரமாக நிறுத்திவிட்டுப் பொருட்களை வாங்கச் செல்கிறான் - அங்கே மிதிவண்டியைத் தான் பூட்டாமல் விட்டது நினைவுக்கு வருகின்றது - மிதிவண்டியை நிறுத்திய இடத்திற்கு ஓடிவந்து பார்க்கிறான் - மிதிவண்டி நிறுத்திய இடத்தில் அப்படியே இருக்கிறது.

பக்கத்திலேயே ஒரு கோயில்; ஓடி ஆண்டவனுக்கு மனமார நன்றி சொல்லிவிட்டு வருகிறான்.

சைக்கிளைக் காணவில்லை !

ஆனால் இஸ்லாம், "ஒட்டகத்தையும் கட்டிப் போடு , இறைவனையும் தொழுது கொள் " என்கிறது ஒரு நபிமொழி

## ஞானிகளின் பார்வை 8

( திருப்பித் தரும் நியதி )



நாம் அடுத்தவர்களுக்கு எதைத் தருகிறோமோ அதுவே நமக்குத் திரும்பி வந்து சேர்கிறது. பன்மடங்காக வருகிறது. அது வரமாகவேனும் வரலாம். சாபமாகவேனும் வரலாம்.

நாம் எதைத் தருகிறோம் , எப்படித் தருகிறோம் என்பதைப் பொறுத்தது அது. நாம் மலர்களைத் தந்தால் அது மாலையாகத் திரும்பி வரும் - நாம் விதைகளைத் தந்தால் அது விருட்சமாகத் திரும்பி வரும்.

நாம் முட்களை அனுப்பினால் மலர்களை எதிர்பார்க்க முடியாது-

எட்டிக்காயை அனுப்பிவிட்டு கட்டிக்கரும்பை எதிர்பார்க்க முடியாது -

வாழ்த்துகின்றபோது அது எல்லா இடங்களிலும் எதிரொலிக்கும் -

அந்த இனிய ஒலி எல்லா இடங்களிலும் ரீங்காரமடிக்கும் --

நாம் புன்னகைத்தால் எதிரே வருகிறவர்கள் புன்னகைத்துத்தான் தீர வேண்டும் - இதுதான் இயற்கை வகுத்த நியதி .

"பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா

பிற்பகல் தாமே வரும்' என்று திருக்குறளும்,

தினை விதைத்தவன் தினை அறுப்பான்

வினை விதைத்தவன் வினை அறுப்பான்

என்ற முதுமொழியும் இதேத்தான் போதிக்கிறது .

இது பற்றி பட்டினத்தாரிடம் ஒரு பேட்டி :

வீடிருக்க, தாயிருக்க, வேண்டுமனை யாளிருக்க,

பிடிருக்க, ஊணிருக்க, பிள்ளைகளுந் தாமிருக்க,

மாடிருக்க, கன்றிருக்க வைத்த பொருளிருக்க,

கூடிருக்க நீ போன கோலமென்ன கோலமே? என்று

ஆயிரக்கணக்கானவர்கள் வேடிக்கை பார்க்க, தாயின் இல்லத்தின் முன்னாலே நின்று 'தாயே பிச்சை' என்று கோஷம் கொடுத்தேன்.

கையில் ஏதும் இல்லாமல் வந்த என் தாயார். என்னைப் பார்த்துச்

சிரித்தபடி "மகனே இன்னும் நீ பணக்காரனா?" என்றார்கள்.

"ஏன் தாயே அப்படிச் சொல்கிறீர்கள்?" என்றேன்.

"வீடு உனக்கு அந்நியமாகி விட்டது, ஆனால், ஒரு ஓடு உனக்குச் சொந்தமாகி விட்டதே!" என்றார்கள்.

எனக்கு ஐந்தாவது ஞானம் பிறந்தது. அந்த ஓட்டைத் தூக்கியெறியப் போனேன். "நில், ஓட்டை வைத்துக் கொள். ஆனால், அதன் மீது பாசம் வைக்காதே! அது காணாமல் போனால், என் ஓடு எங்கே?' என்று தேடாதே!" என்றார்கள். பிறகு பிச்சை இட்டார்கள்

அடுத்தது மனைவியின் இல்லம்: அவள் கண்ணீராலே பிச்சையிட்டாள்.

அடுத்துத் தமக்கையின் இல்லம். எனது குரல் கேட்டதுதான் தாமதம். ஆச்சி வீட்டின் கதவு அகலத்தில் திறந்தது. எனக்காக காத்திருந்தவள் போல் தோற்றமளித்தாள் என் தமக்கை.

"உள்ளே வா தம்பி அக்காளின் கையால் பிச்சையிடும் போது. வாசற்படி தாண்டி நிற்கக் கூடாது; ஒரு வேளை சாப்பிட்டுவிட்டுப் போ!" என்றார்கள்.

அந்த பந்தத்தில் நான் உருகி விட்டேன், விட்ட குறை தொட்ட குறை

உள்ளே போனேன். தடுக்கு ஒன்று போட்டாள். இலை விரித்தாள். காய்கறி வைத்தாள். அன்னம் படைத்தாள், அள்ளி உண்ணப் போகும் போது "தம்பி" என்றாள்.

"என்ன?" என்றேன்.

"நானும் நீயும் பெற்றோர்களுக்கு ஒரு மகள், ஒரு மகனாகப் பிறந்தோம். உன் மனம் ஏனோ இப்படி மாறி விட்டது. அதற்காகக் கோடிக்கணக்கான நம் பூர்வீகச் சொத்தை நாய் பேய்கள் தின்னக் கூடாது தம்பி 'என்னுடைய சொத்துக்களெல்லாம் என் ஆச்சி மக்களையே சேர வேண்டும்' என்று ஒரு ஓலை நறுக்கில் எழுதி ஊர் பெரியவரிடம் சாட்சிக் கையெழுத்து வாங்கிக் கொடுக்கக் கூடாதா?" என்றாள்.

நான் சிரிக்கவில்லை; அவள் அள்ளியிட்ட அன்னம் சிரித்தது.

பிச்சைக்காரனுக்கு அள்ளி இட்டாலும், பிரதிபவனை எதிர்பார்க்கின்ற சமூகம்.

நான் என்ன பதிலைச் சொல்வேன். "நான் இறந்து போய்விட்டால் சொத்துக்கள் உங்களுக்குத் தானே வரப்போகிறது!"

“உன் மனைவி"...என்றாள்

"அவளையும் கொன்று விடலாமா?." என்றேன்.

"போகின்ற கோயில்களில் எங்காவது உனக்குப் புத்தி கெட்டு, தர்மச் சொத்தாக்கி விட்டால் எனக்கு எப்படிக் கிடைக்கும்?

நான் கையில் எடுத்த அன்னத்தை அப்படியே இலையில் போட்டு விட்டு வெளியேறினேன்.

என் தாய் வீட்டருகே செல்லும் போது, என் தாயாருடன் என் தமக்கை சண்டையிட்டுக் கொண்டிருப்பது நன்றாகக் கேட்டது.

“பட்டினத்துச் செட்டி பரதேசி ஆனாண்டி" என்று தெருவிலே ஒரு பெண் பாட்டுப் பாடிக் கொண்டு போனாள்.

அனுபவங்கள் சேகரிக்கப்பட்டன. ஆனந்த மார்க்கம் என் கண்ணுக்குத் தெரிந்தது. என் கடைகளில் குலுக்கிய நாணய ஓசை என் காதுகளில் விழவில்லை.

சொத்துக்களுக்காகவே என் சகோதரி தன் பிள்ளைகளை அனுப்பி இருக்கிறார்களா?

குழந்தைகளைப் பார்த்து நான் பரிதாபப்பட்டேன்.

தங்கள் தாயை மன்னித்து விடும்படி கேட்டுக் கொண்டார்கள்.

பரமன் மன்னிப்பான்" என்றேன்..

ஓட்டிலேயே ஊற்றிச் சுடும் அப்பம் இரண்டைக் கொடுத்து ஆத்தாள் கொடுத்ததாகச் சொன்னார்கள்.

அவர்களை அனுப்பி விட்டு, அந்த அப்பத்தை பிட்டுப் பார்த்தேன்.

அப்பத்துக்கு நடுவே ஒரு சாண உருண்டை அதுவும் நீல நிறத்தில் காட்சி அளித்தது. அதன் உள்ளே இருந்தது, எரி நஞ்சு. அப்பத்தைச் சாப்பிட்டால் அந்த எரி நஞ்சு உள்ளே சென்று சாணம் கரைந்ததும் ஆளைக் கொன்று விடும்.

இயற்கை நியதியை சோதித்துப் பார்க்க விரும்பினேன். இரவோடு இரவாக அதை எடுத்துக் கொண்டுபோய் என் தமக்கை வீட்டுக் கூரையின் மேல் போட்டுவிட்டு, 'தன் வினை தன்னைச் சுடும்; ஓட்டப்பம் வீட்டைச்சுடும்' என்று சொல்லி விட்டு வந்து விட்டேன்.

மறுநாள் தமக்கை வீடு எரிவதாகச் செய்தி வந்தது.வெயிலில் சாணம் காய்ந்ததும், விஷத்தால் அது எரிந்து விட்டது. வீட்டுக்குத்தான் சேதம்! அவர்களுக்கல்ல.

பிறகு நான் அங்கிருந்து திருத்தல யாத்திரைக்குப் புறப்பட்டேன்.

ظَهَرَ الْفَسَادُ فِى الْبَرِّ وَالْبَحْرِ بِمَا كَسَبَتْ اَيْدِى النَّاسِ لِيُذِيْقَهُمْ بَعْضَ الَّذِىْ عَمِلُوْا لَعَلَّهُمْ يَرْجِعُوْنَ

மனிதர்களின் கைகள் தேடிக்கொண்டதன் காரணமாகக் கடலிலும் தரையிலும் அழிவு வேலைகள் (அதிகமாகப்) பரவி விட்டன. அதிலிருந்து அவர்கள் விலகிக் கொள்வதற்காக, அவர்களின் தீய செயல்களில் சிலவற்றின் தண்டனையை அவர்கள் (இம்மையிலும்) சுவைக்கும்படி அவன் செய்ய வேண்டியதாகிறது. (குர்ஆன் : 30:41)

## ஞானிகளின் பார்வை 8

( நடப்பது பிரச்சனை அல்ல, குரு நடந்தால் பிரச்சனை தீரும் )



செய்யிது முஹம்மது புகாரீ தங்ஙள் (ரஹ்) அவர்கள் கொச்சி நகரில், அவர்கள் பெரிய பள்ளிவாயல் ஒன்றைக் கட்ட ஏற்பாடு செய்து, அதற்குத் தம்மால் இயன்ற உதவிகள் அத்தனையும் செய்து வந்தார்கள்.

கட்டட வேலை மடமடவென்று நடந்து வந்தது. அக் கட்டடத்திற்கு முன்னுள்ள வெளியில் அவர்கள், சில இரவுகள் தொடர்ந்து மார்க்கச் சொற்பொழிவு நடத்தி வந்தார்கள். அதனைக் கேட்பதற்காக முஸ்லிம்கள் மட்டுமல்லாது, கிறிஸ்தவர்களும், யூதர்களும் வந்தனர்.

அவர்களின் மாண்பினைப் பற்றிக் கேள்வியுற்று, கொச்சியில் வாழ்ந்த யூதர்களின் தலைவர் சனிச்சூர் என்பவரும், ஓரிரவு அவர்களின் பேச்சைக் கேட்கத் தம் குழுவினருடன் அங்கு வந்தார்.

வரும் பொழுதே. அவர் தம் உள்ளத்தின் உள்ளே, 'அவர்கள் உண்மையில் இறையருள் பெற்றவர்களாய் இருப்பின், தாம் அங்கு செல்லும் பொழுது, தங்களின் தீர்க்கதரிசி மூஸா (அலை) அவர்களைப் பற்றி அவர்கள் உரை நிகழ்த்திக் கொண்டிருக்க வேண்டும்' என்று எண்ணிக் கொண்டார்.

அப்பொழுது தொழுகையைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்த புகாரீ தங்ஙள் அவர்கள், அவர் தம் உள்ளின் உள்ளே எண்ணி வந்ததைத் தம் உள்ளுணர்வால் விளங்கி, மூஸா (அலை) அவர்களைப் பற்றிப் பேசத் தொடங்கி விட்டார்கள். அங்குக் குழுமியிருந்த முஸ்லிம்களுக்கோ, இந்தத் திடீர்மாற்றம் பெரும் வியப்பை அளித்தது.

ஆனால் அது, அங்கு வந்த சனிச்சூருக்கும், அவருடைய குழுவினருக்கும் பெரிதும் வியப்பையும் மகிழ்ச்சியையும் அளித்தது. உண்மையில் அவர்கள் இறையருள் பெற்ற நல்லாரே என்று முடிவுக்கு வத்தார் அவர்

கூட்டம் முடிந்ததும், அவர் அவர்களை அணுகித் தாம் எண்ணி வத்ததையும், நடந்ததையும் அவர்களிடம் விரிவாக எடுத்துரைத்துத் தம் அன்புக் காணிக்கையாக இரண்டு மாணிக்கக் கற்களை அவர்களின் காலடியில் வைத்து, அவற்றை ஏற்றுக் கொள்ளுமாறு நின்றார். அவர் எவ்வளவோ வேண்டியும், அவர்கள் அவற்றை ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டார்கள்.

பின்னர் அவரின் அன்புள்ளம் புண்படக் கூடாதென்று எண்ணிய அவர்கள், அவரை நோக்கி, "நீர் விரும்பின் இப்பள்ளிவாயல் உத்தரத்துக்கு ஒரு தேக்கு மரத்தைக் கொடும்" என்று கூறினார்கள்.

பெறற்கரிய பேறு பெற்றது போன்று மகிழ்ந்த அவர், அடுத்த நாளே தம்முடைய காட்டில் இருந்த மிகவும் உயர்ந்த தேக்கு மரத்தை வெட்டி, பள்ளிவாயலுக்கு அனுப்பி வைத்தார்.

பள்ளிவாயல் நிர்மாணப் பணியில் ஈடுபட்டிருந்த தச்சன், அதனைத் தாறுமாறாக வெட்டிச் செதுக்கியதில் அதன் நீளம் குறைந்து அம்மரம் உத்திரத்திற்குப் பயனற்றதாகப் போய் விட்டது.

புகாரீ தங்கள் அவர்கள் அன்று மஃரிப் தொழுகை தொழ வந்த பொழுது, தச்சன் செய்த தவறைப் பற்றி மக்கள் அவர்களிடம் கூறினார்கள். அதனை அமைதியாகக் கேட்ட அவர்கள், "சரி, எல்லாவற்றிற்கும் அல்லாஹ் போதுமானவன்" என்று கூறித் தொழச் சென்றார்கள்.

தொழுது முடித்து வழக்கமாகத் தாங்கள் ஓதிவரும் வஜீப்பாக்களையும் ஓதியபின், அவர்கள் அம்மரத்தின் அருகே வந்து, அதன் மீது ஏறி நடந்தார்கள். பின்னர் அதை விட்டும் இறங்கி, "உத்தரத்தை எடுத்து அதற்குரிய இடத்தில் வையுங்கள்!'' என்று அங்குக் குழுமி நின்ற மக்களிடம் கூறினார்கள்.

அவ்விதமே அவர்கள் செய்ய, அது ஓர் அங்குலம் கூடக் குறையாமல் மிகச் சரியாக இருந்தது. அப்பொழுது மக்களுக்கு ஏற்பட்ட வியப்பிற்கு அளவில்லை.

அவர்களின் மாண்பினை உணர்ந்து, மக்கள் சாரி சாரியாக வந்து அவர்களின் கரம் பற்றி பைஅத் செய்தனர். மனிதர்கள் மட்டுமின்றி, ஜின்களும் அவர்களிடம் வந்து பைஅத் செய்தன. ஜின்கள் அவர்களிடம் பாம்பு உருவிலும் வந்து சென்றன.

குறிப்பு :- "ஞானிகளின் பார்வை" எழுதிக் கொண்டிருக்கும்போதே நண்பர்கள் பைஅத் பற்றியும் , என் சற்குரு பற்றியும் தொடர்ந்து விசாரித்து வருவதால், என் சற்குரு கேரளா கண்ணூரில் அடக்கப் பெற்றிருக்கும் இக்கட்டுரையின் நாயகர் செய்யிது முஹம்மது புகாரீ தங்ஙள் (ரஹ்) அவர்களின் பேரர் "செய்யதினா செய்குனா

ஜுபைர் தங்ஙள் ஜலாலில் புகாரீ "அவர்களிடம் 1990-ல் என் மனைவி ரஹ்மத்துடன் பைஅத் பெற்றேன்.என் சற்குருவின் புகைப்படத்தையும் பதிந்துள்ளேன்.

**ஞானிகளின் பார்வை 9**

( ''அஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலைக்க யா ரசூலல்லாஹ்")



செய்யிது முஹம்மது புகாரீ தங்ஙள் (ரஹ்) அவர்கள் ஹஜ்ஜுக் கடனை ஆற்றுவதற்கு மக்கா சென்ற அவர்கள், ஹஜ்ஜுச் செய்து முடித்துவிட்டுத் தம் பாட்டனார் முஹம்மது (ஸல்) அவர்களின் அடக்க இடத்தைத் தரிசிப்பதற்காக மதீனா சென்றனர்.

அப்பொழுது அவர்களைத் தெரிந்த சிலர், அவர்களை "சையிது" (நபியின் பேரர்) என்று அழைத்துப் பெரிதும் மரியாதை செய்தார்கள். அதுகண்டு மதீனாவில் ஷரீஃபாக இருந்த சையிது ஒருவருக்கு ஏற்பட்ட மனப்புழுக்கத்திற்கு அளவில்லை. "நான் தான் சையிது. அவர் சையிதல்ல,'' என்று அவர் கூறினார். இது புகாரீ தங்ஙள் அவர்களின் செவியிலும் பட்டது.

ஒருநாள் இருவரும் எதிர்பாராத விதமாகச் சந்தித்துக் கொண்ட பொழுது, அவர் அவர்களை நோக்கி, 'நான் தான் சையிது, நீர் சையிதல்ல,'' என்று கூறினார்.

அதற்கு புகாரித் தங்ஙள் அவர்கள், "சையிது அல்லாதவன், தான் சையிது என்று கூறுவதும் தவறு. சையிது ஆக உள்ளவன், தான் சையிது அல்ல என்று கூறுவதும் தவறு. இந்த இரு தவறுகளில் எந்தத் தவறையும் நான் செய்ய விரும்பவில்லை" என்று பதிலுரைத்தனர்.

அப்பதிலால் திருப்தியுறாத ஷரீஃப், 'நான் தான் சையிது, நீர் சையிதல்ல" என்று மீண்டும் அதே பல்லவியைப் பாடினார்.

அதுகேட்டு சற்று உணர்ச்சியுற்ற புகாரி தங்ஙள் அவர்கள், "நான் தான் சையிது, நீர் சையிதல்ல,'' என்று கூறினார்கள்.

இந்தத் தகராறு முற்றவே, 'நாம் இருவரும் ரௌலா ஷரீஃபின் முன் நின்று, எம்பெருமானார் (ஸல்) அவர்களுக்கு ஸலாம் உரைப்போம். எவருடைய ஸலாத்திற்கு எம்பெருமானார் (ஸல்) அவர்கள் பதில் கூறுகின்றார்களோ, அவரையே நாம் சையிது என்று அழைப்போம்," என்று இருவரும் முடிவு செய்தனர்.

இதன்பின் அவர்கள் இருவரும் மக்கள் திரள் தம் பின்னே வர. ரௌலா ஷரீப் சென்றனர். முதலில் ஷரீஃப், ரௌலா ஷரீஃபின் முன் நின்று, எம்பெருமானார் (ஸல்) அவர்களுக்கு 'ஸலாம்' உரைத்தார். பதில் வரவில்லை. மீண்டும் உரைத்தார். மீண்டும் பதில் வரவில்லை. மீண்டும் உரைத்தார். மீண்டும் பதில் வரவில்லை. அப்பொழுது அவரின் முகம் கருகிச் சாம்பியது.

இப்பொழுது அங்குக் குழுமியிருந்த மக்கள், புகாரி தங்ஙள் அவர்களை எம்பெருமானார் (ஸல்) அவர்களுக்கு ஸலாம் உரைக்குமாறு வேண்டிக் கொண்டார்கள். அதற்கு அவர்கள், சற்றுப் பொறுங்கள்! பின்னால் கூறுகின்றேன் என்று பதிலுரைத்தார்கள்.

அப்பொழுது அங்கிருந்த சிலர், "புகாரீ பயந்து விட்டார். எனவே தான் தயங்குகிறார்" என்று தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள்.

பின்னால் கூறுகின்றேன்'' என்று தான் சொல்கிறாரே. அதற்குள் ஏன் அவசரப்படுகிறீர்கள்?'' என்று வேறு சிலர் அதற்கு மறுப்புக் கூறினார்கள். இந்தப் பேச்சுக்களெல்லாம் புகாரீ தங்ஙள் அவர்களின் செவிகளில் விழாமலில்லை.

அவர்கள் தாம் கூறிய வண்ணம் சற்றுநேரம் கழித்து, ரௌலா ஷரீஃபின் முன், மிகவும் மரியாதையுடன் சென்று, பேணுதலுடன் கை கட்டி நின்று, ''அஸ்ஸலாத்து வஸ்ஸலாமு அலைக்க யா ரசூலல்லாஹ்" என்று நீர் மல்கும் கண்களுடன் உரைத்தனர்.

அடுத்த கணம், "வ அலைக்கு முஸ்ஸலாம்'' என்னும் பதில், புனித ரௌலாஷரீஃபிலிருந்து வெளி வந்தது. அதுகேட்டு அனைவரும் மெய்சிலிர்த்தனர். அப்பொழுது ஷரீஃபுடைய நிலையோ பரிதாபத்திற்கிடமாகியது.

இது கண்ட புகாரீ தங்ஙள் அவர்கள், அவர்மீது இரங்கி, "இப்பொழுது நீரும் ஸலாம் கூறும்! உமக்கும் பதில் கிடைக்கும்" என்று கூறினர்.

அவ்வாறே அவரும் செய்ய, ரௌலா ஷரீஃபிலிருந்து, "வ அலைக்கு முஸ்ஸலாம்" என்று பதில் வந்தது. இது கண்டு அங்குக் குழுமி நின்ற அனைவருக்கும் முன்னைவிடப் பன்மடங்கு அதிகமான வியப்பேற்பட்டது.

அப்பொழுது புகாரீ தங்ஙள் அவர்கள் அம் மக்களை நோக்கி, "நாங்கள் இருவரும் சையிதுகள் தாம். அவர் என்னை சையிதல்ல என்று கூறியதால், நானும் அவரை சையிதல்ல என்று பதிலுக்கு உரைத்தேன்.

முதலில் அவர் எம்பெருமானார் (ஸல்) அவர்களுக்கு ஸலாம் உரைத்த பொழுது, அவர்கள் தங்களின் அடக்க இடத்தில் தொழுது கொண்டிருந்ததால், அவருடைய ஸலாத்திற்கு அவர்கள் பதில் கூறவில்லை. இதனை அவர் அறியார்.

நான் இதனை அறிந்ததன் காரணமாகச் சற்றுத் தாமதித்து, அவர்கள் தொழுது முடித்தபின் அவர்களுக்கு ஸலாம் உரைத்தேன். அவர்கள் பதிலுரைத்தார்கள். பின்னர் அவரும் ஸலாம் உரைத்தார். அவருக்கும் அவர்கள் பதிலுரைத்து, நாங்கள் இருவரும் சையிதுகள் தாம் என்பதை மெய்ப்பித்தார்கள்" என்று கூறினர்கள்.

அப்பொழுது மக்களுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவில்லை.

படம்: புகாரி தங்ஙள் மக்பூரா - கேரளா கண்ணூர்

**ஞானிகளின் பார்வை 10**

( மன்னாதி மன்னர்களும், ஆன்மிகப் பேரரசர்களும் )



இறை ஞானிகளை ஆன்மீக அரசர்கள் இவ்வுலகில் மதிக்கப்பட்டனர். இவர்கள் பற்பல காலங்களில் தோன்றி மக்களிடையே அறிவொளியை, ஆன்மீக ஒளியைப் பரத்திச் சென்றார்கள்.

அவர்களின் மாண்பின்முன் மன்னாதி மன்னர்களின் மாண்பெல்லாம் மங்கின. அவர்களைக் காண்பதற்காக மன்னர்களெல்லாம் தவம் கிடந்தார்கள். அவர்களின் அருள் வேண்டி அரசர் பெருமக்களெல்லாம் அவர்களின் முன் மண்டியிட்டு நின்றனர்.

மாபெரும் இறை நேசச் செல்வரான ஸையித் ஆதம் பன்னூரி (ரஹ்) அவர்கள் ஹிஜ்ரி 1052 ஆம் ஆண்டில் லாகூர் வந்தபொழுது அவர்களுடன் பதினாயிரம் பேர்களும் வந்தனர்.

லாகூரிலும் அதன் சூழலிலும் வாழ்ந்து வந்த மக்கள் அவர்களுக்கு வழங்கிய வரவேற்பையும் காட்டிய பக்தியையும் கண்டு பெரிதும் பொறாமையும் அச்சமும் உற்ற முகலாயப் பேரரசர் ஷாஜஹான் அவர்களுக்குப் பெருந்தொகையைக் காணிக்கையாக அனுப்பினார்

பின்னர், "அவர்களிடம் இப்பொழுது பணம் இருப்பதால் அவர்கள் மீது ஹஜ்ஜுக் கடமையாகி விட்டது" என்று லளிதமாகப் பிறரைக் கொண்டு எடுத்துரைக்கச் செய்து, அவர்களை லாகூரை விட்டு மக்காவுக்கு அனுப்பி வைத்து விட்டார்.

நிஜாமுத்தீன் ஔலியாவின் தரிசனத்தைப் பெறுவதற்காக சுல்தான் அலாவுத்தீன் கில்ஜி வருவதாக எத்தனையோ முறை சொல்லி அனுப்பியும் அவர்கள் அனுமதி வழங்க மறுத்து விட்டார்கள்.

"அவ்விதமாயின் நான் வன்முறையில் அவர்களின் தவ மடத்தில் நுழைந்து அவர்களைத் தரிசிப்பேன்" என்று அவர் சொல்லி அனுப்பியபொழுது,

"அவர் அதன் தலைவாயில் வழியாக உள்ளே நுழையின் நான் அதன் கடை வாயில் வழியாக வெளியேறி விடுவேன்" என்று மொழிந்தனர் அம்மேதகை, இறுதிவரை அவர் தம்மைப் பார்க்க அவர்கள் அனுமதிக்கவே இல்லை

ஷைகு அலீ (ரஹ்) அவர்களைக் கலீபா ஒருவர் காண வந்தபொழுது அவர்கள் தங்களின் கால்களை நீட்டிக் கொண்டே இருந்தார்கள். கால்களைச் சற்று மடக்கிக் கொள்ளுமாறு அமைச்சர் அவர்களின் காதோடு காதாகக் கூறிய பொழுதும் அவர்கள் தம் கால்களை மடக்கிக் கொள்ளவில்லை.

பின்னர் கலீபாவும், அமைச்சரும் விடைபெற்றபொழுது அவர்கள் அவ்விருவரின் கைகளையும் பிடித்துக் கொண்டு, "நான் என் கைகளை மடக்கிக் கொண்டேன். எனவே என் கால்களை நீட்டிக் கொண்டேன்" என்று கூறினர்

வாரத்திற்கு இருமுறை குத்புத்தீன் பக்தியாரி (ரஹ்) அவர்களை சுல்தான் இல்துத்மிஷ் காணும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தார்.

ஓரிரவு அவர்களின் கைகளைப் பிடித்துக்கொண்டு அழுது கண்ணீர் வடித்தவராய், "நியாயத் தீர்ப்பு நாளின் போது நான் எந்தக் கூட்டத்தினருடன் இருப்பேன் என்று எண்ணியே எனக்கு அழுகை அழுகையாக வருகிறது கூறுங்கள் கூறுங்கள்" என்று கதறி கதறி அழுதார்.

## ஞானிகளின் பார்வை 11

( இறைவனுக்கு இரண்டே வயது இளையவன் நான் )

அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்கள் ஓரிரவு அயர்ந்து உறங்குங்கால் அவர்கள் இறைவனைக் கனவில் கண்டு, "இறைவ எம்பெரும! உன்னை அடைவதற்கு வழி யாது?" என்று வினவினர்.

இறைவன் அவர்களை நோக்கி, ஃபாரிக் நஃப்ஸக வதஆல்" (நீர் உம்முடைய நஃப்ஸை விட்டும் அப்பால் வாரும்) என்று அருளுரை பகர்ந்து பின்பு , "எனக்கு என் திருச் சமூகத்தில் இல்லாதவற்றைக் காணிக்கையாக நீர் வழங்குவீராக!" என்று கூறினான்.

அதுகேட்ட அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்கள் அதிர்ந்தே போய்விட்டார்கள். இறைவனின் திருச் சமூகத்தில் இல்லாத பொருள் யாது எனச் சிந்தித்துச் சிந்தித்து அவர்களின் மூளையும் அலுத்தது. எல்லாம் அவன் மயமாக இருக்க... எல்லாம் அவனாக இருக்க... அவனுடைய திருச் சமூகத்தில் என்ன பொருள் இல்லாமல் உள்ளது என்று எண்ணி, எண்ணி அவர்கள் சலித்தார்கள். அவர்களின் அறிவுக்கு ஒன்றுமே புலப்படவில்லை. எனவே அவர்கள் இறைவனை நோக்கி,கண்ணீரை ஆறாகப் பெருக்கி அழுது,

“இறைவ எம்பெரும! நானோ பலவீனன். நீ ஆணையிட்ட வண்ணம் உனக்குக் காணிக்கை வழங்க நானும் சிந்தித்தேன், சிந்தித்தேன். ஒன்றுமே எனக்குப் புலப்படவில்லை. எல்லாம் நீயாக இருக்க உன்னிடமில்லாதது என்னிடம் என்ன உள்ளது உனக்குக் காணிக்கை வழங்குவதற்கு ? எனவே என் ஆற்றாமைக்காக என்னை மன்னித்தருள். நீ என்னை மன்னித்து ஆட்கொள்ளாவிடின் கதி இழந்தவனாவேன். உன்னையும் இழந்தவனாவேன். அவ்வித நிலை ஏற்படாது என்னைக் காத்தருள்" என்று கதறி அழுதனர்.

அதுகண்ட இறைவன் மகிழ்ச்சி மீக்குற்று, "அபூ யஸீத்! நீர் எனக்கு நல்ல காணிக்கைகளை வழங்கிவிட்டீர்” என்று கூறினான்.

அதுகேட்டு அவர்களுக்கு ஒன்றுமே விளங்கவில்லை. 'எவ்வாறு' என்று வினயமாக வினவினார்கள்.

"நீர் பணிவு, ஆற்றாமை, தாழ்மை, துயரம், அடிமைத்தனம் என்னும் காணிக்கைகளை எனக்கு வழங்கினீர். அவையே என் திருச் சமூகத்தில் இல்லாதவையாகும். அவற்றை எவர் எனக்கு வழங்குகிறாரோ அவரை நான் என் அண்மையில் ஆக்கிக் கொள்கிறேன்" என்று மறுமொழி பகர்ந்தான் இறைவன்.

அப்பொழுது அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்களின் அகமும் முகமும் ஒருங்கு சேர்ந்து மலர்ந்தன

அபூ யஸீத் பிஸ்தாமி (ரஹ்) அவர்கள் தன்னைப் பற்றிக் கூறும்பொழுது, " இறைவனுக்கு இரண்டே வயது இளையவன்'' என்று கூறினர்.

அதன் பொருள் இறைவனின் தனிப்பெரும் பண்புகளான

1) தானே இயங்குதல், 2) சர்வ வல்லமை ஆகிய இரண்டைத் தவிர்த்து ஏனைய அனைத்தையும் மனிதன் பெற இயலும். அவற்றை எய்த அவன் பாடுபட வேண்டும் என்பதேயாகும்.

## ஞானிகளின் பார்வை 12



( அறிவும், இச்சையும் )

ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்களுக்கும், ராபியத்துல் பஸரீயா (ரஹ்) அவர்களுக்கு நடந்த இந்த உரையாடல்

ராபியத்துல் பஸரீயா (ரஹ்) :

"அல்லாஹ் அறிவை எவ்வாறு படைத்துள்ளான்?"

ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள்:

"அறிவை பத்துப் பங்குகளாக்கி அதில் ஒன்பது பங்கைப் ஆண்களுக்கும் ஒரு பங்கை பெண்களுக்கும் கொடுத்தான்"

ராபியத்துல் பஸரீயா (ரஹ்) :

இச்சையை அவன் எவ்வாறு படைத்தான் ? "

ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள்:

"இச்சையைப் பத்துப் பங்குகளாக்கி அவற்றில் ஒன்பது பங்கை பெண்களுக்கும் ஒரு பங்கை ஆண்களுக்கும் அவன் கொடுத்தான்''

ராபியத்துல் பஸரீயா (ரஹ்) அவர்கள்: ''ஒரு பங்கு அறிவைக் கொண்டு ஒன்பது பங்கு இச்சையை நான் அடக்கியாளும் பொழுது, ஒன்பது பங்கு அறிவைக் கொண்டு ஒரு பங்கு இச்சையைத் தங்களால் அடக்கியாள இயலவில்லையா?"

என்று ராபியத்துல் பஸரீயா (ரஹ்) அவர்கள் வினவிவ, அதற்கு யாதும் பதில் கூற இயலாது ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்கள் கண்ணீர் விட்டு அழுத வண்ணம் அவ்விடத்தை விட்டும் அகன்றனர்.

## ஞானிகளின் பார்வை 13

( பாருங்கள் இதுதான் இறைநேசர்களின் நிலை)



துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள் கூறுவதாவது :

நானும் இளைஞர் ஒருவரும் யமன் நாட்டினை அடைந்து அந்த இறைநேசச் செல்வரின் இல்லத்தைக் கண்டுபிடித்து அதன் தட்டினோம். அந்த இறைநேசச் செல்வர் வந்து கதவைத் திறந்தார். அப்பொழுதுதான் அவர் தம் அடக்கவிடத்திலிருந்து வந்தவர் போன்று காட்சி வழங்கினார்.

அவரைக் கண்டதும் எங்கள் அனைவருக்கும் முன்பாக இவரே அவருக்கு 'ஸலாம்' உரைத்தார். அதன்பின் நாங்கள் அவருக்கு லலாம்' உரைத்து அங்கு அமர்ந்தோம். முதலாவது அந்த இளைஞரே அவருடன் பேசத் துவங்கினார்;

'ஷைகு அவர்களே! தங்களைப் போன்ற நல்லாரைக் கொண்டு அல்லாஹ் மக்களின் இதயங்களிலுள்ள நோவை அகற்றியருள்கிறான். என் இதயத்தில் பெரிய ஆழமான வடு பதிந்துள்ளது. அது நீங்கத் தாங்கள் ஏதேனும் பரிகாரம் செய்யின் நான் தங்களுக்குப் பெரிதும் நன்றியுடையவனாக இருப்பேன்

"நல்லது; தாங்கள் கேட்க விரும்பியதைக் கேளுங்கள்! என்றார் அந்த இறைநேசச் செல்வர்.

இளைஞர் கேட்டார்: "ஷைகு அவர்களே! இறையச்சத்தின் அடையாளம் யாது?"

"இறையச்சம் ஏற்படும் பொழுது எல்லா அச்சங்களும் உள்ளத்தை விட்டு அகன்று விடுகின்றன. அப்பொழுது இறையச்சமே ஆகமெங்கும் பரவி இருக்கின்றது" என்று பதிலிறுத்தார் அவர்.

அதுகேட்ட அந்த இளைஞர் மயங்கிக் கீழே விழுந்தார். பின்னர் மயக்கம் தெளிந்ததும் அவர் அந்தப் பெரியாரை நோக்கி,

"அடியான் இறையச்சத்துடன் உள்ளான் என்பது எப்பொழுது உறுதியாகிறது?" என்று வினவினார்.

அதற்கு அவர் ''நோயுற்றவன் பத்தியம் காத்து கசப்பான மருந்துகளை உட்கொள்ளும் போது எவ்வாறு தன் நலன் கருதி, தான் ஆசையுடன் உண்டு வந்த அத்தனை பொருள்களையும் உண்ணாது விட்டொழிக்கின்றானோ அதே போன்று அவன் உலக இன்பங்களை விட்டொழிப்பின் அவன் இறையச்சம் உள்ளவன் என்பது உறுதியாகிறது" என்று பதில் கூறினார்.

இவ்வாறு அப்பெரியார் சொல்லி முடித்ததும் அந்த இளைஞர் பெரும் சப்தமிட்டு மயக்கமுற்றுக் கீழே சாய்ந்தார். சற்று நேரத்திற்குப் பின் உணர்வுபெற்று அவர் வினவினார்.

''ஷைகு அவர்களே! இறைவன் ஒருவன்மீது நேசம் கொண்டுள்ளான் என்பதற்கு அடையாளம் யாது?" என்று கேட்க,

அதற்கு அப்பெரியார், "அதற்கு அடையாளம் அவன் மிகப் பெரும் பதவியை அடைவதுதான்" என்று கூறினார்.

''அதனைச் சற்று விளக்கமாகக் கூறுங்கள்" என்று வேண்டினார் அவ்விளைஞர் வினயமாக.

பெரியார் கூறினார்: 'நண்பரே! ஒருவனை இறைவன் நேசிப்பானாயின் அவனுடைய இதயத்திலிருந்து திரை நீக்கப்படுகிறது. அவன் தன் இதயக் கண்களால் இறைவனின் திருக்காட்சியைக் காண்கிறான். அவனுடைய ஆன்மாவும், இதயமும் அறிவும் உயர்ந்து ஒளிர்கின்றன. அவன் வானவர்களின் கூட்டத்தில் சேர்ந்து விடுகிறான். அவர்கள் காணும் காட்சிகளை அவனும் காண்கிறான்; இறை வணக்கத்தில் தன் முழு ஆற்றலையும் பயன்படுத்துகின்றான். அவனுக்குச் சுவனத்தைப் பற்றிய ஆசையோ நரகத்தைப் பற்றிய அச்சமோ இல்லாது போய்விடுகிறது.''

இவ்வாறு அவர் கூறி முடித்ததுதான் தாமதம். அந்த இளைஞர் பெரும் சப்தமிட்டுக்கொண்டு கீழே சாய்ந்தார். அத்துடன் அவருடைய உயிர் அவருடைய உடலை விட்டும் பிரிந்தது.

அப்பெரியார் அவ்விளைஞனை முத்தமிட்டு, எங்களை நோக்கி,

"பாருங்கள் ! இதுவே இறைநேசர்களின் நிலையாகும்" என்று கூறினார்.

## ஞானிகளின் பார்வை 14

( இறைநேசரின் தொழுகை)



ஹாத்திம் அஸம் (ரஹ்) அவர்கள் தொழுகையை மிகவும் பேணுதலுடனும் உள்ளச்சத்துடனும் தொழுது வந்தார்கள். ஒருதடவை ஆஸிம் இப்னு யூசுப் (ரஹ்) அவர்கள், அவர்களிடம் சென்ற பொழுது,

"தாங்கள் எவ்வாறு தொழுகின்றீர்கள்?" என்று வினவியபொழுது,

'நான் தொழுவதற்கு முன் இரண்டு விதமான 'உளூ'ச்

செய்கிறேன். ஒன்று, வெளிப்படையானது. மற்றொன்று

அந்தரங்கமானது. வெளிப்படையான 'உளூ'வைத் தண்ணீராலும் அந்தரங்கமான 'உளூ'வை தௌபா (பாவ மன்னிப்பு)வாலும் செய்கிறேன்.

அதன்பின் தொழும் இடம் வந்து என்னுடைய ஒவ்வோர் அணுவும் அமைதி கொளும் வரை அவ்விடத்திலேயே காத்திருப்பேன்.அவை அமைதி அடைந்த பின்னர் எழுந்து....

கஃபாவை என் இரு புருவங்களுக்கிடையிலும், ஸிராத்தல் முஸ்தகீம் பாலத்தை என் காலுக்குக் கீழாகவும், சுவனத்தை வலப்புறத்திலும், நரகத்தை இடப்புறத்திலும், உயிர் வாங்கும் வானவரை என் பின்னாலும் இருப்பதாக எண்ணிக்கொண்டு இதுதான் என் இறுதித் தொழுகை என்று கருதி பயம் (கௌஃப்) என்பதற்கும் ஆதரவு (ரஜா) என்பதற்கும் இடையில் நின்று அல்லாஹு அக்பர் என்று கூறித் தக்பீர் கட்டி மன ஓர்மையுடனும் உள்ளச்சத்துடனும் தொழுது முடிப்பேன்.

இவ்வாறு தொழுது முடித்தபின் என் தொழுகை இறைவனால் ஏற்றுக் கொள்ளப்படுமோ, மாட்டாதோ என்று எண்ணிக் கவலுறுவேன்" என்று கூறினர்.

சிலர் அவர்களை அணுகி, " நீங்கள் உங்களின் வயதை எவ்வாறு கழித்தீர்கள்?" என்று வினவினர்.

அதற்கு அவர்கள் "நான்கு வழிகளில்! என்று பதிலுரைத்தார்கள்.

"அவை யாவை என்று அவர்கள் மீண்டும் வினவிய பொழுது, அவர்கள் பின்வருமாறு கூறினர்கள் :

1) அல்லாஹ் என்னை எப்பொழுதும் பார்த்துக் கொண்டுள்ளான் என்பதை அறிந்தேன். அக்கணத்திலிருந்து அவனுக்கு மாறு செய்ய நாணமுற்று அதனைத் தவிர்ந்துகொண்டேன்.

2) எனக்கு இரணம் அளிக்கும் பொறுப்பை இறைவன் ஏற்றுக் கொண்டுள்ளான். எனவே என் இரணம் என்னைவிட்டும் ஒருபோதும் தப்பாது என்பதை உணர்ந்தேன். அக்கணத்திலிருந்து அதுபற்றிய தேட்டத்தை விட்டொழித்தேன்.

3) நான் இறைவன் என் மீது சில கடமைகளை விதித்துள்ளான். அவற்றை என்னைத் தவிர வேறு எவராலும் நிறைவேற்ற இயலாது என்பதை உணர்த்தேன். அக்கணத்திலிருந்து அவற்றை நிறைவேற்றுவதில் என் கவனத்தைச் செலுத்தினேன்.

4) என் முடிவு என்னை நோக்கி விரைந்து வந்து கொண்டிருக்கிறது என்பதை உணர்த்தேன். அக்கணத்திலிருந்து முடிவில்லா மறுமைக்கான தயாரிப்புகளைச் செய்வதில் ஈடுபட்டேன். நான் இப்போது இறைவனிடமிருந்து எனக்குக் கிடைப்பதை எதிர்பார்த்த வண்ணமுள்ளேன்.

## ஞானிகளின் பார்வை 15

( "தாங்கள் எங்கிருந்து உண்கின்றீர்கள்? " )



ஒரு நாள் பிஷ்ர் இப்னுல் ஹாரித் (ரஹ்) அவர்கள் தங்களின் இல்லத்தில் வீற்றிருந்தார்கள். அப்பொழுது சிரியாவிலிருந்து மக்காவுக்கு 'ஹஜ்'ஜுச் செய்யச் செல்லும் குழு ஒன்று அவர்களின் மாண்பினைப் பற்றிக் கேள்வியுற்று அவர்களைக் காண வந்தது.

அவர்கள் பிஷ்ர் (ரஹ்) அவர்களைச் சந்தித்ததும், "நாங்கள் சிரியாவிலிருந்து மக்காவுக்கு 'ஹஜ்'ஜுச் செய்யச் செல்கிறோம். தாங்களும் எங்களுடன் சேர்ந்து வருகின்றீர்களா?" என்று வினவினர்.

அதற்கு பிஷ்ர் (ரஹ்) அவர்கள், "நல்லது; மூன்று நிபந்தனைகளின் மீது நான் உங்களுடன் வர ஒப்புகிறேன்.

முதலாவது, நாம் நம்முடன் யாதொன்றும் எடுத்துச் செல்லக்கூடாது.

இரண்டாவது, நாமாக எவரிடமும் சென்று யாதொன்றும் கேட்கவும் கூடாது.

மூன்றாவது, நமக்கு எவரேனும் யாதும் தரின் நாம் அதனை ஏற்றுக் கொள்ளவும் கூடாது " என்று கூறினர்.

அதற்கு அவர்கள், "நாங்கள் முதல் இரண்டு நிபந்தனைகளையும் ஏற்றுக் கொள்கிறோம். ஆனால் மூன்றாவது நிபந்தனையை எங்களால் ஏற்றுக் கொள்ள இயலாது. எவரேனும் தாமாகவே வந்து யாதும் நமக்கு வழங்கின் நாம் அதனை ஏற்றுக் கொள்ளத்தானே வேண்டும்" என்று கூறினர்.

அது கேட்ட பிஷ்ர் (ரஹ்) அவர்கள், "நீங்கள் இறைவனின் பேரருளின்மீது நம்பிக்கை வைக்கவில்லை. அதற்கு மாறாக உங்களின் பிரயாணப் பொருளின் மீதே நம்பிக்கை வைத்துள்ளீர்கள் இவ்விதமுள்ள உங்களுடன் நான் எவ்வாறு கூட்டாலியாகச் சேர்த்து வருவது ? சென்று வாருங்கள் என்று கூறிவிட்டனர்.

அவர்கள் மிகவும் பேணுதலுள்ளவர்களாக இருந்தனர். ஹலாலான உணவையன்றி ஹராமான உணவை அவர்கள் கண்ணெடுத்தும் பார்ப்பதில்லை. ஹலாலான உணவைக் கூட அவர்கள் சிறிதளவே உண்டு இறைவனை வணங்கி அழுது, அழுது கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தார்கள்.

ஒரு தடவை அவர்களிடம் ஒருவர் வந்து, "தாங்கள் எங்கிருந்து உண்கின்றீர்கள்? என்று வினவினார்கள்.

"எல்லோரும் எங்கிருந்து உண்டகின்றீர்களோ அங்கிருந்தே நான் உண்கின்றேன். எனினும் உண்டு அஞ்சி உருகி அழுபவருக்கும் தின்று மறந்து மகிழ்ந்து சிரிப்பவருக்கும் இடையே பெரிதும் வேற்றுமை உள்ளது. கை குறுகியும் உணவு சிறுத்தும் போவதால் யாதும் குறைந்து போகாது" என்று அவர்கள் விடையிறுத்தார்கள்.

## ஞானிகளின் பார்வை 16

( "எங்கிருந்து வருகிறீர்கள் ? " -

"இறைநேசத்திலிருந்து வருகிறேன்'' )



இப்ராஹீம் இப்னு அத்ஹம் (ரஹ்) அவர்களின் நெடுநாள் அவா கஃபாவைத் தாம் மட்டும் தனியாக இடம் சுற்றி வந்து இறைவனிடம் இறைஞ்ச வேண்டும் என்பதாக இருந்தது.

அத்தகைய வாய்ப்பினைப் பெறுவதற்காக அவர்கள் மக்காவில் நெடுநாட்கள் காத்திருந்தனர். ஓரிரவு கடுமையான மழை பெய்தபொழுது கஃபாவில் எவருமில்லாததைக் கண்ட இவர்கள் ஓடோடிச் சென்று அதனை இடம் சுற்றி வருங்கால்,

"இறைவனே நான் என்றைக்கும் உனக்கு மாறு செய்யக் கூடாது. அத்தகைய மனப்பக்குவத்தை எனக்கு அருள்வாயாக ! "என்று இறைஞ்சினர்.

அப்பொழுது, "இப்ராஹீமே !நீர் மட்டுமா இவ்வாறு இறைஞ்சுகின்றீர்? உண்மையான முஸ்லிம்கள் அனைவரும் இவ்வாறுதான் இறைஞ்கின்றார்கள். இந்தத் தன்மையை நான் எல்லோருக்கும் நல்கிவிடின், நான் என் அருட்கொடைகளை எவருக்கு நல்குவது ? எவரை நான் மன்னிப்பது ? குற்றம் செய்தவர்களைத் தாமே மன்னிக்க இயலும் " என்று அசரீரி ஒன்று முழங்கியது.

அது கேட்ட இப்ராஹீம் இப்னு அத்ஹம் அவர்கள் " இறைவனை என் பாவம் பொறுத்தருள்வாயாக ! "என்று இறைஞ்சினர்.

அப்பொழுது, " இப்ராஹீமே ! நீர் உம்மைத் தவிர்த்து ஏனையோருக்காக என்னிடம் இறைஞ்சும். நீரே உம்மை பற்றி என்னிடம் இறைஞ்சுவதை விட பிறர் உமக்காக என்னிடம் இறைஞ்சும் வண்ணம் நீ அவர்களுடன் நடந்து கொள்வீராக ! "என்று மீண்டும் அசரீரி முழங்கியதைக் கேட்டதும் அவர்கள் அதிர்ந்து போய்விட்டார்கள்.

இதன் பிறகு அவர்கள் மலைமீது சென்று தனித்திருந்து இறைவனை வணங்கி, வழுத்திவிட்டுக் கீழே இறங்கி வரும்பொழுது, அவர்களைச் சந்தித்த ஒருவர் "எங்கிருந்து வருகிறீர்கள் ? " என்று வினவினார். அதற்கு அவர்கள் "இறைநேசத்திலிருந்து வருகிறேன்'' என்று பதில் மொழிந்தார்கள்.

## ஞானிகளின் பார்வை 17

( " என் அன்னையின் கருப்பையிலிருந்து எவ்வாறு இவ்வுலகிற்கு வந்தேனோ அவ்வாறே இவ்வுலகை விட்டும் அகல விரும்புகிறேன்')



ஒரு நாள் மஃரூபுல் கர்கீ (ரஹ்) அவர்கள் இமாம் அலீ இப்னு மூஸா அல்ரஸாவின் இல்லத்தில் இருக்குங்கால் அதைச் சூழ நின்று கலகம் செய்த ஷீயாக்கள் இவர்களை ஆங்குக் கண்டதும் இவர்களைப் பிடித்து நையப்புடைத்தார்கள்.

அதன் காரணமாகப் பெரிதும் நோய்வாய்ப்பட்ட இவர்கள் இறப்புப் படுக்கை யில் கிடந்தனர். அப்பொழுது இவர்களின் மாணவர் ஸர்ரி அஸ் ஸகதீ (ரஹ்) அவர்கள் இவர்களை அணுகித் தங்களின் இறுதி உரையை (வஸியத்தை) கூறுமாறு வேண்ட, ...

"நான் இறந்ததும் நான் அணிந்திருக்கும் சட்டையைக் கழற்றி அறம் செய்துவிடுங்கள். நான் என் அன்னையின் கருப்பையிலிருந்து எவ்வாறு இவ்வுலகிற்கு வந்தேனோ அவ்வாறே இவ்வுலகை விட்டும் அகல விரும்புகிறேன்'' என்று அவர்கள் கூறினார்கள்.

அவர்கள் இறப்பெய்தியதும் அவர்கள் தங்களைச் சேர்ந்தவர்கள் என்றும் எனவே அவர்களின் உடலைத் தங்களின் அடக்க இடத்திலேயே நல்லடக்கம் செய்ய வேண்டும் என்றும் யூதர்களும், கிறிஸ்தவர்களும் , முஸ்லிம்களும் சர்ச்சையிட்டார்கள்,

சர்ச்சை, சண்டையாக முற்றுமுன் மஃரூபுல் கர்கீ (ரஹ்) அவர்களின் பணியாளர் ஆங்குவந்து, " எவர்களால் தம் பிரேதப் பெட்டியைத் தூக்க இயலுகின்றதோ அவர்களுக்கே தாம் உரியவர் " என்று அவர்கள் இறப்பதற்கு முன் கூறியதாக மொழிந்தார்.

அவர்கள் கூறிச் சென்றதற்கேற்ப யூதர்களும் கிறிஸ்தவர்களும் தனித்தனியே அதனைத் தூக்க முயன்ற பொழுது அவர்களால் அது இயலாது போய்விட்டது. பின்னர் முஸ்லிம்கள் அதனைத் தூக்க முயன்றபொழுது அது இலகுவாக அவர்களின் கையில் வந்தது.

பின்னர் முஸ்லிம்கள் அவர்களுக்கு 'ஜனாஸா' தொழுகை தொழுவித்து அவர்கள் இறந்த இடத்திலேயே அவர்களை நல்லடக்கம் செய்தார்கள்

## ஞானிகளின் பார்வை 18



ஒரு நாள் துன்னூன் மிஸ்ரி (ரஹ்) அவர்கள் தங்களின் இருப்பிடத்தில் அமர்ந்து அழுது கொண்டிருந்தார்கள். அப்பொழுது அவர்களின் நண்பர்கள் அவர்களை நோக்கி, ஏன் அழுது கொண்டுள்ளீர்கள்?" என்று வினவினர்.

அதற்கு அவர்கள், 'சென்ற இரவு நான், குப்புற (சுஜூதில்) வீழ்ந்து வணங்கிக் கொண்டிருந்த நிலையிலேயே உறங்கிவிட்டேன். அப்பொழுது நான் இறைவனைக் கனவில் கண்டேன்.

அவன் என்னை நோக்கி, ''அபுல் பைஸே! நான் எல்லாப் படைப்புகளையும் படைத்தேன். அவை பத்துப் பிரிவுகளாகப் பிரிந்தன. அவற்றில் ஒன்பது பிரிவுகள் உலகாதாயத்தை ஏற்றுக் கொண்டன. ஒன்றே ஒன்று மட்டும் அதனை ஏற்றுக் கொள்ளாதிருந்தது.

அந்த ஒன்று பத்துப் பிரிவுகளாகப் பிரிந்தது. அவற்றிற்கு நான் சுவனத்தை அன்பளிப்புச் செய்தேன். ஆனால் அவற்றில் ஒன்பது பிரிவுகள் அதனை ஏற்றுக் கொண்டன. ஒன்றே ஒன்று மட்டும் அதனை ஏற்றுக் கொள்ளவில்லை.

அந்த ஒன்று பத்துப் பிரிவுகளாகப் பிரிந்தது. அவற்றின் முன் நான் நரகத்தை கொண்டு வந்தேன். அது கண்டு அவற்றில் ஒன்பது பிரிவுகள் வெருண்டோடின. ஒன்று மட்டும் வெருண்டோடாது நின்ற இடத்திலேயே நின்றது.

அது உலகாயுதத்தையும் விரும்பவில்லை; சுவனத்தையும் விரும்பவில்லை. நரகத்தைக் கண்டும் அஞ்சவில்லை. நான் அப்பிரிவினரை நோக்கி, "என்னுடைய அடியார்களே! நீங்கள் உலக வாழ்வையும் விரும்பவில்லை. சுவன வாழ்வையும் விரும்பவில்லை. நரகத்தைக் கண்டும் அஞ்சவில்லை. அவ்விதமாயின் நீங்கள் எதைத் தான் விரும்புகின்றீர்கள்?" என்று வினவினேன்.

அதற்கு அவர்கள் அனைவரும் ஒருமித்த குரலில், ''இறைவ எம்பெரும! எல்லாம் அறிந்தவன் நீ. எங்களின் விருப்பம் யாதென்பதை நீ நன்கறிவாய்'' என்று கூறிவிட்டார்கள் என மொழிந்தான்'

இதனைக் கூறும்பொழுது அவர்களின் கண்கள் கண்ணீர் மழையைக் கரை புரண்டோடச் செய்து கொண்டிருந்தன.

## ஞானிகளின் பார்வை 19

( சுவனத்தில் எழுபது மடங்கு அழகான மாளிகை )



ஒரு நாள் மாலிக் இப்னு தீனார் (ரஹ்) அவர்கள் பஸராவின் வீதி ஒன்றில் சென்று கொண்டிருந்த பொழுது ஓர் இளைஞர் பெரிய கட்டடம் ஒன்றிற்கு அடித்தளமிட்டுக் கட்டிக் கொண்டிருப்பதை கண்டனர்.

அதைக் கண்ட அவர்கள், "இந்த அற்ப உலகைப் பெரிதென மதித்து அதில் இத்துணைப் பெரிய அளவு கட்டடத்தைக் கட்ட இவர் முனைந்து விட்டாரே. அவருக்கு அல்லாஹ் தான் நேர்வழி காட்ட வேண்டும்" என்று எண்ணினார்.

அதன்பின் அவ்விளைஞரை அணுகி, "நீர் இக் கட்டடத்தைக் கட்ட எவ்வளவு பணம் செலவழிக்கத் தீர்மானித்திருக்கிறீர் ? என்று வினவினர்,

அவர்களை எவரென விளங்கிக்கொண்ட அவ்விளைஞர்,

"ஓரிலட்சம் தீனார்கள்" என்று பதிலிறுத்தார்.

"நல்லது; இளைஞரே! நீர் அந்த ஓரிலட்சம் தீனார்களையும் என்னிடம் தந்து விட்டால், உமக்குச் சுவனத்தில் இதைவிடப் பன்மடங்கு அழகான மாளிகையை அன்பளிப்பாகப் பெற்றுத் தரும் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்கிறேன். உமக்குச் சம்மதமா?" என்று விளவினர்.

அவர்களின் இவ்வினா அந்த இளைஞரைச் சிறிது நேரம் திக்பிரமை அடையச் செய்தது. அதன்பின் அவர் ஒருவாறு சமாளித்துக் கொண்டு, "இது பற்றிச் சிந்தித்து நாளை முடிவு கூறுகிறேன்" என்று பதிலிறுத்தார்.

அன்றிரவு முழுவதும் அவர் படுக்கையில் புரண்டு இது பற்றிச் சிந்தித்துக் கொண்டிருந்தார். மாலிக் இப்னு தீனார் (ரஹ்) அவர்களும் அன்றிரவு முழுவதும் தம் தொழுகை விரிப்பில் அமர்ந்து அவ்விளைஞருக்காக இறைவனிடம் இறைஞ்சிக் கொண்டிருந்தார்கள்.

பொழுது புலர்ந்ததும் அவர்கள் அவரை அடைந்த பொழுது அவ்விளைஞர் தம் பணப்பையுடன் அவர்களை எதிர்பார்த்துத் தம் வீட்டு வாயலில் காத்திருந்தார்.

''என்ன செய்தி ? " என்று வினவிய அவர்களிடம்

"இதோ அப்பணம் முழுவதும் இப்பைக்குள் உள்ளது. இதற்குப் பகரமாக எனக்குச் சுவன மாளிகையைப் பெற்றுத் தருவதாகத் தாங்கள் கூறிய வண்ணம் எழுதித் தாருங்கள்" என்று கூறினார்.

அவ்விதமே அவர்கள் எழுதித் தங்களின் கையொப்பமிட்டுக் கொடுத்தனர். அதன்பின் அப்பணத்தை எடுத்துச் சென்று ஏழை எளியவர்களுக்கு அறம் செய்துவிட்டார்கள்.

இதன்பின் நாற்பது நாட்களே ஆயின. அந்த இளைஞரின் முடிவு காலம் நெருங்கி விட்டது. அதனை உணர்ந்த அந்த இளைஞர் அந்தப் பத்திரத்தை எடுத்துத் தம் உறவினர் ஒருவரிடம் கொடுத்து,

'நான் இறந்ததும் இதனை என்னுடன் வைத்து நல்லடக்கம் செய்யுங்கள்" என்று கூறித் தம் கண்களை இறுக மூடிக் கொண்டார். அத்துடன் அவருடைய உயிரும் பிரிந்தது,

ஒரு நாள் மாலிக் இப்னு தீனார் (ரஹ்) பள்ளியில் தொழுதுவிட்டு வீடு திரும்ப எண்ணிய பொழுது மிஹ்ராபின் அருகில் ஒரு காகிதம் கிடப்பதைக் கண்டு அதனை எடுத்துப் பார்க்கும் பொழுது, அது தாம் அந்த இளைஞருக்கு எழுதிக் கொடுத்த பத்திரமாக இருப்பதைக் கண்டு வியப்புற்று அதனைத் திருப்பிப் பார்க்கும் பொழுது,....

"என் அடியார் மாலிக் இப்னு தீனார் வழங்கிய வாக்குறுதியை நாம் முற்றிலும் ஏற்கக் கடமைப்பட்டு அவ்விளைஞருக்கு அவர்

வாக்குறுதியளித்ததை விட எழுபது மடங்கு அழகான மாளிகையைச் சுவனத்தில் நல்கியுள்ளோம்" என்று எழுதியிருப்பதைக் கண்டனர்.

உடனே அவர்கள் அவ்விளைஞரின் இல்லம் சென்று அவ்விளைஞரைப் பற்றி விசாரித்த பொழுது அவர் இரண்டு நாட்களுக்கு முன்னரே இறப்பெய்தியதாக கூறினர்.

அதன்பின் அவர் கூறிச் சென்ற வண்ணம் ஒரு பத்திரத்தை அவருடன் வைத்து நல்லடக்கம் செய்ததையும் எடுத்துரைத்தனர்.

அப்பொழுது மாலிக் இப்னு தீனார் (ரஹ்) அவர்கள் தம் கையிலிருந்த அந்தப் பத்திரத்தைக் காட்டிய பொழுது, "இதுதான் அப்பத்திரம், இதுதான் அப்பத்திரம்'' என்று கூறி அவர்கள் வியப்புற்றார்கள். அவர்களால் தங்களின் கண்களையே நம்ப இயல்வில்லை.

பிற்காலத்தில் அந்த இளைஞரைப் பற்றிய நினைவு கூருந்தோ றெல்லாம் மாலிக் தீனார் (ரஹ்) அவர்கள் அழுது விடுவார்கள். அவருக்காக இறைவனிடம் இறைஞ்சவும் செய்வார்கள்.

**ஞானிகளின் பார்வை 20**

( ஐந்து தவிர்த்து இவ்வுலகிலுள்ள பொருள்கள் அனைத்தும் வீணேயாகும் )



ஸரீ அஸ் ஸகதி (ரஹ்) அவர்கள் எளிமையின் திருவுருவமாக விளங்கினர்.அவர்களின் தேவைகளோ மிகவும் சொற்பமானவையாக இருந்தன. ஐந்து தவிர்த்து இவ்வுலகிலுள்ள பொருள்கள் அனைத்தும் வீணேயாகும். அந்த ஐந்து பொருள்கள்

(1) உயிரை வைத்துக் கொண்டிருப்பதற்கான ரொட்டி,

(2) தாகம் தணிப்பதற்கான தண்ணீர்,

(3) இன உறுப்பை மறைப்புதற்கான துணி,

(4) குந்திப் படுப்பதற்கான குடிசை,

(5) அமல் (செயல்) செய்வதற்குத் தேவையான மார்க்க அறிவு ஆகியவையேயாகும் என்று அவர்கள் கூறினர்.

ஒரு நாள் ஸரீ அஸ் ஸகதி (ரஹ்) அவர்கள் தெருவழியே செல்லும்பொழுது ஆங்குக் குடித்துவிட்டு ஒருவன் மயங்கிக் கிடப்பதைக் கண்டனர். எனினும் அவனுடைய வாயிலிருந்து, "அல்லாஹ், அல்லாஹ் என்ற சொற்கள் வெளி வந்து கொண்டிருந்தன.

அது கண்ட அவர்கள், "இந்த உணர்வற்றவனுக்கு என்ன விளங்கப் போகிறது? தூய்மையற்ற தன் வாயால் எத்துணை தூய்மையான சொல்லை மொழிகிறான்'' என்று கூறி அங்கலாய்த்தனர். அதன் பின் தண்ணீர் கொணர்ந்து அவனுடைய வாயைக் கழுவிவிட்டு அவ்விடம் விட்டு அகன்றார்கள்,

சற்று நேரம் கழிந்தது. தன்னுணர்வற்று மயங்கிக் கிடந்த அவன் எழுந்து அமர்ந்தான். அப்பொழுது ஆங்குக் குழுமி நின்ற மக்கள் நடந்த செய்தியை அவனிடம் எடுத்துரைத்தார்கள்.

அது கேட்டு அவனுக்கு ஏற்பட்ட நாணத்திற்கு அளவில்லை. அவன் அழுது சலித்து, தன்னை நோக்கி, "அடே நாணம் கெட்டவனே! இப்பொழுது ஸரீ அஸ் ஸகதி (ரஹ்) அவர்களுக்குக் கூட உன் நிலைமை தெரிந்துவிட்டது. இனியாவது அல்லாஹ்வுக்கு அஞ்சி, பாவமன்னிப்புக் கேட்டுக் கொள் என்று தனக்கு தானே கூறினான்.

அக்கணத்திலிருந்து அவனுடைய வாழ்விலே ஒரு புதுத் திருப்பம் ஏற்பட்டது.

அன்றிரவு ஸரீ அஸ் ஸகதி (ரஹ்) அவர்கள் அயர்ந்து உறங்குங்கால் 'ஸகதீ' நீர் எனக்காக வேண்டி அவனுடைய வாயைத் துப்புரவு செய்தீர். நாம் உமக்காக வேண்டி அவனுடைய இதயத்தைத் துப்புரவு செய்தோம்" என்று அசரீரி முழங்குவதைக் கேட்டுத் திடுக்கிட்டு விழித்தெழுந்தனர்.

அதன் பின் தஹஜ்ஜுத் தொழுவதற்காகப் பள்ளிவாயல் சென்ற

பொழுது தாம் பகலில் வாயைக் கழுவிவிட்ட அந்தக் குடிகாரர் இறைவனின் திருமுன் கை கட்டி நின்றும் குனிந்தும் குப்புற வீழ்ந்தும் தொழுது கொண்டிருப்பதைக் கண்டு வியப்புற்று அவர் தொழுது முடிந்ததும் அவரை அணுகி,

"இந்த திடீர் மாற்றம் எவ்வாறு ஏற்பட்டது?" என்று வினவினர்.

அது கேட்ட அவர், "அதனைத் தாங்கள் என்னிடம் ஏன் வினவுகின்றீர்கள்? அல்லாஹ்வே அதனைத் தங்களுக்கு அறிவித்துள்ளானே" என்று விடையிறுத்தார்.

அது கேட்டு ஸரீ அஸ் ஸகதி (ரஹ்) அவர்கள் அளவற்ற வியப்பில் ஆழ்ந்தார்கள்.



